ருகத் தக்க ... டையார்போல நடிக்
போலிப்புலவர்களை அவர்கள் ... னம்பெறவருகிற
திற் பிடித்துக் காவலில் ... லிருக்கின்ற நவராத்திரி
பத்தில் அவர்களைச் சிறையிலிருந்துவருவித்துத் தக்ககேள்விகள்கேட்டு
பிற்கு ஏற்ற விடை கூறினவர்களை அரசனைக்கொண்டு வெகுமதி
து அனுப்பி அங்ஙனம் உத்தரஞ்சொல்லாதவர்களை அவமதித்து இரு
ருவராகக் குடுமியோடு குடுமி முடிபோட்டு இறங்கி நிற்கத் தேவிமுன்
நிறுத்திப் பிடாரிக்குச்சோடுகடாவெட்டுவதுபோலச் சற்றும் இரக்கமில்
லல் அவர்கள் தலைகளைப் பதைக்கப்பதைக்கவெட்டிப்பலிசெலுத்தும் வழக்
கத மேற்கொண்டிருந்தனர்.

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டிய னீங்கில்லை
குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டோன்று முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே"

என வழங்குந் தனிப்பாட்டாலும் இத்தன்மை அறியப்படும்.

ஒருவன் பாடும் பாட்டில் ஏதாவது குற்றங் கண்டால் கண்டவுடனே
வன் தலையில் நறுக்கென்று குட்டுவது, பிள்ளைப்பாண்டியனென்னும் அரச
து ஏற்பாடு; அவனிடம்பரிசுபெறவந்த வித்துவான்கள் பலரும் 'குட்டுப்
டாலும் மோதிரக்கையாற் படவேண்டும்' என்கிற பழமொழியைப் புது
ழியாக ஞாபகப்படுத்திக்கொண்டு வந்தவழியே திரும்பிப்போய் மேன்
ற் கல்விகற்கமுயல்வது, அவன்காலத்தில் இயல்பாயிருந்ததாம். வில்லி
துாரார், வித்தியாசாமர்த்தியத்தால் வாதஞ் செய்யும்பொழுது கல்விச்
ருக்குள்ளஎதிரிகள்தோற்றால் வெற்றிக்குஅடையாளமாகத் தம்முடைகையில்
பொழுதும ஆயுதமாக ஏந்திய்ள்ள துறட்டை அவர்கள் காதில் மாட்டிப்
டித்திழுத்துக் காதை ஒட்ட அறுத்து, யானையின் மதக்களிப்டை அங்குசத்
ல் அடக்குவதுபோல அவர்களது கல்விச்செருக்கைத் தமது துறட்டுக்
ாலா லொழிப்பதைத் தமது வழக்கமாக வைத்துக்கொண்டு பிருதுகூறிச்
ன்று திக்கு விசயஞ் செய்துவந்தார். அவைபோலவே ஒட்டக்கூத்தரும்
ருக்கிய போலிப்புலவர்களைச் சிறைவைத்துப் பரீக்ஷித்துத் தோற்றவர்கள்
லகளை வெட்டிவந்தனர். அரசன் இவரிடத்தில் மிகவும் பிரீதிவைத்திருந்த
ால், இவர் இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்துவந்தான்.

[கல்வியின் அருமையைத்தெரிவிக்கிறநல்லவழியாகையால் இவர்செய்து
த இது பாதகமாகா தென்றும், இவர்க்கு இடங்கொடுத்துவந்த அரசன்
ாடுங்கோல்மன்னனாகா னென்றும், இங்ஙனமில்லாவிடின் அக்காலத்தும்
க்காலத்திற்போலச் சிற்றறிவுடையோரும் பேரறிவுடையோர் போலவே
ண்டிதர் மகாபண்டிதர் கவி கவிராயர் வித்துவான் வித்வச்சிரோமணி என்

* சிற்றறிவினராய்த் தாமே தக்கபண்டிதரென்று செருக்கியிருந்தபோ
து இப்பட்டப்பெயர்ச்சுமையைத் தலைமேல் ஏறிட்டுக்கொண்டவர், பின்பு
து தகுதியன்றென்று பிறரால் அறிந்தவுடன் அதனை இறக்கிவிட்டு, வேறு
கையிற் பிறரை மருட்டும்பொருட்டு வெவ்வேறுபெயர்வகைகளைத் தாமே
டியமைத்துக்கொண்டு வெளிப்படுதலும் உண்டு; அது வியக்கத்தக்கதே.
னி, இராசபாஷைக்குப்போலவே இப்பாஷைகளுக்கும்தக்க பரீக்ஷைகளே
பட்டால் இப்படிப்பட்ட வழக்கங்கள் எங்கும் எடுபட்டுப்போய்விடும்.

பவைமுதலாகக் கண்டதுகண்டபடி பல பட்டப்பெயர்களை எவருங்கொடு வேண்டிய அவசிய மில்லாமலே தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொள தாந்தோன்றிகளாய்த் திரிவார்க ளென்றும், இப்படிப்பட்ட கெட்ட வழக் தை நிறுத்துதற்கு ஏதுவானதனால் இவர் செய்து வந்தது லோகோபக மான காரிய மென்பதற்குச் சிறிதுந் தடையில்லை யென்றும், இல்லாவிடி கல்வி அபிவிருத்தியாகா தென்றும், இக்காலத்தில் வழங்குகிற ராஜபாஷை பரீட்சைக்குரியபட்டங்களை அப்பரீட்சைதேறாதபிறர் வைத்துக்கொண்ட குற்றமாவதுபோலவே முற்காலத்திலும் தகுதியல்லாதவர்பட்டப்பெயர்க சூடுவது குற்றமாயிருந்ததென்றும், அக்காலத்து அரசர் முதலிய பிரபுக் தகுதியுடைய பண்டிதர்களின் யோக்கியதையைத் தக்கபடியறிந்து அத ஏற்ப வெகுமானங்கள் செய்துவந்தார்களாகையால் தகுதியல்லாதவர்கள் வர்களென்று நடித்தால் அவர்களைச்சிட்சிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன வென்றும், இக்காலத்திலோ சம்மானஞ்செய்வதுஇ லாமையால் அவமானஞ்செய்வதும் இல்லையாயிற்றென்றுங் கூறுவர்.]

இவரது காலம்-இப்பொழுதைக்கு ஏறக்குறைய ஆயிரம் வருஷத்துச் முன் : என்பது - இவர் கம்பர்காலத்தவ ராதலாலும், "எண்ணிய *சகாத மெண்ணூற் றேழின்மேல்" என்ற கம்பராமாயணச் சிறப்புப்பாயிரச்செய் ளால் கம்பர்காலம் ஆயிரம் வருஷத்துக்கு முன் என்று தெரிதலாலும், நன் விளங்கும். ஔவையார்க்கும் இவர்க்கும் சம்பாஷணை நடந்ததாகச் சரித் ரத்தில் வருதலால், ஔவையாரும் இவர்காலத்திலே இருந்தனர். 'ஔவை திருவள்ளுவரது உடன்பிறந்தவ ராதலாலும், ஔவையும் திருவள்ளுவரு கடைச்சங்க மிருந்த காலத்தில் இருந்தவர்களாதலாலும், கடைச்சங்கத்தா காலம் இவர்காலத்துக்கு வெகுநாளைக்குமுந்தின தாதலாலும், ஒட்டக்கூத்த காலத்திலிருந்த ஔவை, பிரசித்தமான அந்த ஔவையா ரல்லள் ; ஔவை என்பது - தவஞ்செய்யும் பெண்பிள்ளைக்குப் பேராதலால், அப்படிப்பட் வேறொருவருடன் ஒட்டக்கூத்தருக்குச் சம்பாஷணை நடந்திருக்கலாம்' என் இதனைச் சிலர் மறுத்து இரண்டௌவைசொல்வர் : ஔவையார் அதிகமா நெடுமானஞ்சி யென்னும் அரசனிடத்திலிருந்து அமிழ்தமயமானதொ நெல்லிக்கனியைப் பெற்று உண்டு அதனால் நெடுங்காலம் சீவித்திருந்தன என்று புறநானூற்றினாலும், சிறுபாணாற்றுப்படை யினாலும், திருக்குறள் பா மேலழக ருரையினாலுந் தெரிதலால், சங்கத்தார்காலத்துத் திருவள்ளுவரு டன்பிறந்த ஔவையாரும் ஒட்டக்கூத்தர் புகழேந்திப்புலவர் கம்பர் இவர்கள் காலத்தில் இருந்த ஔவையாரும் ஒருவரேயென்றுகொள்ளவும்இடமுண்டு.

இவர்செய்த பிரசித்தமான நூல்கள் - உத்தரராமாயணம், ஈட்டியெ ழுபது, வீரபத்திரப்பரணியென்றுவழங்கும் தக்ஷயாகப்பரணி, அண்டத்துப் பரணி முதலியன. குலோத்துங்கசோழன்கோவை, மூவருலா என்பனவும் இவர் பாடியன என்பர். கலிங்கத்துப்பரணியும் இவர்செய்தது என்பர் ஒரு சாரார் ; அது சயங்கொண்டார்செய்ததென்பதே பெரும்பாலார் கொள்கை.

ஒட்டக்கூத்தர் இராசேந்திரசோழன்சொன்னபடி குலோத்துங்கசோழ னுக்கு வரகுணபாண்டியனது மகளை மணஞ்செய்விக்கக் கருதி மதுரைக்குச் சென்று பாண்டியனிடம் அது விஷயமாகப் பேசிக்கொண் டிருக்கையில், பாண்டியராசன் பரிகாசமாய் 'சோழராசன் எங்கள் குலத்துப் பெண்ணைக் கொள்ளத் தக்கவனோ ?, எங்களிலும் ஏற்றமானவனோ ? சொல்லும்' என,

* இங்கே 'சகாத்தம்' என்றது, சாலிவாகனசகாப்தத்தை ; இப்பொழுது நடப்பது, சாலிசகம்-கஅ௨ க. (சிலாசாஸநபரிசோதகரது ஆராய்ச்சியின்படி (முதலாவது) குலோத்துங்கசோழன் பிறந்த காலம் இப்பொழுதைக்கு ஏறக் குறைய அ௫0-வருஷத்துக்குமுன்பாம்.) ௪௫0-வருஷம வித்தியாசப்படுகிறது.

டத்தர், சோழராசன்பெருமை தோன்ற, அவனது குதிரை நதிம
ராக்கிரமம் கொடி நகரம் நாடு முதலியவற்றிற்குப் பாண்டியனுடைய
முதலியன சமமாகமாட்டா என்னுங் கருத்தை அமைத்து

கோரத்துக்கு ஒப்போ கனவட்டம் அம்மானே!
கூறுவதும் காவிரிக்கு வையையோ அம்மானே!
ஆருக்கு வேம்பு நிகராகுமோ அம்மானே!
ஆதித்தனுக்கு நிகர் அம்புலியோ அம்மானே!
வீரர்களுள் வீர னொருமீனவனோ அம்மானே!
வெற்றிப் புலிக்கொடிக்கு மீனமோ அம்மானே!
ஊருக்கு உறந்தைநிகர் கொற்கையோ அம்மானே!
ஒக்குமோ சோணாட்டுக்குப் பாண்டிநாடு அம்மானே!"

ஒருபாடலைச்சொன்னார். அப்பொழுது அருகிலிருந்த பாண்டிய சம்ஸ்
...பாபுகழேந்திப்புலவர், இதுகேட்டவுடனேஇதற்குமாறாக,
...மலை நகரம் கொடி குலம் நதி மாலை சிறப்பு பராக்கிரமம் இவை
...வியவற்றினும்மிகச்சிறந்தவை என்னுங்கருத்தை அமைத்து,

...நரியிலோ உரை தெளித்தது அம்மானே!
...ஆலவாய் உறந்தையிலோ அம்மானே!
திருநெடும... ...புலியோ அம்மானே!
சிவன்முடி... ...செங்கதிரோ அம்மானே!

'அரசனே! சோழர்களது ... ம்பேருள்ளசிறந்த குதிரைக்குப்
...டியரது கனவட்டமென்னுங் ... மமாகுமா? மாரிக்காலத்திலன்
காடைக்காலத்திலும் பெருவெள்ள ...ருகிப்பாய்ந்து பொன்கொழித்து
சோழநாட்டுக்கு வளங்கொடுக்கிற காவிரியாற்றிற்குப் பாண்டிய நாட்
...மழைக்காலத்தில்மாத்திரமேவெள்ளம்பெருகும்வையையாறு ஒப்பாகச்
...லத்தக்கதோ? சிவபிரானது திருவுளத்துக்கு உவப்பாகச் சோழர்கள்
...பும் ஆத்திப்பூமாலைக்குப் பாண்டியரதுவேப்பம்பூமாலைஒப்பாமா?சோழ
...து ஆதிபுருஷனான சூரியனுக்குப் பாண்டியகுலத்து ஆதிபுருஷனான சந்
...சிறிதும் சமானமானவனோ? வீரர்களுள் சிறந்தவீர னென்று புகழ்
... சோழனேயன்றிப் பாண்டியனோ? சோழர்கொடியில் வடிவமெ
...க்கிரமமுடைய புலிக்குப் பாண்டியன்கொடியில் வடிவமெழு
மயில்லாத மீன் இணையாமோ? சோழரதுஇராசதானியான
...ப்பான சிறப்புள்ளதோ, பாண்டியரது இராசதானியான கொ
...ம் நகரம்? நிலவளப்பத்துக்குக் காரணமான நீர்வளமிகுதியால்
...நாடு'என்று பிரசித்தமான சோழவளநாட்டுக்கு அப்படிப்பட்ட சிறப்
...த பாண்டியநாடு ஈடாமோ? என்பது இதன்பொருள்.

அரசனே! ஒப்பற்றமுனிவரான அகஸ்தியர் தமிழ்ப்பாஷையை அபி
...திசெய்தது, பாண்டியநாட்டிலுள்ள பொதியமலையில் இருந்துதானே:
நாட்டிலுள்ளநேரிமலையில் இருந்தன்றே; சோமசுந்தரக்கடவுள் ஒப்பில்
அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தது, பாண்டிநாட்டிராச
பான மதுரையில்தானே: சோழநாட்டிராசதானியான உறையூரி லன்
ஸ்ரீமகாவிஷ்ணு மீனாக அவதரித்தனரே யன்றிப் புலியாகப் பிறக்கவில்
: ஆதலால், மீன்தானே சிறந்தது; புலிக்கு என்னசிறப்பு உண்டு? சிவ
...ரது சடைமேல் ஏறியிருப்பது சந்திரனேயன்றிச் சூரியனோ? அதனால்
குலந்தானே சிறப்புடையது; சமணர்களை வெல்லும்பொருட்டுத் திரு
சம்பந்தமூர்த்திநாயனார் பாசுரம்எழுதி இட்ட ஏட்டை நீரின்ஓட்டத்

# ஒட்டக்கூத்தர் வரலாறு.

கரையெதிரே டேறியது காவிரியோ அம்மானே!
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானே!
பரவை பணிந்ததுஞ் சோழன் பதந்தனையோ அம்மானே!
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வெளிதோ அம்மானே

என்று ஒரு பாடலைப் பாடி இவர் சொன்னதை மறுத்தார். அப்பெ ...ட்டக்கூத்தருக்கும்புகழேந்திக்கும் பகைமையுண்டாயிற்று. பின்பு ...த்தர் ஏற்றபடி பலவாறுபேசிப் பாண்டியன்மகளைச் சோழனுக்கு ...சய்விக்கும்படி நிச்சித்தார்த்தஞ்செய்துவந்து சோழனுக்குச் செய்தி ...யத்தார். உடனே அவன் தனக்குப் பிரதிநிதியாகச் சிலநாள் அரசா ஒட்டக்கூத்தரை உறையூரில்வைத்துச் சேனைகளோடும இஷ்ட... வர்க்கத்தோடும் மதுரைக்குச் சென்று பாண்டியன்மகளை மண... கொண்டான். அப்பொழுது பாண்டியன் தன் பெண்ணுக்குத் தான்... ஸ்த்ரீதநவரிசையுடன் புகழேந்திப்புலவரையும் அவளுக்கு ஏற்றசமய... தககபுத்திகூறும்பொருட்டு அனுப்பினான். அப்படியே அப்புகழேந்தி சோழனிடம்வந்ததை அறிந்து ஒட்டக்கூத்தர் பழையபகை... ரிடம் கறுக்கொண்டு 'இவன் முன் உமக்குப்பெண்கொடுக்கவொட்... தடைசெய்து உம்முடைய குலம்முதலியவற்றைப் பாண்டியனெதிரி... பழித்துப் பேசியவன்' என்று தம்அரசனுக் ... லி அவரைச் சி... லையில் வைப்பித்தார். அவர் அச்சி... கொண்டு, அத... தண்ணீர்க்குப்போகிற பெண்க... ...ர்மையாக, இக... நங்கைப்பாட்டென்று வ... ...சாணிமாலை, பவழக்கொடி... புரந்தரன்களவுமாலை என்ற ...ரகமான பாடல்களைப் பாடி அவர்... குக்கொடுத்து அதற்காக அவ...கள் மகிழ்ந்து கொண்டுவந்துகொடுத்த அரிசி முதலியவற்றைச் சாளரவழியாய்ப் பெற்று அவற்றைக்கொண்டு... த்து உண்டு மிகுதியைக் காவலாளிகளுக்குக் கொடுத்து அவர்களைக் கை... படுத்திக்கொண்டிருக்கையில், ஒருநாள் வீதியில் யானையின்மேல் வ... சோழராசன், சிறைச்சாலையின் மேல்தளத்தில் நின்ற புகழேந்தியை ஒ... கூத்தருக்குக் காட்டி, 'இவர் தமிழில் மகாசமர்த்தரன்றோ?' என்றுசெ... ஒட்டக்கூத்தர் புகழேந்தியை இகழ்ந்து 'தமக்கு முன் அவன் எவ்... என்னுங் கருத்துத் தோன்ற,

* "மான்நிற்குமோ இந்த வாளரி வேங்கைமுன் வற்றி...
கான்நிற்குமோ இவ் வெரியுந் தழல்முனங் கனைகட...
மீன்நிற்குமோ இந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தான்நிற்குமோ இக் கதிரோ னுதயத்தில் தார்மன்ன

எதிர்செலுத்தியும் சிறப்புடையமதத்தின்பெருமையையும், தமிழ்ப்பாடு... ளின் அருமையையும் தெரிந்துவெளியிட்ட ஏற்றம், பாண்டியநாட்டு வை... நதிக்கு உள்ளதே யொழிய, சோழநாட்டுக் காவிரிநதிக்கு இல்லையே; ... அணுகவொட்டாமல் அதற்குப் பெரும்பகையாய்த்தோன்றி அதனை ஓ... வது, சோழரது ஆத்தியோ? பாண்டியரது வேம்புதானே: ஒருகாலத்... பொங்கிவந்த சமுத்திரம அஞ்சிவந்து வணங்கினது, சோழன்கால்களையே... பாண்டியன்பாதத்தையேயன்றோ; பாண்டியரது பராக்கிரமம் சொல்லமு... யுமோ? என்பது இதன்பொருள்.

* கொடிய வேங்கைப்புலியின்முன் மான் நிற்குமா? எரிகின்ற கொ... ருப்புக்குமுன் பட்டுப்போனமரம் நிற்குமா? ஒலிக்கிற கடலில் பயங்கரமா... சுறாமீனுக்கு முன் சிறுமீன் நிற்குமா? வீசுகின்ற பனி சூரியோதயத்து... ... நிற்குமா? (அவ்வாறே கல்வியில் எனக்குமுன் இவன் நிற்கமாட்டுவ...

ன்று ஒருபாடலைச் சொன்னார். அதுகேட்ட புகழேந்தி அங்கிருந்தே 'அப் பாடலை *வெட்டிப்பாடவோ? ஒட்டிப்பாடவோ?' என்று சோழனைக் கேட்க, அவன் 'ஒட்டிப்பாடும்' என, அவ்வாறே புகழேந்தி,

†"மான்அவன் நான்அந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
காான்அவன் நான்அவ் வெரியுந் தழலும் கனைகடலின்
மீன்அவன் நான்அந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தான்அவன் நான்அக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே"

என்று இப்பாடலைப்பாடி ஒட்டக்கூத்தனை எதிர்த்தார். அப்பொழுது, அவ் அரசன் புகழேந்தியினிடம மதிப்பும் கருணையும் உடையனானாலும, ஒட்டக் கூத்தரிடமுள்ள தாட்சிணியத்தால், புகழேந்தியைச் சிறைமீட்கவில்லை.

புகழேந்திப்புலவர், சிறையிலிருக்கையில், அங்கு ஒட்டக்கூத்தரால் சிறையிடப்பட்ட புலவர்களைக்கொண்டு ஒட்டக்கூத்தரைப் பங்கஞ்செய் விக்கக் கருதி, அவர்களில் நல்லபுத்திமான்களான குயவன், அம்பட்டன், கருமான், வேளாளன் முதலிய சிலபேரைத் தெரிந்தெடுத்து அவர்களுக்குச் சிறைச்சாலையிலேயே தாம் விசேஷமாகக் கல்விகற்பித்துவைத்து, சிறையிடப்பட்ட வித்துவான்களை நவராத்திரிகாலத்தில் ஒட்டக்கூத்தர் வரவழைக்கும்போது, மற்றைப்புலவர்கள் கல்வியிற் குறைந்தவர்களாயிருந்ததனால் அவர்களை அனுப்பாமல், குயவன் முதலியவரை ஒருவர்பின் ஒருவராய் ஒட்டக்கூத்தரெதிரிற் போய்த் தைரியமாய்நின்று அவர்கேட்டகேள்விகளுக்குத் தக்கவிடைகூறி அவரிடம் தோல்வியடையாமல் அவரை வெல்லும்படி திட்டஞ்செய்து அனுப்பினார். அவ்வாறே முதலில் குயவன் போய் ஒட்டக்கூத்தரெதிரில் வணங்காமல நிமிர்ந்துநின்றான். அப்பொழுது, அவர், தம்மைப் பெரிய மதயானையாகவும், அவனை ஓர் அற்பப்பிராணியாகவுங் கருதிச் செருக்கொண்டு, அவனது கவித்திறத்தை அறியும்படி, அவனைப்பார்த்து,

‡"மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி
யானைமுன் வந் தெதிர்த்தவ னாரடா"

என்று செய்யுள்நடையால் வினவினார். அதற்கு அவன், யான் ஒருகுசவனென்றும் யானையை அடக்கவல்ல அங்குசமென்னும் ஆயுதத்தை [மாவெட்டியை] யுடைய பாகனென்றும் சிலேடையாகப் பொருள்படும்படி,

§"கூனையுங் குடமுங் குண்டு சட்டியும்
பானையும் வனையு மங்குசப் பையல் யான்"

என்று மற்றையிரண்டடிகளைப்பாடி விடைகொடுத்து அச்செய்யுளைப்பூர்த்தி

* வெட்டிப்பாடுதல் - ஒருவர்பாடின பாடலி லுள்ள சொற்பொருள்களோடு மாறுபட்ட சொற்பொருள்களை அமைத்துப்பாடுதல். ஒட்டிப்பாடுதல் - ஒருவர்பாடின சொற்பொருள்களை வைத்துக்கொண்டே கருத்து மாறுபடப் பாடுதல்.

† மானும், உலர்ந்தமரமும், மீனும், பனியும் அவ்வொட்டக்கூத்தன்; வேங்கையும், நெருப்பும், சுறாமீனும், சூரியோதயமும் நான் என்பதுபொருள்.

‡ மோனைமுதலிய செய்யுளுறுப்புக்களமைந்த இயல் இசை நாடகமென்னும் மூன்றுவகைத்தமிழாகிய மூவகைமதசலத்தைச் சொரிகின்றதொரு யானைபோன்ற என்முன் அச்சமில்லாமல்வந்து எதிர்த்துநிற்கின்ற நீ யாரடா? என்று பொருள்.

§ கூன் குடம் குண்டுசட்டி பானை முதலிய மண்பாத்திரங்களைச் செய்யும் அழகிய ஒரு சிறுகுயவன் நான் என்று பொருள்: இதில், வேண்டியபடியெல்லாம் கவனம்செய்யவல்ல, யானைமதத்தைஅடக்கும் மாவெட்டிக்காரன், நான் என்ற பொருளும் சிலேடையால் தோன்றும்; அம் குசப்பையல் என்றும, அங்குசம் பையல் என்றும் பிரிக்க.

செய்தான். அதுகேட்டு ஒட்டக்கூத்தர் அவனைவிட்டு மற்றொருவனை அழைபிக்க, அம்பட்டன் வந்துநின்றான். ஒருகண்பொட்டையான அவனைப் பார்த்து, ஒட்டக்கூத்தர், அவன் தமக்குமுன் மிகஅஞ்சி உடம்புநடுங்குவதாக, தாமே கற்பித்து அக்கருத்தமைத்து,

* "விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்கு நின்றாய் பொட்டையாய் புகல்வாய்"

என்று பாதிப்பாடல் சொல்லி வினவினார். அதற்கு அவன் பின்வாங்காமல்

† "கண்பொட்டையாயினும் அம்பட்டன் நான் கவிவாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே"

என்று மற்றொருபாதியைப் பாடி விடைகொடுத்தான். அது கேட்டு ஒட்டக்கூத்தர் அவன்மேல் மிக்ககோபங்கொண்டும் அக்கிரமமாக ஒன்றுஞ்செய்யாமல், அவனையும்விட்டு, வேறொருவனை அழைக்க, கருமான் போய்நின்றான்; அப்பொழுது, அவர், முன்பு குயவனையும் அம்பட்டனையுங் கேட்டதுபோலக் கவிசொல்லிக் கேள்விகேளாமல் வாய்மொழியாகவே அவனை 'நீ யார்? உன்பெயர் என்ன? உன்வரலாறு யாது? உன்குலம் எது? சொல்' என்று சிலகேள்வி கேட்டார்; அதற்கு அவன்

‡ "செல்வன் புதல்வன் திருவேங்கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்ன பேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும் பகலு மடிப்பேன் கவியிருப்பாணி கொண்டே"

என்று ஒரு பாடலைப் பாடிக் கடுமையாக விடைகொடுத்தான். அதுகேட்டு ஒட்டக்கூத்தர் அவனையும்விட்டு மற்றொருவனை அழைப்பிக்க, வேளாளன் வந்துநின்றான்; அவனைப்பார்த்து, அவர் 'பிரபலவித்துவானாகிய எனது எதிரிலே அற்பகவியாகிய நீயும் ஒருபுலவனாக வந்து வெளிப்பட்டுநிற்பது தகுதியோ?' என்றார். அதற்கு அவன்,

§ "கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்

---

* அடா, பொட்டைக்கண்ணா! ஆகாயத்திலே பறக்கிற கொக்கு, வல்லூறு [ஓர்பருந்து] என்னும் பறவையைக் கண்டவுடனே அச்சத்தால் நடுக்கமடைவதுபோல, என்னைக்கண்டவுடனே மிகப்பயந்து நடுநடுங்கிக் கவலைப்பட்டமனத்துடன் இங்குவந்துநின்றாயே; நீயார்? சொல் என்றுபொருள்.

† கண்பொட்டையானாலும், அம்பட்டனாகியநான் பலகவிகளின்முன்னிலையிலே நீயுங்கேட்டுநடுங்கும்படி இலக்கணமமைந்தசெந்தமிழ்ப்பாடல்களைப் பாடவல்லேன் என்றுபொருள்; இதில், அம்பட்டன் என்பது - அம் பட்டன் எனப்பிரிந்து, அம் - அழகிய, பட்டன் - புலவன் என்றும் பொருள்படும்.

‡ செல்வப்ப ஆசாரியின் மகன் யான்; திருவேங்கடஆசாரி யென்பது என்பெயர்: நான் லோககுருவாகிய கருமான்; என்பாடலை யாராவது பழித்தால், அவரை நான் குறடுகொண்டு பற்களைப்பிடுங்கி மிகவருத்திப் பலபகைவர்முன்னிலையிலே இரவும் பகலும் ஓயாமல் எனதுபாடல்களாகிய இருப்பாணிகளைக்கொண்டு அவர்வாயிற் கடாவுவேன் என்று பொருள்.

§ உலகத்தில் பேரரசனைப் பார்த்துச் சிற்றரசர்கள் ஒலிக்கின்ற கடலிற் போய் விழுந்து இறந்திலர்; எல்லாமலர்களினுஞ்சிறந்த தாமரைமலரைப் பார்த்து அதனருகிலிருக்கிற கொட்டிமுதலிய அற்பக்கொடிகள் பூவாமலிருத்தலில்லை; அவ்வாறே, ஏழுதீவுகளையும் ஆளுகிற அரசனே! கவியாகிய ஒட்டக்கூத்தனே! உனது பாடலைக் கண்டு மற்றைக் கவிபாடும்புலவர்கள் ஓடிஒளியார் என்று பொருள். அரசன் ஒட்டக்கூத்தர்க்கு அதிகமாக இடங்கொடுத்ததுபற்றி, இவன், ஒட்டக்கூத்தரையே அரசனாகமுன்னிலைப்படுத்தினன்.

காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்த நின் கட்டுரையாம
பாக்கண் டொளிப்பர்களோ தமிழ்பாடிய பாவலரே"

என்ற ஒரு பாடல் பாடி விடைகொடுத்தது மன்றி, முன்பு ஒட்டக்கூத்தர் பாடியிருந்த அண்டத்துப்பரணியென்னும நூலிற் குற்றமும் கூறினான்.* இவ்வாறு இவர்கள் செயலைக் கண்டு ஒட்டக்கூத்தர் மனவருத்தமடைந்து, இவையெல்லாம் புகழேந்தியால் நேர்ந்தனவென்று அறிந்து, அவர்மேல் இன்னும் அதிக கோபங்கொண்டு, அவரொருவரொழிய மற்றெல்லோரையும சிறைவிடுவித்து அனுப்பினார். அவர்களெல்லாம் புகழேந்திப்புலவரை வாழ்த்திக் கொண்டு சென்றார்கள். இச்செய்திகளையெல்லாம ஒரு நாள் பரிசாரிகைப் பெண்களாற் சோழராசன் மனைவி அறிந்து மிக்க மனவருத்தமடைந்து, ஒட்டக்கூத்தர்வார்த்தையைக்கேட்டுத் தன் கணவன் தனது தந்தையின் சமஸ்தான வித்துவானான புகழேந்திப்புலவரைச் சிறையிலிருந்து நெடுநாளாய் விடுதல்செய்யாமல் இருத்தற்காகக் கோபங்கொண்டு, அவனை வெறுக்கக் கருதி, தன்பிராணநாயகன் சயனக்கிருகத்துக்கு வராமற்படி தான் உள்ளே யிருந்து கதவைத் தாழ்பூட்டிக்கொண்டாள். அதுகண்டு சோழராசன், பலபலவிதமாய் இதம்பேசியும கதவுதிறவாமையால், அவளது ஊடலைத் தணிப்பிக்கும்பொருட்டு ஒட்டக்கூத்தரை அனுப்பினான்.† அவர் சென்று,

‡ "நானே யினியுன்னை வேண்டுவ தென்கொல் நளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய இரவிகுலாதிபன் வாசல்வந்தால்
தானே திறக்கும் நின் கைத்தலமாகிய தாமரையே"

என்று ஒரு செய்யுளைச் சொன்னார். அது கடுமையாயிருந்ததனால், அவள், 'ஒட்டக்கூத்தர்பாட்டிற்கு இரட்டைத்தாள்' என்று மற்றொரு தாளையும போட்டிட்டாள். இதைக்கேள்வியுற்ற சோழராசன், 'புகழேந்திப்புலவரை நெடுநாளாகச் சிறைமீட்காமையால், தன்மனைவிக்கு ஊடல் உண்டாயிற்று.' என்று ஊகித்து அறிந்து, உடனே புகழேந்திப்புலவரைச் சிறைநீக்கி இராசாணியின் கோபத்தைத் தணிக்கும்படி அனுப்ப, அவர் அந்தப்புரம்போய் அவளது ஊடல் தணியும்பொருட்டு,

---

* "சொன்ன சந்தக் கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக் கவியே தென்று போதி லெதிர்த்தவரை
வன்ன சங்கங் கெட வாயைக் கிழித்திந்த வாசற்படியில்
கன்ன சந்தங்களினிற் கவி யாப்பைக் கடாவுவனே,"

"துங்கிரி வட்டக் குடைச் செயங்கோ லபயன் செழுஞ்சிலம்பிய
பகுதி யொட்டக்கூத்த பட்டனை நாளைப் பனைக்கவியின்
மிகுதவொட்டத் தட்டி விட்டகை யோட்டி ஒருக்கிருக்கிப்
புகுதவொட்டித் தட்டி மேலனுகா வண்ணம போர்செய்வனே"

என்றவை, முறையே [illegible]னும் [illegible]னும் பாடியனவாக வழங்கும்.

† ராஜஸ்திரீகளுக்கு ஊடல் நிகழும்பொழுது அதனை அரசர்கள் புலவர்களைக்கொண்டு தணிப்பித்தல், மரபு.

‡ தாமரைமலரில்வசிக்குந் தேன்போல் இனிய இலக்குமியைப் போன்ற அழகியவளே! நீ கதவைத் திறந்துவிடு; திறவாவிட்டாலோ, குவிந்த தாமரை சூரியனைக் கண்டமாத்திரத்தில் இதழ்திறந்து மலர்தல்போல, வானத்தில் பேரிடிபோற் பகைவர்களுக்குப் பயங்கரனான சூரியகுலத்தலைவனாகிய சோழராசன் உன்வாயிலில்வந்தால் அப்பொழுது விரல்களாகிய இதழ்களையுடைய உன்கையாகிய தாமரை தானே தான் திறந்துவிடும்; அதைக்குறித்து நான் இனி உன்னைப் பிரார்த்திக்கவேண்டுவது என்ன? என்பது பொருள்.

* "இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந் தணி
மழையொன் றிரண்டுகைம் மானாபரணன் நின்வாசல் வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாரோ குடியிற் பிறந்தவரே"

என்று ஒருகவியைப் பாட, அதுகேட்டவுடனே மகிழ்ச்சியடைந்து இராணி கோபந்தணிந்து கதவுதிறந்தாள். அதுமுதல் சோழராசன் புகழேந்திப்புலவரை அன்பாகவே நடத்திவந்தானாயினும், அவர் ஒட்டக்கூத்தருடைய பொறாமையினாலும், அவர்பேச்சைக்கேட்டு அரசன் அதன்படி நடப்பதனாலும், அங்கு நிலையாய்இருக்க இஷ்டப்படாமல், அந்நாட்டைச்சேர்ந்த மன்னுவமென்னுஞ் சிறியநாட்டில் முரணூரிலிருந்த சந்திரன்சுவர்க்கியென்னும் அரசனிடஞ் சேர்ந்து, அவன் விரும்பினபடி, நளவெண்பா என்னும் நூலைச் செய்து பரிசுபெற்று வாழ்ந்திருந்தார். பின்பு அச்செய்தியைக் கேள்விப்பட்டுச் சோழராசன் புகழேந்திப்புலவரை வரவழைத்துத் தனதுசபையிலே நளவெண்பாவைப் பிரசங்கிக்கச்சொன்னான். அவ்வாறு புகழேந்தி பிரசங்கம் செய்துகொண்டுவருகையில்,

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது"

என்னும் இப்பாடலைச் சொல்லும்போது, ஒட்டக்கூத்தர், 'இதில், மல்லிகையரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கநாதஞ்செய்கிறவனாகவும் கற்பித்தது உசிதமே; சங்கவாத்தியம் வாசிப்பவர், அதனடியையன்றோ, வாயில்வைத்து ஊதுவார்கள்; அவ்வாறு வண்டுகள் அடிப்புறத்து ஊதுகிறதில்லையே; மேற்புறத்திலன்றோ மொய்த்து ஒலிக்கிறது; ஆதலால், அந்த வர்ணனை குற்றம்' என்று ஆட்சேபித்தார். அதற்குப் புகழேந்திப்புலவர் 'கட்குடியனுக்கு வாயென்றும் மற்றொன்றென்றும் தெரியுமா?' என்றார். இன்னும் ஒட்டக்கூத்தர் செய்த ஆட்சேபங்கட்கெல்லாம் புகழேந்தி இவ்வாறே சாதுரியமான உத்தரஞ் சொல்லிவந்தார். கம்பர் முதலிய வித்துவான்கள், ஒட்டக்கூத்தரிடமுள்ள பொறாமையினால், புகழேந்திக்குச்சார்பாய்நின்று புகழ்ந்தார்கள். பழைய பகைமை பற்றி, ஒட்டக்கூத்தர் புகழேந்தியை வெளிக்கு அவமதித்து வந்தும், உள்ளத்தில் அவர் கவித்திறத்தைப்பற்றி வியப்படைந்தேயிருந்தார். ஒருநாள் ஒட்டக்கூத்தர் தம்மனைவியோடு நளவெண்பாவைக்கொண்டாடிப் பேசிக்கொண்டிருக்கையில், அவரைக்கொன்றுவிடும்பொருட்டுஅவர்வீட்டுப் புறத்தில் ஒளிந்து கேட்டிருந்த புகழேந்தி, அதுகேட்டு அவரிடத்திருந்த பகைமையை விட்டு அவரிடஞ்சென்று அவரோடு சிநேகங்கொள்ள, அவரும் மனமொத்துச் சிநேகம்பாராட்டினார். இதுகேட்டு அரசனும் சந்தோஷித்து, அவ்விருவரையும் நோக்கி, ஒருநாள், திருநெய்த்தானமென்னுந்தலத்தில் எழுந்தருளியிருக்கிற சிவபிரான்மேல் 'நெய்த்தானத்தானைச் சேவித்தே' என்

* இருபிளவாகப்பகிர்ந்த மெல்லிய ஒருநூலின் ஒருபிளவை யொத்த நுண்ணிய சிற்றிடையையும், பொற்குழைகளையணிந்த காதுகளை அளாவுகிற இணைக்கண்களையு முடைய தெய்வப்பெண்போல்பவளே! மேகத்தினும் பல மடங்கு மிகுதியாகப் பொருள்பொழிகிற கைகளையுடையவனும், பெருமையையே அணிகலமாகவுடையவனுமாகிய கணவன் உன் வாயிலைத் தேடிவந்தால், அவன்மேற் கோபம்பாராட்டுவது தருமமா? உயர்குடிப்பிறந்த மகளிர் தம்கணவர்செய்த இரண்டொருபிழைகளைப் பொறுக்காமலிருப்பரோ" நீ கொண்ட கோபந் தணியவேண்டும் என்பது இதன்பொருள்.

பதை மகுடமாகவைத்துச் சந்தவிருத்தம்பாடும்படி சொல்ல, ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்,

"விக்கா வுக்கா வித்தா விப்போய் விட்டார் நட்டார் சுட்டோர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூ ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்
நெக்கா டக்கா னத்தா டப்போம் நெய்த்தா னத்தா னைச்சே வித்தே,"

"தற்கோ லிப்பூ சற்பா சத்தே தட்டா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேல் மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்று ஞாற்று லைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

என்ற பாடல்களை முறையே பாடினார்கள்.* பின்பு ஒருநாள் திருக்குறுங்குடி யென்னுந் தலத்தில் எழுந்தருளியிருக்கிற திருமாலின் விஷயமாக வல்லோசையுள்ள கலித்துறைகளைப் பாடும்படி அரசன் சொல்ல, முறையே ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்

"திக்கு ளெட்டுக்கயந் துக்கமுற்றுத் திடுக்கிட்டலற
மைக்கடற்சூட் சரந் தைக்க விட்டோர்க் கிட மாமதுர
இக்கு முற்றிக் கணுச் சற்று விட்டுத் தெறித்திட்ட முத்தைக்
கொக்கு மொக்கிக் கக்கி விக்கு மச்சோலைக் குறுங்குடியே,"

"எட்டெழுத்தைக் கருத்திற் குறித்திட்டு நித்தம் பரவும்
சிட்டர்கட்குத் திருப்பொற் பதத்தைச் சிறக்கத் தருமவ்
வட்டநெட்டைப்பணி மெத்தை யத்தற் கிடம் வாரிசப்பொ
குட்டி னத்துக்குலம் தத்தி முத்தீனுங் குறுங்குடியே"

என்ற பாடல்களைப் பாடினார்கள். ஒன்றுக்கு ஒன்று உயர்வு தாழ்வு இல்லாமற் சிறந்திருக்கிற அப்பாடல்களை அரசன் கேட்டு அவற்றின் சொற்பொலிவு பொருட்பொலிவுகளையும், கற்பனையலங்காரங்களையும் கண்டு களித்து, இருவர்க்குஞ் சமமாகச் சம்மானம்செய்துவந்தான்.

ஒருநாள் உறையூரில் சோழராசன், ஒட்டக்கூத்தரோடும் புகழேந்தியோடும் வீதியிற் கால்நடையாய் உலாவிச்செல்லும்போது, ஒருவீட்டுத் தெருத்திண்ணையில், இரண்டு கால்களையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த ஔவையார், சோழனைக் கண்டவுடன் ஒருகாலை மடக்கிக்கொண்டனர்; அருகிற் புகழேந்திப்புலவரைப் பார்த்தவுடனே மற்றைக்காலையும்மடக்கிக்கொண்டனர்; அவர்களையடுத்துவந்த ஒட்டக்கூத்தரைக் கண்டவுடனே, அவரைக் கர்வபங்கஞ்செய்யும்பொருட்டு, இரண்டுகால்களையும் நீட்டினார்; இதைப்பார்த்த ஒட்டக்கூத்தர் அவமானமும் கோபமுமுடையவராய் 'இவ்வாறு என்னை அவமதித்தது என்ன?' என்று ஔவையாரைக் கேட்க, அவர் 'அரசன் நாட்டுக்குத்தலைவனாதலால், அவனுக்கு ஒரு காலையும், மன்னனிற் கற்றோன் சிறப்புடையனாதலால், மகாவித்துவானான புகழேந்திக்காக இரண்டுகாலையும் மடக்கினேன்; நீயோ கல்விநிறைவின்றி வீண்புலமை பாராட்டுபவனாதலால் உனக்கு இரண்டுகாலையும் நீட்டினேன்' என்று சொல்லி, 'உண்மையாகவே

* இச்செய்தியை, ஒட்டக்கூத்தரைப் புகழேந்தி வென்றதாக, அடியில் வருந் தொண்டைமண்டலசதகச்செய்யுள் தெரிவிக்கும்:—

"நூலார் கலைவல்ல செம்பியன் கேட்ப நொடித்து மிக்க
கோலாகல னொட்டக் கூத்தனை யன்று தற்கோலி யென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத்தே சென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண்டை மண்டலமே."

நீயும் புகழேந்திபோலச் சிறந்தபுலவனாயின், சோழனையும், அவன் நாட்டையுஞ் சிறப்பித்து, சந்திரனுக்குப் பெயராகும் ஒரு பதத்தை ஒரு பாடலின் ஈற்றடியில் மூன்றிடங்களிற் பிரயோகித்துப் பாடு, பார்ப்போம்' என்று சொன்னார்; அதற்கு ஒட்டக்கூத்தர்,

"வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்து மழைத்துளியோ டிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டப்பேதை பெரிய மதியு மிழந்தாளே"

என்று ஒரு பாட்டுப் பாடினர்; அதுகேட்டு ஔவையார் ஒட்டக்கூத்தரை நோக்கி, 'உன் பாடலில் ஒரு சந்திரன் குறைந்ததே' என்றும் 'உனக்கு அறிவு கெட்டதே' என்றுஞ் சிலேடையாகப் பொருள்படும்படி, "ஒட்டா ஒரு மதி கெட்டாய்" என்று கூறி, உடனே புகழேந்தியைப்பார்த்து 'நான் சொன்னபடி நீர் பாடும்' என்றார்; உடனே ஆசுகவியாக அவர்,

"பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங் கிளநீர்தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கர்க் கமராபதி யளித்த கோவே ராசகுலதிலகா
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப்பிறைக்கும் விழிவேலே"

என்று ஓரடியில் மூன்றுபிறைவரும்படி பாடினர்; இதைக்கேட்டு ஔவையார் புகழேந்தியை மிகுதியாகக் கொண்டாடினர்.

ஒட்டக்கூத்தர், கோவை உலா அந்தாதி பாடுவதில் ஒப்புயர்வில்லாமல் மிகச்சிறந்தவர்; இதனை,

"வெண்பாவிற்புகழேந்திபரணிக்கோர்சயங்கொண்டான்விருத்தமென்னும்
ஒண்பாவி லுயர்கம்பன் **கோவை யுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன்**
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகரொணாதே"

எனப் பின்புள்ளோர் பாடியுள்ளதனாலும் அறிக.

**ஒட்டக்கூத்தர் இராமாயணம்பாடியது:**—இங்ஙனம் இருக்கையில், சோழநாட்டில் திருவழுந்தூரில் வேளாளவருணத்திற் பிறந்து திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பவள்ளலினால் ஆதரிக்கப்பெற்று வளர்ந்துவரும் இளமையிலேயே சரசுவதிகடாக்ஷமும் கம்பரென்னும் பெயரும் பெற்ற புலவர், சோழராசனை யடுத்து அவனது சபையில் நாள்தோறும்வந்து சமயோசிதமாகவும் சாதுரியமாகவும் பல கவிகள் பாடிப் பிரசங்கித்து 'கல்வியிற் பெரிய கம்பர்' என்றும், 'புலவர் பெருமான்' என்றும் பெரும்பெயர்பெற்றார். பின்பு ஒருநாள் சடையப்பவள்ளல் கம்பரது புலமைத்திறம் விளங்குமாறு அவரை ஏதாவது ஒரு பிரபந்தம் பாடும்படி செய்யவேண்டுமென்று சோழராசனுக்கு அறிவிக்க, அவன் 'தனியே ஒருவரைப்பாடச்செய்தலினும் இருவரை ஒருசேரப் பாடும்படி செய்தால் புலமைத்திறம் நன்றாகவிளங்கும்' என்று நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் நோக்கி, 'ஸ்ரீ ராமசரித்திரத்தைத் தமிழ்ப்பாவினாற் பாடிமுடிக்கவேண்டும்' என்றுகூறினான். அதுமுதல் ஒட்டக்கூத்தர் தமிழில் இராமாயணம் பாடத்தொடங்கிச் சுந்தரகாண்டம்வரையில் முடித்து யுத்தகாண்டம் இயற்றிக்கொண்டிருக்குமளவும் கம்பர் சிறிதும் பாடத்தொடங்காமலேயிருந்தனர். அதனையறிந்து அரசன் ஒருநாள் இருவரையும் வருவித்து 'இராமசரித்திரம் எவ்வளவு பாடியாயிற்று?' என்றவினவியதற்கு, ஒட்டக்கூத்தர் 'யுத்தகாண்டத்திற் கடல்காண்படலமளவும் ஆயிற்று' என்றார். கம்பர் ஒரு பாட்டும் பாடாதிருந்தும் தாம் ஒட்டக்கூத்தரினும் அதிகமாய்ப்பாடினதாகச் சொல்லவேண்டுமென்று நினைத்து 'அதற்குமேல் சேதுபந்தனப்படலமளவும் பாடினேம்' என்றார். 'அதனைச் சற்றே பிரசங்கி

யும், கேட்போம்' என்று அரசன் சொல்ல, கம்பர் உடனே அப்படலத்தை மாத்திரம் ஆசுகவியாகப் பாடி மனத்தில் அமைத்துக்கொண்டு அதில்

"குமுத னிட்ட குலவரை கூத்தரின்
திமித மிட்டுத் திரியுந் திரைக்கடல்
துமித மூர்புக வானவர் துள்ளினார்
அமுத மின்னு மெழுமெனு மாசையால்"

என்ற பாடலை எடுத்துச்சொல்லிப் பிரசங்கித்தார். அதுகேட்டவுடனே ஒட்டக்கூத்தர் கம்பரை நோக்கி 'துளியைத் துமியென்றீரே, இதற்கு எங்கேனும் ஆதாரம் உண்டா?' என்று ஆக்ஷேபிக்க, கம்பர் 'இது, செய்யுள்வழக்கில் இன்றாயினும், உலகவழக்கிலுள்ளது' என்றுசொல்ல, கூத்தர் 'அவ்வுலகவழக்கை மெய்ப்பிக்கவேண்டும்' என்று வற்புறுத்த, 'நாளை அங்ஙனமே செய்வோம்' என்று சொல்லிப் பிரசங்கத்தை முடித்துப் பின்பு வீட்டிற்குச் சென்ற கம்பர் சரசுவதியைப் பிரார்த்தித்து அக்கலைமகள் பிரசன்னமாய் அனுக்கிரகித்தபடி மறுநாளுதயத்தில் ஒட்டக்கூத்தனையும் சோழராசனையும் இடைத்தெருவுக்கு அழைத்துச்செல்ல, அப்பொழுது நாமகள் அங்கு ஓர் இடைப்பெண்ணாக வடிவுகொண்டு சிலபிள்ளைகளுடனே வந்து குடியற்றதொருவீட்டில் தங்கித் தயிர்கடைகின்றவளாய் அருகிலிருந்த சிறுவர்களை நோக்கி 'பிள்ளைகளே! உங்கள்மேல் மோர்த் துமி தெறிக்கப்போகிறது, எட்ட இருங்கள்' என்றுசொல்ல, கம்பர் ஒட்டக்கூத்தனைநோக்கி 'அதுகேட்டீரோ' என்ன, அவர் அதனை ஒப்புக்கொண்டு அவ்வீட்டினுட் சென்று பார்க்குமளவில், அங்கிருந்த இடைப்பெண்ணும் சிறுபிள்ளைகளும் தயிர்த்தாழிமுதலியனவும் தமதுகண்ணுக்குத்தோன்றியவுடனே மறைந்துவிட்டதனால், இது சரசுவதியின் திருவிளையாடலேயென்று அறிந்து அதிசயித்தனர். இவ்வாறு கம்பர் மறுபடி அரசனால் தூண்டப்பட்டு வெகுவிரைவாக நாளொன்றுக்கு எழுநூறுபாடல்வீதம் பதினாயிரத்துஐந்நூறு பாடல்களால் பதினைந்துநாளில் இராமாயணத்தில் பாலகாண்டம்முதல் யுத்தகாண்டமளவும் ஆறுகாண்டங்களைச் செய்துமுடித்தனர். அவ்வளவிலே, ஒட்டக்கூத்தர் தமதுயுத்தகாண்டத்தை முடித்து உத்தரகாண்டத்தையும் பாடி நூலைப் பூர்த்திசெய்தார். கம்பர் தாம் இராமாயணம் இயற்றுகிறபொழுதே அதன்பாடல்சிலவற்றை இராசசபையில் எடுத்துச்சொல்லிப் பிரசங்கிக்க, அதுகேட்ட ஒட்டக்கூத்தர் தாம்செய்த இராமாயணம் கம்பராமாயணத்துக்குமுன் தலையெடாதென்று எண்ணித் தமது இராமாயணச்செய்யுள்கள் எழுதிய ஏடுகளை ஒருநாள் ஆதிதொடங்கிக் கிழித்தெறிந்துகொண்டிருக்க, அச்சமயத்தில் அங்குவந்த கம்பர் அதுகாணுமளவில், யுத்தகாண்டம்வரையிற்கிழிபட்டுப்போயிருக்கவே, மிச்சமான உத்தரகாண்டத்தையாவது அப்படியே கிழியாதுவைத்திருக்கும்படி வேண்டினதுமன்றி, தாம அக்காண்டம்பாடுவதில்லையென்றுங் கூறினார். அதற்கு இசைந்து ஒட்டக்கூத்தர் அக்காண்டத்தைக் கிழியாது நிறுத்தினர்.

ஒட்டக்கூத்தருடைய மதம் சைவமே. அவர்பாடிய உத்தரராமாயணத்தினால், அவர்க்கு இராமபக்தி மிகுதியாயிருக்கிறதுபோலத் தோன்றினும், அவர் சைவசமயத்தவ ரென்பதை மறுக்கமுடியாது. ஆனால் விஷ்ணுத்வேஷம் பாராட்டுகிறவரல்ல ரென்றவளவே கூறலாம்.

கம்பர் இறந்த செய்தியைக் கேட்டவுடனே இவர்

"இன்றைக்கோ கம்ப னிறந்தநாள் இப்புவியில்
இன்றைக்கோ என்கவிதை யேற்குநாள்—இன்றைக்கோ
பூமடந்தை வாழப் பொறைமடந்தை வீற்றிருக்க
நாமடந்தை நூலிழந்த நாள்"

என்று பாடி இரங்கின ரென்பர்.

ஸ்ரீ

# இராமாயணம்.

ராமாயணம்என்ற வடசொல், தமிழில் வரும்போது,இராமாயணம்என முதலில் இகரம்பெற்றது; "ரவ்விற்கு அம்முதலாம் முக்குறிலும்,......மொழி முதலாகி முன்வருமே" என்பதைக் காண்க. இப்பெயர் - ராம அயந என்ற இரண்டுமொழி சேர்ந்தது; வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி; 'அ ஆ முன் அ ஆவரின் இரண்டுங்கெட ஓர் ஆகாரம் தோன்றும்.' இது ஒன்றற்கு இயற்பெயராதலால், வடநூல்விதிப்படி ராமாயணம் என நிலைமொழியின் ரகாரத்தைநோக்கி வருமொழியின்நகாரம் ணகாரமாயிற்று. தனது திருமேனியழகினாலும் நற்குணநற்செய்கைகளினாலும் எல்லோரையும் மகிழ்விப்பவன் என்பது, 'ராம' என்னுஞ் சொல்லுக்குப் பொருள்; அயநம்-அறிவிப்பது: ஆகவே, இராமகதையைத் தெரிவிக்கும் நூல் என்பது திரண்டபொருள். அயநம்-ஸ்தாநம்; அதாவது விஷயம் எனப்பொருள்கொண்டு, இராமனைவிஷயமாகவுடையநூலெனக் கூறுதலும்உண்டு. ராமா அயநம் என்றுபிரித்து,சீதையை அறிவிக்கும் பிரபந்தமென்றும் சிலர் பொருளுரைத்திருக்கின்றனர்; [ராமா-சீதை.] ராமாயணம் என்பது - முதலில் வால்மீகிமுனிவர் செய்த நூலுக்கு இயற்பெயராய், "முதனூல் கருத்தன் அளவு மிகுதி,பொருள் செய்வித்தோன் தன்மை முதல்நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்றபடி அதன்வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று.

இந்நூல், பெருங்காப்பியமாம் ; (பெருங்காப்பிய இலக்கணத்தை, இவ்வுரைப்புத்தகத்தின் ஈற்றிற் காண்க.)

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள், இராமாயணம் இதிகாசமாம்; மகாபாரதமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழையசரித்திரமொன்றைப் பிரதானமாக எடுத்துப் பலகிளைக்கதைகளோடுபுணர்த்து விரித்துக்கூறும் நூல் இதிகாசமென்றும்,உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம்என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் புராணமென்றும்வேறுபாடு உணரத்தக்கது: [இதிகாசம்-பழையஒருவரலாற்றை விரித்துக்கூறும் நூல். புராணம்-மேற்குறித்த ஐந்து இலக்கணங்களும் அமையப் பழைய பல வரலாறுகளைக் கூறும் நூல்.]

முதனூலாகிய வடமொழிவால்மீகிராமாயணத்தோடு,அதன்வழிநூலாகிய இத்தமிழிராமாயணம் சிற்சிலவிடத்துச் சிறிதுசிறிது வேறுபடுதலும் உண்டு. அது, "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதிபற்றித்தமிழாசிரியர்களாற் பிறநூல்மேற்கோள்கொண்டாவது தமதுகற்பனாசக்திகொண்டாவது அமைக்கப்பட்டதெனக் கொள்ள வேண்டும்; இப்படி மாறுபடுகிறவிடத்து, 'ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும், இதிகாசாந்தரபுராணாந்தரங்களிலேயாதல் கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேணும்' என்று ஆன்றோர் அருளிச்செய்தது அமைத்திருத்தல் உணரத்தக்கது. இதிகாசாந்தரமாகிய பாரதத்திலும், பாத்மம் வைஷ்ணவம் ஸ்காந்தம் கூர்மம் முதலிய புராணங்களிலும் இராமசரித்திரம் சிற்சிலவேறுபாடு அமையக் கூறப்பட்டுள்ளமை காணலாம்.

இவ்விராமாயணம் அந்தந்தப்பாகத்துச் சரித்திரத்தின் முக்கியமான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம் உத்தரகாண்டம் எனப் பெயர்பெற்ற ஏழுகாண்டங்களை யுடையது.

இராமாயணத்தை முதலில் வடமொழியிற் செய்தவர், வால்மீகி மகாமுனிவர். இவர் ஸ்ரீராமபிரான் பூலோகத்தில் எழுந்தருளியிருக்கையிலேயே இராமாயணம்முழுவதையுஞ் செய்தருளி அவர் அசுவமேதயாகஞ்செய்யத் தொடங்கியசந்தருப்பத்தில் அவர்சந்நிதியிலே அவர்குமாரர்களான குசலவர்களைக்கொண்டு அரங்கேற்றினார். (ஆனால், பாலகாண்டம்முதல் யுத்தகாண்டமீறாக ஆறுகாண்டங்களும் உத்தரகாண்டத்தில் அசுவமேதமளவுந்தான் இராமபிரான் சபையிற் கேட்டனர். உத்தரகாண்டத்தில் எதிர்காலவரலாற்றை முனிவர் ஞானக்கண்ணினால் முந்தியறிந்து கூறியதான மற்றைய பகுதியை அப்பெருமான் பிரமதேவர் சொன்னபடி ஏகாந்தத்திற் கேட்டனர்.) இது, நாரதமுனிவரது உபதேசத்தாலும் பிரமதேவரது அநுக்கிரகத்தாலும் செய்யப்பட்ட நூலாகையால், சிறந்தபிரமாணமாக வைதிகமதத்தவரெல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இது, ஸம்ஸ்கிருதபாஷையில், ஆதிகாவியம். பின்பு பிறமுனிவரும் கவிஞரும் இதனைப் பலவகைக்காவியங்களாகவும் நாடகங்களாகவும் இயற்றியிருக்கின்றனர். இவ்வாறே வேறுபாஷைகளிலும் அந்தஅந்தவித்துவான்கள் செய்திருக்கிறார்கள். தமிழில் சங்கத்துராமாயண மென்று ஒன்று இருந்ததாகப் பெயரேயன்றி வழங்கிவருவது கம்பராமாயணந்தான்.

இராமாயணத்தில் முதல் ஆறுகாண்டங்களைக் கம்பரும், ஏழாவதுகாண்டத்தை ஒட்டக்கூத்தரும் வடமொழி வால்மீகிராமாயணத்தைப் பெரும்பாலும் தழுவித் தமிழிற் பாடினார்கள். ஏறக்குறையக கம்பர்பாடல் - ௧0௫00 ஒட்டக்கூத்தர்பாடல் - ௧௫00 ; ஆக - ௧௨000.

ஏழாவது

# உத்தரகாண்டம்.

உத்தரம் என்றால், பிற்பட்டது. ஆகவே, பட்டாபிஷேகத்துக்குப் பிற்பட்ட கதையைச் சொல்லுங் காண்டமென்பது திரண்டபொருள். எனவே, உத்தரகாண்ட மென்ற வடமொழித்தொடர் - இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகையாம். காண்டம் - கூட்டம் ; இப்போதுப் பெயர் - இங்கு, சரித்திரத்தின் ஒருபாகத்தை யுணர்த்துஞ் செய்யுட்களின் கூட்டமென்று சிறப்பாகக் கொள்ளத்தக்கது ; இங்குப் பெரும்பிரிவுக்குப் பெயராகவழங்கப்பட்டது. இது உத்தரராமாயணமென்றும் வழங்கும் ; பிற்பட்டதாகிய ராமாயண மென்றபொருள் ; என்றால், இராமாயணத்திற்பட்டாபிஷேகத்துக்குப்பிந்தினசரித்திரத்தைக் கூறுகிற பாகமென்றே கருத்து. உத்தரமாகிய ராமாயணமெனப் பண்புத்தொகையாக விரிக்க.*

இக்காண்டம், திருவோலக்கப்படலம் முதல் சந்திரசேதுநகர்ப்படலம் ஈறாகப்பகுக்கப்பட்ட ௯௮-படலங்கள் அடங்கிய (ஏறக்குறைய) ௩௫00-செய்யுள் உள்ளது. இந்நூலின் அச்சுப்பிரதிகளையும் ஏட்டுப்பிரதிகளையும் வைத்துக்கொண்டு ஒப்புநோக்கினவிடத்து, அளவிறந்த பாடபேதங்கள் இடந்தோறுங் காணப்படுகின்றன. அன்றியும், சிலசெய்யுள்கள் கூடியுங் குறைந்தும் பிறழ்ந்தும் உள்ளன. படலங்களின் பெயர்களிலும் பகுப்பிலும் பலமாறுபாடுகளும் உண்டு. இக்காண்டத்தில்

* சென்னை இராஜதானி வித்தியாசாலைத்தமிழ்ப்பிரதமபண்டிதராயிருந்தவரும், வடமொழி தென்மொழி இருமொழியிலும் நிரம்பியபுலமை வாய்ந்தவருமான ஸ்ரீ. உ. வே - தி. ஈ - ஸ்ரீநிவாசராகவாசாரியர், உத்தரகாண்டத்தைப் பெரும்பாலும் வடமொழிமுதனூற்போக்கை விடாது தழுவித் தமிழில் வசனரூபமாக எழுதியுள்ளார் ; அது, உத்தரராமாயணவசன மெனப்படும்.

## பன்னிரண்டாவது

# சீதை வனம்புகு படலம்.

இராமபிரானது மனைவியான சீதாதேவி மீண்டும் காட்டிற் சென்று சேர்ந்த செய்தியைப் பற்றிக் கூறும் பாகமென்று பொருள். இத்தொடர் மொழியிலுள்ள மூன்று புணர்ச்சிகளுள் முதலது-எழுவாய்த்தொடரும், இரண்டாவது-ஏழாம்வேற்றுமைத்தொகையும், மூன்றாவது - வினைத்தொகையுமாம். ஸீதா, வநம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. சீதை என்பதற்கு-கலப்பையுழுபடைச்சாலென்று முதலிற் பொருள். ஜநகமகாராஜா யாகஞ் செய்தற்குச் சாலையமைத்தற்பொருட்டு நிலத்தை உழுதபொழுது அப்படைச் சாலினின்று தோன்றியவ ளாதலால், பிராட்டிக்குச் சீதையென்று பெயராயிற்று; இட்வாகுபெயராகிய காரணக்குறி. படலம் என்னும் வடசொல்லுக்கும் கூட்டமென்பது பொருளாயினும், அது, சங்கேதத்தால், இங்கு, ஒரு பெரிய வகுப்பினுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும்.

### கதைத்தொடர்ச்சி.

[இராமாயண கதை மிகவும் பிரசித்தமான தாதலால், இந்தப் படலத்துக்கு முன்கதைத்தொடர்ச்சி சுருக்கமாகவே எழுதப்படுகிறது.]

இராவணன் முதலிய கொடிய அரக்கர்களின் உபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாமல் அவர்களைக் கொல்லும்படி பிரார்த்தித்த தேவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கிய ஸ்ரீமகாவிஷ்ணுவினது ஏழாவது திருவவதாரமாகக் கோசலதேசத்தில் அயோத்தியாநகரத்தில் தசரதசக்கரவர்த்திகுமாரனாய்த் திருவவதரித்த இராமபிரான் தனது சிறியதாயான கைகேயிக்குத் தனதுதந்தைகொடுத்திருந்தவரங்களைநிறைவேற்றுதலின்நிமித்தம்அக்கைகேயியின்மகனை பரதனுக்கு இராச்சியத்தைக் கொடுத்துத் தான் பதினான்குவருடம் வனவாசஞ்செய்ய உடன்பட்டு மனைவியாகிய சீதையோடும், தன்னைவிட்டுப் பிரியாத தம்பியான இலக்குமணனோடும் நகரத்தைவிட்டுப் புறப்பட்டுத் தண்டகாரணியஞ்சேர்ந்து அதில் கோதாவரிநதிதீரத்தில் பஞ்சவடியாச்சிரமத்தில் வசிக்கையில், அரக்கர்தலைவனாய் இலங்கையில் வாழ்கிற இராவணன், தனது தங்கையான சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டுச் சீதையினிடம் பெருங்காதல்கொண்டு சன்னியாசிவேடம்பூண்டுவந்து, அவளைத் தனித்திருக்கிற சமயம்பார்த்து வஞ்சனையாக எடுத்துச்சென்று இலங்கையில் அசோகவனத்தில் அரக்கியர் சூழச் சிறைவைத்திட்டான். பின்பு சீதையைத் தேடிக்கொண்டு இலக்குமணனுடனே சென்ற ஸ்ரீராமன், வழியில் எதிர்ப்பட்ட அநுமான்மூலமாகச் சுக்கிரீவனோடு நண்புகொண்டு அவன்வேண்டுகோளின்படி அவனதுதமையனும் வாநரராசனுமான வாலியைத் தந்திரமாகக்கொன்று சுக்கிரீவனைக் கிஷ்கிந்தைநகரத்து அரசனாக முடிசூட்டிவைத்தபின் அவ் வாநரராசன் சீதையைத்தேடும்பொருட்டு அநுமான் முதலிய பலவாநரவீரர்களை ஆங்காங்குத் தூதனுப்ப, அங்ஙனம் இராமதூதனாய்த் தென்திசையிற் சென்ற அநுமான் கடல்கடந்து சென்று சீதையுள்ளவிடத்தைத் தேடிக் கண்டுபிடித்து அவளுடன் பேசியபின் இலங்கைநகரத்தை எரித்து மீண்டுவந்து செய்திகூறியவுடனே, இராமன் பெரிய வானரசேனையைச் சித்தப்படுத்திக்கொண்டு புறப்பட்டுக் கடற்கரைசேருமளவில், தன்னைவந்துசரணமடைந்த இராவணன்தம்பியான விபீஷணனுக்கு அபயமளித்து அவனால் இலங்கையின் நிலைமையை அறிந்தபின்பு அவ்வாநரங்களைக்கொண்டு மலைகளைக்கொணர்ந்துஅணைகட்டுவித்து அவ்வழியாற்கடல்கடந்து இலங்கைசேர்ந்து அங்குப் பெரும்போர்புரிந்து இராவணனைச் சேனையோடும் புத்திரமித்திரரோடுங் கொன்று விபீஷணனுக்கு முடிசூட்டிவைத்துப் பிராட்டியை மீட்டுக்கொண்டு விபீஷணனுடனும், அவனைச் சார்ந்த சில அரக்கர்களுடனும், சுக்கிரீவன் முதலிய வாநரவீரர்களுடனும் தானும் தன்மனைவியும் தம்பியும் புஷ்பகவிமானத்திலேறித்திருவயோத்திசேர்ந்தனன். அங்கு இராமன்வரவை

எதிர்பார்த்திருந்த பரதன், தம்பியான சத்துருக்கினனுடனே எதிர்கொண்டுவந்து இராமபிரான் முதலானவர்களை வணங்கி உபசரித்து அழைத்துக்கொண்டுசெல்ல, அங்கு ஸ்ரீராமபட்டாபிஷேகமகோற்சவம், வசிட்டர் சுமந்திரர் முதலிய பெரியோர்களால் வெகுசம்பிரமமாக நடந்தேறிற்று.
(இது, கீழ்ஆறுகாண்டத்தின் கதை; இனி, உத்தரகாண்ட வரலாறு :—)
இவ்வாறு இராமபிரான் திருவயோத்தியில் திருமுடிசூடியெழுந்தருளியிருக்கையில், அகஸ்தியர் ஜமதக்கினி பரத்துவாசர் வசிஷ்டர் கௌதமர் கௌசிகர் காசியபர் அத்ரி தௌமியர் முதலிய முனிவர்கள்பலர் அந்தச்சக்கரவர்த்தித்திருமகனுரைக் கண்டு கொண்டாடக் கருத்துக்கொண்டு அங்குவந்துசேர, சபையில் வீற்றிருந்த இராகவபிரான் அவர்களை எதிர்கொண்டு அழைத்து வணங்கி உபசரித்துத் திவ்வியமான ஆசனங்களில் வீற்றிருக்கச்செய்து யோகக்ஷேமங்களை வினவ, அதற்கு அம்முனிவர்கள் 'எங்கட்கும் எல்லோர்க்கும் நெடுநாளாகப் பெருந்துன்பங்களை யிழைத்துவந்த கொடிய ராக்ஷசராசனை இராவணனையும், அவன்தம்பியான கும்பகர்ணனையும், அவர்களினும் மிகக்கொடியவனும்இராவணன்மகனுமானஇந்திரசித்தையும், மற்றும்பலஅரக்கர்களையும் வேரோடுஅறுத்தருளிய நுமது கருணை இருக்க, எங்களுக்கு என்னகுறை?' என்று கொண்டாடிப் பேச, அதுகேட்ட இராமசந்திரன் 'அவ்வரக்கர்களுடைய பிறப்பும், வலிமையும், செயலும், அவர்கள்பெற்ற வரங்களும் முதலிய வரலாறுகளையெல்லாம் அருளிச்செய்யவேண்டும்' என்று அம்முனிவர்களை வினவ, அவர்களில் அகஸ்தியமாமுனிவர் அனைத்தையுஞ் சொல்பவராய், புலஸ்தியவம்சவிருத்தாந்தத்தையும், பூர்விகராக்ஷசர்செய்தியையும், இராவணாதியர்பிறப்பையும், அவர்கள்பெற்ற வரங்களையும், இந்திரசித்தின் உற்பத்தியையும், இராவணன் திக்விசயஞ்செய்த விவரத்தையும், அவன் ஆங்காங்குச் சாபம்பெற்ற வகையையும் கூறியபொழுது, தசரதகுமாரர் அகஸ்தியரை நோக்கி 'அக்காலத்தில் இராவணனை வெல்லவல்ல ஓர்அரசனாயினும் வேறுஒருவனாயினும் இல்லாமற்போனாரோ?' என்று கேட்க, அம்முனிவர் அவ்விராவணன் ஒருசமயத்தில் கார்த்தவீரியார்ச்சுனனால் வென்று சிறையில் வைக்கப்பட்டதையும், மற்றொருசமயத்தில் வாலியினாற் பிடிக்கப்பட்டதையும் சொல்லி 'அப்படிப்பட்ட வாலியைக் கொன்ற உமக்குச் சமானமானவர் எவருமில்லை' என்று புகழ்ந்தனர். பின்பு ஸ்ரீராமன் பலபராக்கிரமங்களில் அனைவரினுஞ் சிறந்த அநுமானுடைய பெருமையைக் கொண்டாடிப் பேசி 'அப்படிப்பட்ட அநுமான் தன்வலிமையைத் தான் அறியாமலிருந்தகாரணம் என்ன?' என்று வினவ, அதற்கு விடையாக அக்குறுமுனிவர் அநுமானுடைய சரித்திரத்தை எடுத்துச் சொல்லினர். பிறகு பெருமான் முனிவர்கட்கு விடைகொடுக்க, அவர்களெல்லோரும் தம்தம்ஆச்சிரமங்கட்கு எழுந்தருளினார்கள். அப்பால், தாசரதி, அங்குவந்திருந்த ஜநகர் முதலிய அரசர்கட்கும், சுக்கிரீவன் விபீஷணன் முதலானார்க்கும் மிக்கசிறப்புக்கள் செய்து பற்பல உபசாரமொழிகள்கூறிவிடைதர, அவர்களும் தம்தம்இடங்கட்குச்சென்றனர்.

[அனைவரும் விடைபெற்றுச் செல்ல இராமன் இனிது வீற்றிருத்தல்.]

1.—(இதன்பொருள்.) தீங்கு அறு குணத்தோர் - குற்றமற்ற நற்குணங்களையுடையவர்களான சனகன்முதலானவர்கள், ஏக - (இராமபிரானிடம் விடைபெற்றுத் தம்தம்நகரத்துக்குச்) செல்ல,—சேடனின் சிரத்தின் பாரம் நீங்கியது என - ஆதிசேஷனுடைய தலையின்சுமை நீங்கிற்றென்று சொல்லும்படி, தான் போற்றி - தான் அன்போடு குறிக்கொண்டு பாதுகாத்து, நெடு கடல் அவனி பாரம் தாங்கிய - பெரியகடலினாற்சூழப்பட்ட பூமியாகிய சுமையை வகித்த, வீரன் - மகாவீரனான ஸ்ரீராமன், உச்சி சந்தியின் நியமம் செய்து - சூரியன் வானத்துஉச்சியில் வருகிற நடுப்பகற்பொழுதில் தவறாது செய்

தற்குஉரிய மாத்தியாந்நிகசந்தியாவந்தந மென்னும் வைதிகச்சடங்கைச் செய்துமுடித்து, ஆங்கு - அதன்பின்பு, உயிர் தம்பிமாரோடு - (தனக்கு) உயிர் போன்ற [மிக்க அன்புக்கு இடமான] தம்பிகள் மூவருடனே, அமுதுசெய்து இருந்த காலை - போசனஞ்செய்து வீற்றிருந்த பொழுது: (என்றவாறு.)— 'வானத்து இந்தக்கட்டுரை யெழுந்தது' என அடுத்தகவியோடு தொடரும்.

ஆகவே, இக்கவியும், அடுத்தகவியும் - குளகமாம்; ஒருதொடரெனப் படும்: குளகமாவது - பலபாடல்கள் தொடர்ந்து ஒருவினையைக் கொண்டு முடிவது; "குளகம் பலபாட்டு ஒருவினை கொள்ளும்." குளகமல்லாதது, முத்தக மெனப்படும்: அது, ஒருசெய்யுள் தனியே நின்று முடிவது; "முத்தகச்செய்யுள் தனி நின்று முடியும்."

சர்ப்பராசனான ஆதிசேஷன் பூமியின்கீழ் இருந்து தனது ஆயிரந்தலைகளாலும் பூலோகத்தைத் தாங்குகின்றனனென்பது, புராணக்கொள்கை. பூமியிற் பாவம் அதிகப்பட்டாலும் பாவிகள் அதிகப்பட்டாலும் அதனாற் பூமியிற் பாரமிகுகின்றதென்பது, நூற்கொள்கை. தோள்வலிமையைக்கொண்டுஇராச்சியத்தைப் பரிபாலிக்கிற அரசனைத் தோள்கொண்டு உலகத்தைச்சுமக்கின்றவ னென்று வருணித்தல், கவிமரபு. இந்தமூன்றையும் பற்றி, 'சேடனின் சிரத்தின்பாரம் நீங்கியதெனத் தான்போற்றி நெடுங்கடலவனிபாரந் தாங்கிய வீரன்' என்றார். பூலோகத்திலுள்ள கொடும்பாவியரான இராவணன்முதலிய அரக்கர்களையெல்லாம் தனதுபலபராக்கிரமங்களாற் கொன்றொழித்துப் பூமிபாரம் நீங்கச்செய்து பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு பூலோகத்து அரசாட்சிமுழுதையும்ஏற்றுக்கொண்டு அந்நிலவுலகத்தில் எங்கும் யாதொரு தீவினையும் நிகழவொட்டாதபடி கருத்தோடு காக்கின்ற திறமையுடையவ னென்பது கருத்து. இன்றியமையாமை தோன்ற 'உயிர்த்தம்பிமார்' என்று உவமைபுணர்த்துக் கூறினது, இராமனுக்கும் அவன்தம்பியர்க்கும் பரஸ்பரம் உள்ள பிரீதிவிசேஷத்தை விளக்கும்.

நீங்கு - 'கு' விகுதிபெற்ற பண்புப்பெயர். குணம், சேஷன், சிரஸ், பாரம், அவநிபாரம், வீரன், உச்சம், ஸந்த்யா, நியமம், காலம் - வடசொற்கள். சேஷன் என்பது - (பிரளயகாலத்திலும் அழிவின்றிச்) சேஷித்துநிற்பவனென்றும் (சேஷித்தல் - எஞ்சுதல்), அவநி என்பது - பாதுகாத்தற்குஉரியதென்றும் (அவநம் - காத்தல்) காரணப்பொருள்படும். ஏக - செயவெனெச்சம்: ஏகு - பகுதி. சேடனின், இன் - சாரியை. சிரத்தின், அத்து இன் - சாரியைகள். தான் - அசை. ஆங்கு - அங்கு என்றதன் சுட்டு நீண்டது. தம்பி, தாம் - பகுதி, அது முதல் குறுகிற்று; பி - முறைப்பெயர் விகுதி: அதன்மேல் மார் - பலர்பால்விகுதி. அறுகுணம் - வினைத்தொகை. நெடுங்கடல் - பண்புத்தொகை. உயிர்த்தம்பிமார் - உவமைத்தொகை. புசித்தலென்னும் பொருளில் 'அமுதுசெய்தல்' என்றல், மரியாதைவார்த்தை. தம்பிமார் - லக்ஷ்மண பரத சத்ருக்நர். (௧)

[இதுவும், அடுத்த கவியும் - புஷ்பகவிமானத்தின்தேவன் ஆகாயத்தில் நின்றுகொண்டு இராமனை நோக்கிச் சொல்லும் வார்த்தை.]

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

2.—(இ - ள்.) கனம் மிடை வானத்து - மேகங்கள் நெருங்கிய ஆகாயத்திலே, இந்த கட்டுரை ஓங்கி எழுந்தது - இந்தவார்த்தை உரத்தகுரலோடு தோன்றிற்று: (எந்தவார்த்தை யென்றால்,—) "புனை மணி பூணினாய் - தரித்த இரத்தினாபரணங்களையுடையவனே! யான் புட்பகம் - நான் புஷ்பகவிமானத்தின் தேவன்: எனக்கு பண்டு தனபதி உரைத்த கேட்டி - எனக்கு முன்னாளிற் குபேரன் சொன்ன சொற்களைக் கேட்பாயாக: (என்சொல்லின னெனின்),—தசரதராமன் தன்னால் - தசரதசக்கரவர்த்தியின்குமாரனாகஅவ

தரிக்கும் இராமபிரானால், கனை கழல் அரக்கர் கோமான் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய ராக்ஷசராசனான இராவணன், காலன்வாய் படுதல் - யமனிடத்திற் சேர்தல் [இறத்தல்], திண்ணம் - நிச்சயம்: (எ - று.)

மிடைவானம், புனைபூண், கனைகழல் - வினைத்தொகைகள். இந்த - இகரச்சுட்டின் மரூஉ. கட்டுரை - பொருளுள்ள சொல். பூணினாய் - பூணினான் என்பதன் ஈறுதிரிந்த விளி. பூணினாய்+யான்=பூணினாயான் ; தனிக்குறிலைச்சாராத யகரம் யகரம்வரக் கெட்டது; இப்புணர்ச்சியை, "யரழமுன்னர்" என்ற சூத்திரத்து 'மேல்' என்ற மிகையால் அமைக்க. பூண் - பூணப்படுவது. பண்டு - பழமைகுறிக்கும் இடைச்சொல். உரைத்த - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயர்: பெயரெச்சமன்று; அ - விகுதி; இது, அன்சாரியைபெறுகையில் உரைத்தன வென நிற்கும். கேட்டி - ஏவலொருமைமுற்று: கேள் - பகுதி, இ - விகுதி, இதுவே எதிர்காலங் காட்டும், ட் - எழுத்துப்பேறு, ளகரம் டகரமானது - சந்தி, தன் - சாரியை. கழல் - வீரர்காலணி. கோமான், மான் - பெயர்விகுதி. திண்ணம் - 'அம்' விகுதிபெற்ற பண்புப்பெயர்; இது 'மை' விகுதி பெறுகையில், திண்மையென நிற்கும். கநம், மணி, புஷ்பகம், தநபதி, தசரதராமன், ரக்ஷஸ், காலன் - வடசொற்கள்; தநபதி - செல்வத்துக்குத் தலைவன். காலன் - பிராணிகளின் ஆயுட்காலத்தை வரையறுப்பவன். 'தசரதராமன்' என்றது, பரசுராமனும் பலராமனு மாகிய முன் பின் அவதாரங்களினின்று பிரித்துக்காட்டும். தசரதன் - பத்துத்தேரையுடையவன்: பத்துத்திக்கிலுந் தடையின்றிச் செல்லவல்ல தேருடையவ னென்று கருத்து. (உ)

• 3.—(இ - ள்.) ஆயவன் பொன்ற - அவ்விராவணன் அழிய, (அதன்பின்பு), நின்னால் ஆவது செய்தி - உன்னாலாகும் உதவியை (இராமபிரானுக்கு)ச் செய்வாய்; அந்த தீயவன் பொன்றவே என் சிந்தைநோய் தீரும் - கொடியவனான அவ்விராவணன் இறந்தால்தான் எனதுமனோவியாதி நீங்கும்', என்று—, தூயவன் - பரிசுத்தகுணமுடையவனான அக்குபேரன், எனக்கு முன்பு சொன்னதே - என்னைநோக்கி முன்பு சொன்னபடியே, முடிந்தது - நிறைவேறிற்று; இன்று போய் அவன்தன்னை கண்டு வருகிறேன் - இப்பொழுது நான் சென்று அக்குபேரனைப் பார்த்துவருகிறேன், புவனம் நாத - உலகத்துக்குத் தலைவனே!" (எ - று.)

பிரமபுத்திரரான புலஸ்தியருடைய குமாரராகிய விச்ரவசு என்பவர்க்குப் பரத்துவாசமுனிபுத்திரியினிடம்தோன்றிய புதல்வன் பெருந்தவஞ்செய்து பிரமனருளால் இந்திரன் யமன் வருணன் என்பவரோடு சமனான லோகபாலகனாய் வடதிசையை ஆள்பவனும் செல்வத்துக்குத்தலைவனு மாகிக் குபேரனென்று பிரசித்திபெற்றான். அவனுக்குப் புஷ்பக மென்ற விமானம், பிரமனிடத்திலிருந்து வரமாகக் கிடைத்தது. இவ்விமானம் தன்மேல் ஏறியவர் நினைத்தவிடத்தில் அவர்நினைத்தபடி செல்லவல்லது ; எத்தனைபேர் ஒருங்குஏறினாலும் அத்தனைபேர்க்கும் தான் வளர்ந்து இடங்கொடுப்பது. குபேரன் தனதுதந்தையின் அநுமதிப்படி இலங்காபுரியிற் குடிபுகுந்து வசித்திருந்தான்; பின்ஒருகாலத்தில் சுமாலி யென்னும் இராக்கதன், புஷ்பகமேறி மிக்க விபவத்தோடு ஆகாயமார்க்கமாய்த் தந்தைபாற் செல்கிற குபேரனது சிறப்பைத் தன்மகளான கேகசிக்குக் காட்டி 'இப்படிப்பட்டவனைப் பெற்ற விசிரவமுனிவரை நீயும் சேர்ந்து நன்மக்களைப் பெறுவாய்' என்று தூண்ட, அங்ஙனமே அவள் மாலைப்பொழுதில் அம்முனிவரிடஞ் சென்று தன்கருத்தைக் குறிப்பித்துப் பிரார்த்திக்க, அவர் அவளை அங்கீகரித்து, 'நீ ஆசுரவேளையில் வந்ததனால், கொடியபிள்ளைகள் உன்னிடம் உண்டாவர்' என்று அருளிச்செய்ய, அதுகேட்ட அவள் மீண்டும் வெகுவாக வேண்ட, அவர் 'கடையில் உதி

ப்பவன் நன்மகனுவான்' என்று அனுக்கிரகித்தனர். அவ்வாறே அவளிடம் இராவணன் கும்பகர்ணன் சூர்ப்பணகை விபீஷணன் என்பவர் முறையே தோன்றினர். இவர்கள் வளர்ந்து வருகையில், ஒருநாள், குபேரன் விபவப் பெருக்கந்தோன்ற விமானமேறிப் பிதாவைத் தரிசித்தற்கு வரக் கண்டு கேகசி இராவணனை நோக்கி 'மகனே! நின் அண்ணனது பெருமை எங்ஙனம் இருக்கிறது! பார்: நீயும் அங்ஙனமாக முயலவேண்டும்' என்று தூண்ட, அவன் உடனே 'என் அண்ணனுக்கு மிக்கவனுக முயல்வேன்' என்றுசொல் லிப் பெருந்தவஞ்செய்து பிரமனருளாற் பலவரங்களைப் பெற்று இயற்கைத் தேகபலத்தோடு கூடிய வரபலத்தால் மிகக்கொழுத்திருக்கையில், மாதாமக னுன சுமாலி வந்து 'ஆதியில் அரக்கரதாயிருந்த இலங்கையைக் குபேரனி டத்தினின்று நீ கைப்பற்றவேண்டும்' என்று போதிக்க, உடனே இராவணன் தூதனுப்பிச் சமாதானத்தால் இலங்கையை வசப்படுத்திக்கொண்டு அதில் அரசாண்டுவாழலானுன். குபேரனே தந்தையின் அநுமதிப்படி இலங் கையை விட்டுக் கைலாசத்திற் சென்று அளகாபுரியில் வசித்தான். பின்பு இராவணன் தேவர்களையும் முனிவர்களையும் மிகுதியாகவருத்துதலை யறிந்த குபேரன் தம்பியென்னும் அன்பினுல் ஒருதூதன்மூலமாக 'இங்ஙனம்செய் வது தகுதியன்று' என்று தெரிவிக்க, அதுகேட்டவளவிலே, இராவணன் பெருங்கோபங்கொண்டு சேனையோடு சென்று அவனைஎதிர்த்துப்பொ ருது வென்று அவனுடைய புஷ்பகவிமானத்தைக் கவர்ந்துகொண்டு அதன் மேல்ஏறிச் செல்லலுற்றுன். அப்பொழுது குபேரன் புஷ்பகத்தை நோக்கி 'இவ்விராவணன் தசரதராமனுல் இறக்குமளவும் நீ இவனிடம்இருந்து பின்பு இராமனுக்கு உரிமையோடு இயன்றஉதவி செய்து அப்பால் என்னிடம் மீளுவை' என்றுகூறினன். அங்ஙனமே இராமபிரான் இராவணனைக் கொ ன்றபின்பு அவ்விமானம் அப்பெருமானையும் அவனைச்சார்ந்த அனைவரையும் தன்மீது கொண்டு இலங்கையினின்று அயோத்தியிற்சேர்த்து இராமபட்டா பிஷேகத்தின்பின்பு அனைவரும் விடைபெற்றுச் செல்லுகையில், தானும் இங் ஙனம் விடைபெற்றுச் செல்கின்ற தென்க.

ஆயவன் - ஆகியவன்; இறந்தகால வினையாலணையும்பெயர்: ய் - இடைநிலை. செய்தி, த் - எழுத்துப்பேறு. பொன்றவே, ஏ - பிரிநிலை. தூயவன் - தூய்மை யென்னும் பண்பினடியாப்பிறந்த பெயர். முன்பு, பு - சாரியை. சிந்தா, புவநாதன் - வடசொற்கள். சிந்தைநோய் - மனவருத்தம். (௩)

[புஷ்பகவிமானம் இராமனிடத்தினின்று விடைபெற்றுச் செல்லுதல்.]

4.—(இ-ள்.) என்று—, அது-அவ்விமானத்துக்குரிய தெய்வம், கூற-சொ ல்ல, கேட்ட—, இராகவன்-இராமபிரான், வியந்து-அதிசயித்து, சாலநன்று என மகிழ்ந்து - '(நின்கருத்து) மிகநன்றுகவுள்ளது' என்று (அதனைக்) கொ ண்டாடி, பொன் திகழ் விமானந்தன்னை - பொன்மயமாய் விளங்குகிற அவ் விமானத்தை, கந்தம் நறு மலர் கொடு பூசித்து - சந்தனம்முதலிய வாச னைப்பொருள்களையும் நன்மணமுள்ள பூக்களையுங் கொண்டு பூசித்து, போ என விடுத்தலோடும் - போ என்றுசொல்லி விடையளித்தவுடனே,—(அவ் விமானம்), தனக்கு வேண்டும் திசையின்மேல் - தான்விரும்பிய வடதிசை யை நோக்கி, சிந்தை என்ன சென்றது - மனம்போல (வெகுவேகத்தோடு) போயிற்று; (எ - று.)

ராகவன் - வடமொழித் தத்திதாந்தநாமம்; (சூரியகுலத்திற் பிரசித்தி பெற்ற) ரகுவென்னும் அரசனது மரபிற் பிறந்தவன். சால - சால் என்னும் உரிச்சொற்பகுதியின்மேற் பிறந்த செயவெனெச்சம். 'நன்று' என்றது, அங் கீகாரத்தை விளக்கும். கொடு - கொண்டு என்பதன் விகாரம்; கருவிப்பொரு ளில் வந்த மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. விமானம் - வானத்திற்

செல்லுந் தேவரூர்தி. கந்தம், விமானம், திசா, சிந்தா - வடசொற்கள். என்ன - உவமவுருபு. எவ்வளவு தூரத்தி லுள்ள பொருளை நினைத்தாலும் நினைத்தமாத்திரத்திலே அப்பொருளினிடம் சென்று சேர்வதாகிய மனம், மிக்க விரைவுக்கு உவமைகூறப்படும். பொன்திகழ்விமானம் சிந்தையென்னச் சென்றது—"நினைவெனுந்தரத்தாய், விண்டலர்ந்திகழ் விமானப்புட்பகம்" என்று யுத்தகாண்டத்திலும், "வரவுபோக்கினுன் மனோகதியுடையது வானத், திரவிதேரினுங் கடியது ஈரேழுலகுள்ளோர், விரவியேறினும் வெளியிடமிகுவது வேகப், புரவியில்லது புட்பகவிமானம்" என்று இக்காண்டத்திலும் வந்தன காண்க. (௪)

[இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்; பரதன் இராமனது அரசாட்சிச் சிறப்பைப் பற்றி அப்பெருமானிடம் சில கூறுதல்.]

5.—(இ - ள்.) அந்த அற்புதத்தை கண்ட பரதன் - அந்த [விமானம் பேசி விடைபெற்றுச்சென்ற] அதிசயத்தைப் பார்த்த பரதன், ஆச்சரியம் எய்தி - வியப்படைந்து, சுந்தரம் வில்லிதன்னை தொழுது - அழகிய (கோதண்டமென்னும்) வில்லையுடையவனை இராமபிரானை வணங்கி, இவை சொல்லும் - இவ்வார்த்தைகளைச் சொல்லுவான்: (அவை யாவையெனின்,—)'தூயோய் - பரிசுத்தியுடையவனே! இறைவ - தலைவனே! இந்த மா நிலத்தை காக்க நீ இசைந்த பின்பு - இந்தநிலவுலகத்தை அரசாளுமாறு நீ ஏற்றுக்கொண்ட பின்பு, வந்த - நேர்ந்த, அற்புதங்கள் - ஆச்சரியகரமான செய்கைகளை, எண்ணில் - கணக்கிடுமிடத்து, வரம்பு இலை - (அவற்றிற்கு) ஓர் எல்லையில்லை,' என்று கூறி-என்றுசொல்லி,(எ-று.)—இக்கவியில் 'கூறி' என்ற வினையெச்சம், மேல் எட்டாங்கவியில் வருகிற 'என்ன' என்னும் எச்சத்தோடு தொடரும்.

மிகப்பல அதிசயங்கள் நீ அரசனானபின்பு நிகழ்கின்றன என்பதாம். 'இறைவனீயிசைந்தபின்பு' என்ற பாடம், நீ இறைவனாகி அமர்ந்தபின்பு என்று பொருள்படும். இறைவன் - இறைமையென்னும் பண்பினடியாய்ப் பிறந்த பெயர்; வ் - பெயரிடைநிலை. வில்லி, இ - ஆண்பாற் பெயர் விகுதி. பரதன் சொல்லும் - செய்யுமென்னும் முற்று ஆண்பாலுக்கு வந்தது. தூயோய் - தூயான் என்பதன் விளியான தூயாய் என்பதன் ஈற்றயல்ஆகாரம் ஓவாயிற்று. எண்ணில் - எதிர்கால வினையெச்சம்; இல் -காலங்காட்டும் விகுதி. இலை - தொகுத்தல். அத்புதம், பரதன், ஆஶ்சர்யம், ஸுந்தரம், மஹா - வடசொற்கள். பரதன் - இராச்சியத்தைப் பரிக்கவல்லவன். (ரு)

6.—(இ - ள்.) (நீ அரசாளத் தொடங்கியபின்பு), இ புவனத்து எங்கும் - இந்தப்பூலோகத்தில் எவ்விடத்தும்,—அத்திர ஆதிகளால் சாக்காடு இல்லை - அஸ்திரம்முதலியவற்றால் (எந்தப்பிராணிக்கும்) மரண மில்லை; வாள் அரியால் யானை சத்துரு இல்லை - கொடியசிங்கங்களினால் யானைகளுக்குப் பகைமைத்துன்பம் இல்லை; வேங்கை - புலிகள், ஆவொடு மானை சார்ந்து மித்திரம் ஆகும் - பசுக்களையும் மான்களையும் அடுத்து (அவற்றுடன்) சினேகமாகும்; நீரால் நெருப்பினால் வீவோர் இல்லை - நீரில்விழுந்தும் நெருப்புப்பட்டும் மரணமடைபவர் இல்லை; புத்திரர் மரணம் காண்பார் இல்லை - தமதுபுதல்வர்மரிக்கக் காணுந் தாய்தந்தையர் இல்லை; (எ - று.)

நீதிதவறாதஅரசாட்சி நிகழ்கிற இராச்சியத்திற் குடிகளுக்கு ஆயுதபயம், துர்மரணம், அகாலமரணம் முதலிய துன்பங்கள் உண்டாகா என்பதை உணர்க. அங்ஙனம் இராமன் இராச்சியபரிபாலனஞ்செய்கையில் எளிய பிராணிகளை வலியபிராணிகள் நலிகிறதில்லை யென்பதும்; அக்காலத்தில் எங்கும் சத்துவகுணமே தலையெடுத்துநின்றதனால், விவேக மில்லாத மிருகங்கள் முதலிய பிராணிகளுக்கும் ஒன்றன்மேலொன்றுக்குச் சத்துவகுணகாரியமான அன்பும் அருளும் உண்டாயினவேயன்றி, ரஜோகுண தமோகுண

காரியங்களாகிய கொலை பகை அச்சம் முதலியன உண்டாகவில்லை யென்பதும், விளங்க உரைக்கப்பட்டன. "புலிப்போத்தும் புல்வாயும், ஒருதுறையில் நீருண்ண உலகாண்டோ னுள னொருவன்" என்று பாலகாண்டத்திற் சூரியகுலத்து மாந்தாதாவென்னும் அரசனைக் கூறியதையுங் காண்க. அரியால் யானைச்சத்துரு இல்லை - சிங்கங்கள் யானைகளைப் பகைத்து அழிக்கின்றன வில்லை யென்க. அஸ்த்ராதி, ஹரி, சத்ரு, மித்ரம், புத்ரர், மரணம், புவநம் - வடசொற்கள் - அஸ்த்ர + ஆதி = அஸ்த்ராதி: தீர்க்கசந்தி. அஸ்திரம் - மந்திரத்தோடு பிரயோகிக்கப்படுகிற அம்பு. 'ஆதி' என்றதனால், மந்திரமின்றி உபயோகிக்கப்படுபவையான சஸ்திரங்களைக் கொள்க. ஹரி - (யானைமுதலிய விலங்குகளை) ஹரிப்பது: ஹரித்தல் - அழித்தல். புத்ரர் என்பது - புத் த்ரர் என்று பிரிந்து, புத்என்னும்நரகத்திற் சேரவொட்டாதபடி அதனினின்று தமதுதாய்தந்தையரைப் பாதுகாப்பவரெனக் காரணப்பொருள்படும்: (புத்என்பது - பிள்ளையில்லாதவர் மறுமையில் அடைவதொரு நரகம்.) சாக்காடு - சாவு: தொழிற்பெயர்; காடு - விகுதி: வேக்காடு, நோக்காடு என்பவற்றிலும் இது. 'வாள்' என்ற ஆயுதப்பெயர் - இலக்கணையாய், கொடுமையைக் குறித்தது. இனி, வாள் - ஒளியுமாம்; "வாளொளியாகும்" என்பது, தொல்காப்பிய உரியியற்சூத்திரம். இல்லை - ஐம்பால்மூவிடத்துக்கும் பொதுவான எதிர்மறைக் குறிப்புமுற்று. (சு)

7.—(இ - ள்.) நோய் உறுவார்கள் இல்லை - வியாதியடைபவர் எவருமில்லை: நோய் உறா மூத்தோருக்கு - வியாதியடையாமலே முதுமைப்பருவமடைந்தவர்களுக்கும், காயும் வெம் கூற்றம் இல்லை - கோபித்தழிக்கிற கொடிய யமன்(வருதல்) [வேதங்களிற்சொல்லப்பட்டிருக்கிற நூறுபிராயம்நிரம்புதற்குமுன் இடையாயுளிலே மரணம்நேர்தல்] இல்லை: கணவனை இழப்போர் இல்லை - கணவனையிழக்கிற மகளிர் இல்லை; வாயுவும் - (கொடிதாக வீசியழிக்கவல்ல) காற்றும், உடலுக்கு இன்பம் ஆக வந்து அசையாநிற்கும் - எல்லாருடம்புக்குஞ் சுகமாக மெதுவாய் வந்துஅசையும்: ஆய் இழையார்கள் எல்லாம் - சிறந்தவையாகத்தேர்ந்தெடுத்தணிந்த ஆபரணங்களையுடையவர்களான மகளிரெல்லாரும், ஆண் மக பெறுகின்றார்கள் - ஆண்குழந்தைகளைப் பெறுகிறார்கள்; (எ - று.)

நோய் - தொழிற்பெயர்; நொ என்ற பகுதி முதல்நீண்டது: ய் - விகுதி. உறா - ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம்; ஈறுகெடாவிட்டால் 'உறாமல்' என நிற்கும். கூற்றம் - (உடலையும் உயிரையும்) வெவ்வேறுகூறாகப் பகுப்பவன். இங்கு, யமன்பெயர் - அவன்தொழிலாகிய மரணத்துக்கு இலக்கணை. 'கணவனையிழப்போ ரில்லை' என்றதனால், முதுமையில் மாதர்கள் கணவரையிழப்பராயின் அவருடனே சககமனஞ்செய்து இவ்வுலகைவிட்டுச் சுவர்க்கம்புகுவ ரென்க. வாயுவும், உம்மை - இறந்ததுதழுவியஎச்சத்தோடு சிறப்புப்பொருளு முடையது. வந்து அசையாநிற்கும் - இளங்காற்றாக வீசுமென்க. அசையா நிற்கும் - அசைந்துநிற்கும்; அசையா என்பது - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம்: இதில், ஆ - விகுதி: இதுவே இறந்தகாலங் காட்டும். ஆயிழை - வினைத்தொகை. இழை - இரத்தினமிழைத்துச் செய்யப்பட்டது. 'எல்லாம்' என்பது - இருதிணைக்கும் பொது. மக - இளமை: உரிச்சொல்; குழந்தைக்குப் பண்பாகு பெயர். இறந்த தாய்தந்தையரைக் குறித்துத் தாம்செய்யும் வைதிகச் சடங்குகளால் அவர்களை நற்கதியிற்செலுத்துஞ் சிறப்புடைமையாலும், சந்ததிவிருத்திக்குச் சிறத்தலாலும், ஆண்மகப்பெறுதல் விசேடமாம். வாயு - வடசொல்.

8.—(இ - ள்.) மண் உலகு உள்ள - பூலோகத்திலுள்ள, மன்னர் - அரசர்களும், மைந்தர்கள் - (மற்றுமுள்ள) ஆடவர்களும், மங்கைமார்கள் - மாதர்க

ளும், எண்ணிடும் எண்ணம் எல்லாம் - நினைக்கிற நினைப்புக்களிலெல்லாம், இராமனே அரசு செய்து கண் அகல் இ ஞாலம் காப்பான் என்று - 'இராமபிரான் தானே (எக்காலத்தும்) அரசாட்சிசெய்து இடமகன்ற இந்நிலவுலகத்தைப் பாதுகாக்கக்கடவன்' என்று எண்ணி, கட்டு உரைப்பர் - (அங்ஙனமே) உறுதியாக வாய்விட்டுச்சொல்வார்கள், என்ன - என்று (பரதன்) சொல்ல,— அண்ணலும் - பெருமையிற்சிறந்தவனான ஸ்ரீராமனும், அதனை கேட்டு—, ஆங்கு - அவ்விடத்தில் [அயோத்தியாநகரத்தில்], அகம் மகிழ்ந்து இருந்த காலை - மனம்மகிழ்ந்து வீற்றிருந்தகாலத்தில், (எ - று.)—'பங்குனிமாசம் வந்தது' என முடிக்க. (இங்கு மூன்று செய்யுள்கள் விலக்சப்பட்டுள்ளன. இங்ஙனம் இடையிடையே இன்னும் சிலவிலக்கு உண்டு.) ஆங்கு - என்பதை அசையாகக் கொள்ளினுமாம்; அதனால் எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று.

மன் - பெருமை: அதனையுடையவர், மன்னர். மைந்தர், மங்கைமார் என்பன - இங்குப் பருவப்பெயராகாது ஆடவர் மகளிர் என்றமாத்திரமாய் நின்றது; சிறப்புப்பெயர், பொதுப்பொருளை யுணர்த்திற்று. எண்ணம் - அம்விகுதி பெற்ற தொழிற்பெயர். 'இராமனே அரசுசெய்து இக்கண்ணகன்ஞாலங் காப்பானென்று' என்பதற்கு - இந்நிலவுலகத்தை (நீதிதவறாது) அரசாண்டு பாதுகாப்பவன் இராமனொருவனே யென்று என உரைப்பினுமாம். அண்ணல் - ஆண்பாற்சிறப்புப்பெயர். அண்ணலும் என்ற உம்மை-கதைத்தொடர்ச்சியை விளக்கி இறந்ததுதழுவிய எச்சப்பொருளின்பாற்படும். அகம் என்ற உள்ளிடப்பெயர் - அங்குள்ள மனத்துக்கு இடவாகுபெயராம்.

[சிசிரருதுஎனப்படுகிற பின்பனிப்பருவத்தின் வருணனை: (மாசிபங்குனி மாதங்கள், இக்காலமாம்.)]

9.—(இ - ள்.) (அப்பங்குனிமாதத்தில்), பாதவம் எல்லாம் - மரங்களியாவும், பழம் படாம் நீக்கி புது படாம் போர்த்த பான்மைபோல் - பழைய ஆடையைக் களைந்து புதியஆடையை மேற்போர்த்துக்கொண்டதன்மைபோல,கழிந்து வீழ் பழுத்த இலையின ஆகி - கீழ் உதிர்ந்துவிழுந்த பழுத்த இலைகளையுடையவையாய், காண் தொறும் கவின் உற தழைத்த - பார்க்குந்தோறும் (புதிதுபுதிதாக) அழகுமிகத் தளிர்த்தன; கோங்கம் - கோங்குமரங்கள், தேன் பொழிந்த மலரால் - தேன்சொரிகிற (பொன்னிறமான) பூக்களையுடைமையால், பொன் நிறம் ஆடை போர்த்தன போன்றன - பொன்னிறமான ஆடையை மேலே போர்த்துக்கொண்டவை போன்றன; செம் மலர் பலாசம் - சிவந்த பூக்களையுடைய முருக்கமரங்கள், (அச்செம்மலர்களையுடைமையால்), சிவந்த செழு படாம் போர்த்தன ஒப்பநிகழ்ந்தன - செந்நிறமான பெரிய [அல்லது அழகிய] ஆடையைப் போர்த்துக்கொண்டவைபோல விளங்கின; (எ - று.)

**உவமையணி.** தழைத்த - முற்று. இலையின, போர்த்தன - பெயர். படாம் - பட மென்ற வடசொல்லின் விகாரம். பாதப மென்ற வடசொல் - அடியினால் நீரைக் குடிப்பதென்று பொருள்படும். கோங்கம், அம் - சாரியை. பலாசம - வடசொல். (௯)

[இதுவும், அடுத்தகவியும் - குளகம். இராமன் சீதையுடனே பூஞ்சோலையிற் சேர்தல்.]

10.—(இ - ள்.) அண்ணலும் - புருஷோத்தமனான இராமபிரானும், அமிழ்தின் பிறந்த ஆயிழையும் - (பாற்கடலினின்று) தேவாமிருதத்துடனே தோன்றின (இலக்குமியினது திருவவதாரமான) சிறந்த ஆபரணங்களையுடைய சீதாதேவியும்,—தன் நறு புன்னை - குளிர்ச்சியையும் வாசனையையுமுடைய புன்னைமரங்களும், சண்பகம் - சண்பகமரங்களும், செருந்தி -

செருந்திமரங்களும், சந்தனம் - சந்தனமரங்களும், சாதி - ஜாதியென்னும் மரங்களும், பூ தாழை - அழகிய (அல்லது பூக்களையுடைய) தாழைமரங்களும், எண் அரு குருந்து - கணக்கிடுதற்கு அரிய [மிகப்பலவான] குருந்த மரங்களும், பாடலம் - பாதிரிமரங்களும், ஆதி - முதலான, எழில் மரம் - அழகிய மரங்கள், இடை நெருங்கியதை - தம்மில் [ஒன்றோடொன்று] நெருங்கியிருக்கப்பெற்றதும்,—விண்ணவர் கோமான் கற்பகம் சோலை மேதினி இழிந்தது ஒத்து உளதை - தேவராசனான இந்திரனுடைய கற்பகச் சோலை (மேலுலகத்தினின்று) இப்பூமியில் இறங்கிவந்ததுபோன்றுள்ளது மான, அணி கொள் பூ பொழில் இடை - அழகுகொண்ட பூஞ்சோலையினிடத்தை, அடைந்தார்—;(எ - று.)

'பொழிலினை யடைந்தார்' என்ற பாடங் கொள்ளின் நலமாம். அமிழ்து - அம்ருத மென்ற வடசொல்லின் சிதைவு; மரணத்தைத் தவிர்ப்பது [சாவாமருந்து] என்று பொருள்படும். ஆயிழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பூம்பொழில், பூந்தாழை - பூப்பெயர்முன் இனமென்மை தோன்றின. சம்பகம், சந்தநம், ஜாதி, கல்பகம், மேதிநீ என்ற வடசொற்கள் திரிந்தன. பாடலம், ஆதி - வடசொற்கள். கல்பகம் என்பது - தன்னிடம் வந்து நினைப்பவர் நினைப்பவற்றையெல்லாம் கல்பிப்ப தென்று காரணப்பொருள்படும்; கல்பித்தல் - உண்டாக்குதல். மேதிநீ என்பது - மதுகைடபர்களுடைய மேதசினால் நனைந்த தென்று பொருள்படும்; மேதசு - உடற்கொழுப்பு. நெருங்கியதை, ஒத்துளதை என்ற இரண்டும் - 'பொழிலிடை' என்பதற்கு அடைமொழி. பொழிலிடை - இரண்டாம்வேற்றுமைத்தொகை. கற்பகச்சோலை - சந்தாநம், மந்தாரம், பாரிஜாதம், கல்பகம், அரிசந்தநம் என்னும் ஐந்து கல்பகவிருட்சங்களின் தொகுதி. எழில் - எழுச்சியுமாம். எழில்மரம் - எழுச்சியையுடைய மரமெனினுமாம்; 'இல்' விகுதிபெற்ற தொழிற்பெயர். நறும்புன்னை, அருங்குருந்து - பண்புத்தொகை. (௧0)

11.—(இ - ள்.) தாவும் - தாவிஓடுகிற, ஏழ் புரவி - ஏழுகுதிரைகளை, பூணும் - பூண்கிற,ஓர் ஆழி தேரவன் - ஒற்றைச்சக்கரமுள்ள தேரையுடையவனான சூரியன், சார்வு அரும் அதனை - சேர்தற்கு அரியதாகவுள்ளதும்,—காவியும் - நீலோற்பலமலர்களும், செய்ய கமலமும் - செந்தாமரைமலர்களும், தங்கள் கண்களுக்கு அஞ்சி நீர் ஒளிப்ப - தங்கள்கண்களுக்கு (ஒப்பாக முன்னிற்க மாட்டாமல்) அஞ்சி நீரிலே யொளிக்கும்படி, தேவியும் தானும் சேய்இழையாரும் செழு துறை படிந்து நீர் ஆடும் - சீதாதேவியும் இராமபிரான்தானும் செம்பொன்னாபரணங்களையணிந்தவர்களான (சீதையின்) தோழிமார்களும் அழகியதுறைகளில் இறங்கி ஸ்நானஞ்செய்து நீர்விளையாடுதற்குஇடமான, வாவியும் - தடாகங்களோடும், வாவி கரை தொறும் விளங்கும் மணி அறை மண்டபத்தினதை - அத்தடாகங்களின் கரைகளிலெல்லாம் பிரகாசிக்கிற படிகப்பாறைகளினாலாகிய மண்டபங்களையும் உடையதுமான, (எ - று.)— 'பூம்பொழிலிடையை இராமனும் சீதையும் அடைந்தார்கள்' எனக் கீழ்க் கவியோடு கூட்டி முடிக்க.

காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழுசந்தஸ்ஸுகளும் சூரியன்தேர்க்கு ஏழுகுதிரைகளாகும்; இனி, 'ஏழ்புரவிபூணும்' என்பதற்கு - ஏழ் என்னும் பெயரைக் கொண்ட ஒரு குதிரையைப் பூண்கிற என்று பொருள்கொள்ளவும் இடமுண்டு: இக்குதிரைப்பெயர், வடமொழியில் 'ஸப்த' எனப்படும். சோலையிலுள்ள தழைத்த மரங்களின் அடர்த்தியால் அதனுட் சூரியகிரணம் சிறிதும் நுழையமுடியாது என்னுங் கருத்தில் 'தேரவன்சார்வருமதனை' என்றார். மேற் பதின்

மூன்றும் பாட்டில் 'வெங்கதிர் நுழையா விரிபொழில்' என்பர். இரண்டா மடி - **ஏதுத்தற்குறிப்பேற்றவணி;** சீதையும் அவளுடையதோழியரும் ஸ்ரீராமனும் இறங்கி நீர்விளையாடும்போது அலையெறிகிறதீரிமேல சருங்குவளை மலரும் செந்தாமரைமலரும் மறைதலை அவை முறையே சீதைமுதலிய மகளிர்கண்களுக்கும் இராமபிரானதுதிருக்கண்களுக்கும் ஒப்பாக எதிர்நிற்க மாட்டாமல் அஞ்சி நீரிலொளிப்பனவாகக் கவி தானேக் கற்பித்துக்கூறினார். செய்ய - செம்மை யென்னும் பண்பினடியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; பண்புப்பெயர் ஈறுபோய் முன்னின்ற மகரம் யகரமாத் திரிந்தது. செம்மை + இழை = சேயிழை : பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு முன்னின்ற மகரமெய் யகரமாத் திரிந்தது. துறை - இறங்குமிடம். தேவீ, வாபீ என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கமலம், மண்டபம் - தற்சம வடமொழிகள். காவி, கமலம் - அவற்றின் மலருக்கு முதலாகுபெயர். மணி - பளிங்கு. அறை - பாறை. **(கக)**

[இராமன் சீதைக்குப் பூஞ்சோலையினழகைக் காட்டுதல்.]

12.—(இ - ள்.) மின் இடை பூணாய் - மின்னல்போல நுண்ணிதாக விளங்குகிற இடையையும் ஆபரணங்களையும் உடையவளே! மெல் நடை அன்னம் - மெதுவான நடையையுடைய அன்னப்பறவைகள், நின் நடைக்கு அஞ்சி - உனது நடையினழகுக்குத் தாம் ஒப்பாகமாட்டாமற் பயந்து, வெளி இடை நின்றிட வெள்கி - வெளியிடத்திலே நிற்றற்கு வெட்கப்பட்டு, இடை துன் மலர் பூ சோலையில் மறைய - இடம் நெருங்கிய பூக்களையுடைய அழகிய சோலையிலே மறைய,—தோகை - மயில்கள், நின் சாயலுக்கு உடைந்து - உனது சாயலுக்கு (ஒப்பாகமாட்டாமல்) தோற்று, தன் நடை கெட்டு - (அத்தோல்வியாலாகிய அயர்ச்சியால்) தமது நடை தளர்ந்து, இனி உயிர் தாங்கோம் என தழல் முழுகுவ போல - 'இனிமேல் உயிர்வைத்துக்கொண்டிருக்க மாட்டோம்' என்று நெருப்பிற் குளிப்பனபோல, விரி மலர் அசோகின் மேல் சென்று வீழ்வன - மலர்ந்த பூக்களையுடைய அசோகமரத்தின்மேற் போய் வீழ்கின்றன: காணாய் - (இவற்றைப்) பார்; (எ - று.)

அன்னத்தின் செயல் - **ஏதுத்தற்குறிப்பேற்றவணியும்,** மயிலின்செயல் - **ஏதுத்தற்குறிப்பேற்றவுவமையணியு**மாம். மென்னடை - மந்தகதி. தோகை என்னும் மயில்வாலின் பெயர் - மயிலைக் குறித்ததனால்,சினையாகுபெயராம். 'தன்நடைகெட்டே இனி உயிர்தாங்கோம்' என்பதற்கு - தமது பெருமிதம் கெட்டதனாலே இனி யாம் உயிர்வைத்திரோமென்று எனப் பொருள்கொள்ளினுமாம். தோகையென்பது - பால்பகாவஃறிணைப்பெயராதலால், பன்மைமுற்றைக் கொண்டது; [நன் - பெயர் - உசு.] 'தோகை நடை உயிர்தாங்கோமென முழுகுவபோல வீழ்வன' என்ற பன்மைவாக்கியத்திற்கு ஏற்ப, 'தம்நடை' என வராமல் 'தன்நடை' என வந்தது, பன்மையொருமை மயக்கம்; [நன் - பொது - உக.] முழுகுவ - எதிர்காலப் பலவின்பால்வினையாலணையும்பெயர். அசோகு - அசோக மென்ற வடசொல்லின் விகாரம்; (தனது குளிர்ச்சியால் தன்னை அடைந்தவர்களுடைய) சோகத்தைத் தவிர்ப்பதென்று காரணப்பொருள்படும். விரிமலரசோகத்திற்குத் தழலுவமை, நிறம்பற்றினது. காணாய், ஆய் - ஏவலொருமை வினைமுற்று விகுதி. 'இனி' என்பது - எதிர்காலங்குறிப்பதோர் இடைச்சொல். (கஉ)

[இராமன் சீதையுடனே அச்சோலையில் வாவிக்கரையிலுள்ள பளிங்கு மண்டபத்தில் வீற்றிருத்தல்.]

13.—(இ - ள்.) வெம் கதிர் நுழையா - உஷ்ணமான சூரிய கிரணங்கள் நுழைய முடியாத,விரி பொழில் - தழைத்த அச்சோலையிலே உள்ள—,வேறு வேறு ஆகிய விசேடம் - பல வேறுவகைப்பட்ட விசேஷங்களை, செம் கயல்

கண்ணாய் காண் எனா காட்டி - சிவந்த கயல்மீன்போலப் பிறழ்கிற கண்களையு டையவளே! பார் என்று சொல்லிக் காண்பித்து,—செறி கழல் சேவடி இராமன் - பொருந்திய வீரக்கழலையுடைய சிவந்த திருவடியையுடைய ஸ்ரீராமன்,—பங்கயம் வாவி பளிங்கு மண்டபத்தில் - தாமரைத்தடாகத் தின் கரையி லுள்ள ஸ்படிகக்கல் மண்டபத்திலே,—பசு நறு தென்றல் சேவிப்ப - குளிர்ந்ததும் நன்மணம் வீசுவது மான தென்றற்காற்று (இனி தாகவீசி) வழிபடவும், மங்கையர் வாழ்த்த - மகளிர் மங்கலவாழ்த்துக் கூற வும், மாகதர் ஏத்த - துதிபாடகர் துதிக்கவும், மடந்தையோடு - சீதையுட னே, இனிது வீற்றிருந்தான் - இனிமையாக எழுந்தருளியிருந்தான்; (எ - று.)

வெங்கதிர் நுழையா விரிபொழில் - "குளிர்பொழிலூடு குயிலொடு மயில் கள் நின்றால, இரவியின் கதிர்கள் நுழைதல்செய்தறியா" என்றார் திருமங் கையாழ்வாரும். பங்கஜம் என்ற வடசொல் - சேற்றில் முளைப்பதெனப் பொருள்படும்; [பங்கம் - சேறு.] இது - தாமரைக்குக் காரணவிடுகுறி. பளிக்கு மண்டபம் - பளிங்கினாலாகிய மண்டபம்; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. தென்றல் - தெற்கினின்றுவருங்காற்று; இதில் பகுதி யாகிய தெற்கு என்பது - ஈறுகெட்டு றகரம் னகரமாயிற்று; அல் - பெயர் விகுதி, து - சாரியை, உகரம்கெட்டுத் தகரம் றகரமானது - சந்தி. தென்றல் வீசுதலை வாயுதேவன் தேவாதிதேவனான இராமபிரானை உபசரிப்பதாகக் குறித்து, 'தென்றல் சேவிப்ப' என்றார். மாகதர் - அரசர்முன் நின்று அவரது வீரம் முதலியவற்றைப் புகழ்வோர். வீறு - வேறொருவர்க்கில்லாத சிறப்பு; அச்சிறப்போடு இருத்தல் - வீற்றிருத்தல். (கங)

[இதுமுதல் ஐந்துகவிகள் - குளகம். இதுமுதல் மூன்றுகவிகள் - இரா மன் அங்குப் பிராட்டியுடன் இனிதுவீற்றிருந்தவகையை விளக்கும்.]

14.—(இ - ள்.) பொன் நிறம் மேனி பூமகளோடும் - பொன்னிறமான திருமேனியையுடைய இலக்குமியுடனே, பொரு திரை பாற்கடல் நடுவண் - மோதுகிற அலைகளையுடைய திருப்பாற்கடலின் நடுவிலே, பன்னகம் அணை மேல் - ஆதிசேஷனாகிய சயனத்தின்மேல், பண்டு தான் இருந்த படி என - பழமையாகத் திருமாலாகிய தான் எழுந்தருளியிருக்கின்ற தோற்றம்போல வும்,—தோன்றி மாய்ந்திடாத மின்னொடும் கூடி - தோன்றியவளவிலே மறைந்திடுதலில்லாத தொரு [நிலைபாய் விளங்குகிற] மின்னலுடனே கூடி, மேதினி படிந்து விளங்கு - நிலத்திற்படிந்துவிளங்குகிற, கார் மேகம் என்ன - காளமேகம்போலவும்,—செம் நிறம் மேனி சீதையை - சிவந்தநிறமுள்ள திருமேனியையுடைய சீதையை, (இராமன்), தனது செம் மலர் திரு கையால் அணைத்து - செந்தாமரைமலர்போன்ற தனதுதிருக்கையினால் அணைத்துக்கொண்டு, (எ - று.)

பூமகள் - செந்தாமரைமலரில் வாழுந் திருமகள். பண்டு - தானுணர்கை யில் என்க. திருமாலினது திருவவதாரமான இராமனுக்கும், திருமகளினது திருவவதாரமான சீதைக்கும் - அத்திருமாலையும், திருமகளையுமே உவமைகூ றினார். பாற்கடல் - வெண்ணிறமான விசாலமுள்ள பளிங்குமண்டபத்துக் கும், சேஷசயனம் - "இருந்தாற் சிங்காசனமாம். . . .திருமாற்குஅரவு" என்ற படி ஆதிசேஷனது அம்சமுள்ள மெத்தென்ற திவ்வியசிங்காசனத்துக்கும் உவமையாம். தோன்றிமாய்ந்திடாத மின்னொடுங் கூடி மேதினிபடிந்து விளங்கு கார்மேகம் - இல்பொருளுவமை. மின்னல் - செந்நிறமுள்ள சீதை க்கும், காளமேகம் - கரியதிருநிறமுடைய இராமனுக்கும் உவமை. ஆம் - அசை. நடுவண், அண் - இடப்பொருள்காட்டும் விகுதி. பந்நகம் என்ற வட சொல் - பத் நகம் என்றுபிரிந்து, கால்களால்நடவாததென்று பொருள்படும்; மார்பினால் ஊர்ந்துசெல்வதென்று கருத்து. பண்டு - இறந்தகாலங்குறிக்

கும் இடைச்சொல். கார் - கருமையென்ற பண்புப்பெயர் ஈறுபோய் ஆதி நீண்டு இடைநின்ற உகரமும் கெட்டது. (கச)

[ஆடன்மகளிர் ஆடுதற் சிறப்பு.]

15.—(இ - ள்.) திருந்திய தாள வாத்தியங்கள் தைவரும் வண்ணம் - இலக்கணப்படி தவறாமலமைந்த தாளவோசையும் மற்றைவாத்தியங்களின் இசையும் திறம்பாது தழுவும்படி, மூ வகை சதியும் தப்பு அற தனி தனி காட்டி - மூன்றுவகைப்பட்ட காலநடைவுமுறைகளையும் தவறாமல் தனித்தனி காண்பித்து, கை வழி கண்ணும் கண் வழி மனமும் கலந்திட - (பலவகையாக அபிநயங்காட்டுகிற தமது) கைகள்செல்லும்வழியே தமது கண்களின் குறிப்பு நோக்கம் செல்லவும் அக்கண்களின் பார்வை செல்லும்வழியே மனத்தின் குறிப்பும் செல்லவும், சேப் இழையார் - செம்பொன்அணிகளையுடைய மாதர், கண்டனர் செய் வகை அறியார் திகைப்ப - காண்கிறவர்கள் (அதிசயத்தாலும் ஆனந்தத்தினாலும்) இன்னதுசெய்வதென்று அறியாது திகைக்கும் படியும், கற்பகம் நாட்டு தெய்வமங்கையர்கள் நாணினர் நிற்ப - கற்பகவிருக்ஷங்களையுடைய சுவர்க்கலோகத்தில் (வாழ்கிற ஊர்வசி முதலிய) தேவமாதர்கள் (தமது நாட்டியம் இதற்கு ஒப்பாகாது என்று) வெட்கப்பட்டு நிற்கும் படியும், நடம் ஆட - நாட்டியஞ் செய்ய, (எ - று.)

விளம்பிதம், த்ருதம், மத்யம் எனத் தாளலயம் மூன்றுவகைப்படும். மந்தமான தாளகதி - விளம்பிதம்; விரைவான தாளகதி - த்ருதம்; இவ்விரண்டுக்கும் நடுத்தரமான தாளகதி - மத்யம். இவற்றினிலக்கணம் விரிப்பிற் பெருகும். இத்தாளவொத்துக்களுக்கு ஏற்ப மெதுவாகவும் விசையாகவும் நடுத்தரமாகவும் வைக்கிற காலடிகள், இங்கு 'மூவகைச் சதி' எனப்பட்டன. சதியென்பது - இப்பொருளதாதலே, பாலகாண்டத்தில் "பதங்களிற் றண்ணுமை பாணிபண்ணுற, விதங்களின் விதிமுறை சதிமிதிப்பவர்" என்ற இடத்திலுங் காண்க. 'மனத்தின்வழிக் கண் கலந்திட' என்றது, 'கண்வழிமனங் கலந்திட' என்றது, பயிற்சிமிகுதியை விளக்கும். "நெய்திர ணரம்பிற்றந்த மழலையி னியன்ற பாடல், தைவரு மகரவீணை தண்ணுமை தழுவித்தூங்கக், கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல, ஐய நுண்ணிடையா ராடும் ஆடகவரங்கு கண்டார்" என்ற பாலகாண்டச்செய்யுளையுங் காண்க.

அறியார் - எதிர்மறைமுற்றெச்சம். தைவரும், தைவா - பகுதி. கண்டனர், நாணினர் - இறந்தகால முற்றெச்சங்கள். தாளவாத்தியம், தைவம், நடம் - வடசொற்கள். திகைப்ப, கலந்திட, நிற்ப என்பவற்றில், உம்மை தொக்கது, வினைச்செவ்வெண். (கரு)

[துதிபாடகர் இசைபாடுதல்.]

16.—(இ - ள்.) எழு வகை இசை காரணம் உடை - எழுவகைப்பட்ட இசைகளுக்குக் காரணமான எழுஎழுத்துக்களையுடைய, பணணுக்கு - பண்களுக்கு, இசைந்தன - ஏற்றவையான, தாள வாத்தியங் ள் - தாளமும் மற்றை வாத்தியங்களும், தழுவிட - மாறுபடாமல் ஒற்றுமைப்படும்படி, வைத்து - அமையவைத்து [சுருதிகூட்டி], உரு எடுத்து - கீதவுருக்களை வாய்விட்டுப் பாடத்தொடங்கி, விழி புருவம் தோள் மிடறுகள் சலித்து வேறுபாடு உறு வகை - கண்களும் புருவங்களும் தோள்களும் கண்டமும் அசைந்து விகாரமடையாதபடி, இசை நூல் வழுவுதல் இன்றி - சங்கீதசாஸ்திரத்தின் முறைமை தவறுதலில்லாமல், வங்கியம் வீணை மயங்கிட - வேய்ங்குழலினிசையோடும் யாழினிசையோடும் வேறுபாடின்றிக் கலக்க, தாளத்தின் வழி - தாளஅடைவுமுறை தவறாது, சர அசரம் உருக - (அருகிலுள்ள) ஜங்கமப்பொருள்களும் தாவரப்பொருள்களும் ஆகிய அனைத்தும் உருகுமாறு, மாகதர் பாட - ஸ்துதிபாடகர் இசைபாடவும், (எ - று.)

ஏழுவகைஇசை - ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பன. தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப்படும். இவை பிறத்தற்குக் காரணமான எழுத்துக்கள் ஸ ரி க ம ப த நி என்பன. இவ்விசைகளினுள்ளே பண் பிறக்கும். பண் - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி யென்னும் இசைப்பாட்டின் வகைகள். உரு - இங்கே, பாடுதற்கு அமைந்த இசையுரு வெனப்படும் சொல்தொடர்; விழி புருவம் தோள் மிடறுகள் சலித்து வேறுபாடுறு வகை பாடுதல், உள்ளாளப்பாட்டு எனப்படும; "கண்ணிமையா கண்டந்துடியா கொடிறசையா, பண்ணளவும் வாய்தோன்று பற்றெரியா - எண்ணில வை, கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவ, ருள்ளாளப் பாட லுணர்" என்பது காண்க. "கருங்கொடிப் புருவ மேறா கயல்நெடுங்கண்ணு மாடா, அருங்கடிமிடறும் விம்மாது அணிமணியெயிறுந் தோன்றா, இருங்கடற் பவளச்செவ்வாய் திறந்திவள் பாடினாளோ, நரம்பொடு வீணைநாவின் நவின்றதோ வென்று நைந்தார்" என்ற சீவகசிந்தாமணியும், "வயிறதுகுழிய வங்கல் அழுமுகங்காட்டல் வாங்கும், செயிரறு புருவமேறல் சிரந்நடுக்குறல் கண்ணூடல், பயிறருமிடறுவீங்கல் பையென வாயங்காத்தல், எயிறதுகாட்ட லின்ன வுடற்றுறும் குற்ற மென்ப" என்ற திருவிளையாடற்புராணமும் இங்கு நோக்கத்தக்கன. வங்கியம் - [redacted] என்ற வடசொல் சிதைந்தது: மூங்கிலென்று பொருள்; அதனாலாகிய புள்ளாங்குழலுக்குக் கருவியாகுபெயராம். வீணை - ஆவீ ஐயான வடசொல். சங்கீத சாஸ்திர லக்ஷணத்துக்குப் பொருத்தமான மிக இனிய இசையைப் பாடியமாத்திரத்தில் ஜங்மப்பொருள்களுள் தேவர் மனிதர் என்னும உயர்திணையோடு ஒப்ப மிருகங்கள் பக்ஷிகள் ஊர்வன முதலிய அஃறிணைகளும சொக்குற்று மகிழ்தலும், தாவரப்பொருள்களுள்ளும் பட்டுப்போன மரங்கள் தளிர்த்துத் தழைத்துப் பூத்துத் தேன்சொரிதலும், கருங்கல் கரைந்துருகுதலும் முதலிய இயல்பு விளங்க, 'சராசரமுருக' எனப்பட்டது. 'வங்கியம் வீணை மயங்கிடப் பாட' என்றது, கருவியும் கண்டமும் வேறுபாடு தோன்றாதபடி ஒற்றுமை நயப்பட்டிருக்குமாறு பாட என்றபடி. விழிபுருவதோள்மிடறுகள் - பன்மைவிகுதி பெற்ற அஃறிணையும்மைத்தொகை. காரணம், மாதர் - வடசொற்கள். (௧௬)

[இராமனது பூக்கொய்தலும், புனல்விளையாட்டும், பொழில்விளையாட்டும்.]

17.—(இ - ள்.) மன்னவன் இராமன் - இராசனான இராமபிரான்,— அன்ன சங்கீதம் இனிது கொண்டாடி - அத்தன்மையதான இசைப்பாட்டை நன்றாகக்கொண்டாடி, அரு நிதி ஆடை ஆபரணம் - பெறுதற்கரிய செல்வத்தையும் ஆடைகளையும அணிகளையும், மாதர்க்கு அளித்து - அந்தஸ்திரீகளுக்குக் கொடுத்து, மாதொடும - பிராட்டியுடனே, பல் மலர் பறித்து - பலவகைப்பூக்களைக் கொய்து, நீர் விளையாட்டில் பரிந்து - நீரில்இறங்கிவிளையாடுதலிற் பொழுதுபோக்கி, பின் - பின்பு, அமுது இனிது உண்டு - நல்ல உணவை இனிமையாகப் புசித்து, (பிறகு), கோயிலின் வைகி - அரண்மனையிற் சேர்ந்துதங்கி,—(இங்ஙனமே), நல் நுதலாரும் தானும் - அழகிய நெற்றியையுடைய மகளிரும் தானுமாக, அ பொழிலில் - அந்தப்பூஞ்சோலையில், நாள் தொறும் - தினந்தோறும், ஆடுறு நாளில் - விளையாடுகிற காலத்தில்.

பரிந்து - முயன்று தொழில்செய்து சிரமப்பட்டு என்க; பரிதல் - இளைத்தல். விளையாட்டு - விளையாடு என்ற முதனிலைதிரிந்ததொழிற்பெயர். நுதல் - புருவமுமாம். நன்னுதலார் - சீதையும் அவள்தோழியரும். 'நன்னுதலாள்' என்ற பாடம் - சீதையைக் குறிக்கும். ஸங்கீதம், ஆபரணம - வடசொற்கள். (௧௭)

[கருவுற்ற சீதையின் விருப்பத்தை இராமன் விசாரித்தல்.]

18.—(இ - ள்.) அன்னவள் கர்ப்பம் இலக்கணம் எல்லாம் அமைவுற நோக்கிய - அச்சீதையினது கருப்பசின்னங்களையெல்லாம் நன்றாகப்பார்த்த, அவனி மன்னவன் இராமன் - பூமிக்குத் தலைவனான ஸ்ரீராமன், மங்கையை நோக்கி - அச்சீதையை நோக்கி, நீ மனத்திடை வேண்டி இருப்பது என் என - ('இப்போது) நீ மனத்தில் விரும்பியிருக்கும் பொருள் யாது?' என்று வினவ, இயம்ப நாணினள் சிரிப்ப - (அவள் தான் விரும்பிய பொருளைச்) சொல்லுதற்கு வெட்கப்பட்டுச்சிரிக்க, இராகவன் பின்னையும் பல் கால் சொன்னபின் - இராமன் பின்பும் பலமுறை ('உன் விருப்பத்தைச் சொல்' என்று) சொன்னபின்பு, தூ மொழியாள் - பரிசுத்தமான சொற்களையுடைய பிராட்டி, வேண்டிஇருப்பது ஈது என்று இவை சொல்லும் - '(யான்) விரும் பியிருப்பது இது' என்று குறிப்பிட்டு (இவ்வார்த்தைகளை)ச் சொல் வாள்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

கர்ப்பஇலக்கணம் - கருவுற்றிருப்பதை விளக்குங் குறிகளாகிய உடல் வெளுத்தல் முதலியன. அன்னவள் - அகரச்சுட்டடியாப்பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர்; ன் - சாரியை, ன் - சந்தி, அ - சாரியை, வ் - சந்தி, அள் - பெண்பால் விகுதி. கர்ப்பலக்ஷணம் - வடமொழித்தொடர். அவனிமன்னவன்இராமன் - பூமிதேவிக்கு நாயகனான திருமாலினது திருவவதாரமாகிய இராமபிரானெனினுமாம். வேண்டியிருப்பது - வினையாலணை யும்பெயர். ஈது - இது என்பதன் சுட்டு நீண்டது. தூமொழி - தூய்மை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் இடையகரமும் கெட்டது. தூமொழி யாள் சொல்லும் - செய்யுமென்முற்றுப் பெண்பாலுக்கு வந்தது. கருவுற்றி ருக்குங்காலத்தில் மகளிர் விரும்பியபொருளை அவர்க்கு அளித்தல் கணவன் கடமையாதலால், பெருமான் பிராட்டியை இங்ஙனம் விசாரித்தான்.

• (௧எ) மன்னவன் இராமன், (௧௪) சீதையைக் கையால் அணைத்து, (௧௫) சேயிழையார் நடமாட, (௧௬) மாகதர் பாட, (௧எ) கொண்டாடி, அளித்து, பறித்து, பரிந்து, உண்டு, வைகி, ஆடு நாளில், (௧அ) நோக்கி, என் என, சிரிப்ப, சொன்னபின், தூமொழியாள் சொல்லும் எனக் குளகச்செய்யுள்களுக்கு முடிபு காண்க. (௧அ)

[கங்கைக்கரையிலுள்ள முனிவராச்சிரமங்களைச் சென்று காணவிரும்பி யதைச் சீதை வெளியிடுதல்.]

19.—(இ - ள்.) 'கங்கை ஆம் தெய்வம் துறையிடை - கங்காநதியிலுள்ள திவ்வியமான ஸ்நாநகட்டங்களிலே, குளித்து - நீராடி, அந்தி தொழுவோர் - சந்தியாவந்தநம் செய்பவர்களும், பொங்கு நூல் புரளும் மார்பினர் - விளங் குகிற முப்புரிநூல் அசையப்பெற்ற மார்பையுடையவர்களும், புனைந்த வற் கலை புரிந்த செம் சடையர் - தரித்த மரவுரியையும் கட்டிய சிவந்த சடை யையுமுடையவர்களுமான, துங்கம் மா தவத்தோர் அவர் - சிறந்த மிக்கதவ த்தையுடையவர்களான முனிவர்கள், அங்கு - அந்தக்கங்கைக்கரையில், வாழும் - இனிதுவசிக்கிற, ஆச்சிரமத்தை - ஆச்சிரமங்களை, அடைந்து - (இன்னொ ருகால்) சேர்ந்து, அவர்க்கு ஏவல் செய்து - அவர்கட்குப் பணிவிடைசெ ய்து, ஒரு நாள் தங்கலும் - (அங்கு) ஒருநாள் தங்குதலையும், வேண்டிஇருப் பென் - (யான்) விரும்பியிருக்கிறேன்', என்று உரைக்க - என்று (சானகி) சொல்ல, தசரதராமன் ஈது உரைத்தான் - தசரதகுமாரனான இராமன் இவ் வார்த்தையைச் சொன்னான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

'தெய்வம்' என்ற அடைமொழி, துறையின் சிறப்பை விளக்கும். அந்தி - ஸந்த்யா என்ற வடசொல்லின் சிதைவு; இரவோடு பகல் சேர்தலா கிய காலைச்சந்தியையும், பகலோடு இரவுசேர்தலாகிய மாலைச்சந்தியையும்

உணர்த்தும். அக்கிதொழுதல் - அக்காலங்களில் கடவுளைத் தொழுது நித்தியகருமம் முடித்தல்; இது, மாத்யாந்திகஞ்செய்தற்கும் உபலக்ஷணம். தூங்கம், தபஸ், கங்கா, வல்கலா, ஜடா, ஆச்ரமம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. 'தவத்தோரவர்' என்றவிடத்து, 'அவர்' என்றது - முதல் வேற்றுமைச்சொல்லுருபு. நூல் - பூணூல், உபவீதம். ஆச்சிரமம் - பர்ணசாலை. ஏவல் - ஏவியதொழிலுக்குத் தொழிலாகுபெயர். தங்கலும், உம் - இறந்தது தழுவிய எச்சம். வற்கலை - பூர்ச்சமென்னும் மரத்தினின்று உரித்து எடுக்கும் பட்டையாலாகிய உடை. (௧௯)

[இராமன் 'நாளை உன் கருத்தை நிறைவேற்றுவேன்' என்று சொல்லிப் பின்பு சபையில் ஒற்றர்கள் சொல்லைக் கேட்டல்.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

20.—(இ - ள்.) 'நாளை - நாளைக்கு, நாம்—, உனக்கு—, நல் தவத்தோர்கள் இருப்பு இடம் காட்டுதும் - சிறந்ததவத்தையுடைய முனிவர்கள் வசிக்கிற அவ்விடத்தைக் காண்பிப்போம்,' என்று - என்றுசொல்லி, நீள் குழலாளை கோயிலில் விடுத்து - நீண்ட கூந்தலையுடையவளான பிராட்டியை அந்தப்புரத்திலே விட்டு, நீலம் மா முகில் புரை நிறத்தோன் - நீலநிறமுள்ள சிறந்த மேகத்தையொத்த கரியதிருநிறத்தையுடையவனான இராமபிரான்,—வாள் அணி விசயன் - வாட்படையையேந்திய விசயனும், பத்திரன் - பத்திரனும், தந்தவத்திரன் - தந்தவக்த்ரனும், சுமாகதன் - சுமாகதனும், சுராஞ்சி காளியர் - சுராஞ்சியும் காளியனும், முதலோர் - முதலான ஒற்றர்கள், சொல் - சொன்ன, பரிகாச கதைகள் - வேடிக்கைக்கதைகளை, கேட்டு—, இனிது கொண்டாடி - (அவற்றை) இனிமையாகக் கொண்டாடி, (எ - று.)—'என்று மொழிந்திட' என அடுத்தகவியோடு தொடரும்.

நாளை - எதிர்காலங் குறிக்கும் இடைச்சொல். காட்டுதும் - தன்மைப் பன்மை முற்று; தும் - விகுதி, எதிர்காலங் காட்டிற்று: [நன் - பத - க௮.] தந்தவக்த்ரன் என்ற வடமொழிப்பெயர் - கோரப்பல் வெளித்தெரியும் முகமுடையவனென்று பொருள்படும். சுராஞ்சி காளியர் - பன்மைவிகுதி பெற்ற உயர்திணையும்மைத்தொகை. பரிகாச கதைகள் - கேட்பவர் மிகச் சிரிக்கத்தக்க விநோதமான கதைகள். நாம் காட்டுதும் - இயற்கைத் தனித் தன்மைப்பன்மை. பரிஹாஸகதா - வடமொழித்தொடர். (௨0)

[இராமன் ஒற்றர்களைத் தனது இராச்சியத்தார் பேச்சைப்பற்றி விசாரித்தல்.]

21.—(இ - ள்.) இ கதை கிடக்க - இந்தக்கதைகள் இருக்கட்டும்: இ நாட்டில் நகரியில் சனங்கள் தம்மில் இப்பொழுது தான் உரைக்கும் அ கதை உரைமின் - 'இக்கோசலதேசத்திலும் இவ்வயோத்தியாபுரியிலும் உள்ள சனங்கள் இப்பொழுது தமக்குள் யதேச்சையாகப் பேசிக்கொள்ளும் அவ்வார்த்தைகளைச் சொல்லுங்கள்; இறைவர்கள் என்றும் இரா பகல் இடைவிடாது கேட்கதக்க - (அவைகளே) அரசர்கள் எந்நாளும் இரவும் பகலும் இடைவிடாமற் கேட்கத்தக்கவைபாம்,' என்று—, வாள் சங்கோடு ஆழி வில் கதை இவை ஒழிந்து மொய்க்கும் மா புகழோடு அயோத்தி வீற்றிருந்தோன் - வாளும் சங்கும் சக்கரமும் வில்லும் கதையு மாகிய தனக்குரிய பஞ்சாயுதங்களைவிட்டு நிறைந்த பெருங்கீர்த்தியுடனே அயோத்தியாபுரியில் வீற்றிருக்கின்றவனான இராமபிரான், மொழிந்திட - சொல்ல,—அவர் இவை மொழிவார் - அவ்வேவுகாரர்கள் இவ்வார்த்தைகளைச் சொல்வார்கள்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

'இதெல்லாம் இருக்கட்டும்: நகரத்திலும், நாட்டிலும் சனங்கள் என்னைப்பற்றியும் லக்ஷ்மணன் பரதன் சத்ருக்நன் சீதை கைகேயி;

பற்றியும் என்ன சொல்லிக்கொள்ளுகிறார்கள்? தூதனமாய் ஓராசன் வந்த போது அவனைப்பற்றிச் சனங்களுக்குள் ஒரு பேச்சு நிகழ்வது உண்டு; முக்கியமாய் அதை அரசன் அறிந்து காரியாகாரியங்களை நிச்சயிக்கவேண்டும்; ஆனதுபற்றி, நீங்கள் காதிற்கேட்டவைகளைச் சொல்லுங்கள்' என்று ஸ்ரீராமசந்திரஸ்வாமி சொல்ல, விஜயன் முதலானவர்கள் கூறலானார்கள் என்பதாம்.

கிடக்க - வியங்கோள் வினைமுற்று. இராப்பகல் - அஃறிணையும்மைத் தொகை, பன்மை விகுதிபெறாது நின்றது. தக்க - இறந்தகாலப் பலவின்பால் வினைமுற்று; பெயரெச்சமாக்கொண்டு, 'அககதை' என்பதற்கு அடைமொழியாக்கினும் அமையும். 'தக்கதை' என்று பாடமானபோது, அதனை, 'அக்கதை' என்பதற்கு அடைமொழியாகச் சேர்க்க. திருமாலினதுஐம்படைகளில் வாள் நந்தக மென்றும், சங்கு பாஞ்சசந்ய மென்றும், சக்கரம் சுதர் சநமென்றும், வில் சார்ங்கமென்றும், கதை கௌமோதகியென்றும் பெயர் பெறும். 'இவை யொழிந்து அயோத்திவீற்றிருந்தோன்' என்றது, திருமாலின் திருவவதாரமூர்த்தி யென்றவாறு. நகரீ, ஜநம், வநம், சங்கம், சதா - வடசொற்கள். (உக)

[சனங்கள் இராமனைக் கொண்டாடிப் பேசும் வார்த்தைகளை ஒற்றர்கள் கூறுதல்.]

22.—(இ - ள்.) வந்து எறி கடலை - காற்றினால்அலைவீசுகிற சமுத்திரத்தை, மலைகளால் அடைத்து - மலைகளைக்கொண்டு அணைகட்டி, (கடந்து), மதிள் இலங்காபுரி அழித்து - மதிள்சூழ்ந்த இலங்காபட்டணத்தை அழித்து, வெம் திறல் அரக்கர் குலத்தை வேர் அறுத்து - கொடியவலிமையையுடைய இராக்கதர்களுடைய கூட்டத்தை வேரோடு தொலைத்து, விண்ணவர் கோன் தலை எடுப்ப இந்திரசித்தை கொன்று - தேவராசனை இந்திரன் தலையெடுக்கும்படி (இராவணன்மகனை) இந்திரசித்தைக் கொன்று, இராவணனை ஈர் ஐந்து தலை அறுத்து உருட்டும் - இராவணனைப் பத்துத்தலைகளையும் அறுத்து (அவனுடலை)க் கீழ்விழுந்துருளச்செய்த, சுந்தரம் வில்லிக்கு - அழகிய (கோதண்டமென்னும்) வில்லையுடையவனான இராமனுக்கு, எதிர் இல்லை - ஒப்பானவர் எவரும் இல்லை, என்று—, தொல் உலகு உள்ளோர் சொல்லுவார் - பழமையான இந்நிலவுலகத்திலுள்ளவரனைவரும் சொல்லிக்கொண்டாடுகிறார்கள்; (எ - று.)

இந்திரசித்தைக் கொன்றது இலக்குமணன் செயலாயினும் அதனையும் இராமன்மே லேற்றிக்கூறியதை, பெருமாள் திருமொழியின் ஐந்தாம்பாட்டில் "அரக்கிமூக்கை நீக்கி" என்றாற்போலக் கொள்க; அதன்காரணம், அங்கு விளங்கும். இங்ஙனங்கூறியதனால், இலக்குமணனைச் சனங்கள் புகழ்தல் தொனிக்கின்றதெனவுங் கொள்ளலாம். இராவணன் திக்குவிசயஞ்செய்கையில் இராக்கதசேனையோடு சுவர்க்கலோகத்தையடைந்து இந்திரனையெதிர்க்க, அவன் முதலில் மாதலியென்னும் பாகனாற் செலுத்தப்பட்ட தேரின்மீது ஏறித் தேவசேனையுடனேவந்து எதிர்த்துப் போர்செய்து தளர்ந்து உடனே தனது வலியபெரிய ஐராவதயானையின்மேல் ஏறி இராவணனும் திகைக்கும்படி உக்கிரமாக யுத்தஞ்செய்யுமளவில், இராவணன்மகனான மேகநாதன் மாயையில் மறைந்துநின்று ஆயுதமழைசொரிந்து இந்திரனைக் கலங்கச்செய்து அவனை மாயப்பாசத்தாற் கட்டிப் பிடித்துக்கொண்டு மீண்டு இராவணனோடும் சேனையோடும் இலங்கைக்குவந்து அவனைச் சிறையில் வைத்திருக்க,அச்செய்தியையுணர்ந்த பிரமதேவன் வானவர் சூழ அங்கு வந்து இராவணனைக் கண்டு 'இந்திரனைச் சயித்ததனால், உன் மகனுக்கு இந்திரசித் என்று இனிப் பெயர் வழங்குக' என்று உபசாரவார்த்தைகூறி அம்

மகனுக்கு வரமளித்து இந்திரனைச் சிறைமீட்டுக்கொண்டு சென்றனனாதலால், இராவணபுத்திரனுக்கு இந்திரஜித் என்று பெயராயிற்று. இந்திரன் அவமானத்தாலாகிய தலைவணக்கம் ஒழிதற்கு இந்திரசித்துக் கொல்லப்பட்டமை காரணமாகுதலால், 'விண்ணவர்கோன் தலையெடுப்ப விந்திரசித்தைக் கொன்று' என்றார். இனி, 'விண்ணவர்கோன் தலையெடுப்ப' என்பதற்கு - தேவர்களும் தேவராசனும் முன்போலச் சிறப்படையும்படியென்று உரைத்து, அதனை 'இராவணனைத் தலையறுத்தருட்டும்' என்பதனோடும் கூட்டினும் அமையும். ராவணன் என்ற வடமொழிப் பெயர் - கூச்சலிடுபவனென்றும், கூச்சலிடச்செய்பவனென்றும் பொருள்படும். சிவபிரானது கைலாசமலையைப் பெயர்க்கத்தொடங்கி அதன்கீழ்த் தன் கைகள் அகப்பட்டு நசுக்குண்டபோது பேரிரைச்சலிட்டதனாலும், தனது கொடிய செய்கைகளால் உலகத்தைக் கதறச்செய்ததனாலும், இவனுக்கு இப்பெயர்.

வந்து என்பது - காற்றை யுணர்த்தும்போது பெயர்ச்சொல்லாம்; ("விண்டு நீளை வந்து உலவை கொண்டல் கோடையென்றிவை காற்றே" என்ற பிங்கலந்தையைக் காண்க.) வேரறுத்தல் - நிர்மூலமாக்கல்: வமிசத்தோடு அழித்தல். இராவணனைத் தலையறுத்து - இரண்டு செயப்படுபொருள் வந்த வினை. உருட்டு - அருள் என்பதன் பிறவினை; டு - விகுதி. (உஉ)

['எங்களைக் குறித்து ஜனங்களுக்குள் நிகழ்கிற நல்ல பிரஸ்தாபங்களையேயன்றித் தீய பிரஸ்தாபங்களையுஞ் சொல்லுக' என்று இராமன் ஒற்றர்க்குக் கூறுதல்.]

**23.**—(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, அவர் - அவ்விஜயன் முதலியோர், இஆறு உரைத்திட - இப்படிசொல்ல, கேட்ட—, அரசர்கோன் - அரசர்கட்கு அரசனான ஸ்ரீராமன், அவர்களை நோக்கி—, 'நாங்கள்—, இ நகரில் - இந்த நகரத்திலும், நாட்டினில் - இந்தநாட்டிலும், பிறக்கும் - (எங்களைக்குறித்து) நிகழ்கிற, நன்மையும் - நல்லபேச்சுக்களையும், தீமையும் - தீயபேச்சுக்களையும், கேட்டு—, தீங்கு அவை அகற்றி - (எங்களிடமுள்ள) குற்றங்களைப்போக்கி, சிறந்தன செய்தும் - நற்செயல்களைச் செய்வோம்; (ஆதலால்), நீர் கேட்ட இ இரண்டும் செப்பும் - நீங்கள் கேள்வியுற்ற நல்லவை தீயவை என்னும் இரண்டையும் சொல்லுங்கள்: நீங்கள் ஒன்றுக்கும் கூசலீர் - நீங்கள் எதைச்சொல்லுதற்கும் கூசவேண்டா,' என்ன - என்றுசொல்ல, (அவ்வொற்றர்கள்), 'நின்மல - குற்றமற்றவனே! கேட்டி - கேட்பாய்,' என்று - என்று சொல்லி, உரைப்பார் - (ஒருவார்த்தை) சொல்வார்கள்; (எ - று.)—அதனை அடுத்தகவியிற் காண்க.

அரசர்கோன் - ராஜராஜன். நாங்கள் என்ற தன்மைப்பன்மை—தம்பியரையும், சீதைமுதலானாரையும் உளப்படுத்தியது. செப்பும் - 'உம்' விகுதி பெற்ற ஏவற்பன்மை; செப்பு - தெலுங்கில் வழங்குந் திசைச்சொல். கேட்ட - இறந்தகாலப் பலவின்பால்வினையாலணையும் பெயர். கூசலீர் - எதிர்மறை ஏவற்பன்மைமுற்று; அல் - எதிர்மறையிடைநிலை. நின்மல - நிர்மல என்ற வடசொல்லின் விகாரம். (உ௩)

[சீதையைப்பற்றின அபவாதத்தை ஒற்றர்கள் இராமனுக்குக் கூறுதல்.]

**24.**—(இ - ள்.) மன்னவன் இராமன் - நமது அரசனான இராமன், மான பங்கத்தை மனத்தினால் நினைக்கிலன் - மானக்கேட்டை மனத்தினால் எண்ணுகிறானில்லை; வானோர்க்கு இன்னல் செய்து ஒழுகும் இராவணன் - தேவர்களுக்குத் தீங்குசெய்துநடக்கின்ற இராவணன், கொடு போந்து - எடுத்துக் கொண்டுபோய், ஈர் அறு திங்கள் - பன்னிரண்டுமாசகாலம், தன் நெடு நகரி தனில் - தனது பெரிய இலங்காபுரியிலே, இடைவிடாது சிறை வைத்த - இடைவிடாமல் சிறையில் வைத்திருந்த, தையலை - அழகுடைய பெண்ணான

சீதையை, பின்னையும் தாரம் ஆய் கொண்டு வாழ்கை - அதன்பின்பும் மனைவியாகக்கொண்டு வாழ்தல், பேர் இழுக்கு - பெருங்குற்றமாகும், என்று—, பெரு நிலத்து உள்ளோர் பேசுவார் - பெரிய உலகத்திலுள்ளவர்கள் சொல்லுகிறார்கள்; (எ - று.)

திங்கள் என்ற சந்திரனது பெயர் - அச்சந்திரனது சம்பந்தத்தால் அமாவாசைக்கு அமாவாசை கணக்கிடப்படுவதான மாசத்தைக் குறிக்கும்போது ஆகுபெயராம். மாசபங்கம் - வடமொழித்தொடர். தாரம் - தாரா8 என்ற வடசொல் விகாரப்பட்டது. வாழ்கை - கைவிகுதிபெற்ற தொழிற்பெயர். நிலம் - (சலியாமல்) நிற்பது எனக் காரணப்பொருள் படும்; நில் - பகுதி, அம் - கருத்தாப்பொருள் விகுதி. (பூமியின் பரியாயநாமமான அசலா ஸ்திரா என்ற வடசொற்கள் இப்பொருளனவாதல் காண்க.) நினைக்கிலன் என்ற எதிர்மறை முற்றில், கு - சாரியை. ஈர்அறுதிங்கள் - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். பேசுவார் என்றதில், எதிர்காலம் இயல்பு பற்றிவந்த காலவழுவமைதி. (உச)

[அதுகேட்ட இராமன் தனியிடத்திலிருந்து தம்பியரை வரவழைத்தல்.]

25.—(இ - ள்.) அவர் - அந்தஒற்றர்கள், ஒத்து - தம்மில் ஒத்து [மாறுபாடின்றி ஒருவாறாகவே], இ ஆறு உரைத்திடும் - இப்படிச்சொன்ன, வெம் சொல் - வெவ்வியவார்த்தை, உள் உற - மனத்திலே பொருந்த [செவியினுட்பட்டவளவிலே], உத்தமன் - புருஷோத்தமனான ஸ்ரீராமன், ஒளி வேல் நிறத்தினில் தைத்தது போல உளைந்து - ஒளியையுடைய [கூரிய] வேற்படை மார்பில் தைத்ததனாற்போல வருந்தி, தன் சிந்தை தளர்ந்த பின் - தன்மனம் வருந்தியபின்பு, மான பங்கத்தால் - (தனக்கு நேர்ந்த) மானக்கேட்டினால், (சபையிலிருக்க மனங்கொள்ளாமல்), வேறு இடத்து இருந்தனன் - வேறே ஓரிடத்தில் இருந்துகொண்டு, வித்தகர் ஆய தம்பியர் கூவி - அறிவுடையவர்களான தனதுதம்பிமார்களை அழைத்து, கேட்ட எல்லாம் தெரிவுற உரைப்பான் - தான் கேள்விப்பட்ட சொற்களெல்லாவற்றையும் (அவர்கட்கு) விளங்கச்சொல்பவனாய், அவர் தமக்கு இவை இவை கூறும் - அவர்களை நோக்கி இந்த இந்தவார்த்தைகளைச் சொல்வான்; (எ - று)— அவற்றை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க.

தம்பியர்க்கூவி - உயர்திணையில் இரண்டனுருபு தொக்கது; உயர்திணைப் பெயரின்முன் வருமொழிமுதலில் வலி மிக்கது, இரண்டாம்வேற்றுமைத் தொகையாதலால்; "இயல்பின் விகாரம்." கேட்ட-வினையாலணையும்பெயர். உத்தமன் - வடசொல். இருந்தனன், உரைப்பான் - முற்றெச்சங்கள். (உரு)

[இராமன் தம்பியரைக் கொண்டாடுதல்.]

26.—(இ - ள்.) என் உயிர் நீங்கள் - எனது உயிர் நீங்களே; என் வலி நீங்கள் - எனது வலிமை நீங்களே; என் உறு துணைவரும் நீங்கள் - எனக்கு உற்றதுணையாகிறவர்களும் நீங்களே; என் எழில் நீங்கள் - எனது எழுச்சி [அபிவிருத்தி] நீங்களே; என் தவம் நீங்கள் - எனது தவப்பயன் நீங்களே; என் பிராதாக்களும் நீங்கள் - எனது உடன்பிறந்தவர்களும் நீங்களே; என் அரசு இன்பம் நீங்களே - எனக்கு அரசாட்சியினால் நேரும் இன்பம் நீங்களே; ஆனால் - ஆதலால், என் பழி உம் பழி - எனக்கு வருகிற உலகநிந்தை உங்கட்குவருகிற உலகநிந்தையே; புகழும் அன்னதே ஆகும் - கீர்த்தியும் அத்தன்மையதேயாம் [என்புகழ் உங்கள்புகழேயாம்]; ஆன பின் - ஆதலால், யான் இங்கு அறைவ - நான் இப்பொழுது சொல்பவற்றை, நீர் அனைவரும் கேண்மின் - நீங்களெல்லீரும் கேளுங்கள்; (எ - று.)

தம்பியர் இராமனுக்கு இன்றியமையாதவராதலும், அவர்களிடத்தில் அவன் மிக்கஅன்புடையவனாயிருத்தலும், அவர்கள் அவனுக்குப் பக்கபலமா

தலும், சமயத்தில் உதவுதலும், ஆவனசெய்தலும், நன்மைவிளைத்தலும், இன்பங்கட்குக் காரணமாதலும் இங்கு விளங்கும். ப்ராதா - வடசொல்; அறைவ - எதிர்காலப்பலவின்பால் வினையாலணையும்பெயர். நீர்அனைவரும் கேண்மின் - நீர், கேண்மின் என்ற முன்னிலைச்சொற்களோடு அனைவர் எனப் படர்க்கைச்சொல் வந்தது, இடவழுவமைதி. அனைவிரும் என்றிருப் பின் வழாநிலையாம். "திண்பொரு ளெய்தலாகும் தெவ்வரைச் செகுக்கலாகும், நண்பெறு பெண்டிர் மக்கள் யாவையு நண்ணலாகும், ஒண்பொருளாவதைய வுடன்பிறப் பாக்கலாகா, எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக்கரிய தென்றான்" என்று சீவகன் தன்தம்பியைக் கொண்டாடின மைகூறும் சிந்தாமணிச்செய்யுள் இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது. (உசு)

[சீதையைப்பற்றிய லோகாபவாதத்தை இராமன் தம்பியர்க்குச்சொல்லுதல்.]

மூலத்தின் மூன்றாமடியில் 'தூயள்' எனப் படிக்க.

27.—(இ-ள்.) (சீதை), தீய வாள் அரக்கன் சிறையிடை இருந்து - கொடிய வாளாயுதத்தை யேந்திய இராக்கதனான இராவணனுடைய சிறைக்காவலிலே இருந்து, (பின்பு), செம் நெறி தீயிடை மூழ்கி - நல்லொழுக்கத்துக்குச் சாக்ஷியாகிற அக்கினியிலே முழுகியெழுந்து, எயும் மா தவர்க்கும் இமையவர் ஆனோர் யாவர்க்கும் என் மனத்துக்கும் தூயள் ஆய் இருந்தாள் ஆயினும் - பொருந்திய மிக்கதவத்தையுடைய முனிவர்களும் தேவர்களெல்லோரும் எனதுமனமும் அறியப் பரிசுத்தியுடையளாயிருந்தாளாயினும், உலகோர் சொல்லிடும் - (அவள்விஷயமாக) உலகத்தார் சொல்லுகிற, பெரு பழிதனை - பெரியநிந்தனையை, கேட்டு—, என் உள்ளம் ஓயும் - எனது மனம் தளர்கின்றது; உலகு உளோர்க்கு ஒத்திடாது ஒழியின் - உலகத்திலுள்ளார்க்கு ஒத்துநடவாவிட்டால், உண்மையால் பயன் என் - நீதித்திருத்தலினால் பயன்யாது? [யாதுபயனுமில்லை யென்றபடி]; (எ - று.)

இராவணன், சிவபிரானிடம் பெற்ற சந்திரகாசமென்னும் சிறந்த வாளாயுதத்தையுடைமையால், 'வாளரக்கன்' என்று சிறப்பித்துக் கூறப்படுவன். செந்நெறி - சன்மார்க்கம். அதற்கு அக்கினி சாட்சியாதலை, கீழ் யுத்தகாண்டத்தில் "வேட்பதும் மங்கையர் விலங்கினா ரெனிற், கேட்பதும் பல்பொருட் கையங் கேடற, மீட்பது மென்வயி னென்னு மெய்ப்பொருள், வாட்பெருந் தோளினாய் மறைகள் சொல்லுமால்" என்ற அக்கினிதேவன் வார்த்தையாலும் அறிக. இராவணவதத்தின்பிறகு பெருமாள் பிராட்டியை நோக்கி 'நெடுநாள் பிறன்வசத்திலிருந்த உன்னை ஏற்றுகொள்ளமாட்டேன்' என்று சொல்லி மறுத்தபோது அவள் மிக வருந்தி இறத்தற்குத் துணிந்து இலக்குமணனைத் தயமைக்கச்சொல்லி அங்ஙனமே இராமனிடம் அநுமதிபெற்று அவ்விலக்குமணன் மூட்டிய தீயிற் குதிக்க, அவ்வக்கினிதேவன் அவளைச் சிறிதும் சுடமாட்டாமற் போனதுமன்றி அவளுடைய பதிவிரதாதருமமாகிய அக்கினியால் தான்தபிக்கப்பட்டு இராமபிரான்பக்கல் முறையிட்டு அவளுடைய உண்மையான கற்புநிலையின் உறுதியை எடுத்துரைத்து அவளைச் சமர்ப்பிக்க, பின்பு பெருமான் ஜாநகியை அங்கீகரித்தனனென்ற வரலாறு,யுத்தகாண்டத்தில் விவரிக்கப்பட்டது.இலங்கையில் நடந்த அவ்விஷயம் கோசலநாட்டார் கண்டதன்றாதலால், பிராட்டியைப் பழிக்கலாயினர். உண்மை - பண்புப்பெயர். உண்மையால் பயன்என் என்பதற்கு - சத்தியமானஒழுக்கத்தால் என்னபயன் என்றும் உரைக்கலாம். 'உலகுளோர்க்கு ஒத்திடாதொழியின் உண்மையாற் பயன் என்' என்றவிடத்து "உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லா ரறிவிலாதார்" என்ற திருக்குறள் உணரத்தக்கது. இமையவர் - மூடாதஇமையையுடையவர்; அன்றி, இமயமலையில் வாழ்பவர். ஆனோர் + யாவர்க்கு = ஆனோரியாவர்

க்கு; தன்னொழிமெய்ம்முன் யகரம்வர இகரந் தோன்றிற்று. ஓயும் - செய்யுமென்முற்று, நிகழ்காலங் காட்டிற்று; "செய்யும் நிகழ் பெதிர்வும்" என்றார் நன்னூலார். (உஎ)

[இராமன் சீதையைக் காட்டிற் செலுத்திவிடத் துணிந்தமையைத் தம்பியர்க்குக் கூறல்.]

28.—(இ - ள்.) ஓதம் நீர் வேலை உலகு உளோர் - அலைகளையுடைய நீர் மயமான கடலினாற் சூழப்பட்ட உலகத்தில் உள்ளவர்கள், இல்லது உளது எனின் - இல்லாதஒருபொருளை உள்ளதுஎன்று சொன்னால், உள்ளது ஆம் - (அப்பொருள்) உள்ளதென்று (அனைவராலுங்) கொள்ளப்படும்; உள்ளது யாது ஒரு பொருளை இல்லை என்று உரைக்கின் - உள்ளதான யாதாயினும்ஒரு பொருளை (அவர்கள்) இல்லையென்றுசொன்னால், இல்லை ஆம் - (அப்பொருள்) இல்லாததென்று (அனைவராலும்) கொள்ளப்படும்; இது உலகு இயற்கை - இது உலகத்தின் சுபாவம்; ஆதலால்—, அவளை - அச்சீதையை, அரு தவத்தோர்கள் ஆச்சிரமத்து அயல் விடுத்தும் - அருமையான தவத்தைச் செய்த முனிவர் வசிக்கிற ஆச்சிரமத்தின் அருகிலே விட்டிடுவோம்; ஈது நான் துணிந்த காரியம் - இது நான் நிச்சயித்த செயல்: இனி வேறு எண்ணுவது ஒரு பொருள் இல்லை - இனி இதற்குமாறாக நினைப்பதொரு காரியமில்லை; (எ - று.)

முனிவர்களாச்சிரமத்துக்குச் செல்லவேண்டுமென அவள் விரும்பியதனாலும், முனிவர்கள் அவளை முறைதவறாது பாதுகாப்பரென்பதுபற்றியும், அவளை அங்குவிடத் துணிந்தான். வேலா என்ற வடசொல், ஆவீறு ஐயாயிற்று; இக் கரையின் பெயர், கடலுக்கு இலக்கணை. உள்ளது+யாது= உள்ளதியாது; குற்றியலிகரம். (உஅ)

[அதுகேட்ட தம்பியர் மிகவருந்துதல்.]

29.—(இ - ள்.) இ வகை இராமன் இயம்ப — - இவ்வாறு இராமன் சொல்ல, கேட்ட—, இன் உயிர் தம்பிமார் - இனிய உயிரோடொத்த (அவனது) தம்பியர், செய் வகை ஒன்றும் அறியார் - தாம்செய்வது இன்னதென்று அறியாதவர்களாய், சீதையும் இராமனும் வனம் போம் அ வகை தீய கைகேசி நூற்ற அன்றையின் கலங்கி - பிராட்டியும் பெருமாளும் வனவாசஞ்செல்லும்படி கொடியகைகேயி சூழ்ச்சிசெய்த அந்நாளிற் கலங்கினகலக்கத்திலும் அதிகமாகக் கலங்கி, அகத்து எழும் துயரினர் ஆகி - மனத்தில்மிக்கெழுகிற துன்பத்தையுடையவர்களாய், எ வகையாலும் இது விலக்கு அரிது என்று - எவ்வாற்றாலும் இது விலக்கமுடியாததென்றெண்ணி, இடி விழுந்து என்ன இருந்தனர் - இடிவிழப்பெற்றாற்போலத் திகைத்திருந்தார்கள்; (எ - று.)

நூற்ற என்ற இறந்தகாலப்பெயரெச்சத்தில், நூல் - பகுதி. நூற்றல் - நூற்குதல், முயலுதல். கைகேயி நூற்றவகையை அயோத்தியாகாண்டத்துக் கைகேசிசூழ்வினைப்படலத்தில் "ஏயவரங்க ளிரண்டி னொன்றினாலென், சேயரசாள்வது சீதைகேள்வ னொன்றால், போய் வனமாள்வ தெனப்புகன்று நின்றாள், தீயவையாவையினுஞ் சிறந்த தீயாள்" என்றதனால் அறிக. அன்றை - ஐயீற்றுடைக் குற்றுகரம்; அதன்மேல், இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. விழுந்து, விழுந்தால் என்னும் எச்சத்தின் திரிபு.

[இதுமுதல் மூன்று கவிகள் - ஒரு தொடர். இதுவும், அடுத்த கவியும் - சீதையை வனத்திற் கொண்டுவிடும்படி இராமன் இலக்குமணனுக்குக் கட்டளையிடுதல்.]

நான்காமடியில் 'மலக்கு' என மூலத்தைத் திருத்துக.

30.—(இ - ள்.) உலகம் மூன்றையும் கலக்குவன் என்று கருதுமேல் - மூன்றுஉலகங்களையும் கலங்கச்செய்வே னென்று நினைப்பனாயின், சனத்தி

னில்முடிக்கும்-(அவ்வாறே) ஒருகணப்பொழுதிலே செய்துமுடிக்கவல்ல, இல க்குவன்தன்னை நோக்கி - லக்ஷ்மணனை நோக்கி,—இராகவன் - இராமன்,— இங்கு யான் துணிந்த காரியத்தை விலக்குவன் என்னும் சிந்தையை விட்டு - இப்பொழுது நான் நிச்சயித்த செயலை 'மறுத்திடுவேன்' என்னும் எண்ண த்தைக் கொள்ளாமல், வெம் வினை வேரொடும் பறிய மலக்குவல் தவத்து முனிவர் வாழ் வனத்து மடந்தையை விடுதி - கொடியகருமங்கள் வேரோடு [முற்றும்] நிலைபெயரும்படி அழிக்கின்ற உறுதியான தவத்தையுடைய முனிவர்கள் வசிக்கிற காட்டில் சீதையைக் கொண்டு விடுவாயாக; இன்னும் கேள் - இன்னமும் (நான் சொல்வதைக்) கேள்; (எ - று.)—இக்கவியில் 'நோக்கி' என்ற வினையெச்சம், 32 - ஆம் கவியில் வருகிற 'இயம்பிட' என் னும் எச்சத்தைக் கொள்ளும்.

முதலடி - இலக்குமணனது திறமையை விளக்கும். உலகம் மூன்று - சுவர்க்கம் பூமி பாதாளம். ஏல் - என்னில் என்பதன் மரூஉ. லோகம், க்ஷணம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கலக்குவன், விலக்குவன் என்றவற்றில், 'அன்' விகுதி தன்மையொருமைக்கு வந்தது. இங்கு யான் துணிந்தகாரியத்தை விலக்குவனென்னுஞ் சிந்தையை விட்டு - என்கட்டளை யை மறாமல் என்றபடி. மலக்கு - பிறவினைவினைத்தொகை; மலங்குஎன்ற தன்வினைப்பகுதியின் மெலி வலியாயிற்று: மலங்குதல்-கலங்குதல், அழிதல்.

31.—(இ - ள்.) கல்வி சேர் முனிவர் தவவனம் அடங்க காட்டுவான் இசைந்தனென் - கல்விபொருந்திய முனிவர்கள் தவஞ்செய்கிற ஆச்சிரமங் களையெல்லாம் (சீதைக்கு யான்) காட்டுவதாக ஒப்புக்கொண்டிருக்கிறேன்; சொல்லிய வண்ணம் செய்குவென் என்றே அவளும் உவந்திடும் - சொன்ன படி நான் செய்வேனென்று எண்ணி அவளும் மகிழ்ந்திருக்கிறாள்: (நீ), சுமந்திரற்கு உணர்த்தி - சுமந்திரனுக்குத் தெரிவித்து, (தேர்கொணரச் சொல்லி), சில் உளை புரவி தேர்மிசை சீதையை ஏற்றி - சக்கரம்அமைந்த தும் பிடரிமயிரையுடைய குதிரைகள்பூண்டது மான அத்தேரின்மேற் சீதையை ஏற்றி, செறி புகழ் ஐயன் நல் உயிர் தோழன் ஆய வான்மீகி நல் தவம் செய் வனத்து உய்த்தி - மிக்ககீர்த்தியையுடைய நமதுதந்தையினது சிறந்தபிராணசிநேகிதனான வால்மீகிமுனிவன் நல்லதவத்தைச்செய்கிற காட் டிலே (அவளைச்) செலுத்திவிடுவாய்; (எ - று.)

'இலக்ஷ்மணா! அவள் மறுபடி முனிவராச்சிரமத்திற்சென்று வாசஞ் செய்ய என்னைக் கேட்டிருக்கின்றாள்; அவ்விடத்தை நானேக்காட்டுவதாக நான் அவட்கு உறுதிமொழி கூறியுள்ளேன்; அந்தவியாஜத்தால் நீ அவளைத் தேர்மேல் ஏற்றிக்கொண்டுபோய் நமதுநாட்டின்கடையெல்லையான சங்கை யின் அக்கரையில் வால்மீகிமுனிவராச்சிரமத்தண்டை அவளை விட்டுவர வேண்டும்' என்றனன் என்பதாம். தசரதசக்கரவர்த்திக்கு வால்மீகிமுனி வர் மனமொத்தநண்பராதலை, பின்பு வால்மீகி சீதையை நோக்கி 'உன் மாமனாருக்கு நான் தோழனாகலின்,எனக்கும் நீ மருமகளேயாகின்றாய்; ஆன தால், விசனமற்று என்னிடத்து இருக்கலாம்' என்று சொன்னதாக வால் மீகிராமாயணத்திற் கூறியுள்ளதனாலும் அறிக. வால்மீகி என்ற வடமொழிப் பெயர் - புற்றினின்று பிறந்தவ ரென்று பொருள்படும்; வல்மீகம் - புற்று. ஆதியில் இவர் வெகுகாலம் சலியாமல் மூச்சடக்கித் தூண்போல நின்று தவஞ்செய்துகொண்டிருந்தபோது இவர்மேல் புற்று மூடிக்கொண்டது; அது ஒருகாலத்தில் மழைபெய்து கரைய, அதனினின்று இவர் வெளிப்பட் டமைபற்றி, வால்மீகி யெனப் பெயர்பெற்றனர். இவரை, வருணகுமார ரென்பதும் இதுபற்றியே. நற்றவம்செய்தல் - வீடுபெறத் தவஞ்செய்தல்; சீவகசிந்தாமணியில் "நற்றவஞ் செய்வார்க் கிடம்" என்றவிடத்து ஆசிரியர்

நச்சினார்க்கினியர் இங்ஙனமே உரைகூறினர். ஸுமந்த்ரன் என்ற வடசொல் - நல்லஆலோசனையையுடையவ னென்று பொருள்படும். இவன் இராமபிரானுக்குப் பரம்பரையாக மந்திரியும் சாரதியுமா யுள்ளவன். சில் - ஆரவாரமும், உளை - பிடரிமயிருமாம். உளை - தலையாட்ட மென்னும் அணியுமாம். கல்வி - கற்றல்; 'வி' விகுதிபெற்ற தொழிற்பெயர். செய்குவென், கு - சாரியை. தவவனம் - தபோவந மென்ற வடமொழித்தொடரின் விகாரம். காட்டுவான் - காட்ட; எதிர்காலவினையெச்சம்: வான் - விகுதி; அதுவே காலங்காட்டும். ஆர்யன் என்ற வடசொல், ஐயன் என விகாரப்பட்டது.

[இலக்குமணன் சீதையிருக்கிற அந்தப்புரத்துக்குச் செல்லுதல்.]

32.—(இ - ள்.) என்று—,அடல் இராமன் - வலிமையையுடைய ஸ்ரீராமன், இயம்பிட - சொல்ல, கேட்ட—, இலக்குவன் - இலக்குமணன், வெம் துயரால் எழுந்து - கொடியதுக்கத்துடனே புறப்பட்டு, தன் துணை இல்லா சுமந்திரற்கு உணர்த்தி - ஒப்பற்றவனான சுமந்திரனுக்குத் (தேர் சித்தஞ்செய்துகொணருமாறு) தெரிவித்து (அவனைக்கொண்டு), தட மணி தேர் பண்ணின் இயற்றி - பெரிய அழகிய தேரை அலங்காரத்தோடு சித்தப்படுத்தி, பொன் திகழ் மணி பூண் சீதை மாளிகையின் புனை மணி வாயிலில் புகுத - பொன்மயமாய்விளங்குகிற இரத்தினங்கள்பதித்த ஆபரணங்களைத் தரித்த சீதாபிராட்டியினுடைய திருமாளிகையினது அழகிய இரத்தினமயமான வாசலிலே போய்ச்சேர, (அதுகண்டு), இன்று ஒருப்பாடு இது எது என வினவும் - 'இப்பொழுது இங்குவந்த கருத்து என்ன' என்று வினவிய, ஏவலோர்க்கு - (அவ்வந்தப்புரத்து) ஏவலாளர்களுக்கு, இலக்குவன் இயம்பும் - அவ்விலக்குமணன் விடைகூறுவான்;(எ-று.)—அதனைஅடுத்தகவியிற்காண்க.

துயரால் என்பதில் 'ஆல்' உருபு - ஒடுஉருபின்தன்மையதாய் அடைமொழிப்பொருளில் வந்தது. தட - பெருமையுணர்த்தும் உரிச்சொல். மணித்தேர் - மணிகள்கட்டிய தேரும், இரத்தினம்பதித்த 'தேருமாம். வாயில் - இல்வாய் என்பது முன்பின்னாகமாறிய இலக்கணப்போலி; வீட்டினதுமுன்னிட மென்று பொருள்: முன்பின்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை யென்க. புகுத என்னும் செயவெனெச்சத்தில், து - சாரியை. ஒருப்பாடு - ஒருப்படுதல்; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். ஏவலோர் - ஏவியதொழிலைச் செய்பவர். (கூஉ)

[பிராட்டியை முனிவராச்சிரமத்துக்கு அழைத்துப்போகவந்த செய்தியைத் தெரிவித்தவுடனே பிராட்டி புறப்படுதல்.]

33.—(இ - ள்.) 'பெரியோர் மலர் பதந்தன்னை - முனிவர்களுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை, வணங்கிட - (சீதை) வணங்குமாறு, காட்டு, (அவளை அழைத்துக்கொண்டுபோய் அவட்கு அவர்களைக்) காண்பி,' என - என்று, மன்னவன் உரைத்தான் - இராமபிரான் (எனக்குக்) கட்டளை கூறினன், என்னலும் - என்று (இலக்குமணன் ஏவலோரிடம்) சொன்னவளவிலே, அவர் போய் உரைத்தலும் - அவர்கள் (அந்தப்புரத்தினுட்) சென்று (அச்செய்தியைப் பிராட்டிக்குக்) கூறியவுடனே, (அவள்), எழுந்த உவகையால் - பொங்கியெழுந்த சந்தோஷத்தினால், இன் உயிர் தளிர்த்து - இனிய உயிர் களிக்கப்பெற்று,—மின் ஒளி ஆரம் முதல ஆபரணம் - மின்னல்போல விளங்குகிற ஒளியையுடைய ஹாரம்முதலிய அணிகலங்களையும், விளங்கு சீர் நவம் மணி ஆடை - பிரகாசிக்கின்ற சிறப்புள்ள புதுமையான அழகியஆடைகளையும், இன்னவை பிறவும் - இவைபோன்ற மற்றம்வேண்டுமவற்றையும், தெரிந்து கொண்டு - தேர்ந்து எடுத்துக்கொண்டு, இளையோன் இயம்பிட இரதம் ஏறினள் - இளையபெருமாள் சொன்னபடி தேரி லேறினள்; (எ - று.)

பெரியோர் என்றது, இங்குத் தவத்தினாலும் சாபாநுக்கிரகசக்தியினாலும் பெரியவரான முனிவர்மேல் நின்றது. உவகை - உவப்பு; கை விகுதி பெற்ற தொழிற்பெயர். இன்உயிர் - இனிமைஎன்னும் பண்புப்பெயர் ஈறு போய் இடைநின்றஇகரமுங் கெட்டது. பதம், ஆபரணம், ஹாரம், நவம், ரதம் - வடசொற்கள். முதல - குறிப்புப்பெயரெச்சம். நவமணி என்பதற்கு - ஒன்பதுவகைஇரத்தினங்களென்று பொருள்கொண்டு, அதனை 'ஆரமுதலஆபரணம்' என்பதனோடு இயைத்தலு மொன்று. இளையோன் - இளமை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் இடைஅகரம் ஐயாயிற்று. தளிர்த்தே, ஏ - இசைநிறை. (௩௩)

[இருவரும் தேரேறிச் செல்லுகையில் சீதை துர்நிமித்தங்கண்டு மைத்துனற்கு அறிவித்தல்.]

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

34.—(இ - ள்.) தட மணி தேர் - (இலக்குமணனும் சீதையும் ஏறிய) பெரிய அழகிய அந்தத்தேர், சலம் கிழிய கடல் சென்றிடும் கலம் போல் - நீர் கிழியும்படி கடலில் விரைந்துசெல்லும் மரக்கலம்போல, செல - விரைந்து செல்ல,—தையல் - பெண்மைக்குணம்நிரம்பிய பிராட்டி, வலம் கண்ணும் துடித்து வயிறு எரிவு உற்று - வலக்கண்துடிக்கவும் வயிறுஎரியவும்பெற்று, (அத்தீநிமித்தத்தால்), மனமும் தன் மேனியும் நடுங்க - தனது உள்ளமும் உடம்பும் நடுங்க,— (தன்மைத்துனனை நோக்கி), 'இலக்குவ - லக்ஷ்மண! எனக்கு துர்க்குறி இதனால் என் விளைவு என்று நான் அறியேன் - எனக்கு நேர்ந்த இத்தீநிமித்தத்தால் என்னதீங்கு உண்டாவதோ! என்று நான் அறிகிறேனில்லை; விலக்கு அரிது ஆய விதியினால் விளையும் விளைவை - விலக்க முடியாததான ஊழ்வினையால் நேரும் பயனை, மேதினி - உலகத்தில், அறிவார் யார் - அறிபவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)—செல்ல, நடுங்க என்ற வினையெச்சங்கள், அடுத்தகவியில் வரும் 'என்று' என்னும் எச்சத்தைக் கொள்ளும்.

மகளிர்க்கு வலக்கண் துடித்தல், தீநிமித்தம்: காரணம் ஏதுமின்றி வயிறுஎரிதலும் அப்படியே. செல, கணும் என்பன - தொகுத்தல். கணும் என்ற உம்மை - எதிரதுதழுவியஎச்சப்பொருளது. ஜலம், விதி - வடசொற்கள். (௩௪)

[தீநிமித்தத்துக்கு அஞ்சிய சீதை தெய்வத்தைப் பிரார்த்தித்தல்.]

35.—(இ - ள்.) தாம் உறு துயரம் - தாம்அடையும் துன்பத்தை, தையலர் அறியார் - பெண்பாலார் அறியத் திறமுடையாரல்லர்,—(என்று - என்று இலக்குமணனை நோக்கிச் சொல்லி),—'சார்ந்த இ துர்க்குறியதனால் - (எனக்குச்) சம்பவித்த இத்தீநிமித்தத்தால், தூ மனம் உடைய என் சுவாமிக்கும் - பரிசுத்தமான மனத்தையுடைய எனது கணவனுக்கும், துனி இல் என் கொழுந்தன்மாருக்கும் - குற்றமற்ற என் மைத்துனர்களுக்கும், மாமியர்தமக்கும் - மாமிமார்க்கும், வான் கிளைதனக்கும் - சிறந்த (மற்றைய) சுற்றத்தார்க்கும், வளம் நகரத்துள் வாழ்வோர்க்கும் - வளங்களையுடைய அயோத்தியாபுரியில் வாழ்கிற ஜனங்களுக்கும், தீமை ஒன்று இன்றி - யாதொருதீமையும் நேரிடாமல், நன்மை ஆய் விடுக - எல்லாம் நன்மையேயாகக்கடவன; தெய்வமே—!' என்று - என்றுசொல்லிப் பிரார்த்தித்து, கைதொழுதாள் - கை கூப்பி வணங்கினாள்; (எ - று.)

'என்று' என்பது, 'அறியார்' என்பதன்பின்னும் எடுத்துக்கூட்டப்பட்டது. என்சுவாமி - என்னைஅடிமையாகவுடையவன். துனி - வெறுக்கத்தக்கது. கொழுந்தன்மார் - கணவருடன்பிறந்தவர்; இங்கே பரதசத்துருக்கினர். மாமியர் - கணவன்தாய்மார்; இங்கே, கௌசல்யை, கைகேயி, சுமித்

திரை முதலியோர். கிளை - மரத்தைக் கிளைபோல ஒருவனைத் தழுவி நிற்ப தெனச் சுற்றத்திற்கு உவமையாகுபெயர். வான்கிளை - உற்றவிடத்துஉதவும் அன்புடைச் சுற்ற மென்றபடி. ஆய்விடுக என்றதில், விடுஎன்ற துணைவினை - தேற்றப்பொருளை விளக்கும். (௩௫)

[இலக்குமணன் சீதைக்குத் தேறுதல்கூறுதல்.]

36.—(இ - ள்.) அன்ன அ குறிகள் - அத்தன்மையனவான அந்தத் தீநிமித்தங்களை, ஆய் இழை கூற - தேர்ந்தெடுத்தணிந்த ஆபரணங்களையுடையளான சீதை சொல்ல, (கேட்டு), இளையோன் - இலக்குமணன், அ த்து எழும் துயரன் ஆய்-மனத்திலெழுகின்ற துன்பத்தையுடையவனாய்,'சொன்ன இ குறியால் - நீ சொன்ன இத்தீநிமித்தங்களால், நம் கிளை ஆனோர் - நமது உறவினர், துயர் இன்றி - யாதொருதுன்பமுமில்லாமல், சுகத்து இனிது இருப்பார் - சௌக்கியத்துடன் இனிமையாக இருப்பார்கள்,' என்னலும் - என்று தேறுதல்கூறியவுடனே,—(சீதை), எழுந்த உவகையள் ஆகி - உண்டான சந்தோஷத்தையுடையவளாய், இரு துயர் ஒழித்து - மிக்கதுன்பத்தைப் போக்கி, அவண் இருப்ப - அத்தேரினிடத்தில் நிலைகொள்ள,—பொன் மணி நெடு தேர் - பொன்மயமாய் இரத்தினங்கள்பதிக்கப்பெற்ற உயர்ந்த அத்தேர், தூயவர் பொறுத்து - பரிசுத்தர்களான (சீதைஇலக்குமணன் சுமந்திரன் என்னும்) அம்மூவரையும் தன்மேற்கொண்டு, தென் திசை நோக்கி போயது - தெற்குத்திக்கைநோக்கிச் சென்றது; (எ - று.)

34 - ஆம் கவியில் 'துர்க்குறியிதனால்' என்றும், 35 - ஆம் கவியில் 'துர்க்குறியதனால்' என்றும் வந்தவை - சாதியொருமையாதலால், இங்கு 'அன்னஅக்குறிகள்' என்ற பன்மை, அவற்றோடு மாறுகொளக்கூறலாகாது. ஆயிழை - வினைத்தொகை யன்மொழி. இருந்துயர் - இருமை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் இனமெலி மிக்கது. 'தூயவர்ப்பொறுத்து'— "இயல்பின் விகாரம்" அவண், அண் - இடப்பொருள்காட்டும் விகுதி. (௩௬)

[மூவரும் கோமதிசேர்ந்து அன்றையிரவு அங்குத்தங்கி மறுநாள் கங்கையைச் சேர்தல்.]

37.—(இ - ள்.) மா மதி முகத்தின் - பூர்ணசந்திரன்போன்ற முகத்திலே, மறு அறு - களங்கமில்லாத, கற்பின் மங்கையும் - பதிவிரதாதருமத்தையுடையளான சீதையும்,—வருவன எண்ணும் - எதிர்காலத்தில் நேருஞ் செயல்களை முன்னமே ஊகித்தறியவல்ல, தூ மதி - சுத்தமான அறிவையுடைய, அமைச்சன் - மந்திரியாகிய, சுமந்திரன்தானும் - சுமந்திரனும்,— துயர் உறு மனத்து - துன்பம்மிக்க மனத்தையுடைய, இளையோனும் - இலக்குமணனும்,—கோமதி என்னும் நதியினை குறுகி - கோமதியென்னும் நதியைச் சேர்ந்து, கொடு கதிர் மேல் கடல் குறுக - உஷ்ணகிரணங்களையுடையனான சூரியன் மேற்குக்கடலில் முழுகியதனால் [சூரியாஸ்தமனம் ஆனதனால்], தாம் அதில் வைகி - தாம் (அன்றையிரவு) அந்நதிக்கரையில் தங்கி,—பிற்றை நாள் உச்சி - மறுநாள் சூரியன் உச்சிவானத்து வருமளவில், தட புனல் கங்கையை சார்ந்தார் - பெரிய நீர்ப்பெருக்கையுடைய கங்காநதியைச் சேர்ந்தார்கள்; (எ - று.)

முகமண்டலத்திற்குச் சந்திரமண்டலம் உவமை, கண்டவர் கண்களிக்கச்செய்தற்கும், ஒளிக்கு மென்க. கற்பு - கணவனைத் தெய்வமென்று கொண்டொழுகும் ஒழுக்கம். அமாத்யன் என்ற வடசொல், அமைச்சன் எனச் சிதைந்தது. கொடுங்கதிர் - பண்புத்தொகையன்மொழி. மேற்கு+கடல்=மேல்கடல்; "திசையொடு திசை" என்னுஞ் சூத்திர விதி. அது என்ற சுட்டுப்பெயர் இலக்கணையாய், கங்கைக்கரையை யுணர்த்திற்று. வைகி, வைகு - பகுதி. பிற்றைநாள் - பிற்பட்டநாள்; பின்என்ற இடைச்

சொல்லின்மேல், து ஐ - சாரியைகள், மற்றவை - சந்தி. தட+புனல்= தடம்புனல்; "இயல்பினும் விதியினும்" என்ற பொதுவிதிப்படி வலிமிகாது மெலிமிக்கது, உரிச்சொற்புணர்ச்சி யாதலின்: "இடையுரிவடசொலின் இயம்பிய கொளாதவும்." மதி - நன்குமதிக்கப்படுவதெனப் பொருள்படுங் காரணக்குறி. (௩௭)

[கங்கைக்கரை சேர்ந்தவுடனே இலக்குமணன் கதறியழுதல்.]

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

38.—(இ - ள்.) சென்று கங்கையை காண்டலும் - அருகிற்போய்க் கங்காநதியைப் பார்த்தவுடனே, இளையோன் - இலக்குமணன், கண்கள் நீர் அரும்பிட கூர்ந்து - கண்கள் நீர்துளிக்கத் தவிப்படைந்து, பொங்கிய துயரம் புறப்படா வண்ணம் அடக்கிட - (மனத்திலே) மிகுதியாகவுண்டான துக்கம் வெளித்தோன்றாதபடி (அதனை) அடக்கமுயல, உள் நின்று பொருமு - (அச் சோகம் அடங்காமல்) உள்ளிருந்து விம்மிவெளிப்பட, (அதுகண்டு), மங்கை - சீதை, 'இலக்குவ - லக்ஷ்மண! இங்கு நீ இங்ஙன் இடர் உறுவான் என் - இவ்விடத்தில் நீ இவ்வாறு துன்பமடைதல் என்னகாரணத்தால்? இயம்புதி - சொல்வாய்,' என்று ஈது உரைப்ப - என்று இவ்வார்த்தையைச் சொல்ல,— மறு மொழி கொடாது வாய்விட்டு கதறிடும் காலை - (அதற்கு இலக்குமணன்) உத்தரஞ்சொல்லாமல் வாய்விட்டுக் கதறியழும்போது, (எ - று.)—'என்று அறைந்திட' என அடுத்தகவியோடு தொடரும்.

காண்டலும் - 'உம்' விகுதிபெற்ற இறந்தகாலவினையெச்சம்; இது, பிற் பொருளோடு விரைவையுங் குறிக்கும்: இதில், து அல் - சாரியைகள், உக ரங்கெட்டதும் தகரம் டகரமானதும் - சந்தி. காந்தி, காந்து - பகுதி. பொருமு, பொருமு - பகுதி. இங்ஙன் - இங்ஙன மென்பதன் விகாரம். உறு வான் - 'வான்' விகுதிபெற்ற தொழிற்பெயர். (௩௮)

[காரணமென்னென்று வினவிய சீதைக்கு இலக்குமணன் மலுறைத் துக்கூறல்.]

39.—(இ - ள்.) 'தூய இ நதியை கண்டவர் எல்லாம் - பரிசுத்தமான இக்கங்காநதியைப் பார்த்தவர்களெல்லோரும், உவந்து தொழுது ஆடுவர் - மனம்மகிழ்ந்து கைகூப்பி வணங்கி (இதில்) நீராடுவார்கள்; (அங்ஙனமிருக்க), தூயோய் - பரிசுத்தகுணமுடையவனே! நீ இடர் உறுவது என் - (இந்நதி யைக் கண்டவளவிலே) நீ சோகமடைவது என்னகாரணத்தால்? உலகத்தில் நினை இடர் செய்பவர் இல்லை - உலகத்திலே உன்னைத் துன்பப்படுத்தவல்ல வர் எவருமில்லையே,' (என்று அறைந்திட) - என்று (பிராட்டி) சொல்ல, (அத ற்கு இளையபெருமாள்), 'நாயகன்தன்னை பிரிந்து அறியாதேன் நான் - சுவா மியை [இராமனை] (ஒருநாளும் விட்டுப்) பிரிந்தறியாதவனான நான், நாள் இரண்டு உண்டு பிரிந்தேன் - இரண்டு நாளாக விட்டுப்பிரிந்தேன்: ஆயவன் தன்னை நினைந்து உறு துயர் - அப்பெருமானை நினைத்தலால் நேர்ந்தசோ கம் (இது),' என்று அறைந்திட - என்று (அச்சோககாரணத்தை உள்ளபடி சொல்லாது மறைத்து வேறாகக்) கூற,—ஆயிழை உரைப்பாள் - பிராட்டி (அதற்கு) மறுமொழிகூறுவாள்;(எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

'என்று அறைந்திட' என்பது, இரண்டாம்அடியின் ஈற்றிலும் எடுத்துக் கூட்டப்பட்டது. நாயகன் - வடசொல். உறுதுயர் - வினைத்தொகை. ஆய வன் - ஆகியவன். (௩௯)

[சீதை இலக்குமணனைத் தேற்றுதல்.]

40.—(இ - ள்.) 'நன்றி வித்து ஆகும் - நன்மைக்கு மூலகாரணமாகிற, நல் ஒழுக்கு உடைய - நல்லொழுக்கத்தையுடைய, நல் தவம் முனிவரை எல் லாம் - சிறந்ததவஞ்செய்த முனிவர்களையெல்லாம், சென்று அடி பணிந்து -

போய்த் திருவடி தொழுது, தீ வினை அறுத்து - (அதனால்) கொடியகருமங்களைப் போக்கி,—திகழ் ஒளி ஆடை ஆபரணம் - விளங்குகிற ஒளியையுடைய ஆடைகளையும் அணிகளையும், என் துணை தோழிமார்கட்கும் - (முன்பு) எனக்குத்துணையான தோழியர்களாகிய ரிஷிபுத்திரிகளுக்கும், அவரை ஈன்று எடுத்தோர்கட்கும் - அவர்களைப் பெற்றுவளர்த்த தாய்மார்களுக்கும், உதவ - கொடுத்தற்காக, இன்று ஒரு நாளும் இருந்து - இன்றைஒருநாள்மாத்திரமே இங்குத் தங்கி, நாம் மீடும் - (நாளைக்கே) நாம் திரும்பிச்சென்றுவிடுவோம்: இலக்குவ - லக்ஷ்மண! இடர் உறல் - துன்பமடையாதே,' என்றாள் - என்று (பிராட்டி) கூறினாள்; (எ - று.)

இராமனைப் பிரிந்ததனாற் சோகிக்கிறே னென்று கூறிய லக்ஷ்மணனுக்குச் சீதை நாளைக்கே திரும்பிவிடுவோ மென்று சமாதானங் கூறினாள். 'என்றுணைத்தோழிமார்' என்றது, முனிவர்களுள் இல்லறத்திலுள்ளாரது குமாரிகளை. இவர்கள் சீதைக்குத் துணைத்தோழியரானது, முன்பு கைகேயி சொல்லால் வனம்புக்கபோது. ஒருநாளும், உம் - இழிவுசிறப்பு. நாம் மீடும்- முன்னிலையை உளப்படுத்திய தன்மைப்பன்மை. மீடும்—மீள்-பகுதி, டும் - தன்மைப்பன்மைவிகுதி, ளகரம் கெட்டது - சந்தி; "றவ்வொடுகரவும்மை" என்ற சூத்திரத்து "டவ்வொடு கழிவும்" என்றபடி இறந்தகாலத்திற்கு உரியதான இவ்விகுதி எதிர்காலங்காட்டுதலை அச்சூத்திரத்து 'ஈங்கே' என்ற மிகையால் அமைத்துக்கொள்ளவேண்டும். இனி, தும் - விகுதியெனக் கொண்டு, தகரம் டகரமாயிற்றென்றலும் ஒன்று. உறல் - எதிர்மறையொருமையேவல்முற்று; அல் - விகுதி. நன்றி - பண்புப்பெயர்; றி - விகுதி. வித்து - விதை. ஒழுக்கு - ஆசாரம்; ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஈன்று, ஈன் - பகுதி. (௪௦)

[கங்கையைப் படகுகொண்டு கடத்தல்.]

41.—(இ - ள்.) இன்ன வாசகங்கள் - இத்தன்மையனவான வார்த்தைகளை, ஏந்திழை இயம்ப - தரித்த ஆபரணங்களையுடையளான பிராட்டி சொல்ல,—இலக்குவன் - லக்ஷ்மணன், இடரை உள் அடக்கி - சோகத்தை உள்ளே (அரிதில்) அடக்கிக்கொண்டு, நல் நதிதனை - சிறந்த அக்கங்காநதியை, நாவாயினில் கடத்தி - படகுகொண்டு தாண்டுவித்து, நடந்து போய் - இறங்கி நடந்துசென்று, தென் கரை நண்ணி - (அந்நதியின்) தென்கரைப்புறத்தைச் சேர்ந்து, (அங்கு), மன்னவன் இராமன் தேவியை முறையால் வலம் செய்து மலர் அடி வணங்கி - இராமபிரானது மனைவியான அச்சீதையைச் சாஸ்திரமுறைப்படி பிரதக்ஷிணஞ்செய்து (அவளுடைய) தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரித்து, ஏழு உலகு உடையாய் என் உரை கேட்டி என - 'ஏழுவகையுலகங்களையும் அடிமையாகவுடையவளே! என்வார்த்தையைக் கேள்' என்று சொல்ல,—அவள் இயம்பு என - அச்சீதை 'யாது? சொல்' என்றுசொல்ல,—இயம்பும் - (இலக்குமணன்) சொல்லத் தொடங்குவான்; (எ - று.)

இரண்டாமடிக்கு-சீதையைப் படகில்ஏற்றி நதிகடக்கச்செய்து இலக்குமணன் தான் நடந்து சென்று அக்கரைசேர்ந்து என வுரைத்தல் முதனூலுக்கு முரணும். 'சுமித்திராதநயரும் ஒன்றும் பேசாமல் சுமந்திரரை 'இங்கேயே இரும்' என்று கட்டளையிட்டுப் படவுஅழைப்பித்து ஜாநகியும் தாமும் அதில்ஏறி ஆற்றைக்கடந்து அக்கரையிலிறங்கி' என்ற உத்தரராமாயணவசனத்தையுங் காண்க. ஏழுலகு - ஜம்பு, பிலக்ஷம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்ற ஏழு தீவுகளாகவுள்ள பூலோகம்; நிலவுலகத்துஅரசர்கட்கெல்லாம் அரசனான இராமபிரானது மனைவியாதலால், 'ஏழுலகுடையாய்' என விளிக்கப்பட்டாள். இது, கீழேழுலகமும் மே

லேழுலக்குமாகிய அனைத்துக்கும் தலைவியேயென்று பொருள்கொள்ளினும் அமையும்; சர்வலோகநாயகனுகிய திருமாலினது மனைவியான திருமகளின் அவதார மாதலால். வாசகம் - வடசொல். நாவாய் - நௌ: என்ற வட சொல்லின் சிதை வென்பர்; வடமொழியில் நௌ: என்ற சொல் மூன்றும் வேற்றுமைவிரியில் நாவா என நிற்கும். நாவாயினில், இல் - ஐந்தனுருபு, ஏதுப் பொருளது: கருவிப்பொருள் ஏதுப்பொருளில் அடங்கும்; இன் - சாரியை. தெற்கு+கரை=தென்கரை; திசைப்பெயர் ஈறுபோய் றகரம் னகரமா யிற்று; [நன் - உயிர் - ௬௬.] உடையாய் - உடையாள் என்பதன் ஈறுதிரிந்த விளி. ஏந்திழை - வினைத்தொகை யன்மொழி. (௪௧)

[இலக்குமணன் மிக்க சோகத்தோடு சீதைக்குச் செய்திசொல்லத் தொடங்கல்.]

42.—(இ - ள்.) கடு துயர் மேல் கொண்டு ஏற - கொடியதுன்பம் மேன்மேல் மிக அதிகப்பட, கண்ணின் நீர் வெள்ளம் சோர - கண்களி னின்று நீர் வெள்ளமாகப் பெருக, ஒடுங்கிய வலியின் - ஒடுங்கிவிட்ட வலி மையையும், நீர் அற்று உலர்ந்திடு முகத்தன் - நீர்வறண்டு உலர்ந்த வாயையு முடையவனாய், அஞ்சி நடுங்கிய மனத்து - பயந்துநடுங்கின மனத்துடனே, நீர் இல் நா தழுதழுத்து - நீர்வறண்ட நாக்குத் தடுமாறுதலால், பிடுங்கிய மொழியன் - சிரமப்பட்டு வெளிப்படுத்துகிற சொற்களையுடையவனாய், மங் கைக்கு - சீதைக்கு, இவை இவை - இந்த இந்த வார்த்தைகளை, மெல்ல பேசல் உற்றான் - மெள்ளமெள்ளச் சொல்லத் தொடங்கினான்; (எ - று.)— அவற்றை அடுத்த ஆறு கவிகளிற் காண்க.

'நீரற்றுலர்ந்திடுமுகத்தன்' என்பதற்கு - நீர்மை [பளபளப்பு] ஒழிந்து வாடிய முகத்தையுடையவனாய் என்றும் உரைக்கலாம். மெல்ல - மென் மை யென்னும் பண்பி னடியாப் பிறந்த குறிப்பு வினையெச்சம். (௪௨)

[இதுமுதல் ஆறு கவிகள் - இலக்குமணன் சீதைக்குச் செய்திகூறல்.]

43.—(இ - ள்.) உத்தம குணத்தோய் - மேலான குணங்களையுடைய வளே! கேட்டி - (யான் சொல்வதைக்) கேட்பாய்; உலக மாதாவே - உலகத் துக்குத் தாயே! கேட்டி—; சுத்தன் ஆம் சனகன் வேள்வி தோன்றிய தூயோய் - பரிசுத்தனான ஜநகமகாராசனது யாகசாலையினின்று அவதரித்த தூய்மையுடையவளே! கேட்டி—; வித்தகன் இராமன் - அறிஞனான இரா மபிரான், ஏவி விட்ட - கட்டளையிட்டு அனுப்பின, காரியங்கள் எல்லாம் - செயல்களையெல்லாம், தத்துவம் ஆன வண்ணம் சாற்றுவென் - உள்ளபடி சொல்வேன், என்று-என்று சொல்லி, சாற்றும் - (அவற்றைச்) சொல்வான், (இலக்குமணன்); (எ - று.)

உலகத்தாரிடத்து மிக்கஅன்புடைமையும், உலகத்தவரால் அன்போடு நன்குமதிக்கப்படுதலும், லோககர்த்தாவான திருமாலினது மனைவியாயிருத் தலும், திருமால் அனைத்துலகையும் படைத்தளித்தற்கு அவனது சக்திசொ ரூபமான திருமகள் இன்றியமையாத்துணையாதலும் முதலியன 'உலகமா தா' என்றதற்குக் காரணங்கள். வேள்வி - யாகம்; இங்கே, யாகசாலைக்குத் தானியாகுபெயர். தூய்மை - ஜந்மசுத்தி; அதாவது - ஒருதாயினது கருப் பத்தினின்று தோன்றாமை. சுத்தன், ஜநகன், தத்வம் - வடசொற்கள். தத் துவம் - உண்மை. (௪௩)

44.—(இ - ள்.) வாடிய முகத்தன்-வாட்டமடைந்த முகத்தையுடைய வனும், வெய்ய மானம் வேல் - கொடிய அவமானமாகிய வேலாயுதம், மரு மத்து ஊன்ற - நெஞ்சிற் பதிய, (அதனாலான வருத்தத்தால்), நீடிய உயிர்ப் பன் - பெருமூச்சுவிடுபவனும், தான் முன் நினைத்த காரியத்தின் மேலே ஓடிய மனம் - தான் முதலில் எண்ணின காரியத்தின்மேலே விரைந்துசெல்

னும் மனத்தையுடையவனுமான, காகுத்தன் - ஸ்ரீராமபிரான்,—ஒல்லையின் அழைப்ப வந்து கூடிய தம்பிமாரின் - விரைவாகத் தான் அழைத்தலால் தன் பக்கல் வந்துசேர்ந்த தனது தம்பியர் மூவருள், எனை குறித்து - என்னை நோக்கி, இனைய கூறும் - இத்தன்மையனவான வார்த்தைகளைச் சொல்லு வானன்; (எ - று.)

விமானம் மானம் என முதற்குறைவிகாரப்பட்டு வருதல்போல, இங்கே அவமானம் என்பது மானம் எனக் குறைந்துநின்றது. ("ஈனமாயில் லிருந் தின்றி விளியினும், மானந்தலைவருவ செய்பவோ" என நாலடியாரி லுங் காண்க.) வேல் மார்பில் ஊன்றி அதனைப் பிளந்துவருத்துதல்போல, அவமானம் நெஞ்சிற்பதிந்து அதனை வருத்துதலால், 'மானவேல் மருமத்து ஊன்ற' என்றார். இது, உருவகம். 'தான் முன்னிலைந்த காரியம்' என்றது, சீதையைக் காட்டிலுய்க்கத் துணிந்ததை. காகுத்ஸ்தன் என்ற வடசொல் - ககுத்ஸ்தனென்னும் அரசனது மரபிற் பிறந்தவனென்று காரணப்பொருள் படும்; தத்திதாந்தநாமம். சூரியகுலத்துப் புரஞ்சயனென்ற அரசன் தன் விருப்பத்தின்படி தனக்கு வாகனமாகி எருதுவடிவங்கொண்ட இந்திரனது ககுத் எனப்படுகிற முசுப்பின்மேல் எறி வீற்றிருந்து பகைவரைப் பொருது அழித்ததனால், ககுத்ஸ்தனென்று பெயர்பெற்றான். ஒல்லை - விரைவுகுறிக் கும் இடைச்சொல். முகம், மாநம், மர்மம் - வடசொற்கள். இனைய - இக ரச்சுட்டடியாப்பிறந்தபலவின்பாற்குறிப்பு வினையாலணையும் பெயர்; ன், ஐ - சாரியைகள். (சச)

[இதுவும், அடுத்த கவியும் - இராமன்கட்டளையை இலக்குமணன் அநு வதித்தது.]

45.—(இ - ள்.) உலகத்தார் உள்ளது என்றது - உலகத்தவர் உள்ள தென்று சொன்ன பொருள், உள்ளது ஆம்-(உண்மையில் இல்லாததாயினும்) உள்ளதாய்விடும்; ஒலி நீர் வேலை உலகத்தார் இல்லை என்றது - ஒலிக்கின்ற நீர்மயமான கடல்சூழ்ந்த அவ்வுலகத்திலுள்ளார் இல்லையென்றுசொன்ன பொருள், இல்லை ஆம் - (உண்மையில் உள்ளதாயினும்) இல்லையாய்விடும்; உணரும் காலை - ஆலோசிக்குமிடத்து,—உலகத்தார் உள்ளது என்றது இல்லை என்று உரைக்கும் ஆகின் - உலகத்தவர் உள்ளதென்று சொன்ன பொருளை (ஒருவன் தான்) இல்லையென்று சொல்வானானால், உலகத்துக்கு அவன் பேய் ஆகும் - உலகத்தார்க்கு அவன் பேயாய்விடுவன்; (ஆதலால்), உண்மையால் பயன் ஒன்று இல்லை - உண்மைநிகழ்ச்சியால் யாதொரு பயனு மில்லை.

இது, 28 - ஆம் கவியின் முன் இரண்டடியின் அநுவாதம். இக்கவியின் பின்னிரண்டடி, 27 - ஆம் கவியில் "உண்மையாற் பயனென் உலகுளோர்க்கு ஒத்திடாதொழியின்" என்றதன் அநுவாதம்; இதனை "உலகத்தா ருண் டென்ப தில்லென்பான் வையத்து, அலகையா வைக்கப்படும்" என்ற திருக் குறளோடு ஒப்பிடுக. 'உலகத்துக்கு அவன் பேயாகும்' - அவன் உலகத்தா ரோடு மாறுபட்டவனாய் இழிவையடைவான் என்றபடி. (சரு)

46.—(இ - ள்.) 'சீதையை—, வெய்யோன் - கொடியவனான இராவ ணன், கொடு போய்-கவர்ந்துகொண்டு சென்று, சிறையிடை வைப்ப-(நெடு நாள்) சிறையிலே வைத்திருக்க, காகுத்தன் - இராமன், காதலால் - (அவளி டத்துஉள்ள) மோகத்தால், அவளை மீட்டும் கொண்டு வாழும் - அவளை மறு படி உடன்வைத்துக்கொண்டு (அவளோடுகூடி) வாழ்கிற, வாழ்வின் - வாழ்க் கையைக்காட்டிலும், சாதலே அழகிது - இறத்தலே அழகுடையது,' என்று —,தரணி உள்ளோர் சாற்றுவர் - இவ்வுலகத்திலுள்ளார் சொல்லுகிறார்கள்; ஆதலால்—,சுத்தை என்றே அறிந்து வைத்து அவளை நீத்தோம் - (உண்மை யில்) சுத்தமானவளென்றே அறிந்திருந்தும் அவளை விடத்துணிந்தோம்.

வாழ்வின், இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. சாதலே, ஐ - தேற்றம். அழிகிது என்ற ஒன்றன்பாற் குறிப்புமுற்றில், இ - சாரியை. சுத்தை - சுத்தா என்ற வடசொல் விகாரப்பட்டது. அறிந்துவைத்து என்றத னிறுதியில் உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. சாற்றுவர் என்ற எதிர்காலம் - இயல்புபற்றிவந்த காலவழுவமைதி. வாழும்வாழ்வு என்பதில், மகரவொற்று - மகரக்குறுக்கம்.

'ஓதுவ ரென்ற சொற்கேட் டுளைந்த தென் னுள்ள மந்தோ' என்ற பாடத்துக்கு—ஓதுவர் என்ற சொல் கேட்டு - (இவ்வாறு) சொல்லுகிறார்களென்ற வார்த்தையைக் கேள்விப்பட்டதனால், என் உள்ளம் உளைந்தது - எனது மனம் வருந்தியது; அந்தோ - ஐயோ! என்று பொருள்காண்க.(சகு)

இதுவும், அடுத்த கவியும் குளகம்.

47.—(இ - ள்.) என்று அவன் இயம்ப - என்று அவ்விராமபிரான் சொல்ல,—எல்லோம் - நாங்களெல்லோரும், எதிர் மொழி கொடுக்க அஞ்சி - (அதற்கு) மாறான சொற் சொல்லப் பயந்து, அவண் நின்று நடுங்க - அவ்விடத்திலே நடுங்கிநிற்க,—அந்த நெடுந்தகை - பெருமைக்குணமுடையவனான அவ்விராமன்,—என்னை நோக்கி—,—' துன்றிய மணி தேர் தன்னை பண்ணை சுமந்திரன் சொல்லி - நெருங்கிய மணிகள்கட்டிய தேரைச் சித்தஞ்செய்யும்படி சுமந்திரனுக்குச் சொல்லி, இன்று - இப்பொழுது, இவனோடு - இச்சுமந்திரனுடனே, நீ—, அ எந்திழைதனை தேர் ஏற்றி - தரித்த ஆபரணங்களையுடையவளான அச்சீதையைத் தேரின்மேலேற்றி, (எ- று.)—' நகரும் நாடுங் கடந்துபோய்' என அடுத்த கவியோடு தொடரும்.

எல்லோம் என்பதில், ஓம் - தன்மைப்பன்மைவிகுதி; இதன் முன்னிலை - எல்லீர்; படர்க்கை - எல்லார்; இவற்றில் எல் என்றது - எஞ்சாமைப் பொருள்குறிக்கும் இடைச்சொற்பகுதி யென்று கொள்ளுத லமையும். நெடுந்தகை - பண்புத்தொகை யன்மொழி; இங்கே பெருமைக்குணம் - உலகத்தார் சொல்லும் பழிக்கு அஞ்சுதல். சுமந்திரற் சொல்லி - சுமந்திரனைச் சொல்லி என இரண்டாம்வேற்றுமைத்தொகையாக விரிக்க; "இயல்பின் விகாரம்." (சஎ)

48.—(இ - ள்.) நல் நெறி நகரும் நாடும் கடந்து போய் - நல்லவழியுடைய இவ்வயோத்தியாநகரத்தையும் கோசலதேசத்தி னெல்லையையும் தாண்டிச்சென்று, அடவி நண்ணி - வனஞ் சேர்ந்து,—தன் உயிர்தன்னை விட்டு தட புகழ் கொண்ட ஐயன் இன் உயிர் தோழன் ஆய எழில் கொள் வான்மீகி வைகும் பன்னக சாலையின்பால் - தனது உயிரைவிட்டு (அதனாற்) பெரியகீர்த்தியைப் பெற்ற நமதுதந்தையான தசரதனுக்கு இனிய பிராண சிநேகிதனான பெருமைபெற்ற வான்மீகிமுனிவன்எழுந்தருளியிருக்கிற பர்ணசாலையினருகில், பாவையை விடுதி - சீதையை விட்டிடு,' என்றான் - என்று (இராமன் எனக்குச்) கட்டளையிட்டான்; (எ - று.)

தசரதன் முன்பு கைகேயிக்குத் தான் கொடுத்திருந்த வரத்தைக் கடக்கமாட்டாமல் இராமனை வனத்துக்குச் செலுத்தி, அப்புத்திரசோகத்தால் உயிரைவிட்டுச் சத்தியந்தவறாநிலைநின்றனனென்ற புகழைப் பெற்றன னாதலால், 'தன் னுயிர்தன்னை விட்டுத் தடம்புகழ் கொண்டவையன்' என்றார். அடவி - அடவீ என்ற வடசொல். பர்ணசாலா என்ற வடமொழித்தொடர், பன்னகசாலை யென விகாரப்பட்டது; தழைகளாலமைத்த குடிசை யென்று பொருள்: பர்ணம் - இலை, தழை; இது, கப்பிரத்தியயம்பெற்று, பர்ணகம் என நின்றது. பாவை - சித்திரப்பதுமைபோல் அழகியவள்; கண்மணிப்பாவைபோல் அருமையானவள்: உவமையாகுபெயர். (சஅ)

[இலக்குமணன் சொன்னதைக் கேட்டவளவில் சீதை தளர்ந்து தரையில் விழுதல்.]

49.—(இ - ள்.) என்று அவன் இயம்ப - என்று இராமபிரான் சொல்ல, அண்ணல் ஏவலை மறுக்க அஞ்சி - அப்பெருமானுடைய கட்டளையை மறுத்தற்குப் பயந்து, இன்று உனை கொண்டு போந்தேன் - (அதற்காக) இப்பொழுது உன்னை அழைத்துக்கொண்டுவந்தேன், என்று - என்று சொல்லி, இளை - வருந்திய, இளையோன் - இலக்குமணனுடைய, சொல் ஆம் - வார்த்தையாகிய, கன்றிய கனலினூடு காய்ந்த நாராசம் - எரிகிற நெருப்பிற் காய்ந்த இருப்புச்சலாகை, சீதைதன் துணை செவியில் ஏற - சீதையினது இரண்டுகாதுகளிலும் நுழைந்தமாத்திரத்தில், (அவள்), தளர்ந்து தரணியில் வீழ்ந்தாள் - தளர்ச்சியடைந்து தரையில் விழுந்திட்டாள்; (எ - று.)

இளையிளையோன் - வினைத்தொகை; இளைதல் - வருந்துதல். சொல்லாம் நாராசம் - உருவகம்; அச்சொல் நெஞ்சில் தைத்து மிக வருத்துதலை விளக்கும். கனலினூடு, ஊடு - ஏழனுருபு, இன் - சாரியை. (சக)

[சீதைபட்ட சோகாவஸ்தை.]

50.—(இ - ள்.) (சீதை), அந்த வெம் துயர் பொறுக்க மாட்டாது - அந்தக்கொடியசோகத்தைப் பொறுக்கமாட்டாமல், விழுந்தனள் - கீழ்வீழ்ந்து, புரளும் - புரள்வாள்; எழுந்தனள் - எழுந்து, திரிய வீழும் - மீளவும் விழுவாள்; இரு கையால் வயிற்றை எற்றும் - இரண்டு கைகளாலும் வயிற்றை மோதிக்கொள்வாள்; அருவி கண்ணாள் - மலையருவிபோல இடையறாது நீரைப் பெருக்குகிற கண்களையுடையவளாய், அழுந்திடு துயரம் வெள்ளத்து அழிவு உறும் - ஆழ்ந்த சோகக்கடலிலே அகப்பட்டு நிலைகுலைவாள்; (அது கண்டு), சீதை கழிந்தனள் என்று கடவுளோர்கள் கலங்கினர் - சீதை இறந்திட்டாளென்று எண்ணித் தேவர்கள் கலக்கமடைந்தார்கள்; (எ - று.)

மூர்ச்சையடைந்தன ளென்பதாம். அருவி - உவமையாகுபெயர். (டுo)

[இலக்குமணன் அலறிவிழுதலும், சீதை மூர்ச்சைதெளிந்து புலம்பத் தொடங்குதலும்.]

51.—(இ - ள்.) அன்னவள் அவத்தை கண்டு - அச்சீதையடைந்த வேதனையைப் பார்த்து, இளையவன் - இலக்குமணன், அலறி வீழ்ந்தான் - கதறிக்கொண்டு கீழ்விழுந்தான்;—பின்னையும் பாடு சால பெருக உண்டு ஆதலாலே - இன்னமும் தொழில்கள் மிகப்பல மேன்மேல் உண்டாகவேண்டியிருத்தலாலே, மன்னர் மன்னவன் இராமன் தேவி - அரசர்கட்கு அரசனான இராமபிரானுடைய தருமபத்தினியான சீதை, இன் உயிர் அரிதில் பெற்று - இனிமையானஉயிரை அரிதில் மீளவும்பெற்று, இரு கணும் விழித்து - இரண்டுகண்களையும் திறந்து [மூர்ச்சைதெளிந்து], வாய்விட்டு புலம்பல் உற்றாள் - வாய்விட்டு அழத்தொடங்கினாள்; (எ - று.)—'ஆங்கு' என்பது, இரண்டிடத்தும் அசையாம்.

அவத்தை - அவஸ்தா என்ற வடசொல்லின் விகாரம். இரண்டாமடி, இன்னும்சிலகாலம் ஜீவித்திருக்கவேண்டிய விதிவசத்தால் என்றபடி. பாடு - பெருமை யென்றலு மொன்று. சாலப்பெருக - ஒருபொருட் பன்மொழி.

[இதுமுதல் ஆறுகவிகள் சீதை புலம்பல்.]

52.—(இ - ள்.) அன்னேயோ - என்தாயே! ஐயாவோ - என்தந்தையே! ஆர் உயிர் தோழிமீர்காள் - அருமையான உயிர்போன்ற தோழியர்களே! தன் நேர் இலாத வென்றி தாசரதியார் செய்த - தனக்குத்தானேயன்றி வேறுஒப்பில்லாத இராமபிரான் (என்விஷயமாகச்) செய்த, இன்னது இ செயலை - கொடிய இந்தச்செய்கையை, கேட்ட போது - (நீங்கள்) கேள்விப்படும்போது, ஏன் படுதிர் - என்னநிலைமையை யடைவீர்கள்? என்னே -

என்ன! இ உலகத்தில் யானோ இங்கு இவை படுவேன் - இந்தலோகத்தில் நானோ இவ்விடத்து இத்துன்பங்களை யடையக்கடவேன்! (எ - று.)

தந்தை - ஜநகமகாராஜன். தாய் - அவன்மனையாள். அன்னை - அன்னே எனப் பொதுப்பெயரின் ஈற்றைகாரம் விளியில் எகாரமாகத் திரிந்தது. ஐயா - ஐயன் என்ற னகரவீற்றுப்பெயர் ஈறுகெட்டு ஈற்றயல்நீண்டது. இரண்டிலும் ஓகாரம்மிக்கது, புலம்பல்விளி யாதலின்; "புலம்பி னேவு மாகும்" என்றார் நன்னூலார். அருமை + உயிர் = ஆருயிர்: "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திர விதி. தோழிமீர்காள் - தோழிமார்கள் என்பது, இரண்டுவிகுதிகளின் ஈற்றயல்திரிந்து விளியேற்றது. வென்றி - வெல்லுதல்: தொழிற்பெயர்; வெல் - பகுதி, றி - விகுதி, லகரம் னகரமானது - சந்தி. தாசரதி - தசரதனுடைய குமாரன்; வடமொழித் தத்திதாந்தநாமம்; ஆர் என்ற பலர்பால்விகுதி - உயர்வுபற்றிவந்தது. இன்றாத - இனிமை என்பதன் எதிர்மறையான இன்றாமை என்ற பண்பினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம், த் - எழுத்துப்பேறு. போது - பொழுது என்பதன் மரூஉ. படுதிர் என்பதில், 'இர்' விகுதியே எதிர்காலங் காட்டும்; த் - எழுத்துப்பேறு. என்னே - இரக்கச்சொல். யானோஎன்றவிடத்து, ஓகாரம் - வினவகையால், இங்குப் பிரிநிலை உயர்வுசிறப்பு எதிர்மறை என்ற பொருள்களை யுணர்த்துகின்றது. (டுஉ)

53.—(இ - ள்.) பை ஆர் வெம் பணத்து உலகில் பழியாலே பழி மறைத்து - படம்பொருந்திய உக்கிரமான ஆதிசேஷனாற் சுமக்கப்பட்ட இவ்வுலகத்தில் (அனைவரும்) பழிக்கத்தக்க தொழிலைச் செய்தலாலே லோகாபவாதத்தைப் போக்கி, நெய்யாலே நெருப்பு அவிக்க - நெய்யைக்கொண்டு நெருப்பைத்தணித்தலை, நீள் நிலத்தில் கண்டு அறியேன் - நீண்டஇவ்வுலகத்தில் (இதுவரையில் எங்கும்) பார்த்துஅறியேன்; ஆர் வெம் சிலை கை தரித்த காகுத்தனிடை கண்டேன் - பொருந்திய உக்கிரமான வில்லைக் கையில் ஏந்திய இராமபிரானிடத்திலே (அதனைப்) பார்த்தேன்; இ உரை தம் செவி உற என் மாமிமார் உய்யார் - இந்தவார்த்தை [இந்தவிஷயம்] தமது காதிற் பட்டால் எனதுமாமியர் உயிர்வாழார்; (எ - று.)

தனக்குப்பழிவந்ததென்று அதனைப் போக்கும்பொருட்டுப் பிறிதொரு பழிக்கத்தக்க செயலைத் தான்செய்தல் நெருப்புப்பற்றியதென்று அதனை அவிக்கும்பொருட்டு அதன்மேல் நெய்யைச் சொரிதல்போலு மென்ற உபமேய உபமானங்களை ஒற்றுமைப்படுத்தி 'பழியாலே பழிமறைத்து, நெய்யாலே நெருப்பவிக்க' எனப்பட்டது; இங்ஙனம் உபமானஉபமேயங்களுக்கு ஐக்கியத்தைச் சொல்லுதல், காட்சியணியின்பாற்படும். இங்ஙனம் செய்தல் பெரும்பழிக்கு இடமாமென்பது, இதன் கருத்து. அவிக்க என்ற செயவெனெச்சம் - தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு 'கண்டறியேன்' என்ற வினைமுற்றுக்குச் செயப்படுபொருளாய் நின்றது. ("அறஞ்செயவிரும்பு" என்பதிலும் இங்ஙனம் காண்க.) பணம்என்பது - பாம்பின்படத்திற்கேயன்றிப் பாம்புக்கும் பெயராதலை "பணமென்ப தரவின்பையும் பாம்பும் பொற்காசும் முப்பேர்" என்ற நிகண்டினாலும் அறிக. மாமிமார் - கௌசலை முதலியோர். (டுரு)

54.—(இ - ள்.) கல் நெஞ்சர் ஆய் - (என்னசெய்தாலும் மென்மையடையாத) கற்போன்ற கடினமான மனத்தையுடையவராய், என்னை காட்டில் விட சொன்னவரோ - என்னை வனத்தில் விட்டிடும்படி கட்டளையிட்ட இராமபிரானோ, வல் நெஞ்சர் ஆய் அதனுக்கு இசைந்து விட வந்தவரோ - கடினமான மனத்தையுடையவராய் அக்கட்டளைக்குடன்பட்டு என்னை வனத்தில் விட்டிடுதற்கு வந்த லக்ஷ்மணரோ; நல் நஞ்சம் விழிக்கு அணிந்த

நங்கைமார் நகை செய்ய - நல்லவிஷத்தை [கரிய மையைக்] கண்களி லணிந்த மகளிர் பரிகாசஞ்செய்து சிரிக்குமாறு, இன்னம் சாகாது இருந்த - இன்னமும் இறவாமலிருந்த, யானோ - நானோ, நெஞ்சு வலியார் ஆர் - (எங்கள்மூவரில்) வன்மனமுடையவர் எவர்? (எ - று.)

மூவரும் வன்மனமுடையவரே என்பது கருத்து. நஞ்சு - அதுபோலக் கருநிறமான விஷத்துக்கு உவமையாகுபெயர்; மகளிர்கண்களில் மைதீட் டிச்செய்யும் அலங்காரம் ஆடவரைக் காதல்நோயால் மரணவேதனைப்படுத் துதல்பற்றி, 'நஞ்சம்விழிக்கணிந்த நங்கைமார்' என்றதாகவும் கொள்ள லாம். இனி, விஷத்தின்கொடுமையைக் கண்பார்வையிலே கொண்ட என் றும், விஷத்தின்கருமையைக் கண்விழியிலே கொண்ட என்றும் பொருள் கொள்ளவும் இடமுண்டு: "மாலுறப்ப மகிழ்செய்வ மாண்பி னஞ்சு மமிரு தமுமே, போல் குணத்த பொருகயற்கண்" என்ற சிந்தாமணியும், "அமிழ் தினின் விளர்த்து உள் நஞ்சினிற் கருகி" என்ற நைடதமும், இங்குக் கரு தத்தக்கவை. தீக்குணமுடைய நஞ்சை 'நல்நஞ்சு' என்றது, எதிர்மறையி லக்கணை; "நல்லபாம்பு" என்றாற்போல. கொடுமையிற்சிறந்த நஞ்சு எனி னுமாம். நஞ்சம், அம் - சாரியை. விழிக்கு - உருபுமயக்கம். நங்கை என்பதன் ஆண்பால் - நம்பி. நகை - நகைத்தல்; முதனிலைத்தொழிற்பெ யர். இங்கே சிரிப்பு, இகழ்ச்சி பற்றியது. (ருச)

55.—(இ - ள்.) பண் பிறந்த சொல் மடவார் - இசையினினிமை தோன்றுஞ் சொற்களையுடைய மகளிர், என்னை—, பழித்து நகைப்பர் களோ - நிந்தித்துப் பரிகசிப்பார்களோ! (அல்லது), எண் பிறந்த வல் நெஞ் சன் இராகவன் என்று இயம்புவரோ - வலிமைபொருந்திய கடினசித்தமு டையவன் இராமன்என்று சொல்லுவார்களோ! மண் பிறந்த பின்பு இறந்த- உலகத்திற்பிறந்த பிராணிவர்க்கங்கள்யாவும் பின்பு இறந்தேயொழிகின்றன; (ஆயினும்), மறி கடல் சூழ் வையகத்தில் - அலைமடங்குகிற கடலினாற் சூழப் பட்ட இவ்வுலகத்தில், பெண் பிறந்தார் யான் பட்ட பெரு துயரம் பட் டார் ஆர்-பெண்பாலாகப்பிறந்தவர்களுள் யான்அடைந்த பெரியஇவ்வகைத் துன்பத்தை அனுபவித்தவர் யாருண்டு? [எவருமில்லை என்றபடி]; (எ - று.)

'பண்பிறந்தசொல்' என்றவிடத்து 'பிறந்த' என்பதை உவமவுருபாக வுங் கொள்ளலாம்; சங்கீதம்போல் இனியசொல் லென்க. மடவார் - மட மையையுடையவர்; மடமை - பெண்களுக்குஉரியதான பேதைமை என்னுங் குணம்: அதாவது - பலவுமறிந்தும் ஒன்றுமறியாதுபோ லிருக்குந் தன்மை. எண்-எளிமையுமாம். பிறந்த - பெயர். இறந்த - முற்று. வையகம் - பொருள் களை வைக்கு மிடம். (ருரு)

56.—(இ - ள்.) கனி மனத்து காகுத்தன் - கனிந்தமனத்தையுடைய ஸ்ரீராமன், கடல் உலகில் பழிக்கு அஞ்சி - கடல்சூழ்ந்த உலகத்தில் (சனங் கள்சொல்லும்) பழிக்குப் பயந்து, தனி ஒருத்தி யான் கதற தனி காட்டில் விடுவித்தான் - அவனையன்றி வேறுகதியில்லாதவளான யான் தனியேகத றும்படி (என்னை) ஒப்பற்ற [பெரிய கொடிய] வனத்திலே (தம்பியைக் கொண்டு) விடச்செய்தான்; பனி அகற்றும் ஆதித்தன் பயந்து எடுத்து பழிப்பு அற்ற மனு குலத்தில் பிறந்தார்கட்கு - பனியை யொழிக்கிற சூரிய னாற் பெற்று வளர்க்கப்பட்டவனும் பழிக்கத்தக்க குணஞ்செயல் இல்லாத வனுமான மநுவினது குலத்திலே பிறந்தவர்கட்கு, இவையோ தான் மனு நெறி - இச்செயல்கள்தாமோ மநுதருமசாஸ்திரத்திற் கூறப்பட்ட வழியில் நடத்தலாம்! (எ - று.)

கனிமனம் - வினைத்தொகை; கனிதல் - இரங்கல், இளகல், நெகிழ்தல், உருகல், கரைதல். இங்கே 'கனிமனத்துக் காகுத்தன்' என்றது, பிற

குறிப்பு. இவை - விலிவித்தலும், விதேதலும். இவையோதான் - பன்மையொருமை மயக்கம். ஆதித்யன் என்ற வடசொல் - (காசியப்முனிவரது மனைவியருள்) அதிதியினது மகன் என்று பொருள்படும்; தத்திதாந்தநாமம். விவஸ்வான் என்னும் ஒரு பெயருள்ள சூரியனது குமாரனாகிய மநு அக்காரணத்தால் வைவஸ்வதமநு என்று கூறப்படுவன்; இவன்தான் ரகுவம்சத்திற்கு ஆதிபுருஷன். மநுகுலம் - வடமொழித்தொடர்: மநுவினாற் செய்யப்பட்டநூலை மநுவென்றல், கருத்தாவாகுபெயர். (ருசு)

57.—(இ - ள்.) கைகேசி மனம் திரிய கற்பித்த கூனியை போல் - கைகேயியின் மனம் மாறிவிடும்படி சூழ்ச்சிசெய்த கூனியென்பவள்போல, மை ஆர் கண் மடவாரோ மைந்தரோ யாரோ - மையிட்ட கண்களையுடைய மகளிரோ ஆடவரோ யாரோ, மண் உலகில் - இவ்வுலகத்தில், இப்பொழுது —, என் காதலனை - என்கணவனை, இ காரியத்தை செய்வாய் என்று சிந்தை உற கற்பித்தார் - மனைவியை விடுதலாகிய இச்செயலைச் செய்என்று மனத்திற் பதியும்படி போதித்துவிட்டார்கள்; ஐயோ—! (எ - று.)

கூனி - கூன்உடையவள்; இ - பெண்பால்விகுதி. இவள், கைகேயியின் வேலைக்காரி; இவளது இயற்பெயர், மந்தரை. ஸ்ரீராமனிடத்தில் நெடுநாளாகக் கறுக்கொண்டிருந்த இவள், அவ்விராமனுக்கு நாளைமுடிசூட்டுவதென்று தசரதசக்கரவர்த்திநிச்சயித்ததை அறிந்தவுடனே, தனது தலைவியான கைகேயியினிடஞ் சென்று, 'கோசலைபுதல்வனான இராமன் அரசனாய்விட்டால் நீயும் உன்மகனும் உங்களைச்சேர்ந்தவர்களும் மிக்கதுன்பமடைவீர்கள்' என்று பலவாறு தந்திரமாகப் போதித்து, அக்கைகேயி இராமனிடத்தில் இயல்பாகக்கொண்டிருந்த பேரன்பை முற்றும் மாற்றி அவள்மனத்தைக்கெடுத்து, அவளைக்கொண்டு இராமனைவனம்புகுத்தவும் பரதனுக்கு முடிசூட்டவும் வேண்டுமென்று தசரதனிடம் வரம்வேண்டச் செய்து, இராம பட்டாபிஷேகத்தைத் தவிர்த்து அவனைக் காட்டிற்கு ஓட்டிய விவரம், அயோத்தியா காண்டத்து மந்தரைசூழ்ச்சிப்படலத்தில் விளங்கக் கூறப்பட்டது.

ஐயோ - இரக்கக்குறிப்பிடைச்சொல். கற்பித்த என்பதில் பகுதியான கற்பி என்பது - கல் என்பதன் பிறவினை, பி - விகுதி; கல்பம் என்னும் வடசொல்லி னடியாகப் பிறந்த தென்றலு மொன்று. (ருஎ)

[இங்ஙனம் பலசொல்லிச் சீதை கதறுதல்.]

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

58.—(இ - ள்.) என்று இனைய பல பன்னி - என்று இத்தன்மையனவான பலவார்த்தைகளை மேன்மேற் சொல்லி, இரு கண் நீர் நதி பெருக - இரண்டு கண்களினின்றும் நீர் ஆறாய்ப் பெருக, குன்றுகளும் மரங்களும் அ கொடு மிருகங்களும் குலைந்து நின்று உருக - மலைகளும் மரங்களும் அங்குள்ள கொடிய மிருகங்களும் கலங்கிநின்று இரங்கும்படியும், வனம் தெய்வம் நெஞ்சு அழிந்து கண் பனிப்ப - வனதேவதை மனமுருகிக் கண்ணீர் சொரியும்படியும், கன்றிய நெஞ்சு உடை சீதை கதறுகின்ற அ காலை - தவித்த மனத்தையுடைய சீதை கதறுகின்ற அப்பொழுது, (எ - று.)—'இளையவனும் உரைக்கும்' என அடுத்தகவியில் முடியும்.

சீதையின் சோகத்தை யுணர்ந்து அசேதனங்களும் பகுத்தறிவில்லாதனவும் தேவஜாதிகளும் மனம் இரங்கின என்று அதன்மிகுதியை விளக்கியவாறு. வனதெய்வம் - காடுறை தெய்வம். ம்ருகம் - வடசொல். (ருஅ)

[இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: சீதைக்கு இலக்குமணன் தேறுதல் கூறுதல்.]

59.—(இ - ள்.) இளையவனும் - இலக்குமணனும், இடர் கடலை ஒரு வண்ணம் கடந்து ஏறி - (தானடைந்த) சோகசாகரத்தை ஒருவாறு கடந்து கரை

யேறி [அருவாற்றால் தெளிந்தெழுந்து என்றபடி],—உளைவு உறு சிந்தையினுளுக்கு - வருத்தம்மிக்க மனத்தையுடைய சீதைக்கு, உத்தமி கேள் என உரைக்கும் - 'உத்தமியே! (யான் சொல்வதைக்) கேள்' என்று சொல்லி, (பின் வருமாறு சொல்லலானான்):—வல் வினை விளைவுறு பயனை - கொடிய கருமத்தால் விளைகிற பயனை, வெலற்கு - வெல்லுதல், விண்ணவர்க்கும் அரிது - தேவர்கட்கும் இயலாததாம்; (அங்ஙன மிருக்க), வளை பயில் கடல் சூழ் உலகில் மானுடர் - சங்குகள் உலாவப்பெற்ற கடலினாற் சூழப்பட்ட நிலவுலகத்திலுள்ள மனிதர்களில், விலக்குகிற்பார் ஆர் - (அவ்வினைப்பயனை) வெல்ல வல்லவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

முதலடியிலுள்ள உம்மை - (கீழ் ஐம்பத்தோராங்கவியில்) சீதை அரிதில் மூர்ச்சை தெளிந்தெழுந்ததை நோக்குதலால், இறந்தது தழுவிய எச்சப்பொருளது. 'இடர்க்கடலைக் கடந்தேறி' என்றது, உருவகம். உத்தமீ என்ற வடசொல் ஈயீறு இகரமாயிற்று. வெலற்கு என்பதில் நான்கனுருபு கருத்தாப்பொருளில் வந்தது; (பெருந்தேவனார் பாரதத்தில் "வெல்லப் போர் செய்வகைக்கு வெண்டலையி லூணுகந்த, செல்வற்குந் தான் அரிதே" என்ற விடத்து 'வகைக்கு' என்பதிற் போல.) இனி, 'பயனை' என்பதிலுள்ள ஐகாரத்தைச் சாரியையாகக்கொண்டு அதனை எழுவாய் எனினும் அமையும். அரிதால் என்பதில், ஆல் - ஈற்றசை. (செய்யுளினிறுதியில் வருவதேயன்றி அடியினிறுதியிலும் வாக்கியத்தினிறுதியிலும் வருகிற இடைச்சொல்லும் பொருள்தராதாயின் ஈற்றசையெனப்படும்.) வளை - உட்சுழிந்துள்ளது. மானுடர் - மாநுஷர் என்ற வடசொல்லின் விகாரம்; காசியபமுனிவரது மனைவியருள் மநுஎன்பவளிடம் தோன்றியவர் என்று பொருள்படும். விலக்குகிற்பார் என்றதில், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை.

பின்னிரண்டடிகளில் ஒருபொருளைச் சொல்லி அதுகொண்டு கைமுதிக நியாயமென்னும் தண்டாபூபிகா நியாயத்தால் மற்றொருபொருளைச் சாதிப்பது, தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணி; வடநூலார் காவ்யார்த்தாபத்தியலங்கார மென்பர். (கைமுதிகநியாயமாவது—"மங்கைமுகம் திங்களையே வாட்டிற்று அறைகுவதென், பங்கயமென் போது படும் பாடு" என்றாற்போல 'சொல்ல வேண்டுவ தென்ன?' என்னும் வாய்பாடு அமையக்கூறுதல்; இதுவே தண்டாபூபிகாநியாய மெனப்படுவதும்: தண்டம் அபகரிக்கப்பட்டமை கூறுதலால், அதிற்கட்டிய அப்பம்முதலிய உணவு அபகரிக்கப்பட்டமை தானே விளங்கவைத்தலெனப் பொருள்காண்க. தண்டம் - தடி. அபூபம் - அப்பம் முதலிய பணியாரம்.) (ருக)

60.—(இ - ள்.) உலகுக்கு நாயகன் ஆய் - உலகமுழுவதுக்கும் ஒரு தலைவனாய், ஓர் ஆஜ்ஞனை நடத்தி - ஒப்பற்ற (தனது) ஆஜ்ஞாசக்கரமொன்றை (எங்கும் தடையறச்) செலுத்தி, மலை ஒக்கும் மத களிற்றின் - மலைபோன்ற [மிகப்பெரிய] மதயானையின்மீது (ஏறி), மதி குடைக்கீழ் - சந்திரமண்டலம்போன்ற ஒற்றைவெண்கொற்றக்குடையின்கீழ், வாழ்ந்த - அரசுவீற்றிருந்துசிறப்புற்ற, நளன் - நளசக்கரவர்த்தி,—மலை ஒத்த வினை பயனால் - மலைபோன்ற [மிகப்பெரிய] கருமத்தின் பயனால், நிலை கெட்டு - தனது மேலானநிலைமை தொலைந்து, நேரிழையை நெடு கானத்து இடை விட்டு - தன்மனையாளைப் பெரிய காட்டின் நடுவிலே கைவிட்டு, மடையன் ஆய் - (தான்) சமையற்காரனாகி, வருந்தினனே - வருத்தமுற்றானன்றோ?

விதியின்பயன் விலக்குதற்குஅரிது என்பதற்குப் பூர்வசரித்திரத்தை நிதரிசனமாக எடுத்துக்காட்டுபவராய், இளையபெருமாள், இருதயுகத்து அரசனான நளசக்கரவர்த்தியின் வரலாற்றைப் பிராட்டிக்குக் கூறினார்; அடுத்த பாடலில் அரிச்சந்திரன்சரிதையைக்காட்டுகிறார். மகாபாரதத்தில் அரசிழந்

துவருந்திய பாண்டவர்க்குத் தேறுதல்கூறுகிற வியாசபகவான் "நீவிரே யல்லிர் முன்னாள் நிலமுழு தாண்ட நேமி, நாவிரி கீர்த்தி யாளன் நளனெனு நாமவேந்தன், காவிரி யென்னத் தப்பாக் கருணையான் சூதில் தோற்றுத், தீவிரி கானஞ் சென்ற காதை நுஞ் செவிப் படாதோ" என்று நளசரித்திரத்தைத் திருஷ்டாந்தமெடுத்துக்காட்டுதலுங் காண்க. நாலடியாரில் "யானையெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச், சேனைத் தலைவராய்ச் சென்றோரும் - ஏனை, வினையுலப்ப வேறாகி வீழ்வர் தாங்கொண்ட, மனையாளை மாற்றார் கொள" என்பதற்கு நளன் இலக்காயின னென்க. உலகுக்கு நாயகனாய் ஓர் ஆழிதனை நடத்தி - நிலவுலகம்முழுவதுக்கும் ஏகசக்ராதிபதியாய்த் தனிச்செங்கோல்செலுத்தி. ஆஜ்ஞையைச் சக்கரமென்றும் குடையென்றும் கோலென்றும் கூறுதல், மரபு. யானைக்கு மலை யுவமை - பருத்தோங்கிய வடிவிற்கும், கம்பீரமான தோற்றத்துக்கும், மிக்க வலிமைக்கும், மத வருவிசொரிதற்கு மென்க. வட்டமானவடிவும், வெண்மைநிறமும், இனிய ஒளியும், குளிர்ச்சியும் பற்றி, குடைக்குச் சந்திரமண்டலம் உவமை. நிலைகெட்டு - தனது மேன்மைநிலைக்கு மாறாக மதிமயங்கி அமைச்சர்சொல்லையுங் கேளாமற் சூதாடி அரசிழந்து. விலக்கமுடியாத தடையாய்ச் சலியாது நிற்கும் பெரிய விதி யென்பார், 'மலையொத்த வினைப் பயன்' என்றார்.

ஆழி - வட்டவடிவாயுள்ளது. மலை - (காண்பவரால்) அஞ்சப்படுவதெனப் பொருள்படுங் காரணக்குறி; மலைதல் - அஞ்சுதல். மத களிறு - நிலைமொழி வடமொழி யாதலின், வருமொழிமுதல்வலி இயல்பாயிற்று; "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்" என்பது விதி. களிறு - யானையின் ஆண்மைப்பெயர்; இதன் பெண்பால் - பிடி. களிறு - மதக்களிப்புடையது: று - பெயர்விகுதி. நேரிழை - தகுதியான ஆபரணங்களை யணிந்தவள்; பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. மடையன் - சமையற்றொழிலையுடையவன்; மடை - பகுதி. 'மடையனாய்' என்பது, அறிவற்ற பேதையா யென்னும் பொருளையும் உணர்த்தும்; அப்பொழுது, மடமை - பகுதி. வினை - முற்பிறப்பிற்செய்த கருமம். ஈற்றுஏகாரம்- இரக்கம்.

சந்திரகுலத்து வீரசேனனென்னும் அரசனது குமாரனாய்த் தோன்றிப் பரதகண்டத்திலே நிஷததேசத்தில் மாவிந்தநகரத்தில் அரசாண்ட நளசக்கரவர்த்தியும், சூரியகுலத்துத் தோன்றி விதர்ப்பதேசத்திற் குண்டினபுரியில் அரசாண்ட வீமராசனது மகளான தமயந்தியும் ஒரு தேவலோகத்து அன்னப்பறவையினால் ஒருவர் ஒருவருடைய அழகுமுதலிய சிறப்புக்களையறிந்து ஒருவர்மேல் ஒருவர் அன்புகொண்டிருந்தனர். அப்பொழுது, தமயந்திக்குத் தந்தை சுயம்வரம்ஏற்படுத்த, அதற்கு வந்த இந்திரன்முதலிய தேவர்நால்வரும் நளனையே தமயந்தியினிடம் தூதனுப்பிப்பார்த்தும், அவள் தங்களில் ஒருவனையும் மணஞ்செய்யஉடன்படாமையால், பின்பு தம்விருப்பத்தின்படி தூதுசென்றதற்காக நளனுக்குப் பல வரங்களை மகிழ்ச்சியோடு கொடுத்து அந்த நளனது வடிவத்தையே தாமுங்கொண்டு சுயம்வரமண்டபத்துக்கு வந்தனர். அங்குவந்ததமயந்தி, சிலகுறிப்புக்களால் உண்மையான நளன் இன்னானென்று அறிந்து அவனுக்கே மணமாலைசூட்டினாள். பின்பு இந்திரன்முதலியோர் வருத்தத்தோடு தம்உலகைநோக்கிச்செல்லும் வழியிடையே, சுயம்வரத்திற்சென்று வந்துகொண்டிருந்த கலிபுருஷன், முன்னமே சுயம்வரம் நடந்துவிட்டதையும், அதில் அவள் இந்திரன்முதலிய தேவர்களையும்மதியாமல் நளனைக்கணவனாகக்கொண்டதையும் அவ்விந்திரன் முதலியோர் சொல்ல அறிந்து வருத்தமும் கோபமும் கொண்டு, தனது இயற்கையான தீக்குணத்தாலும், நளன் தமயந்தி இவர்களது விதிவசத்தாலும்,

தான் அவர்கட்கு மிக்கவருத்தத்தைச்செய்து அவர்களைப் பிரித்து அலையவைப்பதாகச் சபதம்கூறினான். கலியாணம்நடந்தபின்பு தன்நகரத்துக்குத்திரும்பிவந்த நளன் தமயந்தியுடன் சிலகாலம் சுகமாக வாழ்ந்திருந்தான். அவர்கட்கு இந்திரசேனனென்னுங் குமாரனும் இந்திரசேனையென்னுங் குமாரியுந் தோன்றினர். பின்பு சமயம்பார்த்து நளனைத்தொடர்ந்த கலிபுருஷன் நளனது சிற்றப்பன்மகனும் சிற்றரசனுமான புஷ்கரராசனைக்கொண்டு நளனுடன் சூதாடுவித்தான். அவ்வாட்டத்தில் எல்லாப்பொருளையுமிழந்த நளன், தனது மக்களைக் குண்டினபுரிக்கு அனுப்பிவிட்டு, மனைவியுடனே காடுசென்று அங்கு ஒரு பாழ்மண்டபத்திற் படுத்துத் தூங்குகையில் மனையாளை ஒன்றியாக விட்டுச் சென்றான். விழித்தெழுந்த தமயந்தி வெருசிரமப்பட்டுச் சேதிநகரஞ்சேர்ந்து அங்குச்சிலகாலந்தங்கிப் பின்பு தந்தையினிடத்தையடைந்தாள். இதுநிற்க: தனியேசென்ற நளன் தன்னைநோக்கி அபயம்வேண்டிய கார்க்கோடகனென்னும் பாம்பைக் காட்டுத்தீயினின்று எடுத்து வெளியேவிட்டுப் பிழைப்பிக்க, அது உடனே அவனைக் கடித்தது. அதனால் இறவாமல் உருவம்மாறிய நளன், அவ்வுருவை வேண்டும்போது மாற்றி நிஜவடிவம்பெறுமாறு தரித்துக்கொள்ளுதற்கு உரிய ஆடையை அந்நாகம் தரப் பெற்று, வாகுகனென்னும் பேர்பூண்டு சென்று அயோத்தியரசனான ருதுபர்ணனுக்குத் தேர்ப்பாகனாய் அமர்ந்தான். குண்டினபுரத்தில் தந்தையகத்திலேயிருந்த தமயந்தி தன்கணவனைநாடியடைதற்குச் சிலஉபாயஞ்செய்பவளாய் ஒருபுரோகிதனைக்கொண்டு நளன் ருதுபர்ணனிடமிருக்கிற செய்தியைக் குறிப்பாகஅறிந்து 'தமயந்திக்கு நாளை இரண்டாவது சுயம்வரம்' என்று ருதுபர்ணனுக்கு அப்புரோகிதனைக்கொண்டே தெரிவிக்க, அதுகேட்டு ஆசைகொண்ட ருதுபர்ணன் வெகுவேகமாக வாகுகன் தேர்செலுத்தக் குண்டினபுரிக்கு வந்துசேர்ந்தனன். அங்குத் தேர்க்குதிரையை இளைப்பாறவிட்டுச் சமையல்செய்துகொண்டிருந்த வாகுகனைத் தமயந்தி தனது பரிசனங்களையும் மக்களையுங் கொண்டு பலவாறு சோதித்து நளனென்றே தெரிந்துகொண்டு தந்தையினிடந்தெரிவித்து அவன்சொற்படி உண்மைவடிவுகொண்ட தன்கணவனைச் சேர்ந்தனள். அப்பால் நளன் சென்று புட்கரனோடு மறுசூதாடி வென்று நாடுநகரெல்லாம் பெற்று முன்போல இன்புற்று வாழ்ந்தன னென்ன வரலாறு உணர்க. (௬0)

61.—(இ - ள்.) தன் நேர் இலாத - தனக்கு உவமையற்றவனான, அரிச்சந்திரன் - அரிச்சந்திரனென்னுஞ் சக்கரவர்த்தி,—முன்னே செய் விதியாலே - முற்பிறப்பிற் செய்த கருமத்தினால், தன் மைந்தனையும் - தனது புத்திரனையும், மின் நேர் இலாத இடை மெல்லியலையும் - மின்னலும் ஒப்பாகமாட்டாத [மிகநுண்ணிதாய்விளங்குகிற] இடையையுடைய மெல்லிய தன்மையுடையளான தன்மனைவியையும், விட்டு—, முடை பறையர்க்கு ஆள் ஆகி - புலால்நாற்றத்தையுடைய சண்டாளனுக்கு அடிமையாய், தான்—, இடுகாடு காத்து - மயானங் காவல்செய்து, நிலை இழிந்தான் - தனது மேன்மைநிலைமையினின்று கீழ்மையுற்றான்: என்னே - (விதியின்கொடுமை) எத்தன்மையது! (எ - று.)

அரிச்சந்திரனும், நளனும் - ஆறு சக்கரவர்த்திகளிற் சேர்ந்தவர்; [மற்றையோர் - கார்த்தவீரியார்ச்சுனன், புருகுற்சன், புரூரவன், முசுகுந்தன் என்பர். இவர்கள், தாம் மற்றொருவர்கீழ்ப்படியாமல் எல்லோரையும் தம் கீழ்ப்படுத்திப் பூமிமுழுதும்ஆண்டவர்.] நளன் - முதலெழுவள்ளல்களில் ஒருவன்; [மற்றையோர் - குமுணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நிருதி என்பர்.] அரிச்சந்திரன் - இடையெழுவள்ளல்களில்ஒருவன்; [மற்றையோர் - அக்குரன், அந்திமன், கர்ணன், சந்திமான், சிசுபாலன், தந்தவக

திரன் என்பர்.] இவர்கள் - வரையாதுகொடுப்பவர், அரிச்சந்திரனென்பது - ஹரிஸ்சந்த்ர என்ற வடசொல்லின் விகாரம். ஹரிஸ்சந்த்ர என்பது - ஹரி சந்த்ர என்ற இரண்டு சொற்கள் உம்மைத்தொகைநிலைத்தொடராய்க் கூடி வழங்குவதொரு தொடர்மொழி. (பிரதாபத்தால்) சூரியனையும், (கீர்த்தியால்) சந்திரனையும் ஒப்பவ னென்பது பொருள். (காத்தல்தொழிலால்) விஷ்ணு வையும், (மகிழ்விக்குந்தன்மையால்) சந்திரனையும் போன்றவ னென்றும் பொருள்கொள்ளலாம். (ஹரி - சூர்யன், விஷ்ணு.) இனி, இப்பெயர்க்கு - (தனது சத்தியத்தால்) இந்திரனைச் சந்தோஷப்படுத்துபவ னென்றும் பொருள்கொள்ளலாம்; (ஹரி - இந்திரன்; சந்த்ரன் - மகிழ்விப்பவன்.) இது, வடமொழியிலக்கணவிதியால், *ஹரிஸ்சந்த்ர என இடையில் ஸகரமெய் தோன்றப்பெற்றது. இதனை ஹரித் சந்த்ர எனப் பிரித்து, (பத்துத்) திக்குக்களையும் (தன்புகழாகிய நிலவினால்) சந்திரன்போல விளக்குபவ னென்று பொருள் கொள்ளலா மெனின், அப்பொழுது அது வடமொழியில் ஹரிச்சந்த்ர எனப் புணருமே யன்றி ஹரிஸ்சந்த்ர எனப் புணரா தாதலாலும், இச்சொல்லிற்காக ஏற்பட்டிருக்கிற வடநூல்விதிக்கு மாறுபடுதலாலும், அது பொருந்தா தென அறிக. அரிச்சந்திரன் - சூரியகுலத்தில்தோன்றிய திரிசங்குமகாராசனது குமாரன்; கோசலதேசத்தில் அயோத்தியாபுரியில் அரசாண்டவன்; சத்தியமே ஜயமென்ற விரதத்தை விடாது கைக்கொண்ட துணிவுடையவன். மைந்தன் - ரோகிதாசுவன்: லோகிதாசிய னென்றும், தேவதாச னென்றும் கூறுவர். மனைவி - சந்திரமதி. பறையன் - வீரவாகு.

மெல்லியல் - பண்புத்தொகையன்மொழி. பறையன் - பறையடிக்குஞ் சாதியான்; பறை - ஒருவாச்சியம். இடுகாடு - உயிர்நீத்தவுடலைக் கொண்டு போய்இடுதற்கிடமான காடு; வினைத்தொகை. நிலை யிழிந்தான் - ஐந்தாம் வேற்றுமைத்தொகை. 'என்னே' என்றது, இரக்கமுணர்த்தும்.

சுவர்க்கலோகத்தில் தேவேந்திரன் ஒருநாள் தனது சபையில் வந்த முனிவர்களைநோக்கி 'பூலோகத்தரசர்களில் சத்தியமுதலியவற்றிற்சிறந்தவன் யார்?' என்று கேட்க, வசிட்டமுனிவர் 'அரிச்சந்திரன்' என்று சொல்ல, அவரிடத்துப்பழம்பகைமையுள்ள விசுவாமித்திரர் அதனை மறுத்து 'அரிச்சந்திரன் அயோக்கியன்' என்றுசொல்ல, இருவரும் மாறுபட்டு, 'அரிச்சந்திரன் சத்தியமுதலியவற்றில் தவறின் நான் தவஞ்செய்தலைவிட்டுத் தலையோட்டிற் கள்ளையேந்திக்கொண்டு தெற்கேசெல்வேன்' என்று வசிட்டரும், 'அவன் தவறாதிருப்பின் என் தவத்திற்பாதிகொடுப்பேன்' என்று விசுவாமித்திரரும் இந்திரனெதிரிற் சபதஞ்செய்துகொண்டார்கள். பின்பு விசுவாமித்திரர் பூலோகத்தையடைந்து அரிச்சந்திரனிடஞ்சென்று யாகஞ்செய்தற்குப் பெரும் பொருள்வேண்டுமென்று கேட்டு அவன்உடன்பட்டுக்கொடுக்கத்தொடங்குகையில் 'உன்னிடமே இருக்கட்டும்: வேண்டும்போதுபெற்றுக்கொள்வேன்' என்றுசொல்லிவிட்டுப் போய், தமது தவப்பெருமையாற் பலவகை மிருகங்களையும் பறவைகளையும் வருவித்து அவற்றைக்கொண்டு அவ்வரசனது நாட்டையும் பரிவாரங்களையும் உபத்திரவித்தது மல்லாமல், தமது கோபத்தினின்று தோன்றிய புலைச்சியரிருவரை அவனிடம் அனுப்ப, அவர்கள், முனிவர்கட்டளைப்படி சென்று ஆடல்பாடல்களால் அரசனை மகிழ்வித்து, அவன் 'உமக்கு என்ன பரிசு வேண்டும்?' என்றதற்கு, 'உனது வெண்கொற்றக் குடையைக் கொடுத்தலாவது, எங்களை நீ விவாகஞ்செய்துகொள்ளுதலாவது வேண்டும்' என்ன, அரசன் எதற்கும் உடன்படானாய் அவர்களை அதட்டித் துரத்திவிட, அதுகாரணமாக முனிவர் மாறுகொண்டு சென்று, தமதுபாதங்களில் வீழ்ந்துவணங்கிய அரசனை உதைத்துத்தள்ளி ஒறுத்து 'நீ புலைய

* "ப்ரஸ்கண்வஹரிஸ்சந்த்ராவ்ருஷீ" என்பது, பாணினிவியாகரணம்.

னுக்கு அடிமையாகுக' என்று சபித்து 'இப்புலைமங்கையரை நீ மணஞ்செய்துகொள்ளவேண்டும்' என்று நிர்ப்பந்திக்க, கிருபன் 'எனது இராச்சியத்தை வேண்டுமென்றாலுங் கொடுப்பேன்; புறைச்சியரை விரும்பமாட்டேன்' என்றான். அப்படி அவன் சொன்னதே வியாஜமாக முனிவர் 'நீ சொன்னசொல்தவறாமல் நினது அரசைக் கொடு' என்ன, அவனும் வாக்குத் தவறாமல் எல்லாச்செல்வத்தையும் ஈந்தனன். அனைத்தையும் பெற்றுக் கொண்டபின்பு முனிவர் 'முன்பு யாகத்துக்காக நான் உன்னிடம் வைத்துச் சென்ற பொருளை வேறு தரவேண்டும்; இல்லாவிடின் பொய்யனாவை' என்ன, வேந்தன் அதற்குக்கட்டுப்பட்டுத் தவணைகேட்க, நாற்பத்தெட்டு நாள்தவணைவைத்து நக்ஷத்திரகனென்னும்அந்தணனை உடனனுப்ப, மன்னவன் காசிக்குச்சென்று மனைவியைக் காலகௌசிகனென்னும்பிராமணனுக்கு விற்றுப் பொருள்கொடுக்க, அவ்வேதியன் 'இது என்கூலிக்காயிற்று' என்று சொல்லி அவ்வளவையும் எடுத்துக்கொண்டு 'முனிவர்க்கு வேறுபொருள் தரவேண்டும்' என்ன, கோமான் அதற்கும்இணங்கித் தன்னை வீரவாகுவென்னும்புலையனுக்கு விற்றுப் பொருள்செலுத்தி அவனுக்கு அடிமையாகி வீரதாசனென்னும்பெயர்பூண்டு அவன்கட்டளைப்படி மயானங்காவல்செய்து நின்றான். பின்னர்ப் பாம்புகடித்திறந்த பிள்ளையை யெரித்தற்கு நடுநிசியில் வந்த சந்திரமதியை வீரதாசன் கொள்ளிக்காசுகேட்க, அவள் பொருள்சிறிதுமின்மையால் தன்னையடிமைகொண்ட அந்தணனிடங்கேட்டாயினும்வாங்கி வரலாமென்று செல்லும் வழியில், முனிவர்செய்தசூழ்ச்சியால் காசிராஜன் மகனைக்கொன்று அக்குழந்தையின் அணிகலங்களைக்கொள்ளைகொண்டவளென்றுகுற்றஞ்சாற்றப்பட்டுக் கொலைத்தண்டனைக்குஇலக்காகிக் கொலைக்களஞ்சேர, அவளைவெட்டுதற்கு வீரவாகு வாளையோச்சுகையில் தேவர்கள்புடைசூழத் திரிமூர்த்திகள் பிரதியட்சமாகி, நிகழ்ந்தஉண்மைகளையெல்லாம் வெளியிட்டு ரோகிதாசுவனையும் காசிராஜன்மகவையும் பிழைப்புமூட்ட, விசுவாமித்திரர் தோல்வியடைந்துஅரசனைக்கொண்டாடி அவனையும் அவன்மனைவி மக்களையும் அடிமைவிடுவித்து அவனுக்குஅரசாட்சியைக்கொடுத்துச்செல்ல, அரசனும் முன்போல இனிதுவாழ்ந்தனனென்ன வரலாறு உணர்க. இங்கு இலக்குமணன் சீதைக்கு நளன்கதையையும் அரிச்சந்திரன்கதையையும் எடுத்துக்காட்டியதனால், அவர்கள்போலவே உயர்ந்தநிலையினின்று விதிவசத்தால் இழிந்தநிலைமையையடைந்த நீயும் அவர்கள முடிவில் மீண்டும் நன்மை பெற்றாற்போலவே மீளவும்நன்மைபெறுதல்கூடு மென்று ஒருவாறு தேறுதல் கூறியவாறாம். (சுக)

62.—(இ-ள்.) முன் செய்த நல்வினையால் - (நீ முற்பிறப்பில்) முதலிற் செய்த புண்ணியத்தினால், முகில்வண்ணன்தனை பெற்று - காளமேகமபோன்ற கரியதிருநிறமுடையவனான இராமபிரானைக் கணவனாகப்பெற்று, பின் செய்த தீவினையால் - பிறகு செய்த பாவத்தினால், அவனை நீ பிரிவுற்றாய் - (இவ்வாறு) நீ அவனைப் பிரிந்தாய்; இரு வினைகள் என் செய்யா - (புண்ணியமும் பாவமு மாகிய) இருவகைக்கருமங்கள் (முறையே) என்னநன்மை தீமைகளைத்தான் விளைக்கமாட்டா? இ இடர் நீ உறா வண்ணம் - இப்படிப் பட்ட துன்பத்தை நீ அடையாதபடி [இவ்வகைத்துன்பத்தினின்று நீ நீங்கி நன்மையடையும்படி], நின் செய்யும் செயல் எலாம் - நீ செய்யவேண்டிய செய்கை முழுதும், நெடுந் தவமே - பெரிய தவமேயாம்; செய் - (அதனைச்) செய், என்றான் - என்று (இலக்குமணன் சீதையைநோக்கிக்) கூறினான்.

"சிறுகா பெருகா முறைபிறழ்ந்துவாரா, உறுகாலத் தூற்றாகா ஆமிடத்தே யாகுஞ், சிறுகாலைப் பட்ட பொறியு மதனால், இறுகாலத் தென்னை பரிவு" என்றபடி வினைகள் செய்தமுறைமையின்படியே அவற்றின்பயன்

வினைதலால், 'முன்செய்தநல்வினையால் முகில்வண்ணன்றனைப்பெற்றுப், பின்செய்ததீவினையா லவனை நீ பிரிவுற்றாய்' என்றார். (சுஉ)

63.—(இ - ள்.) மா தவர்கள் அடி பேணி - மிக்க தவத்தையுடைய முனிவர்களுடைய திருவடிகளை விரும்பிவணங்கி [பக்தியோடு அவர்களை வழிபட்டு உபசரித்து], விதி முறையே அவர்கள் ஓதிய நல் வழி வழுவாது - (வேதசாஸ்திரங்களிற்கூறிய) விதிப்படியே அம்முனிவர்கள்சொன்ன சன்மார்க்கமுறை தவறாம லொழுகி, உபவசித்து - (உரியகாலங்களிற்) பட்டினியிருந்து [விரதங்களையனுட்டித்து நோன்புநோற்று], அங்கு - அவ்விடத்திலே, உன்னுடைய காதலனை எப் போழ்தும் கருத்திடை வைத்து - உனது கணவனை எப்பொழுதும் மனத்திலேகொண்டு தியானித்து, உயர் தவம் செய் - சிறந்த தவத்தைச் செய்வாயாக: ஈது உனக்கு கருமம் - இதுவே உனக்குச் செய்தக்க தொழில், என - என்று (இலக்குமணன்) சொல்ல,—இளையோனுக்கு அவள் உரைப்பாள் - அவ்விளையபெருமாளுக்குச் சீதை கூறுவாள்; (எ - று.)—அதனை அடுத்த இரண்டு கவிகளிற் காண்க. மற்று - அசை.

உபவசித்து - அவர்களருகே [அவர்களாச்சிரமத்திலே] வசித்து எனினுமாம். காதல் - ஆசை: அதனையுடையவன் அல்லது அதற்குவிஷயமானவன், காதலன்; இதன் பெண்பால் - காதலி: மனைவி. (இச்சொற்கள், பிள்ளைபெண்களுக்கும் வழங்கும்.) போழ்து - மரூஉ. ஈது - சுட்டுநீண்டது. கர்மம் - வடசொல். 'என்ற' என்றும் பாடம். (சுங)

[இதுவும், அடுத்த கவியும் - சீதைவார்த்தை.]

64.—(இ - ள்.) நின்னுடைய தமையனை நிழல் போல பிரியாதேன் நான் - உனது தமையனரை நிழல்போல (எப்பொழுதும்) விட்டுப்பிரியாதிருந்தவளல்லவோ நான்; அன்னவனும் நானும் சென்று அடி பணிந்த அரு தவர்கள் - (முன்பு) அப்பெருமானும் நானும் சேர்ந்து சென்று திருவடிவணங்கப்பெற்றவர்களான முனிவர்கள், (கணவனுடனன்றித் தனியேசென்று அடிபணியும் என்னைநோக்கி), உன்னுடைய காதலன் இன்று உனை பிரிந்த காரணம்தான் என் உரை நீ என்ற பொழுது - 'உனது கணவன் இப்பொழுது உன்னைவிட்டுப் பிரிந்தகாரணந்தான் யாதோ? நீ சொல்' என்று வினவும்போது, யான் அவருக்கு என் உரைப்பேன் - நான் அவர்கட்கு என்னவிடைசொல்வேன்?

உடைய - ஆறாம்வேற்றுமைச்சொல்லுருபு. தமையன் - தம்ஐயன்; தமது தந்தைபோல்வான் எனக் காரணப்பொருள்காணலாம்; ("ஜ்யேஷ்ட ப்ராதா பித்ருஸம:"='தமையன் தந்தைபோல்வான்' என்பது மேற்கோள்.) எப்பொழுதும் நீங்காது உடனுறைதற்கு நிழல் உவமைகூறப்படுதலை "நிழலின் நீங்கான்", "நிழல்தன்னை, வீயாதடியுறைந்தற்று" என்றவிடங்களிலுங் காண்க. அருந்தவர்கள் - (பிறராற்செய்தற்கு) அருமையான தவத்தைத் தாம் செய்துள்ளவர்கள்; மகாமுனிவர். இங்கே பிராட்டி 'என்னுடைய கணவனை' என்னாது 'நின்னுடைய தமையனை' என்றது, அப்பெருமான் தன்னைத்தொடர்பறுத்தமையை உறுத்திக்காட்டியவாறாம்; அடுத்தபாட்டிலும் 'உன்னுடைய தமையனுக்கு உணர்த்துதி' என வருதல் காண்க. (சுச)

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

65.—(இ - ள்.) பின்னும் அவள் கூறுவாள் - (இவ்வாறு சொன்ன) அச்சீதை மீண்டும் (பின்வருமாறு) சொல்வாள்:—'பேர் உலகம் முழுது உடையான்தன்னுடைய பிழை அல்ல-பெரிய உலகம் முழுவதையுந் தனதாகவுடையவனான இராமபிரானது தவற்றினால் நேர்ந்தனஅல்ல: தாரணியோர் தப்பு அல்ல - பூமியிலுள்ள சனங்களின் குற்றத்தினால் நேர்ந்தனவுமல்ல: என்னுடைய வினையாலே இ செயல்கள் விளைந்த - எனது பாவத்தினாலேயே இச்

செய்கைகள் நேர்ந்தன,' என்றாள் - என்றுசொன்னாள்; (என்றுசொல்லிப் பின்னும்), இளையானே உன்னுடைய தமையனுக்கு இன்று உணர்த்துதி - 'இளைய பெருமானே! உனது தமையனார்க்கு இப்பொழுது (எனது நிலைமையைச்) சொல்வாய்,'(எ - று.)—'என்றுகூற' என அடுத்தகவியோடு தொடரும். ஆல்-ஈற்றசை.

இராமனது பிழை யாவது - தனது தூயவொழுக்கத்தை யுணராது தன்னைத் தீயொழுக்கமுடையவளாக மாறுபடக்கருதுதல். தாரணியோர் தப்பாவ்து - தனது பரிசுத்தியை யுணராமல் தன்விஷயமாக அபவாதஞ்சொன்னது. இராமன்வனம்புக்கசெய்தி கேட்டவளவிலே மந்தரைமீதும் கைகேயியின்மேலும் தசரதர்மேலும் வசிட்டர்முதலிய பெரியோர்மீதும் முறையே கோபங்கொண்ட பரதாழ்வான் முடிவில் 'என்பாபமே இதற்கெல்லாங் காரணம்' என்று அறுதியிட்டாற்போல, பிராட்டியும் 'இவையனைத்தும் விளைந்தது எனது பாபத்தாலேயே' என்று பிறரைப்பழியாது தன்விதியையே தான் வெறுத்துக்கொண்டாள். விளைந்த - முற்று. (சுரு)

[அதுகேட்டுவருந்திய இலக்குமணன் ஒன்றுகூறத் தொடங்கல்.]

66.—(இ - ள்.)என்று இனைய அவள் கூற - என்று இத்தன்மையனவான வார்த்தைகளைச் சீதை சொல்ல, (அவைகேட்டு),வல் திறலோன் இளையோன்-மிக்கவலிமையையுடையவனான இலக்குமணன், இரு கண்கள் நீர் சொரிய - தனது இரண்டுகண்களும் நீரைப்பெருக்க, மனம் மயங்கி—, வாய்விட்டு கதறுதலோடு - பெருங்குரல்பாய்ச்சிக் கதறுதலுடனே, இன்று இந்த உரை கேட்க என்ன குறை செய்தேன் என்று - இன்றைக்கு இவ்வார்த்தையைக்கேட்கும்படி (முன்பு) என்னபாவஞ்செய்தேனோ வென்று பரிதவித்து, ஒன்றிய வெம் துயர் - பொருந்திய கொடிய துன்பத்துடனே, உறு துயராட்கு இவை உரைத்தான் - மிக்க துன்பத்தையுடையவளான பிராட்டியை நோக்கி இச்சொற்களைச் சொல்லலானான்; (எ - று.)—அவற்றை அடுத்தகவியிற் காண்க.

இனைய - இகரச்சுட்டடியாப்பிறந்த பலவின்பாற் குறிப்புவினையாலணையும் பெயர்; ன், ஐ - சாரியைகள். வல் திறல்-ஒருபொருட்பன்மொழி. இயல்பிலே மிக்கவலிமையுடையோனாயினும் இப்பொழுது மகாசோகத்தால் மனவலிமைதளர்ந்தனனென்பது தோன்ற, இங்கு 'வன்றிறலோன்' என்றார். உறு துயர் - உரிச்சொல்தொடர்; ஆதலின், வலி இயல்பு: "இடை யுரி வடசொலி னியம்பிய கொளாதவும்." உறு - உரிச்சொல்: "சால உறு தவ நனி கூர் கழி மிகல்." (சுசு)

[இலக்குமணன்வார்த்தை.]

67.—(இ - ள்.) 'கன்றிய சிந்தையினாய் - வெதும்பிய மனத்தையுடையவளே! தூயோய் - பரிசுத்தகுணமுடையவளே! உன் கணவன் உனை கைப்பிடித்த அன்று முதல் - உனது கணவனான இராமபிரான் உன்னை மணஞ்செய்துகொண்ட அந்நாள் முதலாக, இன்று அளவும் - இந்நாள்வரையிலும், உன்னுடைய அடி பணிந்தே நின்றபொழுதினும் - உனது திருவடிகளை நமஸ்கரித்துநின்றாலும், நின் மேனி கண்டறியேன் - உனது திருமேனியை (க்கண்ணெடுத்து) ப்பார்த்தறியாதவன் யான்; இன்று தான் உனை காண வல்லெனோ - இப்பொழுதுதான் (யான்) உன்னைப்பார்க்கமாட்டுவேனோ?' என உரைத்தான் - என்றுசொன்னான், (இலக்குமணன்); (எ - று.)

இது, இளையபெருமாள் ஆதிமுதற் பிராட்டியைத் தாய்போலக்கொண்டு அவள்திருவடிக்குத்தொண்டுபூண்டொழுகின நிலைமையை வெளியிட்டவாறும். கைப்பிடித்தல் - விவாககாலத்தில் தலைவன் தனதுகையால் தலைவியின்கையைப் பிடித்தல்; இதுபற்றி, விவாகத்துக்கு 'பாணிக்கிரகணம்' என்று வடமொழியில் ஒருபெயர். அடிபணிந்து நின்றபொழுதினும் - திருவடிகளில்

முடிபடும்படி ஸாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டகாலத்திலும் எனினுமாம். தூயோய் - தூயா என்பதன் ஈறுதிரிந்தவிளியான தூயாய் என்பது ஆ ஓவாயிற்று. "தோள்வளைகளை யான் கண்டறியேன், குண்டலங்களை யான் கண்டறியேன், திருவடிச்சிலம்புகளையே நன்றாகக்கண்டறிவேன், திருவடிபணிதலால்" என்று முன்னொருசமயத்திற் பிராட்டிவிஷயமாக இளையபெருமாள்கூறினரென வால்மீகிராமாயணத்து வந்துள்ளதனோடு இது ஒப்புநோக்கத்தக்கது. வல்லென், என் - தன்மையொருமைவிகுதி. (கஎ)

[இலக்குமணன் சீதையை விட்டிட்டு மீளுதல்.]

68.—(இ - ள்.) (இவ்வாறுசொல்லி இலக்குமணன்), வரு துயரந்தனை நோக்கி கருதி - (பிராட்டிக்கு இனி) வரக்கடவதான துன்பத்தைக்குறித்துச் சிந்தித்து, மங்கை மலர் அடி பணிந்து - அத்தேவியினது தாமரை மலர் போன்ற திருவடிகளை நமஸ்கரித்து, வினை அற உலகோர் சென்று ஆடும் கங்கை எனும் பெரு நதியை கடந்து - கருமந் தொலையுமாறு உலகத்தார் வந்து நீராடப்பெற்ற கங்கையென்னும் மகாநதியை (ப்படகு கொண்டு) தாண்டி, அவளை பின் பார்த்து பின் பார்த்து-சீதையைத் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே, பொருமிய வெம் துயரினன் ஆய் - விம்மிவிம்மியழுகிற கொடியசோகத்தையுடையவனாய், நகர் நோக்கி போயினான் - (அயோத்திமா) நகரத்தைநோக்கிச் சென்றான்; (எ - று.)

'அவளை வலம்வந்துதெண்டமிட்டுக் கண்ணீர் ததும்பச் சூனியமான சித்தத்தோடே மறுத்தும்படகேறிச் சீதையைத் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே வடகரைசேர்ந்து திருத்தேரண்டை வந்துவிட்டார்' என்பது, உத்தரராமாயண வசனம். வருதுயரம் - வினைத்தொகை: நேர்ந்த துன்ப மெனினுமாம். பின்பார்த்துப் பின்பார்த்து - அடுக்கு, இடைவிடாமைப்பொருளது. பொருமிய, பொருமு - பகுதி. போயினான் என்பதில், ய் - எழுத்துப்பேறு; இன் - இறந்தகாலவிடைநிலை. (கஅ)

[இலக்குமணன் கண்ணுக்குமறைந்தவுடன் சீதை மிகச்சோகித்தல்.]

69.—(இ - ள்.) 'இவர் - இந்த மைத்துனனார், போவாரோ - (இவ்வாறு இங்கே என்னைத் தனியேவிட்டிட்டுப்) போயேவிடுவாரோ, (அன்றி), இன்னம் மீள்வாரோ - மீண்டும் ஒருகால் திரும்பிவருவாரோ,' என நினைந்து - என்று எண்ணி, சானகி - சீதை, தன்னுடைய கண் பறியா பார்த்து இருந்து - தனது வைத்தகண் வாங்காமற் பார்த்துக்கொண்டேயிருந்து, (இலக்குமணன் நெடுந்தூரஞ்சென்றுவிட்டபின்பு), 'பொன் மணி தேரோ - பொன்னினாற்செய்த இரத்தினங்கள்பதிக்கப்பெற்றதான தேரையோ, காணேன் - காண்கிறேனில்லை: இளையோனும் போய் மறைந்தான்-இலக்குமணனும் போய் மறைந்துவிட்டான்; என்னை அற கைவிட்டார் - என்னை முற்றும் கைவிட்டிட்டார்கள்,' என - என்றுஎண்ணி, கதற தொடங்கினாள் - பெருங்குரலிட்டுப் புலம்பத்தொடங்கினாள்; (எ - று.)

'பிராட்டியோ அங்கிருந்து லக்ஷ்மணப்பெருமாள் போவதைப் பார்த்துக்கொண்டேயிருந்து அவர் கண்ணுக்குமறைந்தவுடன் சோகவெள்ளத்தில் ஆழ்ந்தவளாய் மெய்ம்மறந்து கோவென்றுபெருங்குரலிட்டு அழுதாள்' என்பது, உத்தரராமாயணவசனம். "தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன செய்வதொன் றறியேனே" என்று பிரிந்ததலைவி இரங்கியதாகத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த அடி இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது.

இவர் - உயர்வுப்பன்மை; அதனோடுநோக்க 'மறைந்தானிளையோனும்' என்றது, பன்மையொருமைமயக்கம்; [நன் - பொது - உகூ.] இனி, இவர் என்பதை, சுமந்திரனையும்உளப்படுத்திய பன்மையாகவுங் கொள்ளலாம். ஓகாரங்கள் இரண்டும் - ஐயப்பொருளன. 'இன்னம்' என்றது, இடைச்

சொல். பறியா - ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம்; 'பறிய' என்ற பாடத்துக்கு - (விடாது நெடுந்தூரமளவும் ஊன்றிப்பார்த்தலாற்) கண் ஒளிமழுங்க என்று பொருள்காண்க. ஜாநகீ - வடசொல்: ஜநகராஜன் வளர்த்த மகள்; தத்திதாந்தநாமம். தேரோ, ஓ - தெரிகிலே. கைவிட்டாரென்ற பன்மை, இராமனைக் கூட்டியது. (௬௯)

[இதுமுதல் ஐந்து கவிகள் - தன்விதியைக்குறித்துச் சீதை புலம்பல்.]

70.—(இ - ள்.) இலங்கையிலே நெடுங் காலம் இருஞ் சிறையிலே இருந்து புலம்பி அழுது யான் பட்ட புல்லனவும் போதாமல் - லங்காபுரியிலே நெடுநாள் யான் பெரிய சிறைக்காவலிலே இருந்து கதறி யழுது அநுபவித்த சிறுமைகளும் போதா வென்று, தலம் குலவு பழி பூட்டி கானில் தனிவிடுவித்து விலங்கு அரிய துயர் விளைத்த-பூமியிலே விளங்குகிற[பிரசித்தமான பெரிய] பழியை அடையப்பண்ணி வனத்தில் (என்னைத்) தனியே விட்டிடச்செய்து விலகவொண்ணாத்துன்பத்தையுண்டாக்கிய, விதியேயோ விதியேயோ - (என்) விதியே அந்தோ! விதியே அந்தோ!! (எ - று.)

புலம்பி அழுது - ஒருபொருட்பன்மொழியுமாம்; மிகஅழுது என்று பொருள்படும். "புலம்பே தனிமை" என்ற தொல்காப்பியஉரிச்சொல்லியற்சூத்திரத்தின்படி, தனித்துஅழுது என்றும் பொருள்கொள்ளலாம். புல்லன - புன்மையென்னும் பண்பினடியாப்பிறந்த பலவின்பாற்குறிப்புவினையாலணையும் பெயர்; அன் - சாரியை. உம் - இழிவுசிறப்போடு, இறந்தது தழுவியஎச்சம். போதாமல், போது - பகுதி. தலங்குலவு பழி - ஆதாரமான உலகம் அழியுமளவும் தான்அழிவின்றி விளங்கிநிற்கும் பழி. 'பூட்டி' என்ற சொல்லின் ஆற்றலால், காரணமில்லாதிருக்கையில் இப்படிப்பட்ட பழியைச் செயற்கையாகத்தோன்றுவித்து என்றவாறும். விலங்கு - முதனிலைத்தொழிற்பெயர்: நான்காம்வேற்றுமைத்தொகை; இனி, விலங்கவரிய என்பது விலங்கரிய எனப் பெயரெச்சவீறு தொகுத்தல்விகாரப்பட்டதெனினுமாம். விதியேயோ விதியேயோ, அடுக்கு - முறையிடுதல்பற்றியது. ஓகாரம் - இரக்கம்; "புலம்பின் ஒவு மாகும்" என்றபடி புலம்பல்விளிக்கு உறுப்பாய் வந்ததெனினுமாம்: "அண்ணாவோ அண்ணாவோ" என்றவிடத்துப் போல. ஓ விதியே என மாறிக்கூட்டலும் ஒன்று. விதி - கருமம்: வடசொல். (௭௰)

71.—(இ - ள்.) ஏதம் உறு பழி பூட்டி - குற்றம்மிக்க அபவாதத்தைக் கற்பித்து, (அதனால்), இ பிறப்பில் எனை ஒழிய மாதரை என் மனத்தாலும் தொடேன் என்று வரம் தந்த காதலனை மனம் கலக்கி - இந்தப்பிறப்பிலே என்னைத்தவிர வேறொருத்தியை எனதுமனத்தினாலும் தொடமாட்டேனென்று (முன்பு எனக்கு) வரமருளியிருந்த என் கணவனை மனங்கலங்கச்செய்து, எனை காட்டில் விடுவித்து - காட்டிலே என்னைவிடும்படிபண்ணி, வேதனை நோய் செய்வித்த - மிக்கவருத்தத்தை விளைத்த, விதியேயோ விதியேயோ - (என்) விதியே அந்தோ! விதியே அந்தோ!! (எ - று.)

ஏதம்உறு - துன்பம் பொருந்திய எனினுமாம். மாதர் - உரிச்சொல்: "மாதர் காதல்" என்ற தொல்காப்பியத்தின்படி விருப்பத்தையுணர்த்தும் இது, விரும்பத்தக்க அழகிய பெண்ணை யுணர்த்தும்போது பண்பாகுபெயராம். இது, ஒருமைக்கும் பன்மைக்கும் வழங்கும். மனத்தால் தொடுதல் - நெஞ்சினாற் பரிசித்தல்; அதாவது, விரும்புதல். 'மனத்தாலுந் தொடேன்' என்பதனால், 'மெய்யால் தொடேன்' என்பது கூறாமலே அமையும். உம்மை - சிறப்புப்பொருளது; அது, மொழிமெய்களின்செயலுக்கு இன்றியமையாததான மனத்தின் உயர்வை விளக்கும். 'இப்பிறப்பி லெனையொழிய மாதரை யென்மனத்தாலுந் தொடேனென்று வரந்தந்த காதலன்' என்றத

ளுல், பெருமானுக்குத் தன்பக்கல் இயல்பாகவுள்ள பிரீதிவிசேஷத்தை விளக்கினுள். இங்ஙனம் திருமால் இராமாவதாரத்தில் ஏகபத்நீவிரதம்வைத்துக் கொண்டிருந்தது, அப்பெருமான் சீதையைப்பிரிந்தபின்பு வைதிகச்சடங்குகள்செய்தற்கு இன்றியமையாமைபற்றியேனும் வேறொருத்தியைவிவாகஞ் செய்துகொள்ளாமல் சீதைபோல ஒருஸ்வர்ணப்ரதிமை செய்வித்துப் பிராணப்பிரதிட்டைசெய்து அப்பொற்பதுமையையே பத்தினிஸ்தானத்தில் வைத்துக்கொள்வதனுலும் விளங்கும். மேல் அசுவமேதயாகப்படலத்தில் "தேவர்களல்லல்தீர்த்த இராமன் முன்செய்த செம்பொற், பாவையைத் தனுவருத்துப் பாரியாச் சங்கற்பித்து" என வருதல் காண்க. தன்னை வலியத்தழுவவந்த சூர்ப்பணகையை மறுத்தபோதும், "ஆடவர் பெண்மையையவாவுந் தோளினுய்" என்றபடியுள்ள தனது திவ்யசௌந்தரியத்தில் ஈடுபட்டுப் பெண்வடிவங்கொண்டு தன்னைத்தழுவக்கருதிய தண்டகாரணியவாசிகளான இருடிகளை மறுத்தபோதும் இராமபிரான் இக்கொள்கையைவெளியிட்டுள்ளான். 'ஊனையொழிய' என்றும் பாடம். பழிபூட்டி மனங்கலக்கியென இயையும். வேதனை நோய் - ஒருபொருட் பன்மொழி; அன்றி, சோகம் மனுேவியாதி யெனப்படுதல்பற்றி, 'வேதனைநோய்' என்றதாகவுங் கொள்ளலாம். (எக)

72.—(இ - ள்.) கண் அறை காகுத்தன் எனை காட்டில் விட - தாக்ஷிணியமில்லாதவனுன இராமன் என்னை வனத்திலே விட்டிட, கண்டிருந்து - (அதனைப்) பார்த்திருந்து, மண் அகத்தார் - பூலோகத்திலுள்ள ஜனங்கள், வல் கொடுமை வாய் திறவா - மிக்ககொடுமையோடு வாய்திறந்து, மானம் இலா பண் அறைச்சி என்று என்னை பழி தூற்ற - மானமில்லாத ஒழுக்கங்கெட்டவளென்றுசொல்லி என்னை மிகப்பழிக்கும்படி, பண்ணுவித்தாய் - செய்வித்தனையே! விண்ணவர்க்கும் விலக்கு அரிய விதியேயோ விதியேயோ - (அறிவிலும் ஆற்றலிலுஞ் சிறந்த) தேவர்கட்கும் விலக்கமுடியாத விதியே அந்தோ!! விதியே அந்தோ!!! (எ - று.)

இங்கே 'கண்' என்றது, தன்ஞெடுபெயின்ருர்மேற் கண்பார்வைசென்றவிடத்து நிகழும் அன்பாகிய கண்ணோட்டத்தின்மேல் நின்றது; இலக்கணை: "கண்நின்று கண்அறச் சொல்லினும்" என்றவிடத்துப்போல. அறை - அற்றவன்; ஐ - பெயர்விகுதி: பொறியறை, மூக்கறை என்ற பெயர்களிலும் இவ்வாறே காண்க. 'கண்ணற' என்றும் பாடமுண்டு. வன் கொடுமை - ஒருபொருட்பன்மொழி. திறவா - உடன்பாட்டெச்சம். பண் - சீர், செவ்வை, தகுதி; அதுஅற்றவள், பண்ணறைச்சி: அயோக்கியை யென்றபடி. அறைச்சி - அறை யென்ற பெயரின்மேல், இ - பெண்பால் விகுதி: ச் - பெயரிடைநிலை. காகுத்தன் காட்டில்விடவும் மண்ணகத்தார் பழிதூற்றவும் பண்ணுவித்தாய் என்று உம்மைவிரித்துப் பொருள்கொள்ளவும் அமையும். இனி, மண்ணகத்தார் கண்டிருந்து வாய்திறந்துபழிதூற்றுமாறு காகுத்தன் என்னை விடப் பண்ணுவித்தாய் என மாற்றியியைத்து உரைப்பினுமாம். 'வாய்திறவா' என்றது, இன்றியமையாததன்ருயினும், குற்றம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஆராய்ந்துபாராமலே யாரையும் பழிதூற்றும் இயல்பினது உலகத்தார்வாய் என்ற கருத்தை விளக்கும். வன்கொடுமை யென்பதை வாய்க்கும் அடைமொழியாக்கலாம். (எஉ)

73.—(இ - ள்.) தாள் ஆர் செம் தாமரை தாள் - நாளத்தோடு பொருந்திய செந்தாமரைமலர் போன்ற திருவடிகளையுடைய, தாசரதியார் - இராமபிரானது, மனத்தை—,கேள் ஆனுர் உரை என்றும் கேளாத வகை கலக்கி - (அன்புள்ள நெருங்கிய) உறவினராயுள்ளாரது வார்த்தையை எப்பொழுதுங் கேளாமலிருக்கும்படி கலங்கச்செய்து, கோள் ஆனது இடை அரு

கொடு வினையேனுக்கு - தீமை இடைவிடாதுநேர்தற்குக் காரணமான கொடிய பாவத்தை யுடையளான எனக்கு, ஒரு நாள் மீளாத வனம் தந்த - ஒரு நாளும்மீண்டுவராதிருக்கும்படியான வனவாசத்தைக் கொடுத்த, விதியே யோ விதியேயோ - (எனது) விதியே அந்தோ! விதியே அந்தோ!! (எ - று.)

பறிக்கப்பட்டதனாலாகுஞ் சிறிதுவாட்டமு மில்லாத தாமரை யென்றற்கு, 'தாளார் தாமரை' என்றார். தாள் - தண்டு. ஆர் தாமரை - வினைத்தொகை. செந்தாமரை, செம்மை - இனம்விலக்கும் அடைமொழி. தாசரதி - தசரதனது மகன்: வடமொழித் தத்திதாந்தநாமம். மனத்தைக் கலக்கி யென இயையும். கேளானார் என்றது, தன்னையும் தனதுசுருப்பத்தினின்று உதிக்கும் மக்களையும். 'உரையொன்றும்' என்ற பாடத்துக்கு - (பிராட்டியை விடலாகாதென்று சில அன்பர்கள் சொன்ன) வார்த்தையைச் சிறிதுங்கேட்டுநடவாதபடி கலக்கி யென்று பொருள்கொள்ளலாம. கேள் - (யோக க்ஷேமங்களைக்) கேட்குந் தன்மை: கேண்மை யென்னும் பண்பியடி; இது, ஆகுபெயராய் உறவினர்மேலும் நண்பர்மேலும் நிற்கும். 'ஒரு நாள்' என்பதில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. வனம் தந்த - வனத்தை இடமாககொடுத்த. கொடு வினை - பண்புத்தொகை. 'கேளானது' என்றதில், 'ஆனது' என்பது - முதல்வேற்றுமைச்சொல்லுருபு: பகுதிப்பொருள்விகுதி யென்றலு முண்டு. (எங)

74.—(இ - ள்.) தக்க கணவன் சீறி தன்னை கைவிட்டு அகல - தகுதியுள்ள கணவன் ஒருத்தியை நீக்கிவிடுவானாயின், (அவளை), புக்கஅகத்தார் கைவிடுவர் - அக்கணவன் வீட்டவர்களெல்லோரும் கொள்ளாமல் தள்ளிவிடுவார்கள்; பிறந்த அகத்தார் போற்றார்கள் - அவள்பிறந்தவீட்டவர்களும் ஏற்றுக்கொண்டு விரும்பிப் பாதுகாக்கமாட்டார்கள்; அன்னியர்கள் - அயலார், அ கணமே பழி இடுவர் - அந்தக்ஷணத்திலேயே எந்தப்பழியை வேண்டுமானாலும் (அவள்மேல்) இட்டுப்பேசுவார்கள்; (ஆதலால், அங்ஙனம் கணவனாற் கைவிடப்பட்டவளாகிய), அரு வினையேன் - (தொலைத்தற்கு) அரிய பாவத்தைச் செய்துள்ளவளான நான், மிக்க ஓர் இடம் காண்கிலேன் - (போய்ச்சேர்தற்குச்) சிறந்த ஓரிடத்தையுங் காண்கிறேனில்லை; விதியேயோ விதியேயோ - (என்) விதியே அந்தோ! விதியே அந்தோ!! (எ - று.)

தக்க கணவன் - யோக்கியனான பர்த்தா. 'கைவிடக் கண்ட' என்ற பாடத்துக்குப் பொருள், வெளிப்படை. புக்ககம், பிறந்தகம், மிக்கொரிடம் என்றவற்றில், பெயரெச்சவீறு தொகுத்தல். புக்க அகம் - விவாகஞ்செய்யப்பட்டுப் புகுந்த வீடு. பிறந்த அகம் - தாய்தந்தையர்வீடு. க்ஷணம், அந்யர் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. காண்கிலேன், கு - சாரியை, இல் - எதிர்மறையிடைநிலை. தான் புகலிடமொன்றும்வாய்க்கப்பெறாது கதியற்றவளாதற்குக் காரணமான விதியின் கொடுமையை வெளியிட்டாள். (எச)

[சீதையின் கூக்குரல் கேட்டு வால்மீகிமுனிசிஷ்யர்கள் அருகில்வருதல்.]

75.—(இ - ள்.) இன்ன பலவும் பன்னி - இத்தன்மையனவான பல வார்த்தைகளையும் மேன்மேற்சொல்லி, இடர் உறுவாள் - துன்பப்படுபவளான பிராட்டி, இடர் தீர என் உயிர் தான் போகாதோ என கதறும் - 'இத்துன்பம் நீங்கும்படி எனது உயிர் தானேபோய்விடமாட்டாதோ' என்று சொல்லிக் கூக்குரலிடுகிற, அ காலை - அச்சமயத்தில்,—வன்னியினும் தூயன் ஆம் வான்மீகி மைந்தர்கள் தாம் - அக்கினியைக்காட்டிலும் பரிசுத்தரான வால்மீகிமுனிவருடைய சிஷ்யர்கள், நல் நுதலாள் அழும் ஓசை வழி வந்து நண்ணுற்றார் - அழகியநெற்றியையுடையளான அச்சீதை புலம்பும் ஒலியின்வழியாக வந்து அவளருகிற் சேர்ந்தார்கள்; (எ - று.)

தூரத்திலிருந்து கூக்குரல்கேட்டவர்கள் அவ்வொலிவருகிறவழியை நாடி அவளைச்சமீபித்தன ரென்பதாம். அக்கினி தான் இயல்பிற்பரிசுத்த மாகஇருத்தலோடு அபரிசுத்தமானபொருள்கள் தன்னிற்பட்டாலும் அத னால் தான் அபரிசுத்தப்படாமலேயின்று அவற்றைப்பரிசுத்தமாக்குந்தன்மைய தாதலால், தூய்மைக்குச் சிறந்ததிருஷ்டாந்தமாம்; அதனினும் பரிசுத்த ரான முனிவ ரென்க: தாம்தூயராய்நின்று தம்மையடுத்தாரையுந்தூயரா க்குகிற புண்யாத்மா. வஹ்நி - வடசொல். சீடர்களை ஞானபுத்திரரென்றல் வழக்காதலால், 'வான்மீகிமைந்தர்கள்' என்றார்; தந்தைக்கு மக்களிடத் துஉள்ளவவ்வளவு அன்பு அம்முனிவர்க்கு அம்மாணவகர்களிடத்தி லிருத்த லும், மக்கட்குத் தந்தையினிடத்துஉள்ளவவ்வளவு பக்தியும் நன்குமதிப்பும் அம்மாணக்கர்கட்கு அம்முனிவரிடத்தி லிருத்தலும், "சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே," "தந்தை மகற்கு ஆற்று நன்றி அவையத்து, முந்தியி ருப்பச்செயல்" என்றபடி மக்களைத் தந்தைபோல அம்மாணவகர்களை அம் முனிவர் அறிவொழுக்கங்களில் மேம்பட்டவர்களாகச்செய்தலும் இதில் விளங்கும். நுதல் - புருவமுமாம். நண்ணுற்றார், நண்ணுறு - பகுதி; இதில், உறு - துணைவினை. (எரு)

76, 77.—[இதுவும், அடுத்த கவியும் - குளகம்: ஆதலால், ஒருங்கு உரையிடப்படும். முனிமக்கள் ஓடி வான்மீகிமகாமுனிவர்க்கு அறிவித்தல்.]

(இ - ள்.) (எசு) அவர்கள் - அந்த ரிஷிசிஷ்யர்கள், அழுமவளை கண்டு இரங்கி - புலம்புகிற அச்சீதையைப் பார்த்து அநுதாபங்கொண்டு, அருந் தவனை கடிது அணுகி - விரைவாகச்சென்று அவ்வால்மீகிமகாமுனிவரை யடுத்து, தொழுது - (அவரை) நமஸ்கரித்து, சொல்லுவார் - செய்திசொல் வார்கள்:—'சுரர் உலகுதனில் நின்றும் வழுவியவள் விழுந்தாளோ - தேவ லோகத்தினின்று தவறினவளாய்க் கீழ்விழுந்தவளோ, மண் உலகில் உளீ ளாளோ - (அன்றிப்) பூலோகத்திலேயே உள்ளவள்தானோ, எழுது அரிய மேனியாள் யாவளோ என்று அறியோம் - (சித்திரத்தில்) எழுதுதற்கு அரு மையான [மிகஅழகிய] திருமேனியை யுடையவள் யாரோ என்று அறி யோம்; (எஎ) ஒருவர் இல்லா காட்டிலே - ஒருவருமில்லாத வனத்திலே, உள் உறு சோகத்தாள் ஓர் தெரிவை - மனத்தில் நிறைந்த வியசனத்தையுடையவ ளான ஒரு பெண், ஓர் துணை இன்றி தெய்வமே துணை ஆகி - வேறுஒருது ணையுமில்லாமல் தெய்வமேதுணையாகக்கொண்டு, இரு கணின் நீர் நதி பெ ருக - இரண்டுகண்களினின்றும் நீர் ஆறுபோலப்பெருக, இழிந்து விழு ந்து அழுகின்றாட்கு - கீழ்மையடைந்து விழுந்து புலம்புகிறாள் அவளுக்கு, அருள் புரிய உனக்கு அடுக்கும் - கருணைசெய்தல் உனக்குத் தகும்; அருந் தவத்தோய் - அருமையான தவத்தையுடையவனே!' என உரைத்தார்-என்று சொன்னார்கள்; (எ - று.)

எசு. பாற்கடலினின்று தோன்றிய வாருணியென்னும் சுரையை [மது வை]ப் பானஞ்செய்தவ ராதலால், சுரரென்று பெயர். முதலில் ஒருவகை யாகஎழுதி அதிற்குறைதோன்றிய இடங்களிலெல்லாம் மீண்டும்மீண்டுங் கலைத்துக்கலைத்துச்சீர்திருத்தக்கூடிய தாதலால், எப்படிப்பட்ட அழகியவடி வத்தையுஞ் சித்திரத்திலே மிக நன்றாக அமைய எழுதக்கூடும்: அதினும் எழுதவொண்ணாததென அவளது திருமேனியின் திவ்வியசௌந்தரியத்தை வெளியிட்டவாறும். ரம்பை ஊர்வசி முதலிய தேவமாதர்போல மிக அழ கியவ ளென்பார் 'சுரருலகுதனினின்றும் வழுவியவள்விழுந்தாளோ' என் றும், கண்இமைத்தல் கால்நிலந்தோய்தல் முதலியவற்றால் 'மண்ணுலகி லுள்ளாளோ' என்றும் விகற்பித்துக்கூறினார். உலகுதனில்நின்றும்—தன் - சாரியை, இல் - ஐந்தனுருபு, அதன்மேல் 'நின்று' என்பது - சொல்லுருபு

உம் - இசைநிறை. கடிது - கடுமையென்னும் பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்றெச்ச வினையுரி.

எஎ. ஒருவரில்லாக் காடு - மநுஷ்ய சஞ்சாரமில்லாத காடு. ஓர்தெரிவை அழுகின்றாட்கு - அழுகின்றவளாகிய ஒருதெரிவைக்கு என்க. புரிய=புரிதல். கணின் - தொகுத்தல்; இன் - ஐந்தனுருபு, நீக்கம். இன் - சாரியையெனக் கொண்டு கணின்நீர்என்பதை ஆறும்வேற்றுமைத்தொகையெனினுமாம். 'விழுந்துவிழுந்தழுகின்றாட்கு' என்றும், 'விழுந்தழுகின்றாளவளுக்கு' என்றும் பாடபேத முண்டு. (எசு, எஎ)

[வால்மீகிமுனிவர் சீதையைச் சமீபித்துத் தேறுதல்கூறல்.]

78.—(இ - ள்.) (அதுகேட்டவுடனே), மா தவன் - மிக்க தவத்தையுடையரான அம்முனிவர், அவரோடும் போய் - அச்சீடர்களுடனே புறப்பட்டு, அங்கு சென்று - (சீதையிருக்கிற) அவ்விடத்திற் போய்ச்சேர்ந்து, அழுகை ஓயாது நெஞ்சில் தங்கிய சோகம் ஆற - அழுகைஓய்வில்லாதிருக்கும்படி அவள்மனத்திற்பொருந்திய துக்கம் தணியும்படி, சானகிதன்னை தேற்றி - அந்த ஜாநகிப்பிராட்டியைத் தேற்றுபவராய், 'நீ இங்கு இருந்து சோகித்து என் பயன் - நீ இவ்விடத்திலே இருந்து சோகித்தலினாற்பயனென்ன? இடரை விட்டு - துக்கித்தலை விட்டு, மங்கை நீ கேட்டி - மகளே! (யான் சொல்வதை) நீ கேட்பாயாக,' என்று - என்றுசொல்லி, உரைப்பது ஆனான் - மற்றுஞ் சொல்லத்தொடங்கினார்; (எ-று.)—அதனை அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

'போய்ச்சேர்ந்து' என்றும், 'உரைப்பனானான்' என்றும் பாடமுண்டு. இங்கு நீ இருந்து சோகித்து - இவ்வாறு நீ இடைவிடாது சோகித்தலினால் எனினுமாம். மங்கை - அண்மைவிளி. சோகம் மாற என்றும் பிரிக்கலாம்.

[இதுவும், அடுத்த கவியும் - ஒரு தொடர்: வால்மீகிமுனிவர் வார்த்தை.]

79.—(இ - ள்.) அநகன் ஆம் இராமன் தேவி நீ என்றும் - குற்றமற்றவனான இராமபிரானது மனையாள் நீ யென்றும், அமலை என்றும் - குற்றமில்லாதவள் நீ யென்றும், சநகன் மா மகள் ஆம் என்றும் - ஜநகமகாராசனது சிறந்த மகள் நீ யென்றும், சமாதியில் உணர்ந்தேன் - யோக திருஷ்டியினால் (நான்) அறிந்தேன்; தக்க உனை அவன் காட்டில் விட்டான் அல்லன் என்னுழையே விட்டான் என நினை-தகுதியுடையளான உன்னை (அவ்விராமன்) வனத்தில் விட்டிட்டானல்லன் என்னிடத்திலேயேவிட்டான் என்று எண்ணிக்கொள்; யாங்கள் வைகும் இடத்தில் எம்மோடும் போதி - நாங்கள் வசிக்கிற இடத்திற்கு எம்முடன் வருவாய்; (எ - று.)

அநகன், அமலா, ஸமாதி - வடசொற்கள். அகம் - தோஷம்: அது இல்லாதவன், அநகன். மலம் - குற்றம்: அதுஇல்லாதவள், அமலா. நீயும் யாதொருகுற்றமு முடையவளல்லள், அப்படிப்பட்ட உன்னை லோகாபவாதத்துக்கு அஞ்சியே விலக்கினானாதலால் இராமனும் குற்றஞ்செய்தவனல்லன் என்பார், 'அநகனாமிராமன்தேவி' என்றும் 'நீயமலை' என்றுங் கூறினார். சமாதி - யோகத்தின் எட்டு அங்கங்களி லொன்று; இங்கு, இலக்கணையாய், யோகபலத்தாலாகிற ஞானக்கண்ணின்மேல் நின்றது; இல் - ஐந்தனுருபு, ஏது. தக்க - யோக்கியையான, ஒழுக்கக்கேடில்லாதவளான. ஒருத்தியின் கருப்பத்தினின்று பிறவாத தெய்வப்பிறப்பையுடைய குமாரி யென்பது தோன்ற, 'மாமகள்' என்றார். இனி, மா மகள்-மூத்த மகள் எனினுமாம்; பின்பு ஜனகராஜன் பெற்ற மகளான ஊர்மிளை யென்பாளை நோக்கி. (எகூ)

80.—(இ - ள்.) எங்கள் ஆச்சிரமத்து எல்லை இ இடத்து-எங்களுடைய ஆச்சிரமத்தின் எல்லையாகிய இவ்விடத்தில், எல்லை இல்லா மங்கையர் - அளவில்லாத [மிகப்பலராகிய] மாதர்கள், தவவேடத்தை தாங்கி மா தவம் செய்

வார்கள் - தவத்துக்குஉரிய வேஷத்தைத் தரித்துச் சிறந்த தவத்தைச் செய்பவர்கள், (உண்டு); அங்கு அவர் - அவ்வாறுள்ள அவர்கள், உன்னை கண்டால்—, அகம் மகிழ்ந்து உடனே கொண்டு தங்கள் ஆச்சிரமத்தே போய் - மனம்மகிழ்ந்து உடனே தங்கள் ஆச்சிரமத்துக்கு (உன்னை) அழைத்துக் கொண்டுபோய், தாங்குவர் - ஆதரித்துப் பாதுகாப்பார்கள்; தளரல் - (நீ) தளர்ச்சியடையாதே: என்றான் - என்று (முனிவர் சீதையைநோக்கிக்) கூறினார்; (எ - று.)

தவவேடம் - மரவுரியுடுத்தல் முதலியன. தளரல் - எதிர்மறையொருமையேவல்; எதிர்மறைவியங்கோளுமாம்: அல் - விகுதி. அகம் - உள்ளிடம்; அந்தக்கரண மாகிய மனத்துக்கு இடவாகுபெயர். 'அவர், தம் யோக திருஷ்டியாலே நடந்ததையெல்லா முணர்ந்து, ஜனகன்பெற்ற பொற்கொடி கதறுமிடத்திற்குத் துரிதமாவந்து, 'பெண்ணே நீ ஜனகமகாராசன் மகள்; தசரதமகாராஜன் மருமகள்; இராமசந்திரன் மனையாட்டி; பதிவிரதாசிரோமணி; உன் வரலாற்றைத் தவத்தா லறிந்தேன்; இங்ஙனம் ஆகவேண்டுவது தா னாயிற்று; நீ புலம்பவேண்டாம்; உன் மாமனாருக்கு நான் தோழனாகலின், எனக்கும் நீ மருமகளேயாகின்றாய்; ஆனதால், விசனமற்று என்னிடத்திருக்கலாம்; தவஞ்செய்யும் பெண்டிர் பலர் என் ஆச்சிரமத்தின் அருகில் இருக்கின்றனர்; அவர்களெல்லாம் உன்னை மகளைப்போலெண்ணிப் பாதுகாத்துவருவார்கள்; உனக்கு யாதும் குறைவில்லை; இதோ இவ்வாக்கியத்தைக் கைக்கொள்ளக்கடவை; குழந்தாய்! சிந்தையைவிட்டு எழுந்திரு; என் ஆச்சிரமத்திற்கு வா' என்று உபசரித்துச் சமாதானப்படுத்தினார்' என்பது, உத்தரராமாயண வசனம். (அ0)

[ஒருவாறுதேறுதலடைந்த சீதையை முனிவர் தமது பர்ணசாலைக்கு அழைத்துக்கொண்டுவருதல்.]

81.—(இ - ள்.) துங்கம் மா தவன்-சிறந்த பெரிய தவத்தையுடையவரான வால்மீகி மகாமுனிவர், இ ஆறு சொல்லிட - இப்படி சொல்ல,—(அதுகேட்டு), தூயள் - தூய்மையையுடையவளான சீதை, ஆறி - சிறிது சமாதானமுள்ளவளாய், அங்கு - அப்பொழுது [அவ்விடத்தில்], அல்லல் தீர்க்கும் அவன் அடி இணை வணங்கி நிற்ப - (எல்லாத்) துன்பங்களையும் தீர்க்கவல்ல (மகிமையையுடைய) அம்முனிவரது உபயபாதத்தை நமஸ்கரித்துநிற்க,—அ மா தவன் - அம்முனிவர், மங்கையை உடனே கொண்டு - பிராட்டியை உடனே [தன்னுடனே] அழைத்துக்கொண்டு, ஓம தூபம் தங்கிய முகடு பன்னசாலையை வந்து சார்ந்தான் - (வைதிகாக்கினியின்) ஓமப்புகை மாறாத மேலிடத்தையுடைய தமது பர்ணசாலைக்கு வந்துசேர்ந்தார்.

தூயள் - திரிகரணசுத்தியுடையாள். 'அங்கு' - அசையுமாம். நிற்ப என்றசெயவெனெச்சத்தில், ப் - எழுத்துப்பேறு.'ஓமதூமம்'என்றும் பாடம். பர்ணசாலா - வடமொழித்தொடர்: தழைக்குடிசை. (அக)

[சீதையைக் கண்டு மகிழ்ந்த தாபசிகள் சங்கித்தல்.]

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

82.—(இ - ள்.) சீதையை கண்ட மாதர் - சீதையைப் பார்த்த தவமகளிர்,—தெரித்திரர்ஆகி உள்ளோர் மா தனம் பெற்றால் போல மகிழ்ந்து - வறியராயுள்ளவர் பெருஞ்செல்வத்தைப் பெற்றால் (மிக்க மகிழ்ச்சியடைவது) போல மிக்க மகிழ்ச்சியடைந்து,—அவள் வடிவை கண்டு - அவளுடைய உருவத்தின் நிலைமையைப் பார்த்து, தீது அறு மனத்தின் மிக்க திருமகள் இவளோ என்பார் - குற்றமற்ற கருத்துடையளாய்ச் சிறந்த இலக்குமி இவள் தானோ என்பவர்களும், இ மெல் இயலாளுக்கு உள்ளே வேதனை உண்டு

என்பார் - மென்மையான தன்மையையுடையளான இவளுக்கு மனத்திலே துன்பம் உள்ளது என்பவர்களும், (எ - று.)

என்பார் - என்றுஎண்ணுபவர், அல்லது என்று சொல்லுபவர். தரித்திர ரென்பது, மோனைப்பொருத்தம்நோக்கி 'தெரித்திரர்' என எகரம் பெற்றது. மஹாதநம் என்ற வடமொழித்தொடர், மாதனமென விகாரப்பட்டது. வேதநா - வடசொல். (அ௨)

[தாபசிகள் கொண்ட சங்கையை முனிவர் தீர்க்கத்தொடங்குதல்.]

83.—(இ - ள்.) தாங்கு அரு சினத்தால் விண்ணோர் சபிப்ப வீழ்ந்தாளோ என்பார் - அடக்கவொண்ணாத கோபத்தால் தேவர்கள் சபிக்க (அதனால் நிலைதவறிக் கீழே)விழுந்திட்ட தேவமாதோ (இவள்) என்பவர்களுமாயினர்; ஆங்கு அவர் இந்த வண்ணம் ஐயுறுகின்ற காலை - அவ்விடத்திலே அத்தவப்பெண்டிர் இவ்வாறு சந்தேகப்படுகிறபொழுது,—நெடுந் தவம் முனிவன் - பெருந்தவமுடையவரான வால்மீகிமகாமுனிவர், ஈங்கு இவள் பிறப்பும் பேரும் இவள் கணவன்தன் பேரும் நீங்கள் கேண்மின்கள் என்ன - இங்குவந்துள்ளவளான இவளுடைய பிறப்பையும் பெயரையும் இவளுடைய கணவனது பெயரையும் நீங்கள் கேளுங்க ளென்றுசொல்லி, கூறும் - (அவற்றை அவர்கட்குச்) சொல்வார்; (எ - று.)—அதனை அடுத்தகவியிற் காண்க.

ஐயுறு - ஐயமுறு என்பதன் தொகுத்தல். பிறப்பு - உற்பத்தி: இன்னாருடையமகள் என்பது. (அ௩)

[முனிவர் தாபசிகட்குச் சீதையை இன்னாளென்று தெரிவித்தல்.]

84.—(இ - ள்.) மனு குலம் விளங்க தோன்றி - (வைவஸ்வத) மனுவினது குலம் விளக்கமடையும்படி (அதில்) உதித்து, மறி கடல் மலையால் கட்டி - அலைமடங்கப்பெற்ற கடலை மலைகளைக்கொண்டு அணைகட்டி (க்கடந்து), தனுவினால் - (கோதண்டமென்னும் தனது) வில்லைக்கொண்டு, இலங்கை செற்ற - இலங்காபுரியிலுள்ள அரக்கரை யழித்த, தசரத ராமன் - தசரதசக்கரவர்த்தியினது குமாரனான ஸ்ரீராமபிரானது, தேவி - தருமபத்தினியும், துனி அறு சனகன் பெற்ற தூயவள் - துன்பமில்லாத ஜநகமகாராஜன் பெற்ற பரிசுத்தியுடையவளு மாகிய, சீதை என்பாள் - சீதையென்பவள், (இவள்); இனையவள் - இத்தன்மையளானவள், கணவன்ஆனோன் துறந்திட இங்கு வந்தாள் - (ஒருகாரணத்தால்) அந்தத் தனது கணவன் தன்னை (இங்கே) விட்டிட இங்கு வந்து சேர்ந்தாள்; (எ - று.)

'தாபசிகாள்! இப்பெண் ஜனகன்புதல்வி; தசரதன்மருகி; இராகவன் காதலி; ஒருகாரணத்தால் காதலனால் இங்குவிடப்பட்டாள்' என்பது, உத்தரராமாயணவசனம்.

மறிகடல் - வினைத்தொகை. கடல் - கடலில் எனினுமாம். தனு - தநுஸ் என்ற வடசொல்லின் விகாரம். இலங்கை - இடவாகுபெயர். பரசுராமனினும் வேறுபாடு விளங்கவும், 'சக்கரவர்த்திதிருமகன்' என்ற ஏற்றம் தோன்றவும், 'தசரதராமன்' என்றது. துனி - குற்றமுமாம். 'தூயவள்' என்றது - நற்குணநற்செயல்களினாலாகுஞ் சிறப்பின் தூய்மையோடு பிறப்பின் தூய்மையையும் உடையவளென உணர்த்தும். பெருமாள்திருமொழியில் "வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி," "குரைகடலையடலம்பால் மறுகவெய்து குலைகட்டி மறுகரையை யதனாலேறி, எரிநெடுவேலரக்கரொடும் இலங்கைவேந்த னின்னுயிர்கொண்டு" என்பன இங்கு நோக்கத்தக்கன. (அ௪)

[தாபசிகள் சீதையைப் பரிபாலித்தலும், இலக்குமணன்சென்று செய்தி கூறக் கேட்ட இராமபிரான் மிகச் சோகித்தலும்.]

85.—(இ - ள்.) மா தவத்தோன் அங்கு இ வகை உரைப்ப - வால்மீகி மகாமுனிவர் அப்பொழுது இவ்வாறுசொல்ல, (அதுகேட்டு), மங்கையர் அனைவரும் மகிழ்ந்து சீதையை போற்ற - தவப்பெண்களெல்லோரும் மகிழ்ச்சிகொண்டு சீதையை உபசரிக்க,—இளையவன் - இலக்குமணன், சுமந்திரனோடும் - சுமந்திரனுடனே, திரு நகர் புகுந்து - அழகிய அயோத்தியாநகரத்தை யடைந்து, நாதனை பணிந்து - (அனைத்துக்கும்) தலைவனான இராமபிரானை நமஸ்கரித்து, செய்ததை உரைப்ப - (அவனது கட்டளைப்படி) தான் செய்து மீண்டதைச் சொல்ல, வீரன் - மகாவீரனான ஸ்ரீராமன், நாடு உளோர் சொல் பழி கேட்டு வேதனை உற்ற அன்றினும் மிக்க வேதனை பட்டனன் - நாட்டிலுள்ள சனங்கள் (சீதைவிஷயமாகச்) சொன்ன அபவாத வார்த்தையைக் கேள்வியுற்று வருத்தமுற்ற அந்நாளைவருத்தத்தினும் அதிகமான வருத்தத்தை யடைந்தான்; (எ - று.)

செய்தது - பிராட்டியைக் காட்டில் விட்டு வந்தது; ஒன்றன்பால்வினையாலணையும்பெயரென்றாவது, தொழிற்பெயரென்றாவது கொள்க. சொல் பழி - வினைத்தொகை. நாட்டுளோர் சொல்பழி கேட்டு வேதனையுற்றதை 25, 44 - ஆம் கவிகளிற் காண்க. (அரு)

[இளையபெருமாள் பெருமாளைத் தேற்றுதல்.]

86.—(இ - ள்.) துதி பழி இரண்டும் - புகழ் பழி என்னும் இரண்டையும், கேட்டது சொல்லும் - தாம் கேள்வியுற்றபடியே சொல்லுந்தன்மையதான, உலகையும் - உலகத்துச் சனங்களையும், அதன் வழி ஒழுகும் மதியையும் - அவ்வுலகத்தாரோடு பொருந்தச் சொல்லுகிற அறிவையும், நோவ அடாது - வெறுக்கத்தகாது: அங்கு - அவ்வாறே, மா சனகன் மகளையும் நோவ அடாது - (ஒழுக்கத்திற்) சிறந்தவளான ஜாநகியையும் வெறுக்கத்தகாது; அதி குணவதி ஆய் அழலினும் தூய்ய அவளையும் உன்னையும் விதித்த விதியினை நோவ அடுக்கும் - மிகநற்குணங்களையுடையளாய் அக்கினியைக் காட்டிலும் பரிசுத்தியுடையவளான அச்சீதையையும் உன்னையும் படைத்து நியமிக்கிற ஊழ்வினையையே வெறுக்கத்தகும், என்று இளையோன் விளம்பிட - என்று இலக்குமணன் (தேறுதல்) கூற, வீரன் தெளிந்தனன - இராமபிரான் (ஒருவாறு) தேறுதலடைந்தான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை. 'அங்கு' என்பதை அசையெனினுமாம்.

துதி பழி - புகழத்தக்க நற்செயலும், பழிக்கத்தக்க தீச்செயலும்; உம்மைத்தொகை. ஸ்துதி, மதி - வடசொற்கள். நோவ=நோதல். தூய்ய, தூய்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் முதல் குறுகிற்று. அழலினும், உம் - உயர்வுசிறப்பு. 'அவளையும் உன்னையும் விதித்த விதி' என்றது, திருவவதாரஞ்செய்த மனுஷ்யபாவனைக்கு ஏற்ப வென்க. அதிகுணவதி - வடசொல்.

சீதை வனம்புகு படலம் முற்றிற்று.

---

PRINTED AT THE PRESIDENCY PRESS, MADRAS.

# திருநாவுக்கரசுநாயனார் வரலாறு.

சைவசமயத்திற் சிறந்த ஆசாரியர்களென்று கொள்ளப்படுபவர் நால்வர்; அவராவார்-திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகசுவாமிகள் என்பவர்: இந்நால்வரும், சமயகுரவரென்று கூறப்படுவர்.

இவர்களில் **திருநாவுக்கரசுநாயனார், திருமுனைப்பாடிநாட்டில் திருவாமூரில் வேளாளசாதியில்** குறுக்கையர்குடியில் அவதரித்தவர். இவரது தந்தையார் - **புகழனார்.** தாயார் - **மாதினியார்.** தமக்கையார் - **திலகவதியார்.** இவரது இயற்பெயர் - **மருணீக்கியார்** என்பது. தந்தையார் மருணீக்கியார்க்கு இளமையிலேயே கல்விகற்பித்துத் திலகவதியாரை இராசசேனாபதியான கலிப்பகையார்க்குக் கொடுக்க நிச்சயித்தபின்பு, மணஞ்செய்தற்குமுன், கலிப்பகையார், அரசன்கட்டளையால் வடநாட்டுக்குச் சென்று பகைவர்களோடு நெடுநாள் போர்செய்யலானார். அக்காலத்தில் இங்கே புகழனார் இறக்க, அவர் மனைவியாரும் சககமனஞ்செய்தார். இது நிற்க: அங்கே கலிப்பகையார் போரில் இறக்க, அச்செய்திசெவியுற்ற திலகவதியார், உயிர்துறக்கத் துணிந்து, மருணீக்கியார் வேண்டியதனால் உயிர்விடாது நின்றார்.

பின்பு மருணீக்கியார் திரவியங்களைச்செலவிட்டுப் பலதருமங்கள் செய்து பிரபஞ்ச வாழ்வின் நிலையின்மையை அறிந்து இல்வாழ்க்கையிற் புகாமல் எல்லாவற்றையுந் துறந்து சகலசமயங்களுள்ளும் சற்சமயம் இன்னதென்று நாடுபவராய்ப் பாடலிபுத்திரமென்னும் நகரத்திற் சென்று அங்குள்ள சமணர்களுடைய போதனையினால் அவர்களுடைய ஆருகதசமயத்திற் பிரவேசித்து அச்சமயநூல்களைக் கற்றுணர்ந்து அம்மதாசாரியராய்த் தருமசேனரென்னும் பெயர்பெற்றொழுகுவதை, திருவதிகையிற் சென்று சிவாலயத்திலே திருத்தொண்டுசெய்துவருகிற திலகவதியார் அறிந்து, சோகித்து, வீரட்டானேசுவரர் சந்நிதியில் வணங்கி 'சுவாமீ! சமணசமயப்படுகுழியில் வீழ்ந்த அடியேனுடையதம்பியை அதினின் றெடுத்துக் காத்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, அதற்குஇரங்கிய சிவபெருமான் தருமசேனருடைய வயிற்றிலே கொடியசூலைநோயை உண்டாக்கினர். அந்நோயால் வருந்திய தருமசேனர் சமணசமயமந்திரங்களைக்கொண்டு தடுக்கமுயலவும் அந்நோய் தணியாமல் மேன்மேல்அதிகப்படுவதுகண்டு சமணர்கள் கைவிட்டபின் தமது சகோதரியார்க்குச் செய்திதெரிவித்து அவர்தம்மிடம்வராமையைத் தெரிந்துகொண்டு ஒருவர்க்குந்தெரியாமல் தாமே இரவிலே திருவதிகைசேர்ந்து திலகவதியாரைச் சரணமடைந்து அவருபதேசத்தாற் சைவசமயத்திற் பிரவேசித்து வீரட்டானேசுவரரைவணங்கி அவரருளால் தமிழ்ச்செய்யுள்பாடுந் திறமைபெற்று அவர்மேற் பதிகம்பாடியவளவில் அந்நோய்நீங்கப் பேரானந்தமடையும்போது, சிவபிரானருளால், 'நீ அற்புதமான பதிகத்தைப் பாடியதனால், உனக்கு இனி '**நாவுக்குஅரசு**' என்னும் பெயர் வழங்குக' என்று ஆகாயவாணி தோன்றிற்று. பின்பு திருநாவுக்கரசுநாயனார், மனம் வாக்குக் காய மென்னுந் திரிகரணங்களாலும் சிவபிரானுக்குத் திருத்தொண்டுசெய்யவிரும்பி, சிவத்தியானமறாதஉணர்வும், சிவஸ்துதிரூபமானவாசகமும், உழவாரப்படைகொண்டு சிவாலயங்களைப் புற்செதுக்கிச் சீர்திருத்தலும் உடையராயினார்.

இச்செய்தியறிந்த சமணர்கள் தமதுசமயத்தவனான பல்லவராசனிடஞ் சென்று நாயனார்மேற் கோள்சொல்ல, அதுகேட்ட அரசன் அவரை வருவித்து நீற்றறையி லிட, அவர் சிவபிரானைத் தியானித்துப் பாடல்பாடித் துதித்து அப்பரமனருளால் அங்குச் சிறிதும்இடையூறின்றி யிருந்தார். அது கண்ட சமணர்களும் அரசனும நஞ்சூட்ட, நஞ்சைஅமுதுசெய்த கடவுளின் அருளால் அவர்க்கு நஞ்சும் அமுதமாயிற்று. பின்பு அவர்கள் நாயனார்

மேல் யானையை ஏவ, அவர் பதிகம்பாட, அது அவரை வலஞ்செய்துவணங்கி
யெழுந்து சமணர்களைக் கொல்லத்தொடங்கிற்று. பிறகு சமணர்கள் அவரைக்
கற்றூணொடு கட்டிக் கடலிலிட்டனர். நாயனர் நமச்சிவாயப்பதிகம்பாட,
கடலிலே அக்கற்றூண் நாயனர் மேற்பக்கத்திலிருக்கத் தெப்பம்போல் மிதந்
தது. கட்டியகயிறே தானே அற்றுப்போயிற்று. சமுத்திரராசன் அக்கற்று
ணைக் கெடிலநதிமுகத்துவாரவழியாய்த் திருப்பாதிரிப்புலியூர்க்கு அருகிற்
சேர்க்க நாயனர் அங்குக்கரையேறிச் சிலதலங்களைத் தரிசித்துத் திருவதி
கைசேர்ந்ததை அறிந்த பல்லவராசனும் வந்து நாயனரைவணங்கிச் சைவ
சமயத்திற் பிரவேசித்தான். காடவனென்பவனும் பாடலிபுத்திரத்திலிருந்த
சமணர்களுடையபள்ளிகளை இடித்து அவற்றின்கற்களைக்கொண்ர்ந்து திரு
வதிகையிற் கோயில்கட்டினன்.

பின்பு நாவுக்கரசர் தலயாத்திரை செய்து ஆங்காங்குப் பதிகம்பாடுவாரா
கித் திருப்பெண்ணகடத்திற் சென்று சிவபிரானை வணங்கி 'சுவாமி! சமண
சமயச்சார்பிலிருந்த இவ்வுடலைச் சுமத்தற்கு அருவருக்கின்றேன்; தேவரீரு
டைய இலச்சினை [முத்திரை] யாகிய சூலத்தையும் இடபத்தையும் அடியே
னுடலிற் பொறித்து அதனைத் தூயதாக்கியருளவேண்டும்' என்றுபிரார்த்தி
க்க, அவ்வாறே சிவபிரானருளால் ஒருபூதம் மற்றொருவர்க்குந் தெரியாதபடி
வந்து அவ்வாகீசருடைய தோளிலே சூலக்குறியையும் இடபக்குறியையும்
பொறித்தது. பின்பு சிலதலங்களைத் தரிசித்துச் சிதம்பரத்திற்சென்று நடேச
ரைத்தொழுது அங்குச் சிலகாலம் வசித்து, திருஞானசம்பந்தமூர்த்திநாயன
ருடையமகிமையைக் கேள்வியுற்று அவரைத்தரிசிக்கவிரும்பிச் சீர்காழிக்கு
சென்று, அவர்எதிர்கொண்டுவரக் கண்டு நாவுக்கரசர் வணங்க, ஞானசம்ப
தர் 'அப்பரே! எழுந்திரும்' என்றார். அதனால், இவர்க்கு 'அப்பர்' என்
ஒருபெயராயிற்று.

சம்பந்தமூர்த்திநாயனருடைய மாளிகையிற் சென்று அவருடன் அ
வளாவிப் பலநாளிருந்தபின்பு வாகீசர் மற்றுந் தலயாத்திரைதொடங்கிச் சி
தலங்களை வணங்கிக்கொண்டு திருச்சத்திமுற்றத்திற் சென்று சுவாமிதரி
னஞ்செய்கையில், 'அடியேன்முடிமீது தேவரீர் திருவடியைப் பொறித்
வைக்கவேண்டும்' என்று பதிகம்பாடி வேண்டியதற்கு, சிவபிரான் 'திருந
லூர்க்கு வருக' என, அவ்வாறே அங்குச் சென்று சுவாமியை வண
கும்போது, சுவாமி அவர் வேண்டுகோளின்படி தம் திருவடிகளை அவ
சிரசின்மேற் சூட்டியருளினர். பின்பு அப்பமூர்த்தி, திங்களூரிற் செ
ன்று, தம்மிடத்து மிக்க அன்புள்ள அப்பூதியடிகள்நாயனரைக் கண்
அவர்மாளிகையில் அமுதுசெய்ய உடன்பட்டு, வாழையிலை கொய்
யிற்பாம்புதீண்டியிறந்த அவருடையமூத்தமகனைப் பதிகம்பாடிப் பிழை
பித்தபின்பு அமுதுசெய்து, திருப்பழனத்திற்குப் போய்ச் சுவாமிதரிசன
செய்து பாடிய பதிகத்தில் அப்பூதிநாயனரைச் சிறப்பித்துக்கூறி, பலதல
ங்களின்வழியாகத் திருவாரூரையடைந்து அங்கு நமிநந்தியடிகள்நாயனர் நீ
ரால்விளக்கேற்றியமையைச் சிறப்பித்துப்பாடித் திருப்புகலூர்க்குச் சென்
முருகநாயனருடையமாளிகையில் அங்குவந்த சம்பந்தமூர்த்திநாயனருட
தங்கியிருந்தார். இருக்குநாளில், சிறுத்தொண்டநாயனரும் திருநீலநக்கநாய
னரும் அவர்களிடத்திற்கு வந்து அவர்களோடு இருந்தார்கள்.

பின்பு அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலையை யடைந்து சிவதரிசன
செய்து அங்கு வசிக்கும்போது பஞ்சமுண்டாக, சிவபெருமான் இவ்வி
வர்க்கும் படிக்காசுகொடுத்தருள, அவ்விருவரும் அக்காசுகளைக்கொண்டு சி
வனடியார்களையெல்லாம் அமுதுசெய்வித்தனர். சம்பந்தர் தாம் பரமசிவனு
க்குக் குமாரராகையாலும் பாடல்தொண்டுமாத்திரஞ்செய்கையாலும் தாம்

ற்ற படிக்காசை வட்டங்கொடுத்து மாற்றப்பெற்ருர். அப்பரோ, தாம் அக்கடவுளுக்கு அடியராகையாலும், பாடல்தொண்டோடு கைத்தொண்டுஞ்செய்கையாலும், தாம் பெற்ற படிக்காசை வட்டங்கொடாது மாற்றப்பெற்ருர். பின்பு இருவரு[illegible]ந்தலங்களை வணங்கிக்கொண்டு வேதாரணியத்தையடைந்து ஆலயத்தினுட் புக்கு, வேதங்கள் அருச்சித்துச் சாத்தினநாள்முதல் திறக்கமுடியாமல் அடைக்கப்பட்டேயிருக்கின்ற திருக்கதவுக்குமுன் வந்து, அக்கதவை நீக்கமாட்டாமையால் அடியார்கள் வேருெருபக்கத்தில் ஓர்வாயில்விட்டு அதன்வழியே செல்கின்ருர்களென்பதைக் கேட்டறிந்தபின்பு, அக்கதவுதிறக்கும்படி அப்பமூர்த்தி திருப்பதிகம்பாடி முடித்தனர். அதன்பின்பு கதவுதிறக்க, இருவரும் சுவாமிதரிசனஞ்செய்து வெளிவந்தபின்பு அக்கதவு அடைக்கப்படும்பொருட்டுச் சம்பந்தமூர்த்தி பதிகம்பாடுகிறபொழுதே கதவு அடைத்தது. அன்றுதொடங்கி அத்திருக்கதவு திறத்தலும் அடைத்தலுமாகிய வழக்கம் என்றும் நிகழலாயிற்று. சிவபிரான் அப்பருடைய கனவில் தோன்றி ‘ நாம் வாய்மூரில் இருப்போம் வா’ என்று அருளிச்செய்ய, அப்பமூர்த்தி எழுந்து வேதாரணியத்தினின்று புறப்பட்டு விரைந்துபோக, சுவாமி அவர்க்குமுன்னுக நெடுந்தூரம் நடந்தருளி மறைந்திட, அங்குவந்த சம்பந்தர் பரமசிவனைத் தாம்தரிசித்து அப்பருங் காணும்படி காட்டினர்.

பின்பு சம்பந்தமூர்த்திநாயனுர் பாண்டியராசனுடைய மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரும், மந்திரியாராகிய குலச்சிறைநாயனுரும் அனுப்பிய தூதர்களின்வேண்டுகோளின்படி சமணர்களைவென்று சைவஸ்தாபநஞ்செய்யும்பொருட்டு மதுரைக்கு எழுந்தருள, நாவுக்கரசர் மற்றுந்தலயாத்திரைபுறப்பட்டுப் பழையாறையிற் சென்று, அங்குச் சமணர்கள் மறைத்திருந்த சிவலிங்கப்பெருமானை வெளிப்படக்கண்டு கும்பிட்டு அரசனைக்கொண்டு சமணர்களை யானைகளால்மிதிப்பித்துக் கொன்று, பரமசிவனுக்கு விமானஞ்செய்வித்தனர். பின்பு திருப்பைஞ்ஞீலிக்குச் செல்லும் வழியில், பசிதாகங்களால் மிகவருந்தியிளைத்த வாகீசருடைய களைப்பை நீக்கும்பொருட்டுச் சிவபெருமான் ஒருசோலையையுங் குளத்தையும் உண்டாக்கி ஒருபிராமணவடிவங்கொண்டு பொதிசோறுகொணர்ந்துகொடுத்து உண்பித்து, அவருடனே சென்று திருப்பைஞ்ஞீலியைச் சமீபிக்கையில் மறைந்தருளினர். அப்பமூர்த்தி அதுகண்டு திருவருளை வியந்து ஆலயத்திற்சென்று சுவாமியைவணங்கிச் சிலநாள்கழித்தபின் திருவண்ணுமலை முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு தக்ஷிணகைலாசமாகிய திருக்காளத்திமலையை யடைந்து அதன்மேலேறிச் சுவாமிதரிசனஞ்செய்து அவருடைய வலப்பக்கத்திலே நிற்கின்ற கண்ணப்பநாயனுருடைய திருவுருவத்தையும் வணங்கி, பின்பு உத்தரகைலாசத்திற் பரமசிவன்வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசிக்கவிரும்பித் திருப்பருப்பதத்தையுங் காசியையுங் கடந்து நெடுந்தூரஞ்சென்று அப்பாலிருக்கின்ற கற்சுரத்திலே காய்கனியுணவுமின்றித் திருக்கைலாசதரிசனஞ்செய்யவேண்டுமென்னும் பேராசையால் இரவும்பகலும் இடைவிடாது நடந்தார். அதனுல் அவருடைய பாதங்கள் பறடுவரைக்குந் தேய்ந்தன. தேய்ந்தும் ஆசைமேலீட்டினுற் கைகளைக்கொண்டு தாவிச் சென்ருர். அக்கைகளும் மணிக்கட்டுவரையிலுந் தேய்ந்தன பின்னும் மார்பினுல் ஊர்ந்தும் புரண்டும் போய் அதனுல் தேகமுழுதும் அரைபட, அப்பால் நகர்தற்குங்கூடாமல் வழியிலே கிடந்தார். அப்பொழுது பரமசிவன் திருவுளம்இரங்கி, இன்னும் சிலகாலம் இவரைத் தமிழ்நாட்டில் இருத்தி இவரைக்கொண்டு தேவாரப்பதிகம்பாடுவித்து அந்நாட்டிலுள்ளோரை உய்விக்கவும் இவருடையகருத்தையும் மாறின்றிமுடிக்கவுங் கருதி, அவ்விடத்தில் ஒருதடாகத்தை யுண்டாக்கி ஒருமுனிவர்வடிவங்கொண்டு அந்நாயனுருடன் சம்பாஷித்து அவருடைய

மனவுறுதியைச் சோதித்து அசரீரிவாக்கினால் 'நாவுக்கரசனே ! எழுந்திரு' என்றார். என்றவுடனே அப்பமூர்த்தி அழிந்தவுறுப்புக்களெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுச் சிறந்ததிருமேனியோடு எழுந்தனர். பின்பு சுவாமி 'நீ இந்தத்தடாகத்திலே முழுகித் திருவையாற்றை யடைந்து, நம்மைக் கைலாசகிரியில் வீற்றிருக்கின்றவண்ணமாகவே அந்தத்தலத்திலே தரிசித்து வணங்கு' என்று பணித்தருளினார். அப்பமூர்த்தி அங்ஙனமே அத்தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றிலிருக்கின்ற ஒரு வாவியினின்று கரையேறி ஆலயத்திற்குமுன் சென்று அவ்வாலயமே திருக்கைலாசகிரியாக அதனிடத்தே கைலாசபதியைத் தரிசித்தனர்.

பின்பு சிலதலங்களைத்தரிசித்துத்திருப்பூந்துருத்தியையடைந்து திருவங்கமாலை முதலிய திருப்பதிகங்களைப் பாடிக்கொண்டிருக்கையில், திருஞானசம்பந்தர் மதுரையிற் சமணரை வாதில்வென்று பாண்டியராசனுடைய கூனிமிர்த்துச் சைவத்தை நிலைநிறுத்தி மீண்டு, திருநாவுக்கரசரைக் காணவேண்டுமென்னும் விருப்பத்தால் திருப்பூந்துருத்தியைநோக்கி வந்தருளினார். அதனை அப்பமூர்த்தி அறிந்து அவரை எதிர்கொண்டுவணங்கும்படி சென்று அவரைச்சூழ்ந்துள்ள அடியார்களின்கூட்டத்தில் தம்மை ஒருவரும் இன்னாரென்று அறியாதபடி உட்புகுந்து அவர்ஏறிவரும் முத்துச்சிவிகையைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிவருகையில், சம்பந்தர் 'அப்பர் எங்கே?' என்று வினவ, அப்பமூர்த்தி 'அடியேன் தேவரீரைத் தாங்கிவரும் பெருவாழ்வைப் பெற்று இங்குள்ளேன்' என்றார். உடனே சம்பந்தர் சிவிகையினின்றும் இறங்கி அப்பமூர்த்தியோடு அளவளாவினர். பின்பு சம்பந்தர் தொண்டைநாட்டுக்குச் செல்ல, அப்பர் பாண்டியநாட்டையடைந்து மதுரையிற் சென்று சுவாமிதரிசனஞ் செய்து கூனிமிர்ந்தபாண்டியரும் பாண்டிமாதேவியாரும் குலச்சிறைநாயனாரும் வணங்கித் துதிக்கச் சிலநாள் அங்கிருந்து பின்பு மற்றுமுள்ள பாண்டிநாட்டுத் தலங்களை வணங்கி மீண்டு திருப்புகலூரையடைந்து வாய்த்தொண்டும் கைத்தொண்டுஞ் செய்து வாழ்கையில், பரமசிவன் அவ்வாகீசருடைய வைராக்கியத்தை யாவர்க்குங்காட்டத் திருவுளங்கொண்டு, அவர் உழைவாரப்படையாற் செதுக்குமிடங்களிலெல்லாம் பொன்னும் நவரத்தினங்களும் பிரகாசிக்கச் செய்ய, நாயனார் அவற்றைப் பருக்கைக்கற்களோடு சமமாக எண்ணி உழைவாரத்தில் ஏந்தி அப்பால் எறிந்துவிட்டார். பின்னும் சிவபெருமான் அவரை மயக்கும்படி தேவமாதரை யேவ, அவர்கள் வந்து அவர்முன் நின்று பாடியும் ஆடியும் பலவிநோதங்கள்செய்தும் மோகிப்பிக்க முயல, அவர் சிறிதும் மனநிலைகலங்காமல் திருப்பணியில் ஊன்றிநின்றனர். பின்பு வாகீசர் அத்தலத்திலே ஒருசித்திரைமாதத்திற் சதயநக்ஷத்திரத்திலே சிவபெருமானுடையதிருவடியையடைந்தார். இவர் நிலவுலகில் வாழ்ந்த பிராயம் - எண்பத்தொன்றென்பர்.

இவருடையகாலம் இன்னதென்று துணிவாகத் தெரியவில்லை; பலரும் பலவாறு கூறுவர். இப்பொழுதைக்கு ஆயிரத்திருநூற்றைம்பது வருஷங்களுக்குக் குறையாதென்பது, இக்காலத்து ஒருசாரார்கொள்கை. மற்றொருசாரார், மூவாயிரத்துக்குமுந்தின தென்பர்.

இவர்காலத்திலிருந்த அரசர்கள் — பல்லவராசனும், கூன்பாண்டியனென்று பெயர்பெற்ற நெடுமாறநாயனாரும்.

# தேவாரம்.

சைவசமயாசாரியர் நால்வரில் அப்பர் சுந்தரர் சம்பந்தர் என்ற மூவரும் பல தலங்களிலும் சிவபிரான்விஷயமாகப் பாடிய தோத்திரப்பாடல்களின் தொகுப்புக்குத் தேவாரம் என்று பெயர். தே– கடவுளுக்கு, ஆரம்[ஹாரம்]-மாலைபோல்வது என்று பொருள்படுகிற காரணப்பெயரென்க; அன்போடு சாத்தப்பட்ட பூமாலைபோலினிய பாமாலையென்று கருத்தாம். நான்காம் வேற்றுமைத்தொகை. ஓரெழுத்தொருமொழியாகிய 'தே' என்னும்பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் உயிர்வர வகரவுடம்படுமெய் தோன்றிற்று; [நன்–உயிர்-௧௨.] தேவஹாரம் என்ற வடமொழித்தொடர் தேவாரமென விகாரப்பட்டதென்பர் ஒருசாரார். இனி, தேவார்ஹம் என்னும் வடமொழி தேவாரமெனத் திரிந்ததாக் கொண்டு கடவுளுக்கு உரியதென்று பொருளுரைத்தலும் உண்டு; தேவ அர்ஹம் எனப் பிரியும். வேதத்திற் கூறப்பட்டுள்ள சைவசித்தாந்தமே இவற்றில் வெளியிடப்பட்டதென்ற கருத்தால் இவை தமிழ்வேதமென்றும், இவை சிவபிரானது திருவருளாற் பாடப்பட்ட பாடல்களாதலால் 'திருவருட்பா' என்றும் சொல்லப்படும்.

சைவசமயத்தில் வழங்குகிற பன்னிரண்டு திருமுறைகளுள் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரத்திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசுநாயனாரது தேவாரத் திருப்பதிகங்கள் அடுத்த மூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி நாயனாரது திருப்பதிகங்கள் ஏழாவது திருமுறையாகவும் அமைந்துள்ளன. தேவாரவேடுகளைப் பிற்காலத்திற் சிதம்பரத்திலே கண்டெடுத்தவர், அபயகுலசேகர சோழமகாராஜா. அவர்வேண்டுகோளின்படி தேவாரவேடுகளைக் கண்டுபிடித்தற்கு உதவிய நம்பியாண்டார்நம்பியே இத்தேவாரங்களைத் திருமுறைகளாக வகுத்தவர். இம்மூவர் தேவார மடங்கிய திருமுறை - அடங்கன்முறையெனப்படும். இப்பொழுது வழங்குகிற தேவாரச்செய்யுளின்தொகை-சற்றேறக்குறைய ௮000. அவற்றில், திருநாவுக்கரசு நாயனார் செய்யுளின் தொகை - சற்றேறக்குறைய ௩௧0 - பதிகங்களின் வடிவமான ௩௧00 - பாடல்களாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

நாவுக்கு அரசு என்னும் பெயர் – நாக்குக்குத் தலைவரென்று பொருள்படும். நாவினாற் சிறந்தபாடல் பாடுவதில் தலைமைபெற்றவரென்று கருத்து. 'வாகீசர்' என்ற வடமொழிப் பெயரும், இப்பொருள் கொண்டதே; வாக்-வாக்குக்கு, ஈசர் – தலைவரென்க, சுவாமிகள் - பெரியவர். திருநாவுக்கரசாகிய சுவாமிகளென இருபெயரொட்டுப்பண்புத்தொகை. சுவாமிகள், நாயனார் என்பன - ஒரு பொருளன. நாயனார் - தலைவர்; நாயன்-நாயகன் என்ற வடசொல்லின் விகாரம். 'ஆர்' என்ற பலர்பால்விகுதி, இங்கு உயர்வை விளக்கும்.

திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தில் இங்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட திருவங்கமாலை' என்ற திருப்பதிகம், நான்காந் திருமுறையில் ௯ - ஆம் பதிகமாம். இது, திருப்பூந்துருத்தியிற் பாடப்பட்டதென்பதை "செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்கமாலையு முள்ளிட், டெல்லையில் பன்மைத் தொகையு மியம்பின ரேத்தியிருந்தார்", "பொன்னி வலங்கொண்ட திருப்பூந்துருத்தி யிவரிருப்ப" என்ற பெரியபுராணத்தால் அறிக.

## திரு அங்கமாலை.

திருவங்கமாலை என்று புணரும். திரு - மேன்மையை விளக்கும் அடைமொழி. தமது தலைமுதலிய உறுப்புக்களைக் குறித்துப் பெரும்பாலுங்கூறும்

பாடல்களின் வரிசையாதலால், இப்பதிகம், அங்கமாலை யெனப் பெயர்பெற்ற தென்க. (இது, தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றான அங்க மாலையென்பதன்று; அது, மகளிரவயவங்களிற் சிறந்தவற்றையாயினும் ஆடவரவயவங்களிற் சிறந்தவற்றையாயினும் பாதாதிகேசமாகவாவது கேசாதி பாதமாகவாவது வெண்பாவினாலேனும் வெளிவிருத்தத்தாலேனும் வருணித்துப் பாடும் நூல்.) அங்கமாலை என்ற தொடரை அங்கத்தைப்பற்றிய மாலையென விரித்து, இரண்டனுருபும் பொருளுந் தொக்கதொகையென்க. இப்பதிகம், பன்னிரண்டு செய்யுளுள்ளது.

" மானிடப்பிறவிதானும் வகுத்தது மனவாக்காயத்து, ஆனிடத் தைந்து மாடு மரன் பணிக்காக வன்றோ, வானிடத்தவரு மண்மேல்வந் தரன்றனை யர்ச்சிப்பர், ஊனெடுத்துழலு மூமரோன் றையு முணரா ரந்தோ" என்று சிவ ஞான சித்தியாரிலும், " கண்ணுதலாலயநோக்குங் கண்களே கண்கள் கறைக் கண்டன்கோயில்புகுங் கால்களே கால்கள், பெண்ணொரு பாகனைப் பணியுந் தலைகளே தலைகள் பிஞ்ஞகனைப் பூசிக்குங்கைகளே கைகள், பண்ண வன்தன்சீர்பாடு நன்னாவே நன்னா பரன்சரிதையே கேட்கப்படுஞ் செவியே செவிகள், அண்ணல் பொலங்கழல் நினைக்கு நெஞ்சமே நெஞ்சம் அவனடிக் கீழடிமைபுகுமடிமையேயடிமை" என்று பிரமோத்தரகாண்டத்திலுங் கூறிய படி அருமையான மனிதப்பிறப்பையெடுத்ததற்குப் பயன் பசுபதியாகியசிவனை மனத்தினால் நினைத்தலும், வாக்கினால் துதித்தலும், கைகளாற் பூசித்தலும், கால்களாற் பிரதக்ஷிணஞ்செய்தலும், தலையினால் வணங்குதலும், கண்களால் தரிசித்தலும், செவிகளால் அவன்புகழ்கேட்டலும், மூக்கினால் அவனது நிர் மால்யமான பத்திரபுஷ்பாதிகளின் திவ்வியகந்தத்தை மோந்துநுகர்தலுமே யாதலால், அங்ஙனஞ் செய்து பயன்படுமாறு அவ்வுறுப்புக்களை வேண்டுகி றார், பெரும்பாலும் இப்பதிகத்தில்.

1.—(இ - ள்.) தலையே—! நீ வணங்காய் - நீ வணங்குவாயாக: தலை மாலை தலைக்கு அணிந்து-(பிரமர்களுடைய)தலைகளைக்கொண்டு அமைத்த மாலையைத் திருமுடிமீது தரித்து, தலையாலே பலி தேரும் -கைக்கபாலங் கொண்டு பிச்சையெடுத்துத்திரிகிற, தலைவனை - (எல்லாவுயிர்கட்குந்) தலைவனான சிவபிரானை, தலையே நீவணங்காய் - தலையே நீ வணங்குவாயாக; (எ-று.)

" கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை" என்றபடி தலைபடைத்ததற்குப் பயன் கடவுளைவணங்குதலே யாதலால், அங்ஙனம்வணங்கிப் பயன்படும்படி தலைக்கு நல்லறிவு கூறினார். சிவபிரான், சர்வசங்காரகாலந்தோறும் ஒடுங்குகிற பிரமரது தலைகளை மாலையாக அமைத்து, எப்பொழுதும் அழிவில்லாமல் எஞ்சிநின்ற பொருள் தாமொருவ னேயென்று பின்புதோன்றும் பிரமனாதியோர் அறிந்து தன்னைவழிபட்டு நற்கதியடைதற்பொருட்டுத் தலையிலும் மார்பிலும் ஆபரணமாக அணிகின்றன னென்பதுபற்றி, 'தலைமாலைதலைக்கணிந்து' என்றார்.

இரண்டாமடியிற் குறித்த கதை :—ஒருகாலத்திற்பிரமன் தானே முதற் கடவுளென்று கூறிச் செருக்குற்றிருக்கையில், சிவபிரான் தாமேமுதல்வ னென்று தெரிவிக்குமாறு திவ்வியசொரூபத்தோடு அவனெதிரில் தோன்ற, அப்பிரமனது ஐந்தாம்முகம் 'என்துநெற்றியினின்று தோன்றிய நீயோ முதல்வன்?' என்றுகூறிச்சிவனைப்பழித்தவளவில், அப்பெருமான் தனது அம்ச மான வைரவமூர்த்தியை நோக்கியருள, அவன் தனதுஇடக்கைவிரலின் நகத்துநுனியால் அவ்வைந்தாந்தலையைக் கொய்துவிட, அக்கபாலம் அப் படியே அவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும், உருத்திரமூர்த்தி தருமத்தை உலகத்தவர் அறிந்து அனுஷ்டிக்குமாறு தான்அனுஷ்டித்துக்காட்டும்படி வைரவனை நோக்கி 'இப்பாவந்தொலைய நீ பிச்சையெடுக்கவேண்டும்' என்று

உரைக்க, அவன் அங்ஙனமே பலகாலம் பலதலங்களிலுஞ் சென்று கைக்கபாலத்தோடு பிக்ஷாடனஞ்செய்துதிரிந்து பின்பு காசியைச்சேர்கையில், அந்த க்ஷேத்திரமகிமையால் உடனே கபாலம் கையைவிட்டுநீங்கிற்று என்பதாம்.

தலையே, ஏகாரம்மிக்கது - விளியுருபு. வணங்காய்-ஏவலொருமைமுற்று; ஆய் - விகுதி. தலைக்கு - நான்கனுருபு ஏழனுருபின்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். தலையால் என்ற மூன்றனுருபு, தலைகொண்டு எனக் கருவிப்பொருளில் வந்தது. ஏ-இசைநிறை. தேரும் என்ற எதிர்காலப்பெயரெச்சம்-காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற்று. பலிதேர்தல் - பிச்சையிடும் இடத்தை நாடிச்செல்லுதல். தலைவன் - தலைமையுடையவன்; தலைமையென்னும் பண்பினடியாப் பிறந்தபெயர்: வ் - பெயரிடைநிலை. உத்தமஅங்கமாகிய தலைபோலச் சிறந்தவனென்றுங் கொள்ளலாம். மீளவும் 'தலையே நீ வணங்காய்' என்றது, ஆதராதிசயத்தாற் கூறியது; அன்புபற்றிவந்த அடுக்கின்பாற்படும். இச்செய்யுளில் 'தலை'என்ற ஒருசொல் ஒருபொருளிலேயே பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி.

இப்பதிகச்செய்யுள்களின் யாப்பு, வைஷ்ணவ திவ்வியப்பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழியில் "திருத்தாய் செம்போத்தே திருமாமகள்தன்கணவன், மருத்தார் தொல்புகழ் மாதவனை வரத் திருத்தாய் செம்போத்தே" என்று தொடங்குகிற நூறும் பதிகத்தோடு ஒத்தது. இதனைக் குறள்வெண்பாவிற்கு இனமான குறட்டாழிசையின் வகைகளுள் செந்துறைச்சிதைவுகுறட்டாழிசையின்பாற் படுத்தலாம். அதனிலக்கணம், அடியிரண்டாய் அளவொத்து விழுமிய பொருளும் ஒழுகியஓசையு முடையதான குறள்வெண்செந்துறையின் இலக்கணத்திற் சிறிது சிதைந்து வருதல். இனி, ஈரடித்தாழிசைக்கொச்சகத்தின்பாற் படுத்தலும் உண்டு. (க)

2.—(இ - ள்.) கண்காள் - கண்களே! காண்மின்களோ - தரிசியுங்கள்: கடல் நஞ்சு உண்ட கண்டன்தன்னை - பாற்கடலில்தோன்றிய விஷத்தை அமுதுசெய்த கழுத்தையுடையவனும், எண் தோள் வீசி நின்று ஆடும் பிரான்தன்னை - எட்டுத்தோள்களை (எல்லாத்திசைகளிலும்) வீசிநின்று நடனஞ்செய்கிற தலைவனுமான சிவபிரானை, கண்காள் காண்மின்களோ - கண்களே தரிசியுங்கள்; (எ - று.)

கடல்நஞ்சுண்ட கதை:—திருமாலின்கட்டளைப்படி தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு பாற்கடல்கடைகையில் அதினின்றும் முதலிலெழுந்ததோர் அதிபயங்கரமான ஆலாகலமென்னும் பெருவிஷத்தைக் கண்டமாத்திரத்தில், அதன்கொடுமையைப் பொறுக்கமாட்டாமல் தேவர்கள் அஞ்சியோடிச் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் தனதுபேராற்றலால் அவ்விஷத்தை உட்கொண்டு கண்டத்தில் நிறுத்தி அனைவரையும் பாதுகாத்தருளினன் என்பதாம்.

சிவபிரான் எண்டோளுடையவனாதல், காலவிசேஷத்திலென்க; திரிபுரசங்காரகாலத்திலென்பர். (நான்குகைகளையுடைமை, பெரும்பான்மை.) தோள்வீசுதல், பவுரிசுழன்று ஆடும்போது. கண்காள் - ஈற்றயல்திரிந்த விளி. காண்மின் - ஏவற்பன்மை; கள் - விகுதிமேல்விகுதி. ஓ - இசைநிறை; ஓ கண்காள் என விளிக்கு அடையாக்குதலும் ஒன்று. கண்டம் - வடசொல். (உ)

3.—(இ - ள்.) செவிகாள் - காதுகளே! கேண்மின்களோ - கேளுங்கள்: சிவன் - (யாவர்க்கும்) மங்களத்தைச் செய்பவனும், எம் இறை - எமது தலைவனும், செம் பவளம் எரி போல் மேனி பிரான் - சிவந்த பவழமும் அக்கினியும் போன்ற செந்நிறத்திருமேனியையுடைய தலைவனுமான கடவுளி

னது, திறம் - பெருமையை, எப்போதும் - எப்பொழுதும், செவிகாள் கேண்மின்களோ - காதுகளே கேளுங்கள்; (எ - று.)

திறம் - மகிமை; திவ்வியகுணங்களும், அற்புதச்செயல்களும். போது - பொழுது என்பதன் மரூஉ. (ங)

4.—(இ - ள்.) மூக்கே—! நீ முரலாய் - நீ மோந்துஅனுபவிப்பாயாக: முது காடு உறை - மயானத்தில் வசிக்கின்ற, முக் கணனை - மூன்றுதிருக்கண்களையுடையவனும், வாக்கே நோக்கிய-(தனது) வாய்மொழியையே கருதி நிற்கிற, மங்கை - என்றும்மாறாத இளமைப்பருவத்தையுடையவளான உமாதேவியினது, மணாளனை - கணவனுமான சிவபிரானை, மூக்கே நீ முரலாய் - மூக்கே நீ மோந்துஅனுபவிப்பாயாக; (எ - று.)

'ஸர்வகந்தன்' என்னும்படி கடவுள் நெடுந்தூரமளவும்வீசும் இயற்கையான திவ்வியபரிமளத்தைத் தனது திருமேனிமுழுதிலும் உடைமையால், 'அவனை முரலாய்' என்றார். கற்பாந்தகாலத்தில் ஊழித்தீ எங்கும்பரந்து எல்லாப்பொருள்களையும் எரித்தழித்தபோது அவ்வெரிந்தவிடமெல்லாம் சுடுகாடாக, அங்குச் சிவபிரான் தனது மேம்பாடு தோன்ற அம்பிகைகாணத் திருநடனஞ்செய்கின்றன னாதலால், 'முதுகாடுறைமுக்கணன்' என்றார். முக்கண்ணன் - சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணுமாக முச்சுடரையும் மூன்றுகண்களாக வுடையவன். மனைவியாகிய அம்பிகை கணவனானசிவபிரானது திருவாய்மலரினின்று வருகிற சொல்லையே எதிர்பார்த்து அக்கட்டளைப்படி தவறாதுநடத்தலால், 'வாக்கே நோக்கிய மங்கை' என்றார்; அன்றியும், அநேகசரித்திரங்களையும் பற்பல தருமங்களையும் சிவபிரான் அன்பொடுகூற அம்பிகை ஊக்கத்தோடு கேட்டு வந்தனளென்று இதிகாசபுராணங்களிற் கூறுதலையும் உணர்க. இனி, வாக்கு என்பதற்கு - பக்கமென்று ஒருபொருளுள்ளதனால், வாக்கேநோக்கிய என்பதற்கு - இறைவனது திருவுருவத்தில் ஒருபக்கத்தையே தனக்குஇடமாகக் கருதித் தவஞ்செய்து வாமபாகத்தைப் பெற்ற என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. மணாளன்-மணவாளன் என்பதன் மரூஉ; மணத்தையாள்பவன், விவாகஞ்செய்தவன். முது காடு - உடம்பின்முடிவுக்குஇடமான காடு. (ச)

5.—(இ - ள்.) வாயே—! வாழ்த்து கண்டாய் - வாழ்த்திப் பயன்படுவாயாக: மதம் யானை உரி போர்த்து - மதங்கொண்ட யானையின் தோலை மேலேபோர்த்துக்கொண்டு, பேய் வாழ் காடுஅகத்து ஆடும் - பேய்கள்வாழ்கிற சுன்காட்டினிடத்தே நடனஞ்செய்கிற, பிரான்தன்னை - சிவபெருமானை, வாயே வாழ்த்து கண்டாய் - வாயே வாழ்த்திப் பயன்படுவாயாக; (எ - று.)

யானையுரிபோர்த்த கதை:—அருந்தவமியற்றிப் பெருவரம்பெற்ற கஜாசுரனென்பவன் தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாது வருத்தித் துரத்த, அஞ்சியோடிவந்து சரணமடைந்த அவர்களது பிரார்த்தனையாற் பரமசிவன் சென்று தன்னை யெதிர்த்துப் போர்செய்யவந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத் தள்ளிக்கொன்று தோலையுரித்துப் போர்த்தருளினனென்றபினும்; தாருவனமுனிவர் ஏவிய யானையின் உட்சென்று உருத்திரமூர்த்தி உடல்பிளந்து அதனுரிவையைப் போர்த்துக்கொண்டதென்றாயினும் கொள்க. கண்டாய் என்ற முன்னிலையொருமை இறந்தகாலவினைமுற்று, இடைச்சொல்தன்மைப்பட்டுத் தேற்றப்பொருளில் நிற்கும். உரி - உரிக்கப்படுவது; செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டது; கெடாதபோது உரிவையென நிற்கும். 'பேய்வாழ்' என்றது, முதுகாட்டுக்கு உரிய அடைமொழி. அன்றி, சிவபிரான் தனக்குஅடிமையான பூதகணங்களை உடன்கொண்டுஆடும் இயல்புபற்றி வந்த அடைமொழி யெனினுமாம். (இ)

6.—(இ - ள்.) நெஞ்சே - மனமே! நீ நினையாய் - நீ தியானிப்பாயாக: நிமிர் புன் சடை - விளங்குகிற புற்கென்றநிறமான சடையையுடைய, நின்மலனை - குற்றமற்றவனும், மஞ்சு ஆடும் மலை மங்கை மணாளனை - மேகங்கள்சஞ்சரிக்கப்பெற்ற இமயமலையினது மகளான அம்பிகையினது கணவனுமான சிவபிரானை, நெஞ்சே நீ நினையாய் - மனமே நீ தியானிப்பாயாக; (எ-று.)

நிமிர்சடை - வினைத்தொகை. புன்சடை - எளிமையைவிளக்குகிற சடையெனினுமாம்; பண்புத்தொகை. நின்மலன் என்ற வடசொல்-குற்றமற்றவ னென்று பொருள்படும். 'மஞ்சாடு' என்ற அடைமொழி, மலையின்உயர்வை விளக்கும். மலையரசனாகிய இமவான் அம்பிகையை மகளாகப்பெற விரும்பி அவ்விறைவியைக்குறித்துப் பலநாள் தவம்புரிய, அத்தவத்துக்கு உள்ளமுவந்த சங்கரி தக்ஷன்மகளாகப்பிறந்த வடிவத்தைத் துறந்தவுடனே தான் ஓர்அழகியசிறுபெண்குழந்தைவடிவமாய் அவனெதிரில் அம்மலையில் ஒருதடாகத்தில் தாமரைமலரொன்றின்மேல் தங்கியிருக்க, அப்பர்வதராஜன் அக்குழந்தையைக்கண்டு மகிழ்ந்து எடுத்துச்சென்று தன்மனைவியாகிய மேனையினிடம்கொடுத்து அவளும் தானுமாக வளர்த்துவந்தன னென்பது கதை. இங்ஙனம் பர்வதத்துக்கு மகளானதனால், உமாதேவிக்கு, பார்வதியென்று ஒருபெயராயிற்று. ஆடும்மலை - விரித்தல். (சு)

7.—(இ - ள்.) கைகாள் - கைகளே! கடி மா மலர் தூவி நின்று - வாசனையுள்ள சிறந்தபுஷ்பங்களை இட்டு அருச்சித்து நின்று, கூப்பி தொழீர் - குவித்துத்தொழுவீராக: பை வாய் - படமுள்ளவாயையுடைய, பாம்பு - நாகத்தை, அரை ஆர்த்த - இடையிற் கச்சாகக் கட்டிய, பரமனை - (யாவரினுஞ்) சிறந்தவனான சிவபிரானை, கைகாள் கூப்பி தொழீர் - கைகளே அஞ்சலி செய்து வணங்குவீராக; (எ - று.)

இரண்டாமடியிற் குறித்த கதை:—ஒருகாலத்திற் பரமசிவன் தன்னை மதியாத தாருகவனத்துமுனிவர்களுடைய கர்வத்தைப் பங்கஞ்செய்யவும், அவர்கள்மனைவிமார்களின் கற்புநிலையைப் பரிசோதிக்கவுங் கருதித் தான் ஒருவிடவடிவங்கொண்டு அவரில்லந்தோறுஞ் சென்று பிக்ஷாடனஞ்செய்து, தன்னைநோக்கிக் காதல்கொண்ட அம்முனிபத்தினியரது கற்புநிலைமையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறுமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்று செய்து அவ்வோமத்தீயினின்று எழுந்த நாகங்கள்பூதங்கள் மான் புலி முயலகன் வெண்டலை முதலியவற்றைச் சிவனைக்கொன்றுவரும்படியேவ, சிவபெருமான் தன்மேற்சீறிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தனதுகணங்களாகவுங்கொண்டு, மானைக்கையில் ஏந்தி, புலியைத் தோலையுரித்துஉடுத்து, முயலகனை முதுகிற்காலாலூன்றி, வெண்டலையைக் கையாற்பற்றிச் சடைமேலணிந்து இங்ஙனமே அவற்றையெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பதாம்.

கூப்பி-கூம்பி யென்பதன் பிறவினை. கடி-உரிச்சொல்; [நன்-உரி-கசு.] அரை-உடம்பின் நடுவிடமான உறுப்புக்கு ஆகுபெயர். பரமன்-வடசொல். (எ)

8.—(இ-ள்.) ஆக்கையால் பயன் என்-இவ்வுடம்பினாற் பயன் என்ன? அரன் கோயில் வலம் வந்து - சிவபிரானது ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ்செய்து, பூ கையால் அட்டி - பூக்களைக் கையினால் மிகுதியாக இட்டு அருச்சித்து, போற்றி என்னாத - '(என்னைப்) பாதுகாப்பாயாக' என்று சொல்லித் துதியாத, இ ஆக்கையால் - இந்த உடம்பினால், பயன் என்- (பெறப்படும்) பயன் யாதுதான்? [எதுவுமில்லை யென்றபடி]; (எ-று.)

ஆக்கை - யாக்கை யென்பதன் மரூஉ; எலும்பு நரம்பு முதலியவற்றால் ஆக்கப்பட்ட தெனப் பொருள்படுங் காரணக்குறியெனக் கொள்ளினுமாம்: ஆக்கு - பிறவினைப்பகுதி, ஐ-செயப்படுபொருள் விகுதி. ஹரன் என்ற வட

சொல் - அடியவர் துயரை யழிப்பவ னென்றும், ஊழிக்காலத்தில் அனைத்தை யும் அழிப்பவனென்றும் பொருள்படும். கோயில் - கோ+இல்; கடவுளி னது இட மென்க: சிறந்ததான இட மெனினுமாம். யகரம் பெற்றது, இலக்கணப்போலி. வலம்வருதல் - வலப்பக்கமாகச் சுற்றிவருதல். போற்றி- போற்றியஎன்னும் யகரவீற்றுவியங்கோள்வினைமுற்று ஈற்றுயிர்மெய்கெட்டுப் போற்றி என நின்றது; வாழியவென்பது வாழியென விகாரப்படுதல்போல.

9.—(இ-ள்.) கால்களால் பயன் என்—? கோகரணம் - கோகர்ணமென் னுந் தலத்தி லுள்ள, கோலம் கோபுரம் - அழகிய கோபுரத்தையுடைய, கறை கண்டன் உறை கோயில் - (நஞ்சுண்டதனாற்) கறுத்த கழுத்தையு டையனான சிவபிரான் எழுந்தருளியிருக்கிற ஆலயத்தை, சூழா - பிரதக்ஷி ணஞ் செய்யாத, கால்களால்—, பயன் என்—? (எ - று.)

கோகர்ண மென்பது - துளுவநாட்டிலுள்ள திருப்பதி. கோ - பசு, கர் ணம் - காது; இத்தலத்துக்குக் கோகர்ண மென்று பெயர் வந்ததன் கார ணத்தை "சுரபிநீள்செவி யிலிங்கச்சுடருருவாயினன்தன்,... ..ஊர் இவ வூர்" என்ற திருவிளையாடற் புராணத்தால் அறிக. கோகர்ணம், கோபுரம் - வடசொற்கள். கறை - கறுப்பு. கால் - பாதத்துக்கு எண்ணலளவாகுபெயர்.

10.—(இ-ள்.) உற்றார் ஆர் உளரோ - (ஆபத்காலத்தில் நமக்கு வந்து உதவுகிற) உறவினர் வேறு யாவர்தாம் இருக்கின்றனர்? உயிர் கொண்டு போம் பொழுது - (யமன் வந்து) உயிரை (உடம்பினின்று) வலியக் கவர்ந்து கொண்டு போம்பொழுது,குற்றாலத்துஉறை கூத்தன் அல்லால்-திருக்குற்றால மென்னுந் தலத்தில் எழுந்தருளியிருக்கிற ஆநந்ததாண்டவத்தையுடையவ னான சிவபிரா னொருவனே யல்லாமல், நமக்குஉற்றார் ஆர் உளரோ - நமக்கு அன்புகொண்டு உதவுபவர் வேறு யாவர்தாம் இருக்கின்றனர்? (எ-று.)

திருக்குற்றால மென்பது - பாண்டியநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; அத்தலத்திற் சித்திரசபையிலே திருநடனஞ் செய்கிற சிவபிரா னொருவனே தன் அடியார்களுடையகருமங்களையெல்லாம்போக்கி அவர்கட்கு அந்திமதசை நேருந்தருணத்தில் அவர்களுயிரை யமபாதைக்கு உட்படாதபடி தனது முததியுலகிற் சேர்த்துக்கொண்டருளி ஆபத்பந்துவாவன் என்பது, இப்பாட் டின் கருத்து. ("காலன்வருமுன்னே கண்பஞ்சடைமுன்னே, பாலுண்கடை வாய்படுமுன்னே—மேல்விழுந்தே, உற்றாரழுமுன்னே யூரார்சுடுமுன்னே, குற்றாலத்தானையே கூறு" என்று பட்டணத்துப்பிள்ளையார் பாடியதும் இதுபற்றியே.) நமக்கு என்ற தன்மைப்பன்மை - எல்லா வுயிர்களையும் உளப்படுத்தியது. உற்றார் - வினையாலணையும் பெயர். (௧0)

11.—(இ-ள்.) இறுமாந்து இருப்பன் கொல் ஒ - (யான் கவலைசிறிதுமின் றிப்) பேரானந்தங்கொண் டிருப்பேனோ? ஈசன் பல் கணத்து எண்ணப்பட் டு - (எல்லாப்பொருள்கட்குந்) தலைவனான சிவபிரானுக்கு (அடிமையாய் அவ னையடுத்து நிற்கிற) பலவகைக் கூட்டத்தில் (யானும் ஒருவனாகச்)சேர்த்துத் தொகையிடப்பெற்று, சிறு மான் ஏந்திதன் சேவடிக் கீழ் சென்று - சிறியமா னை(இடக்கையில்)ஏந்தியவனான அப்பெருமானது சிவந்த திருவடியில் [முத்தி யுலகத்திலே] சென்று சேர்ந்து, அங்கு - அவவிடத்தில், இறுமாந்து இருப் பன்கொல்ஒ-சிறிதுகவலையுமின்றிப்பேரானந்தங்கொண்டிருப்பேனோ!(எ-று.)

அங்ஙனம் தாம் இருக்கவேண்டுமென்று வேண்டியவாறு. ஈசன், கணம்- வடசொற்கள். ஈசன் - ஐசுவரியமுடையவன். மான், தாருகவனமுனிவர் ஏவியது. ஏந்தி, இ — கருத்தாப்பொருள்விகுதி. இறுமாந்து, இறுமா - பகுதி. (௧௧)

இப்பதிகத்தின் இறுதிச் செய்யுள் விலக்கப்பட்டது.

---

# குலசேகராழ்வார் வரலாறு.

ஸ்ரீவைஷ்ணவமதத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப் படுகிற ஆழ்வார்கள் பன்னிருவர்; அவராவார்:—பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், (அவரதுசிஷ்யரான) மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், (அவர்வளர்த்ததிருமகளாரான) ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என இவர்.* பரமபதமென்கிற ஸ்ரீவைகுண்டலோகத்தில் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயணன், பூலோகத்திலுள்ள சனங்களை உய்விக்கக்கருதி அவர்களைச் சீர்திருத்துதற்பொருட்டு ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளையும், தனது பஞ்சாயுதங்களையும், ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் வநமாலை முதலிய சின்னங்களையும், அநந்தன் கருடன் விஷ்வக்ஸேநன் முதலிய முத்தியுலகத்து அடியாரையும் பார்த்து, 'நீங்கள் ஏற்றபடி பூலோகத்தில் பலசாதிகளிலும் பிறந்து பிரபஞ்சத்தவரைப் பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றி வாருங்கள்' என்று கட்டளையிட்டுஅனுப்ப, அவர்கள் அப்பணியைத் தலைமேற்கொண்டு ஆழ்வாராதியராக அவதரித்தார்கள். இவர்கள், பகவானுடைய சகலமங்களகுணங்களாகிய அமுதவெள்ளத்திலே முழுகிமிகவும் ஈடுபட்டு நன்முக ஆழ்ந்திடுபவ ராதலால், இவர்களுக்கு 'ஆழ்வார்' என்று திருநாமம். இங்ஙனம் இந்தஉலகில் இருள்நீங்க வந்துஉதித்து அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்களுள் குலசேகராழ்வார், திருமாலின் திருமார்பில் அணியப்பட்டுள்ள ஸ்ரீகௌஸ்துபமென்னும் இரத்தினவிசேஷத்தின் திருவவதாரமாவர்.

• சேரநாட்டில் கோழிக்கூடு என்ற இராசதானியில் அரசாண்ட திருடவ்ரதனென்ற அரசன் வெகுநாளளவும்பிள்ளையில்லாத குறையால் திருமாலுக்கு விசேஷமான ஆராதனத்தைச் செய்ய, அதன்பயனால் அவனுக்கு ஒரு குமாரன் மாசிமாதத்தில் புநர்வசுநக்ஷத்திரத்தில்† பட்டத்து இராணியினிடத்தில் திருவஞ்சிக்களமென்ற ஊரிலே அவதரித்தான். அச்செய்தியை அறிந்த அரசன் ஆனந்தக்கடலில் ஆழ்ந்து, உரியகாலத்தில் நாமகரணஞ்செய்யத் தொடங்கி, இம்மகன் தன்குலத்துக்குச்சிரோபூஷணம்போலச்சிறப்புத்தந்து யாவராலுங் கொண்டாடத்தக்கவ னெனக் கொண்டு 'குலசேகரன்' எனப் பெயரிட்டான்.

பின்பு அவ்விளமகன் நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாகச் சுக்கிலபட்சத்துச் சந்திரன்போல வளர்ந்து சௌளமும் உபநயனமும் தக்கபருவங்களில் தந்தையாற் செய்விக்கப்பெற்று, ஒரு நல்லாசிரியனைத் துணைக்கொண்டு, நான்கு வேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் தநுர்வித்தையையும் மற்றும் அரசர்க்கு உரிய நீதிநூல்களையும், யானை குதிரைதேர் முதலியவற்றின் நூல்களையும் சிறிதுகாலத்திலேயே ஐயந்திரிபுஅற முற்றக் கற்று வல்லனாயினான். அம்மைந்தனது திறத்தைக் கண்டு களிப்புக்கொண்ட காவலன் அவனுக்கு இளவரசுமுடிசூட்டினன். பின்னர், குலசேகரன்,

* இவர்கள்சரித்திரத்தை, 'ஆழ்வார்கள்சரித்திரம்' என்ற வசனநூலிற் பரக்கக்காணலாம்.

† 'கலியுகம்பிறந்த உ அ -ம்வருஷமான பராபவவருஷத்தில் சுக்கிலபக்ஷத்துத் துவாதசியும் வியாழக்கிழமையுங் கூடின சுபதினத்தில்' என்று விவரம் நூல்களிற் கூறப்பட்டுள்ளது. (இப்பொழுதுநடக்கிற கலியுக வருஷம் ருOOகு ஆதலால்,இவர்பிறந்தகாலம் இப்பொழுதைக்கு சகளஎ - வருஷத்துக்குமுன் என்பர்.)

பராக்கிரமத்தாற் பகைவெல்லலுற்று, நால்வகைச்சேனையோடு புறப்பட்டுச் சென்று, சோழபாண்டியர்முதலியஅரசர்களனைவரையும் புறங்கொடுத்தோடு மாறுவென்று அவர்களைக் கீழ்ப்படுத்து அவர்கள்நாடுகளைத் தன் வசப் படுத்தி, இங்ஙனம் சேர சோழ பாண்டிய மென்னுந் தமிழ்நாடு மூன்றுக் குந் தலைமை பூண்டதனால்,*"கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழிக் கோன் குலசேகரன்" என்னும்படி பல பிருதுகளைப் பெற்று, மீண்டுவந்த னன். பிறகு த்ருடவ்ரதமகாராசா குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து இராச்சியபாரம் முழுவதையும் அம்மகன்தோளில் நிலைநிறுத்தி க்ஷத்திரிய முறைப்படியே தான் தவஞ்செய்து உயர்கதிபெறும்பொருட்டுத் தவவனஞ் சென்றான்.

தந்தையின் பிரிவுக்கு ஆற்றாது வருந்தி மந்திரிகள்தேற்றத்தேறிய மன் னவகுமாரன், நடுவுநிலைமைதவறாது, சிறியவற்றைப் பெரியவை நலியாதபடி இராமராச்சிய மென்னும்படி எதிரின்றி அரசாண்டு ஒரு பெண்மணியை மணந்து; திருமாலின் தேவிமார் மூவருள் நீளாதேவியின் அம்சமான ஒரு புத்திரியையும் த்ருடவரத னென்று பிதாமகன்பெயரையே பெற்ற ஒரு புத்திரனையும் பெற்றுக் கவலையற்றிருக்கையில், 'இம்மை மறுமை வீடு என் னும் மும்மை யின்பங்களையுந் தருபவனை முதலும் முடிவும் அற்ற முழு முதற்கடவுள் யாரோ?' என்று பரதத்வவிசாரம் பண்ணத்தொடங்கி அநேக பண்டிதர்களுடனே சுருதி ஸ்மிருதி இதிகாசம் புராணம் முதலிய சகலகலை களையும் பரிசோதித்துப் பார்த்துவர, அதுவேசமயமென்று அவ்வரசனை ஆட் கொண்டு[illegible]க்கக் கருதிய கருணாநிதியான கமலக்கண்ணனது திருவருள் நோக்கால், ஸ்ரீமகாவிஷ்ணுவேசிறந்ததெய்வமென்கிற சத்தியமான சித்தாந் தம் அவனது ஞானக்கண்ணுக்குத் தெள்ளிதிற் புலப்பட்டது.

இங்ஙனம் எம்பெருமானை எல்லாவுயிர்களுக்கும் இறைவனாக அறிந்து அப்பிரானது அநந்தகலியாணகுணகணங்களாகிய பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகிஈடுபட்ட இக்குலசேகராழ்வார், திருமாலின் விபவாவதாரங்க ளில் ஸ்ரீராமாவதார கிருஷ்ணாவதாரங்களினிடத்திலும், அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம் திருவேங்கடம் முதலிய திவ்வியதேசத்து எம்பெருமான்களிடத் திலும் மிகுந்த பக்திப்பெருங்காதல் கொண்டு, ஸ்ரீராமாயணகாலக்ஷேப த்தையே எப்பொழுதும் தமக்குப்பொழுதுபோக்காகப்பெற்றும், ஸ்ரீவைஷ் ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டு அழைத்துவந்து விசேஷமாக உபச ரித்தும், தமது திருமாளிகைத் திருவாராதநத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீராம சந்திரமூர்த்திக்கும் ஸ்ரீராஜகோபாலஸ்வாமிக்கும் நித்திய நைமித்திக உத்ஸ வங்களைக் குறைவறச்செய்துகொண்டும் இருந்தார்.

இவர், ஒருநாள் ஸ்ரீராமாயணகாலக்ஷேபஞ் செய்து வருகையில், ஆர ணியகாண்டத்தில் 'இராவணன்தங்கையானசூர்ப்பணகை மூக்குஅறுப்புண்டு (தனக்குத்துணையாக ராவணனால் நியமிக்கப்பட்டுச்)சநஸ்தாநத்திலிருந்த கர தூஷணாதியரிடத்திற் போய முறையிட்டதை யறிந்து அவர்கள் அதியுக்கிர மாக எண்ணிறந்தசேனைகளைத் திரட்டிக்கொண்டு படையெடுத்துவந்த சம யத்தில், பெருமாள், பிராட்டிக்குக்காவலாகவிருக்கும்படி இளையபெருமாளைப் பர்ணசாலையிலே நிறுத்திவிட்டு, தமக்கு ஒருவருந் துணையின்றித் தாம் தனி யே அவ்வரக்கர்களனைவரோடும் போருக்குச்சென்றுநின்றார்' என்று பௌ ராணிகர்சொல்லக்கேட்டவுடனே, ஸ்ரீராமசரித்திரத்தில்தமக்குஉள்ள மிக்க பிரீதிவிசேஷத்தால், வெகுகாலத்துக்கு முன்பு நடந்த அந்தச்சரித்திரத்தை அன்றுதான்நடக்கிறதாக நினைத்து, 'இப்படிப்பட்ட சங்கடகாலத்தில் எம் மால்இயன்றஉதவியைச்செய்யாதுவிடுவது சிறிதும்தக்கதன்று' என்றுதுணி

* பெருமாள் திருமொழி - இரண்டாந் திருப்பதிகம் - ௧௦.

ந்து, தமது சேனைகளையெல்லாம் போர்க்குச் சித்தமாய் முன்செல்லும்படி பணித்து, தாமும் ஜநஸ்தானத்தை நோக்கிப் புறப்பட்டார். அச்சமயத்தில் யாவரும் இன்னதென்று அறியாது திடுக்கிட்டு நிற்கையில், அதிநிபுணரான ஆசிரியர், 'இராமபிரான் தாம் ஒருவராகவே நிர்ப்பயமாகப் பிரயுத்தஞ் செய்து சத்துருக்க ளத்தனைபேரையுஞ் சயித்துத் தமது ஆச்சிரமத்துக்கு மீண்டுவர, அவரைச் சீதாதேவி களிப்போடு ஆலிங்கநஞ்செய்து அவரது இளைப்பைத் தணித்தாள்' என்ற செய்தியை எடுத்துக்கூற, அதுகேட்டு ஆழ்வார் ஆநந்தமடைந்து சேனையைத் திருப்பிக்கொண்டு தாமும் பிரயாணத்தை நிறுத்தினர்.

அதுமுதல் இராமாயணங்கூறுபவர் எந்தெந்தப்பாகத்தில் இராமனது விசயப்பிரஸ்தாபம் வருகிறதோ அந்தந்தப்பாகத்தையே வளர்த்துரைத்தும், அரக்கராதியோரால் இராகவபிரானுக்குத் துன்பம் நேர்ந்த இடங்களையெல்லாம் சுருக்கியுரைத்தும் வந்தனர். இப்படியிருக்கையில் ஒருநாள், அந்தக்குரு, வேறொருகாரியநிமித்தம் தாம் அவசியமாகப் பிறிதிடஞ்செல்லவேண்டிவந்ததால், காலக்ஷேபஞ்சொல்லுதற்குத்தாம்வாராமல்தமதுகுமாரரை அனுப்பினர்.

அவர், குலசேகராருடைய இயற்கையை உணராமல், இராவணன் சீதையையெடுத்துப்போன வியசனகரமான செய்தியை உபந்யாசஞ்செய்ய, அது செவியிற்பட்டவுடனே ஆழ்வார் மனங்கொதித்து 'நான் இப்பொழுதே வெகுவிரைவாகச்சென்று கடல்கடந்து இலங்கையை நீறுபடுத்தி இராக்கதராஜனைப் பந்துமித்திரரோடு போரில்தொலைத்து எனது அன்னையை மீட்டு வருவேன்' என்றுசொல்லி எழுந்து ஆயுதங்களையெடுத்துக்கொண்டு சேனாசமூகத்தோடு இலங்கையை நோக்கிப் பிரயாணமானர். அப்பொழுது, விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் இதனைக்கண்டு பெருவியப்புக்கொண்டு 'இதன்முடிவு என்னகுமோ?' என்று பெருங்கவலையோடு பார்த்து நின்றனர். ஆழ்வார் கடலை நீந்தியேகடக்க நிச்சயித்துக் கழுத்தளவினதான தண்ணீரில் இறங்குகின்ற சமயத்தில், இவரது அன்புக்கு இடமான இராமமூர்த்தி இவரைத் தடுத்தற்கு வேறுவகையொன்றும் இல்லாமையைக் கருதி, தாம் நேரிலே சீதையைக் கைப்பற்றிக்கொண்டு இலக்குமணனோடு எதிரில் வந்து நின்று தரிசனந்தந்து, தமது போர்வெற்றியையும், சத்துருவிநாசத்தையும், தேவியை மீட்டதையுந் தெளிவாகக் கூறி, பிறவிப்பெருங்கடலினின்று கரையேற்றுதற்கு ஓர்அறிகுறியாகுமாறு இவரைக் கரையேற்றி நகரினுட்செலுத்திவிட்டு, பின்பு மறைந்தருளினர்.

இப்படி எம்பெருமானுடைய திவ்வியசரித்திரங்களைக் கேட்பதில் மிக்க அன்பையுடைய குலசேகரர், புராணங்களிற் கூறப்பட்ட ஸ்ரீரங்கக்ஷேத்திர மகிமையைக் கேட்டு, 'திருவரங்கத்தைநோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லுதலும், அத்திருப்பதிக்குச் செல்லவேண்டுமென்ற விருப்பமும், சகலகருமங்களையுந் தொலைக்கும்' என்ற தன்மையையும், 'அக்கோயிலில் நித்தியவாசஞ் செய்தலும், நம்பெருமாளைக் கண்ணாரக் கண்டு களித்தலும், பேரின்பத்தைத் தரும்' என்ற தகைமையையும் உணர்ந்து, அங்குப் போதற்கு மிகுந்த குதூகலமுடையராய்ப் பரிவாரங்களோடு புறப்படுபவரானர்.

இவர் இவ்விடத்தை விட்டு அவ்விடத்துச்சென்று பெரியபெருமாளைச் சேவிப்பராயின் பின்பு இங்குமீளுதலரிதென்றும், அங்குத்தானே நித்தியவாசஞ் செய்யக்கருதிவிடுவ ரென்றுங் கருதி அந்த யாத்திரையைத் தடுத்தற்கு ஆலோசித்து மந்திரிகள் ஒருபாயம் செய்தார்கள்; அது யாதெனில்:—இவர் ஸ்ரீவைஷ்ணவர்களை உபசரிப்பதில் மிக்கவிருப்பமுள்ளவ ராதலால், அநேக பாகவதர்களை அமைச்சர்கள் வரவழைத்து இவர்முன் செலுத்த, இவர் 'அறுபதினயிரம்வருஷகாலம் விஷ்ணுவை ஆராதனஞ்செய்த பயனும், ஒருகால்

வைஷ்ணவர்களைப் பூசித்த பேற்றுக்கு ஈடாகாது' என்றசாஸ்திரமுறைமையை யறிந்தவராதலால், ஸ்ரீரங்கயாத்திரையை நிறுத்தி, சோடசோபசாரத்தோடு திருமாலடியார்களைப் பலவாறு உபசரித்தார். இவ்வாறு இவர் திவ்விய தேச யாத்திரை தொடங்கும் பொழு தெல்லாம் மந்திரிகள் மெய்யடியார்களைக் கொண்டுவிட்டுத் தடுத்துவந்தனர். ஆழ்வார் இங்ஙனம் அவர்களை அகங்களிந்த அன்போடு கொண்டாடி வருகையில், அந்நாடெங்கும் ஸ்ரீவைஷ்ணவர் திரள் மிகுந்தது.

அரண்மனையினுள்ளும் ஆலோசனைசபாமண்டபத்திலும் இன்னும்அந்தரங்கமான இடங்களிலும் பாகவதர்கள் எக்காலத்திலுஞ்சிறிதுந்தடையின்றிப் போக்குவரவு செய்தலையும் தமது அரசன்பக்கல் இவர்கள் வரம்புகடந்த சுவதந்திரம் பாராட்டுதலையுங் கண்டு பொறாமைகொண்ட மந்திரிகள், இவர்களிடத்துக் குலசேகரர்க்கு வெறுப்பையுண்டாக்கக்கருதினர். இவவாறிருக்கையில், அனைவருங்கொண்டாடத்தக்க ஸ்ரீராமநவமிமகோத்ஸவம்வந்தது. அதன் பொருட்டு, தோரணம்நாட்டியும், துவசங்களைக்கட்டியும், வாழைமரங்களை நிறுத்தியும் நகர்முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. பின்பு திருக்கோயிலில் அர்ச்சகர், இராமமூர்த்திக்கும் மற்றும் விக்கிரகரூபமாயுள்ள எம்பெருமான்களுக்கும் திருமஞ்சநஞ்செய்தற்பொருட்டு அவர்களுடைய திவ்வியாபரணங்களையெல்லாங் களைந்துவைத்தனர். பின்பு வேதகோஷத்தோடும் வாத்திய கோஷத்தோடும் திருமஞ்சனம் நடந்தேறிற்று. அச்சமயத்தில் யாவரும் சுவாமிசேவையிலே கருத்துஊன்றியிருக்கையில், மந்திரிகள், ஒரு நவரத்தின மாலையைத் திருவாபரணத்திரளிலிருந்துஒளித்துவைத்திட்டனர். பின்பு பெருமாளுக்கு அலங்காரஞ் செய்யும்பொழுது அவ்வணிகலத்தைக் காணமல் அர்ச்சகர் கவலைப்பட்டு அரசரிடத்து அறிவிக்க, அதுகேட்டு ஆழ்வார் மனங்கலங்கி மந்திரிகளைஅழைப்பித்து 'கள்வனை விரைவில் தேடிப்பிடியுங்கள்' என்று கட்டளையிட்டார். அதுவே வியாஜமாக அவர்கள் 'இது கொண்டுபோன்வர் வைணவரேயன்றி வேறு எவருமல்லர்; இவர்களே எப்பொழுதும் இங்கு எங்கும் தட்டின்றித் திரிகிறவர்; பிறனொருவன் புதியனாய் வந்து அஞ்சாது இத்தொழில் செய்யான்' என்று பாகவதர்மீது அடாப்பழிசுமத்தினர். நாராசம்புக்கதுபோல அக்கடுஞ்சொல் செவிபுகப்பெற்ற ஆழ்வார் அரிபக்தர்களது நற்குணநற்செய்கைகளை நன்றாக அறிந்தவராதலால், அவர்கள்மேற் சற்றும் சங்கைகொள்ளாமல், அவர்கள்மேற் குற்றங்கூறின தமது மந்திரிகளையே கடிந்து 'வைஷ்ணவசிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய கடுந்தொழிலை நினைத்தலுஞ் செய்யார்; இது திண்ணம்; இதை உங்களுக்குஉறுதிப்படுத்தும் பொருட்டு, யானே பிரமாணங்காட்டுவேன்' என்று சொல்லிப் பாம்பையுள்ளிட்டதொரு குடத்தைச் சபைமுன்பே தருவித்து 'ஸ்ரீவைஷ்ணவர் மனம் மொழி மெய் யென்னுந் திரிகரணத்தாலும் சுத்தராயின், இப்பாம்பும் என்னை யாதொன்றுஞ் செய்யாது; இல்லையாயின் இந்நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லுக' என்றுசபதஞ்செய்து அக்குடத்தினுள்ளேகையிட்டனர். அப்பொழுது, சத்தியத்துக்குக் கட்டுப்படுந்தன்மையதான சர்ப்பம் சிறிது கொடுமையும் புரியாது தணிந்திருந்தது. அதுநோக்கி, அமைச்சர்கள், தமது சூழ்ச்சி கிஞ்சித்தும்பலியாதுவிட்டதேயென்றுவருத்தமும், தேர்ந்தஆராய்ச்சியின்றி இங்ஙனந் தவறுசெய்துவிட்டோமே யென்று கழிவிரக்கமும், இனி நமது கதி என்னாகுமோ வென்று பேரச்சமுங் கொண்டு, நடுநடுங்கி, தாம்கவர்ந்திட்ட அந்த ஆபரணத்தை உடனே கொணர்ந்து சமர்ப்பித்து, தாம் அறியாதுசெய்த அப்பெரும்பிழையைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்து, ஆழ்வாரது திருவடித்தாமரைகளைச் சரணமடைந்தார்கள். ஆழ்வார் மிக்க பொறுமையுடையவராதலால் அமைச்சர்கள்பிழையைப் பொறுத்து, 'இனி

நீவிர் பாகவதர்களுக்கு எப்பொழுதும் பணிவிடைசெய்வதே, நுமது குற்றம் தீரும் வகை' என்று சொல்லி விட, அவர்கள் அங்ஙனமே அடியவர்க்குஅடியராய்க் குறிப்பறிந்து குற்றேவல்புரிந்து பேறுபெற்றனர்.

பின்பு குலசேகரர் பொய்ம்மைக்கு இடமான அரசாட்சியில் இருத்தற்கு இஷ்டப்படாமல் தமது குமாரனை த்ருடவ்ரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்துத் தாம் திருவரங்கம்பெரியகோயிலுக்குச் சென்று நம்பெருமாளைச் சேவித்து, அவ் வழகிய மணவாளனையே தனக்குஉரிய மணவாளனாகக்கருதிய தந்திருமகளை அவ்வெம்பெருமானுக்கே யுரியபொருளாகக் கொடுத்து, பகவத்பாகவதகைங்கரியங்களை விதிமுறைவழுவாது நித்தியமுஞ்செய்து கொண்டு அத்திருப்பதியிற் சிலகாலம் இருந்தனர்.

பிறகு மற்றுஞ்சில திவ்வியதேசங்களுக்கும் யாத்திரைசெய்ய எண்ணி, திருவேங்கடம், திருவயோத்தி, தில்லைத் திருச்சித்திரகூடம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலை, திருவித்துவக்கோடு முதலிய திருப்பதிகளுக்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளியிருக்கின்ற பெருமாளைக் கண்ணாரக்கண்டு சேவித்து, அப்பால், நம்மாழ்வாரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூருக்கு அருகிலுள்ள பிரமதேசமென்னும் ஊரை யடைந்து, அங்கு ஸ்ரீராஜகோபாலஸ்வாமிசந்நிதியிற் சிலகாலம் திருத்தொண்டு செய்துகொண்டிருந்து, தமது அறுபத்தேழாவது பிராயத்திற் பரமபதமடைந்தனர்.

இவர் எம்பெருமானை அனுபவிக்கும்போது அவ்வநுபவத்தாலாகிய ஆனந்தம் உள்ளடங்காமையால் அதனை வெளியே வழியவிடுவாராகி அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்கள் - **முகுந்தமாலை**யென்னும் வட நூலும், **பெருமாள்திருமொழி** யென்னுந் தமிழ் நூலுமாம். இவற்றால், இவர் வடமொழி தென்மொழியிரண்டிலும் வல்லவரென விளங்கும்.

* "அரசமர்ந்தானடிசூடுமரசையல்லா லரசாக வெண்ணேன் மற்றரசுதானே" என்று கோவிந்தபாதாரவிந்தத்தைச் சிரமேற்கொள்ளுதலையே கிரீடாபிஷேகமாகப் பாவிக்கிற இவர், பெருமாளுடைய [இராமபிரானுடைய] இன்பதுன்பங்களைத் தமது சுகதுக்கங்களாகக் கருதியதனால், இவர்க்கு '**பெருமாள்**' என்றும் ஒரு பெயர் வழங்கும்.

இவ்வாழ்வார் † "**செடியாய** வல்வினைகள் தீர்க்குந் திருமாலே, நெடியானே வேங்கடவா **நின்கோயிலின்வாயில்**, அடியாரும் வானவரும் அரம்பையருங் கிடந்தியங்கும், **படியாயக் கிடந்து உன் பவளவாய் காண்பேனே**" என்று வேண்டியமைபற்றி, விஷ்ணுவாலயங்களிற் கோயிலினுள்வாயிற்படி '**குலசேகரன்படி**' என்று வழங்கப்படும்.

‡ "இன்னமுத மூட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோ னெங்கள்
குலசேகர னென்றே கூறு."

§ "ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன் மாற்றலரை
வீரங்கெடுத்த செங்கோற் கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே."

---

* பெருமாள் திருமொழி - பத்தாந் திருப்பதிகம் - எ.
† பெருமாள் திருமொழி - நான்காந் திருப்பதிகம் - க.
‡ தனியன் ; உடையவர் அருளிச்செய்தது.
§ தனியன் ; மணக்கால்நம்பி அருளிச்செய்தது.

# பெருமாள் திருமொழி.

குலசேகரப்பெருமாளுடைய சிறந்த வார்த்தை யென்பது, இதன்பொருள்; பெருமா ளென்னும் மறுபெயரையுடைய குலசேகராழ்வார் திருவாய் மலர்ந்தருளிய பிரபந்த மென்பது, கருத்து. குலசேகராழ்வார்க்கு 'பெருமாள்' என்ற திருமாலின் பெயர் வழங்கிய காரணம், வரலாற்றில் விளக்கப்பட்டது. திரு மொழி என்பது - மேன்மையான சொற்களினாலாகிய நூலைக் குறித்தலால், அடையடுத்த கருவியாகுபெயராம். பெருமாள் திருமொழி யென்ற தொடர் - ஆறும்வேற்றுமைத்தொகையும், திருமொழியென்பது-பண்புத்தொகையுமாம். பெருமாள்=பெருமான; பெருமையையுடையவன். இதில், பெருமையென்ற பகுதி, ஈற்று ஐகாரம் மாத்திரம் கெட்டு, பெரும் என நின்றது. 'ஆன்' என்ற ஆண்பால்விகுதி, 'ஆள' என ஈறுதிரிந்தது;* 'ஆள்' என்ற பெண்பால்விகுதியே சிறுபான்மை ஆண்பாலுக்குவந்ததென்றலும் ஒன்று;† அன்றி, பெருமையை ஆள்பவனெனக்கொண்டால், ஆள் என்ற வினைப்பகுதி கருத்தாப்பொருள்விகுதிபுணர்ந்துகெட்ட தென வேண்டும். திரு - உயர்வை விளக்கும் அடைமொழி. இனி, பெருமாள் திருமொழி யென்பதற்கு - திருமாலினவிஷயமான திவ்வியப்பிரபந்த மென்றும் பொருள்கொள்ளலா மாயினும், அது சம்பிரதாயமன்று; அன்றியும், அங்ஙனம் பொருள்கொள்ளுமிடத்து, இத்தொடர்மொழி, வைஷ்ணவதிவ்வியப்பிரபந்தங்களுக்கெல்லாம் பெயராகத்தக்கதாய், இந்த ஒரு பிரபந்தத்துக்குக் காரணப்பெயராதற்கு ஏலாதாம். 'பெரியாழ்வார்திருமொழி', 'நாச்சியார் திருமொழி' என்ற இடங்களிற் போல, 'பெருமாள திருமொழி' என்ற பெயரிலும், தொக்குநின்ற ஆறும்வேற்றுமையுருபு - செய்யுட்கிழமைப்பொருளதென அறிக. திருமொழியென்பதை, மேன்மையையுடையசொல் என, இரண்டாம்வேற்றுமையுருபும்பயனுந்தொக்கதொகை யாகவுங் கொள்ளலாம்.

இப்பிரபந்தம், பத்துப்பதிகங்களாக அமைந்த ௧0௫ - செய்யுளுள்ளது. வைஷ்ணவசம்பிரதாயத்தில் வகுக்கப்பட்டுள்ள தமிழ்வேதமாகிய நாலாயிர திவ்வியப்பிரபந்தத்துள் ‡முதலாயிரத்தில் மூன்தாவது பிரபந்தமாகிய இது, ஸ்ரீராமாயணஸார மெனப்படும்.

இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை யென்ற பூர்வாசாரியர் மணிப்பிரவாளநடையில் சிறந்த வியாக்கியானஞ் செய்துள்ளார் §

---

* 'பெருமாள் என்னும் பதம், பெருமையுடையானென்னும் பொருள் தோன்ற நின்ற பெருமானென்னும் பதத்தினது இறுதி ஆன்விகுதி ஆள் விகுதியாய் ஒரோவிடங்களில் திரிந்து ஆண்பாலையே உணர்த்திநின்றது'— நன்னூல் விருத்தியுரை.

† சீவகசிந்தாமணியுரையில், நச்சினார்க்கினியர், "பெருமான்" என்பதற்குப் பெண்பாலாகப் பொருளுரைத்தவிடத்து 'பெருமான் - னஃகானொற்று மகடூஉ வுணர்த்திற்று' என்றதுகொண்டு, பெருமாள் என்பதில் ளஃகானொற்று ஆடூஉ உணர்த்துதல் அறிக.

‡ முதலது - முதலாயிரம்; இரண்டாம் ஆயிரம் - பெரியதிருமொழி; மூன்றும் ஆயிரம் - இயற்பா; நான்காம் ஆயிரம் - திருவாய்மொழி.

§ இந்த வியாக்கியானத்தைத் தழுவி வேறு விஷயங்களையுஞ் சேர்த்து இவ்வுரை எழுதப்படுகிறது.

## பத்தாந் திருமொழி.

இங்குத் தேர்ந்தெடுத்த இப்பதிகம், இந்நூலின் ஈற்றுப்பதிகமாம். செய்யுளைப் பாசுரமென்றும், பத்து அல்லது பதினொரு செய்யுள் கொண்டதாகிய தசகமென்னும் பதிகத்தைத் திருமொழியென்றும் கூறுவது, வைஷ்ணவ சம்பிரதாயம்.

திருமகள்கணவனும் ஞானாநந்தசொரூபியும் சகலகுணபரிபூர்ணனும் பரமபதத்துக்கும் மற்றைய பிரபஞ்சத்துக்குந் தலைவனும் எல்லாவற்றினும் மேம்பட்ட முழுமுதற்கடவுளுமாகிய திருமால் இயல்பிலே தனக்கு அடிமையான உயிர்களையெல்லாம் ஆட்கொண்டு உய்விக்கும்பொருட்டுப் பரமகிருபையால் (பயிர்செய்பவன் பயிர்த்தலையிலே குடில்கட்டிக்கொண்டு அதில் இருந்து அப்பயிரைப் பாதுகாப்பதுபோல) இந்நிலவுலகத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிற திவ்வியதேசங்கள் நூற்றெட்டினுள் சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் தில்லைத்திருச்சித்திரகூடம் என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கிற அந்தஎம்பெருமான் விஷயமானது, இத்திருப்பதிகம். செல்வச்செருக்காலும் அதிகாரத்தாலும் அகங்காரமமகாரங்களை அடைதற்கு உரிய இராசகுலத்திலே பிறந்திருந்தும் பகவானுடைய கருணையினாலும் ஆசாரிய உபதேசத்தாலும் அந்தத்துரபிமானங்கள் சிறிதும் இல்லாது ஒழியப் பகவானிடத்திற் பக்தியையும் அப்பெருமானது அடியார்களிடத்திற் பிரதிபத்தியையுமே மிகுதியாகப் பெற்றவரான குலசேகராழ்வார், "கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ" என்றபடி இராமாவதாரவைபவத்தில் மிகவும் ஈடுபட்டவராய் எப்பொழுதும் அதனையே அநுசந்திப்பவராதலால், அச்சக்கரவர்த்தித்திருமகன் பிற்காலத்திலுள்ளார்க்குச் சேவைசாதிக்கும்படி அர்ச்சாவிக்கிரகரூபமாக நித்தியவாசம் பண்ணுகிற திருச்சித்திரகூடமென்கிற திருப்பதியின் விஷயமாகத் திருவவதாரந் தொடங்கி அந்த ஸ்ரீராமசரித்திரத்தை ஸ்ரீவால்மீகிபகவான் பேசியனுபவித்தாற்போலத் தாமும் பேசியனுபவிக்கிறார். ஆதலால், இத்திருமொழி, ஸ்ரீராமாயண சங்கிரகமெனப்படும்.

திருச்சித்திரகூடத்தில் சாத்துவிக விமானத்தில் க்ஷீராப்திநாதன்போலச் சயனத்திருக்கோலமாகச் சிவபிரானது நடனத்தைப் பார்த்து ஆமோதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிற மூலமூர்த்தியின் திருநாமம் - கோவிந்தராசப்பெருமாள், தேவாதிதேவன். நாச்சியார் திருநாமம் - புண்டரீகவல்லி. நடராசனாகிய சிவபிரானுக்கும், தில்லைமூவாயிரவர்க்கும், கண்ணுவ மகாமுனிக்கும் பிரதியக்ஷம். இங்கு, உத்ஸவமூர்த்தி, ஸ்ரீராமபிரான் வனவாசஞ்செய்கையிற் சித்திரகூட பருவதத்தில் வீற்றிருந்த வண்ணமாக எழுந்தருளியிருக்கின்றனர். (காவேரிக்கு வடக்கில் நிவாநதியினருகிலுள்ளதான இத்தலம், சைவசமயத்தில் சிதம்பரமென்றும், கோயிலென்றும் வழங்கப்படும்.)

இத்திருப்பதிகம், எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தத்தாலமைந்தது.

**இப்பதிகத்தின் பயன்.**—"நல்லியலின் தமிழ்மாலை பத்தும் வல்லார் நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே" என இறுதிச்செய்யுளிற் காண்க.

1.—(இ - ள்.) அம் கண் - அழகிய இடத்தையுடையதும், நெடு மதிள் புடை சூழ் - உயர்ந்த மதில்களினால் நாற்புறமும்சூழப்பட்டதுமான, - அயோத்தி என்னும் அணி நகரத்து - அயோத்தியென்று பிரசித்தமான அழகிய நகரத்திலே, உலகு அனைத்தும் விளக்கும் சோதி - சகலலோகங்களையும் விளங்கச் செய்கிற தனது ஒளியின் அம்சத்தால், வெம் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்கு ஆய் தோன்றி - உஷ்ணமான கிரணங்களையுடைய சூரியனது குலத்துக்கு (விளக்கமுண்டாகுமாறு) ஒப்பற்றதொரு விளக்குப்போல அதில்வந்து அவதரித்து, விண் முழுதும் உய [உய்ய] கொண்ட - தேவர்களெல்லோரையும் துன்பந்தீர்த்து வாழச்செய்த, வீரன் தன்னை - மகாவீரனும், செம் கண்-

சிவந்த திருக்கண்களையுடைய, நெடு கரு முகிலை - பெரியகாளமேகம்போன்ற வடிவமுடையவனும், இராமன் தன்னை - ராமனென்னும் திருநாமமுடையவனும், தில்லைநகர் திரு சித்ரகூடந் தன்னுள் - தில்லைநகரத்திலுள்ள திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கிற, எங்கள் தனி முதல்வனை - எமக்கு ஒப்பற்ற காரணமாகிறவனும், எம்பெருமான் தன்னை - எமக்குத் தலைவனுமான பரமனை, கண் குளிர காணும் நாள் - கண்கள் குளிரும்படி தரிசிக்கும் நாள், என்று கொல் ஓ - எந்நாளோ? (எ - று.)—ஏ - ஈற்றசை. என்று என்பது - வினாப்பொருளை யுணர்த்தியதனால், கொல் என்ற இடைச்சொல்- அசை; ஓ - இரக்கம்.

திருச்சித்திரகூடத்திலெழுந்தருளியுள்ள எம்பெருமானுடைய வைபவத்தைப் புராணாதிகளிற்கண்டும் அறிந்தோர்சொலலக்கேட்டும உணர்ந்த ஆழ்வார், உடனே அங்குச் சென்று அப்பெருமானைக கண்ணாரக் கண்டு களிக்கக் கருதினராயினும், இராசசியபரிபாலன காரியங்களால் அங்ஙனம் உடனே செல்லமாட்டாது வருந்திநிற்கிற நிலையில், 'அவனைக் காணப்பெறுதே விடாய்த்த கண்களானவை கண்டு விடாய்தீர்ந்து கண்படைத்த பயன் பெறலாவது என்றோ ?' என்கிறார். இதனால், காணப்பெறும் நாள் முன்ன நாளென்று எல்லைதெரிந்தாலும் காணப்பெற்றதனோடொப்ப மகிழும்படியுள்ளது இவரது ஆதராதிசய மென விளங்கும்.

'அங்கண்' என்ற அடைமொழி, அயோத்தியாநகரத்தின் பலவகைச் சிறப்பையும் விளக்கும். அயோத்யா என்ற வடசொல் - போர்செய்து வெல்ல முடியாததென்று பொருள்படும். இதனால், அந்நகரம் கோட்டை மதிள் அகழி ஆயுதம் சேனை முதலியவற்றால் மிக்ககாவலையுடையதென்றும், அந்நகரத்தரசர்கள் எவராலும் வெல்லப்படாமல் யாவரையும் வெல்லவல்லவரென்றும் விளங்கும். 'உலகனைத்தும் விளக்கும் சோதி' - சூரியன் சந்திரன் அக்கினியென்னும் முச்சுடரின் ஒளியும் மின்மினியெனத்தக்க பெருஞ்செழுஞ் சுடர்ப்பரஞ்சோதி என்க. "ஆதியஞ்சோதியுருவை யங்குவைத திங்குப் பிறந்த" என்றபடி தன் அடிச்சோதியின் அம்சத்தால் அவதரித்ததனால், 'சோதி விளக்காய்த் தோன்றி' என்றார். விளக்கு - பொருள்களை விளங்கச்செய்வது. இராவணன் முதலிய இராக்கதர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் சரணமடைந்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யுமாறு பிரார்த்தித்த தேவர்களின் வேண்டுகோளின்படி திருமால் தனது அம்சத்தைக் கொண்டு சூரியகுலத்தில் இக்ஷ்வாகுமரபில் தசரதசக்கரவர்த்திகுமாரனாய் அவதரித்து அரக்கரையழித்து அமரரைப் பாதுகாத்ததனால், 'விண் முழுதுமுய்யக்கொண்ட வீரன்' என்றார். வீரன் தன்னை, முகிலை, இராமன் தன்னை, முதல்வனை, எம்பெருமான் தன்னை என்பன-ஒருபொருளின்மேல வந்த பலபெயர்கள்; 'காணும்' என்னும் முடிக்குஞ்சொல்லைக் கொண்டன. செங்கண் - உத்தம இலக்கணமாகிய சிவந்த ரேகைகளையுடைய கண்; செந்தாமரைமலர்போன்ற கண். நீர்கொண்ட கரியமேகம், எம்பெருமானுக்கு நிறத்தில மாத்திரமேயன்றி, கைம்மாறு கருதாது கருணைமழை பொழிதலிலும் உவமையாம். சித்ரகூட மென்பது - அழகிய சிகரமுடையதென்று பொருள்படும்; இது, எம்பெருமான் தேவர்களும் முனிவர்களுஞ் சூழக் கொலுவிருந்த சபை. இத்திருப்பதியுள்ள இடம் ஆதியில் பரமபதத்திலுள்ள தில்யாரண்யம்போலத் தில்லையென்னும் மரம் அடர்ந்த காடாயிருந்து பின்பு நகரமானதனால், 'தில்லைநகர்த் திருச்சித்ரகூடம்' எனப்பட்டது; அன்றியும், வடநாட்டிலுள்ள சித்திரகூடபருவதத்தினும் வேறுபாடு விளங்க, 'தில்லைநகர்த் திருச்சித்ரகூடம்' என வேண்டிற்று. எங்கள், எம் என்ற தன்மைப் பன்மைகள் - எல்லாவுயிர்களையும் உளப்படுத்தும்.

வெங்கதிரோன் குலத்துக் கோர் விளக்காய்த்தோன்றி - 'ஜகத்திலந்தகாரமெல்லாம் நீக்கக்கடவ ஆதித்யன் வம்சத்திலே அவனைப்போலே இரவு கலவாதே அத்விதீயமான தேஜஸ்ஸாய் வந்து உதித்து' என்ற வியாக்கியான வாக்கியம் அறியத்தக்கது.

'தன்' என்றது, நான்கிடத்தும் சாரியை. மதிள்=மதில்: இறுதிப்போலி. ஆய் - உவமவுருபு. விண்-இடவாகுபெயராய்த் தேவசாதியை உணர்த்திற்று. உய - தொகுத்தல்விகாரம். முகில் - உவமையாகுபெயர். சித்ரகூடம்-வடசொல் திரியாது நின்றது. முதல்வன், வ - பெயரிடைநிலை. (க)

2.— (இ-ள்.) வந்து எதிர்ந்த தாடகைதன் உரத்தை கீறி - செருக்கி வந்து எதிரிட்ட தாடகையின் மார்பைப் பிளந்து, வரு குருதி பொழிதர-இரத்தம் வெளிவந்து சொரியும்படி, வல்கணை ஒன்று ஏவி-வலியஒப்பற்றதோர் அம்பைச் செலுத்தி, மந்திரம் கொள் மறை முனிவன் வேள்வி காத்து - எல்லா மந்திரங்களையும் தம்மிடத்திலேகொண்ட வேதங்களின்வழியே விசுவாமித்திரமகாமுனிவன் செய்த யாகத்தைப் பாதுகாத்து, வல் அரக்கர் உயிர் உண்ட-(அந்தயாகத்துக்குஇடையூறுசெய்தசுபாகுமுதலிய)வலியஇராக்கதர்களை அழித்த,மைந்தன் - இளமையையும் வலிமையையும் உடையவன், (யாரென்னில்),—செம் தளிர் வாய்-சிவந்த தளிர்களின் நடுவே, மலர்-மலர்ந்த பூக்களையுடையதும்,நகை சேர் - (காண்பவர்)மகிழும்படியானஅழகுபொருந்தினதும், செழு - செழுமையையுடையதுமான, தண் - குளிர்ந்த, சோலை - சோலைகளையுடைய, தில்லை நகர் திரு சித்ரகூடந்தன்னுள் - தில்லை நகரத்திலுள்ள திருச்சித்திரகூடத்திலே, அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த - பிராமணர்கள் மூவாயிரம்பேர் (திரண்டு) துதிக்க, அணி மணி ஆசனத்து இருந்த - அழகிய இரத்தினசிங்காசனத்திலே (தன் மேன்மைதோன்றச் சித்திர கூட பருவதத்திற்போல) வீற்றிருந்த, அம்மான் தானே - சருவேசுவரனேயாவன்; (எ-று.) —காண்மின் - அறியுங்கள்; இது - தேற்றப்பொருளை விளக்கிநின்றது. இனி, சித்ரகூடந்தன்னுள்இருந்தஅம்மான் தான் மைந்தனே அறிமின் என்றுமுடித்து உரைப்பினுமாம்.

தாடகை - சுகேதுவென்னும் யக்ஷனது மகள்; சுந்தனென்பவனது மனைவி; ஆயிரம்யானை வலிமை கொண்டவள். கணவன் அகஸ்தியமகாமுனியின் கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரானதை யறிந்த இவள், தன் புத்திரர்களாகிய சுபாகு மாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச்சென்ற பொழுது அவனிட்டசாபத்தால் தன் மக்களோடு இராக்கதத்தன்மையடைந்தனள். பின்பு முனிவர்களுடைய யாகாதிகளைக் கெடுக்கிற இவர்களை யழித்துத் தன்வேள்வியைக் காக்கும்பொருட்டு விசுவாமித்திரமுனிவன் தசரத சக்கரவர்த்தியினிடம் அநுமதிபெற்று இளம்பிராயமுடைய இராமலக்குமணரை அழைத்துக்கொண்டுபோனபொழுது, அம்முனிவனுச்சிரமத்துக்குச் செல்லும் வழியிடையிலே வந்து எதிர்த்த தாடகையை ஸ்ரீராமன் முனிவனது கட்டளைப்படி பெண்ணென்று பாராமற் பொருது கொன்றருளினதுமன்றி, பின்பு விசுவாமித்திரமாமுனி செய்த யாகத்தில் தீங்குவிளைக்கவந்த சுபாகு முதலிய பல அரக்கர்களையுங் கொன்று, மாரீசனை வாயவ்யாஸ்திரத்தாற் கடலிலே தள்ளிவிட்டு யாகத்தை நிறைவேற்றுவித்தன னென்ன வரலாறு அறிக. வசிஷ்ட மகா முனிவனது தவவலிமையை ஒருகால் கண்டு அவ்வாற்றலே சிறந்த தென்றும், மற்றைய ஆற்றல்களெல்லாம் சிறப்பில்லாதன வென்றுந் துணிந்து அரசாட்சியை விட்டு நாற்றிசையுஞ் சென்று பற்பல இடையூறுகளைக் கடந்து நெடுங்காலந் தவம்புரிந்து முடிவில் தான் முன்புகருதிய பிரமவிருடிப்பட்டத்தைப் பெற்ற பெருஞ்சிறப்புடைய ஞாதல் தோன்ற, கௌசிகனை 'மந்திரங்கொள்மறைமுனி

வன்' என்றனரென்னலாம். மறை - (சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவு மாகாதென்று) மறுக்கப்படுவது; அன்றி, (எளிதில் அறிய வொண்ணாத) மறைந்த பொருளை யுடையது. முனிவன் - மனநசீலன்; (எப்பொழுதுங் கடவுளைத்) தியானஞ் செய்பவன். மாரீசனை உயிரோடு விட்டதையுஞ் சேர்த்து 'வல்லரக்கருயிருண்ட' என்றது - பின்பு அவன் பிழைத்திருந்த இருப்பு இறந்தது போன்றதே யென்ற கருத்தினாலென்பர். ('மாரீசன் பட்டானேவென்னில் - பின்னையிருந்த இருப்பு ம்ருதப்ராயனென்று கருத்து' என்பது, வியாக்கியானவாக்கியம்.) தண் சோலை - அங்குவருவார்க்குச் சிரமந்தீர்க்கிற சோலை. அந்தணர்கள் ஒருமூவாயிரவர் - தில்லைமூவாயிரவர்; "மூவாயிரநான்மறையாளர் நாளும் முறையால் வணங்க வணங்காயசோதிச், தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லைத்திருச்சித்ரகூடஞ் சென்று சேர்மின்களே" என்பர் திருமங்கையாழ்வாரும். இவர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள். அந்தணரென்பது, அம் தண் அர் என்று பிரிந்து - அழகிய குளிர்ச்சியான அருளையுடையவ ரென்றும்; அந்த அணை, அர் என்று பிரிந்து - அந்தத்தை அணவுவார் அதாவது வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவ ரென்றும் பொருள்படும். இது, பிராமணர்க்குக்காரணவிடுகுறிப்பெயர். அம்மான்-அந்தமஹாந்: அப்படிப்பட்ட தலைவன்.

உரஸ், மந்த்ரம், முநி, தேஜஸ், மணி, ஆஸநம் - வடசொற்கள். பொழிதர, தா - துணைவினை. காண்மின் - ஏவற்பன்மைமுற்று. தன்வாய், வாய் - ஏழனுருபு. செழுந் தண் சோலை - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். அந்தணர்கள், கள் - விகுதிமேல்விகுதி. (உ)

நான்காம் அடியில் 'எவ்வரு' எனப் பாடங்கொள்க.

3.—(இ - ள்.) செவ் வரி - (உத்தமஇலக்கணமான) சிவந்த இரேகைகள் படர்ந்த, நல்-அழகிய, கரு-கருமையான, நெடு-நீண்ட, கண்-கண்களையுடைய, சீதைக்கு ஆக - சீதையைமணஞ்செய்துகொள்ளும்பொருட்டு, சினம் விடையோன் சிலை இறுத்து - கோபத்தையுடைய ரிஷபத்தை வாகனமாகவுடைய சிவபிரானது வில்லை எளிதில் முறித்து,—(பின்பு மிதிலாபுரியினின்று மீளும் வழியில்), மழு வாள் ஏந்தி-கோடாலியாகிய ஆயுதத்தை யேந்தியவனான பரசுராமனுடைய, வெவ் வரி நல் சிலை-பயங்கரமான கட்டமைந்த சிறந்த வில்லை, வாங்கி-கையிற் கொண்டுவளைத்து, வென்றி கொண்டு-அவனை வென்று, வேல் வேந்தர் பகை தடிந்த- (தான்திருவவதாரம் பண்ணின சாதியரான) வேற்படையையுடைய க்ஷத்திரியர்களுக்குப்பகைமையைத்தீர்த்த, வீரன் தன்னை-மகாவீரனை,—தெவ்வர் அஞ்சு - பகைவர்கள் (கண்டமாத்திரத்திலே கடக்கவொண்ணாதென்று) அஞ்சும்படியான, நெடு புரிசை - உயர்ந்த மதிலையும், உயர்ந்த பாங்கர் - ஓங்கிய (அட்டாலை யென்னும்) மதிற்பக்கத்திடத்தையுமுடைய, தில்லை நகர் திரு சித்ரகூடந்தன்னுள் - தில்லைநகரிலுள்ள திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கிற, எவ்வரு வெம் சிலை தட கை இராமன் தன்னை - (வேறொருவரால்) அடக்கியாளுதற்கு அரியதும் (பகைவர்க்குப்) பயங்கரமுமான வில்லை யேந்திய பெரிய கையையுடைய இராமபிரானை, இறைஞ்சுவார் - வணங்குகிற அடியார்களுடைய, இணை அடியே - இரண்டு திருவடிகளையே, இறைஞ்சினேன் - வணங்கினேன்; (எ - று.)

ஜநகமகாராசன் தனதுகுலத்துப் பூர்விகராசனை தேவராதனிடம் சிவபிரானால் வைக்கப்பட்டிருந்ததொரு பெரியவலியவில்லை யெடுத்துவளைத்தவனுக்கே தன்மகளான சீதையைக் கலியாணஞ்செய்துகொடுப்பதென்று கந்யாசுல்கம் வைத்திருக்க, வேள்விமுடித்த விசுவாமித்திரனுடன் மிதிலைக்குச் சென்ற ஸ்ரீராமன் அவ்வில்லை யெடுத்து வளைக்கத்தொடங்குகையில் அது முறிந்திட, அதனால் சனகன் இராமனுற்றலைக்கண்டு மிக்ககளிப்புக்கொண்டு

சீதையை இராமனுக்கு மணஞ்செய்யலாயின னென்றும்; சீதாகலியாணத்தின்பின் தசரதசக்கரவர்த்தி திருக்குமாரர்களுடனே மிதிலையினின்று அயோத்திக்கு மீண்டுவருகையில், பரசுராமன் வலியச்சென்று எதிர்த்து 'முன்பு ஹரிஹரயுத்தத்தில் இற்றுப்போன சிவனதுவில்லை முறித்த திறமையை அறிந்தேன்; இந்த ஸ்ரீமகாவிஷ்ணுவினது வில்லை வளை, பார்ப்போம்' என்று அலட்சியமாகச்சொல்லித் தான் கையிற்கொணர்ந்த ஒரு தநுசை இராமன்கையிற் கொடுக்க, அப்பெருமான் உடனே அதனைவாங்கி எளிதில் வளைத்து நாணேற்றிக் கணைதொடுத்து 'இவ்வம்புக்கு இலக்கு என்?' என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்திரியவம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம்பூண்டவனுமா யிருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்தமாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினனென்றும் வரலாறு அறிக. சந்திரவமிசத்துடபிறந்த அரசனும் பலபராக்கிரமங்களிற் சிறந்தவனுமான கார்த்தவீரியார்ச்சுனன் ஜமதக்நிமுனிவனது பசுவைக் கவர்ந்தது காரணமாக அம்முனிவனது குமாரனான பரசுராமன் அவ்வருச்சுனனைக் கொன்றுவிடவே, அவனது குமாரர்கள் பழிக்குப்பழிவாங்கவேண்டுமென்று நிச்சயித்துப் பரசுராமனில்லாத சமயம்பார்த்துப் பாணசாலையினுட் சென்று ஜமதக்நிமுனிவனைத் தலைதுணித்துப் போக, பின்பு வந்த பரசுராமன் செய்தியறிந்து அவ்வருச்சுனகுமாரர்கள்மீதும் க்ஷத்திரியசாதியாரனைவர்மீதும் பெருஞ்சினங்கொண்டு அவர்களையெல்லாம் அழித்தொழித்து அநேக க்ஷத்திரியவம்சவிநாச காரணனாயினனென்பதும்; ஜமதக்நிமுனிவனைக் கார்த்தவீரியார்ச்சுனகுமாரர் தலைதுணித்தபோது அவனதுமனைவியான ரேணுகாதேவி இருபத்தொருமுறை தன்மார்பில் அடித்துக்கொண்டு புலம்பினமைபற்றி அரசர்களை இருபத்தொருதலைமுறை பரசுராமன் ஒழித்திட்டனனென்பதும் இங்கு அறியத்தக்கன. க்ஷத்திரியகுலதிலகனான தசரதராமன் அவ்வம்சநாசகனான பரசுராமனை வென்றடக்கியது, பழிக்குப்பழிவாங்கினதாகக் கூறப்பட்டது. விஷ்ணுவின் ஆறாம்அவதாரமான பரசுராமனும், ஏழாம் அவதாரமான தசரதராமனும் ஒருவரோடொருவர்பொருதலும், அவர்களில் ஒருவர் மற்றொருவனை வெல்லுதலும் பொருந்துமோ வெனின்,—துஷ்டர்களாய்க் கொழுத்துத்திரிந்த அரசர்களைக் கொல்லுதற்பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்தி அக்காரியம்முடிந்தபின்பு அவ்விஷ்ணுவின் அவதாரமான தசரதராமனாற் கவர்ந்துகொள்ளப்பட்டதாதலிற் பொருந்துமென்க. இதனால், ஆவேசாவதாரத்தினும் அம்சாவதாரத்துக்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

இங்குக்குறித்த இரண்டுவிற்களின் வரலாறு:—முன்னொருகாலத்தில் தேவசில்பியான விசுவகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்தஇரண்டுவிற்களுள் ஒன்றைச் சிவபிரானும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக்கொண்டார்கள். பின்பு ஒருகாலத்தில் அவ்விற்களுட் சிறந்தது இன்னதென்பதை அறியவிரும்பிய தேவர்களின் வேண்டுகோளாற் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரை மூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக் கொண்டு பொருகையில், சிவபிரானது வில் சிறிதுமுறிபட்டது; அவ்வாறு இற்ற வில்லைச் சிவபெருமான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்சபரம்பரையாய்ச் சனகமகாராசனளவும் வந்தது. இது நிற்க; இருந்த வலியவில்லை விஷ்ணு ரிசீகமுனிவனிடங் கொடுத்துச் செல்ல, அது அவன்குமாரனான ஜமதக்நியினிடத்தும், அவன்குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது. இந்தவில்லைக்கொண்டுதான் இராமபிரான் கரன்முதலாக அரக்கர்பலரையும் அழித்திட்டனன்.

செவ்வரி - செம்மை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் முன்நின்ற மகரமெய் வகரமாத்திரிந்தது. நற் கரு நெடுங் கண் - பண்புத்தொகைப்பன் மொழித்தொடர். 'சீதைக்காக'என்பதில், 'ஆக' என்பது - பொருட்டுப்பொருளில் குவ்வுருபின்மேல் வந்த நான்காம்வேற்றுமைச்சொல்லுருபு; 'ஆகி' என்ற பாடத்துக்கு, எச்சத்திரிபென்க: [நன் - வினை - உஎ.] விடை - வ்ருஷ மென்ற வடசொல்லின் சிதைவு. மருவாள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஏந்தி - பெயர்; இதில், இ - பெயர்விகுதி. வென்றி - தொழிற்பெயர்; வெல் - பகுதி, றி - விகுதி, லகரம் னகரமானது - சந்தி வெல்வது வேலெனக் காரணக்குறி; இது, மற்றைஆயுதங்களுக்கும் உபலக்ஷணம். வீரன் தன்னை என்பது - 'இராமன் தன்னை' என்பதற்கு விசேடணம். தெவ் - பகைமை: உரிச்சொல்; அதனையுடையவர், தெவ்வர். பாங்கு என்ற மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு 'அர்' போலி. எவரு என்பது, எதுகைநோக்கி 'எவ்வரு' எனக் குறுக்கலும் விரித்தலுமாகிய விகாரங்களை யடைந்தது. எவு-ஏவுதல்: அடக்கியாளுதல்; முதனிலைத் தொழிற்பெயர்: நான்காம்வேற்றுமைத்தொகை. திருமாலின்வில் சார்ங்க மென்றும், இராமபிரான்வில் கோதண்ட மென்றும் பெயர்பெறும். தட - உரிச்சொல். இணையடி - உபயபாதம். அடியே, ஏ - பிரிநிலை. இராமனுக்கு அடியவனான பரதனுக்கு அடிமைபூண்டொழுகின சத்ருக்நன்போலப் பாகவததாசனாகவேண்டு மென்னும் அவாவினால், 'இராமன் தன்னையிறைஞ்சுவாரிணையடியே யிறைஞ்சினேன்' என்றார்.

'எவ்வரி' என்ற பாடத்துக்கு - ஏவரி யென்பது எவ்வரி யென்று விகாரப்பட்டதெனக்கொண்டு, ஏ - அம்புதொடுத்தற்குஉரிய, வரி - நீண்ட என்று நலிந்துபொருள்கொள்ளலா மாயினும், அது, 'வேறொருத்தரால் அடக்கியாளவொண்ணாதே காணவேப்ரதிபக்ஷம்முடியும்படியான ஸ்ரீசார்ங்கம்' என்ற வியாக்கியானத்துக்குச் சேராதாம். (௩.)

4.—(இ - ள்.) தொத்து அலர் - கொத்துக்கொத்தாக மலர்ந்த, பூ - மலர்களைச்சூடிய, சுரி குழல் - நுனிசுருண்ட கூந்தலையுடைய, கைகேசி - கைகேயினது, சொல்லால் - சொல்லின்படி, தொல் நகரம் துறந்து - தொன்றுதொட்டுப் பரம்பரையாய்வருகிற இராச்சியத்தைக் கைவிட்டு, துறை கங்கைதன்னை - கங்கையின் துறையை, பத்தி உடை குகன் கடத்த - (தன்பக்கல்) மிக்கபக்தியையுடைய குகன் புணைசெலுத்தியுதவ, (கடந்து), வனம் போய் புக்கு - காட்டிற்போய்ச்சேர்ந்து, பரதனுக்கு பாதுகமும் அரசும் ஈந்து- (தம்பியான) பரதனுக்கு (த்தனது) மரவடியையும் இராச்சியத்தையுங் கொடுத்து, சித்திரகூடத்து இருந்தான் தன்னை - சித்திரகூடமலையிலே எழுந்தருளியிருந்த ஸ்ரீராமபிரானை, இன்று - இப்பொழுது [பிற்காலத்தில்], தில்லை நகர் திருச்சித்ரகூடந்தன்னுள் - தில்லைநகரத்திலுள்ள திருச்சித்திரகூடத்திலே, கண் குளிர காண பெற்ற - கண்கள்குளிரும்படி தரிசிக்கப்பெற்ற, இரு நிலத்தார்க்கு - பெரிய [சிறந்த] பூலோகத்தி லுள்ளவர்களுக்கு, இமையவர் - பரமபதத்திலுள்ள நித்யசூரிகளும், எ தனையும் நேர் ஒவ்வார் - சிறிதும் சமமாகமாட்டார்; (எ - று.)—தாம், ஏ - ஈற்றசைகள்; தேற்றமுமாம்.

சீதாகலியாணத்தின்பிறகு தசரதர் இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய யத்தனிக்கையில், மந்தரைசூழ்ச்சியால் மனங்கலக்கப்பட்ட கைகேயி தன்கொழுநரான தசரதரை நோக்கி முன்பு அவர் தனக்குக்கொடுத்திருந்த இரண்டுவரங்களுக்குப் பயனாகத் தன்மகனான பரதனுக்குப் பட்டங்கட்டவும், கௌசலியைமகனான இராமனைப் பதினான்குவருஷம் வனஞ்செலுத்தவும் வேண்டுமென்று சொல்லி வற்புறுத்த, அதுகேட்டு வருந்தின தசரதர் சத்தியவாதியாதலால் முன்பு அவட்கு வரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமலும் இராமனிடத்து உள்ள மிக்க அன்பினால் அவ்வரத்தை நிறை

வேற்றுமாறு சொல்லவும் மாட்டாமலும் கலங்கி வாய்திறக்கமாட்டாதிருக்கிற சமயத்தில், கைகேயி இராமனை வரவழைத்து 'பிள்ளாய்! உங்கள் தந்தை பரதனுக்கு நாடுகொடுத்துப் பதினான்குவருடம் உன்னைக் காடேறப் போகச் சொல்லுகிறார்' என்றுசொல்ல, அச்சொல்லைத் தலைமேற்கொண்டு அந்த மாற்றாந்தாயின் வார்த்தையையும் அவட்குத் தனதுதந்தை கொடுத்திருந்த வரங்களையும் தவறாது நிறைவேற்றி மாத்ருபித்ருவாக்கியபரிபாலநஞ் செய்த வினிமித்தம் இராமபிரான் இலக்குமணனோடும் சீதையோடும் வனவாசம் புறப்பட்டு அயோத்தியைவிட்டுநீங்கிக் கங்கைத்துறை சேர்கையில் வேடர்க்குஅரசனான குகனோடு நட்புக்கொண்டு சடைமுடிபுனைந்து அவனாற்செலுத்தப்பட்ட ஓடத்திலேறிக் கங்கையைக்கடந்து சித்திரகூடபருவதஞ் சேர்ந்தனன்; அங்ஙனம் இராமன் வனம்புகுந்தசெய்தியை மந்திரியாகிய சுமந்திரன் வந்து கூறினவுடனே உயிர்துறந்த தசரதசக்கரவர்த்தியின் திருமேனியைத் தைலத்திலிட்டு வசிஷ்டர்முதலியோர், தனதுமாமன்வீட்டுக்குச் சென்றிருந்த பரதனுக்குச் செய்திதெரிவிக்க, உடனே அவன் சத்துருக்கினனுடன் கேகயநாட்டிலிருந்து அயோத்திக்கு வந்து அங்குநிகழ்ந்ததை யறிந்து, இராமன் வனம்புக்கமைக்கு மிகவருந்தித் தந்தைக்குஉரிய அந்திமகிரியைகளைச் செய்துமுடித்து இராமனை அழைத்துவந்து முடிசூடுவிக்கக் கருதித் தான் அரசியலைத்துறந்து மரவுரிபுனைந்து தாய்மார்முதலியவரோடு சேனைசூழ வனம்புகுந்து குகனுடைய அபிமானத்தைப் பெற்று அவனுதவியால் ஓடமேறிக் கங்காநதியைத் தாண்டிச் சித்திரகூடத்தில் ஸ்ரீராமனைக் கண்டு திருவடிதொழுது செய்தியைக்கூற, இராமமூர்த்தி, தந்தை திருநாடலங்கரித்த தறிந்து சோகித்துச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்துமுடித்து, தன்னைமுடிசூடவேண்டுமென வேண்டிய பரதனுக்குப் பதினான்குவருடங் கழித்தபின் வருவதாகக் கூறி அதுவரை அரசாளுமாறு நியமித்துப் பாதுகையை அளித்து அனுப்ப, பரதாழ்வான் மீண்டு சென்று, இராமனில்லாத அயோத்தியாநகரத்தினுட் புகுதற்கு மனம்விரும்பாமல் அந்நகரத்தருகிலுள்ள நந்திக்கிராம மென்னும் ஊரில் தங்கி அங்கு ஸ்ரீராமபாதுகைக்குப் பட்டாபிஷேகம்பண்ணி அதற்குக் கீழ்ப்பட்டு நின்று இராசாங்ககாரியங்களைப் பார்த்துவருவானாயினன் என வரலாறு அறிக.

இராமாவதாரத்திலே சித்திரகூடபருவதத்தில் எழுந்தருளியிருந்த இருப்பைப் பிற்பட்டார் கேட்டுஅனுபவிக்கப்பெறுவதே யன்றித் தாம் கண்டு அனுபவிக்கப்பெறாமற் கண்விடாய்த்துநிற்கிற குறை தீர எக்காலத்திலுமுள்ளார் அனுபவிக்கைக்காக அங்ஙனமே தில்லைத்திருச்சித்திரகூடத்தில் வீற்றிருக்கின்றன னென்பது, பின்னிரண்டடிகளின் உட்கோள். இருநிலம்-எம்பெருமான்உகந்தருளின திவ்வியதேசங்கள் பலவற்றை யுடைமையால் சிலாக்கியமான பூமி. இமையவர்-கண்இமையாதவர்; எப்பொழுதும் எம்பெருமானையே தரிசித்துக்கொண்டிருப்பவர்; அகநோக்காகியஞானக்கண் குவியாதவர். பரமபதத்தில் எம்பெருமானைத் தரிசித்தற்குப் பிரதிபந்தக மொன்று மில்லாமையாலே அங்கு அவனைக் கண்டு ஆனந்தித்தலையே பொழுதுபோக்காக வுடைய முத்தியுலகத்துஅடியார்களினும், அக்காட்சிக்குத்தடையான வேறு விஷயங்கள் பலவற்றையுமுடைய இவ்வுலகத்திலேயே அவற்றையெல்லாம்விட்டு எம்பெருமானைக் காண்கிறவர்கள் மேம்பட்டவ ரென்பது கருத்து. 'தொத்தலர்பூஞ்சுரிகுழற்கைகேசி' என்றது, தனது செயற்கையழகினாலும் இயற்கையழகினாலும் தன்கணவனைத் தான்சொன்னவண்ணம் கேட்டொழுகும்படி வசப்படுத்தியவ ளென்றபடி. கைகேயீ என்ற பெயர் - கேகயதேசத்தரசனது மக ளென்று பொருள்படும்; வடமொழித் தத்திதாந்த நாமம். 'கைகேசிசொல்லால் தொன்னகரம் துறந்து' என்றது, இவள்சொ

ன்ஞ ளென்று போகவேண்டிய அவசிய மில்லாமையைக் காட்டுகிறது. துறை - இறங்குதுறை. பரதன் என்ற பெயர் - இராச்சியபாரத்தை நிர்வகிக்க வல்லவ னென்று உறுப்புப்பொருள்படும். இராமன் வனவாசஞ்செல்லத் தசரதன் சுவர்க்கம்புக அரசனில்லாதிருந்த இராச்சியத்தை இவன் பாதுகாக்கும்படி நேரிடுவதை முன்னமே ஞானக்கண்ணினால அறிந்து வசிஷ்டமுனிவர் இவனுக்கு இத்திருநாமமிட்டனர்.

பூஞ்சுரி - பூப்பெயர்முன் இனமென்மைதோன்றிற்று. உடை - உடைய என்பதன் விகாரம். இமையவர் - எதிர்மறைஆகாரம் புணர்ந்துகெட்டது; இமையில் விசேஷமுடையவர் அதாவது மூடாதஇமையை யுடையவ ரென்று கொண்டால், உடன்பாட்டுப்பெயராம். எத்தனையும் கண்குளிர என இயைத்து, மிகுதியாகக் கண்குளிர என்றுஉரைத்தலும் ஒன்று. இருங்கலம் - பண்புத்தொகை; இருமை - பெருமை. (௪)

5 —(இ - ள்.) வலி வணக்கு - (எதிரிகளுடைய) வலிமையைத் தோற்பிக்கின்ற, வரை நெடு தோள் - மலைபோன்ற பெரிய தோள்களையுடைய, விராதை - விராதனென்னும்அரக்கனை, கொன்று—,—வண் தமிழ் மா முனி கொடுத்த - சிறந்ததமிழ்ப்பாஷைக்கு உரியவரான அகஸ்தியமகாமுனிவர் கொடுத்த, வரி வில் - கட்டமைந்த வில்லை, வாங்கி - பெற்று,—கலை வணக்கு நோக்கு அரக்கி மூக்கை நீக்கி - மானின்பார்வையைத் தோற்பிக்கும்படியான பார்வையழகையுடையளாய்வந்த சூர்ப்பணகையென்னும் ராக்ஷசியினுடைய மூக்கை யறுத்து,—கரனொடு தூடணனதன் உயிரை வாங்கி-கரன் தூஷணன் என்னும் அரக்கர்களின் உயிரை (அவர்களுடம்பினின்று) கவர்ந்து,—மான் மறிய-(மாரீசனாகிய மாய)மான்அழியும்படி, சிலை வணக்கி எய்தான்தன்னை - தனது வில்லை வளைத்து அம்பெய்தவனை இராமபிரானை, தில்லை நகர் திருசித்ரகூடந்தன்னுள் —, தலை வணக்கி கை கூப்பி ஏத்தவல்லார்-தலையை நிலத்திலேபடியவைத்துக் கைகுவித்து நமஸ்கரிக்கவல்ல அடியார்கள், திரிதலால் - (தன்மீது) சஞ்சரிக்கப்பெறுதலால், தரணி தவம் உடைத்து - பூமியானது பாக்கியத்தையுடையது; (எ-று.)—தான், ஏ - அசைகள்; தேற்றமுமாம்.

விராதனென்னும் வடசொல்லுக்கு - மிகுதியாய் அபராதஞ்செய்பவனென்பது பொருள். இவன், முதலில் தும்புருவென்னும் பெயருள்ள கந்தருவனாயிருந்து பின்பு குபேரனதுசாபத்தால் இராக்கதனாகி வனத்தில் திரிந்துவந்தவன். இராமலக்ஷ்மணர் சீதையுடன் தண்டகாரணியத்திற் செல்லுகையில், இவ்வரக்கன் வந்து சீதையைத் தூக்கிக்கொள்ள, கண்டு இராமலக்ஷ்மணர் எதிர்க்க, இவன் அவளைவிட்டு அவர்களைத் தூக்கிக்கொண்டு செல்ல, இராகவவீரர் இவனைத் தோள்களை வெட்டிக் கொல்லும்பொழுது, இவன் தனதுபிறப்பை யுணர்ந்து பிரார்த்தித்தபடி பள்ளந்தோண்டி இவனுடம்பைப் புதைத்துச் சென்றனர்.

இராமபிரான் பரசுராமனிடமிருந்து விஷ்ணுதனுசைப் பெற்று அவனை வெற்றிகொண்டபோது அங்குவந்து தன்னைக்கொண்டாடிய தேவர்களுள் வருணனிடத்திலே அவ்வில்லைக் கொடுத்து அதனை நன்குகப் சேமித்து வைத்திருந்து உரியசமயத்தில் தன்னிடம் கொணர்ந்துகொடுக்குமாறு சொல்ல, அங்ஙனமே அதனை வாங்கிச்சென்று நன்குபாதுகாத்துவைத்திருந்த வருணன், பின்பு ஸ்ரீராமன் வனவாசம்புக்குத் தண்டகாரணியத்தில் அகஸ்தியாச்சிரமத்துக்கு எழுந்தருளினபொழுது, கராதிராக்ஷஸவதம் நெருங்கிற்றென்பது கருதி இராமனுக்குச் சமர்ப்பிக்கும்படி அவ்வில்லைக்கொணர்ந்து அகஸ்தியமுனிவரிடம் கொடுக்க, அதனை அம்பறாத்தூணியுடனும் வாளுடனும் அம்முனிவர் தர, பெருமான் பெற்றுக்கொண்டனன்.

வனவாசம்புக்க இராமலக்ஷ்மணர், சீதையுடனே கோதாவரிநதிதீரத்திற் பஞ்சவடியாச்சிரமத்தில் வசித்தபொழுது, அவர்களைக் கண்டு காதல்கொண்ட இராவணன்தங்கையானசூர்ப்பணகை,அவர்களிடம் தனித்தனி வந்து தன்னை மணம்புணரும்படி பலவாறு வேண்டவும்,அவர்கள் உடன்படாததனால்,அவள் 'சீதையை அகற்றிவிட்டால் இராமன் என்னை மணம்புரிதல் கூடும்' என்று எண்ணித் தனிப்பட்ட சமயம்பார்த்துப் பிராட்டியையெடுத்துச்செல்லமுயன்ற போது, இலக்குமணன் கண்டு ஓடிவந்து சூர்ப்பணகையை மறித்து அவளது மூக்குங் காதும் முதலிய சிலஉறுப்புக்களை அறுத்துவிட்டனன். இங்ஙனம் இவளை அங்கபங்கப்படுத்தியது இளையபெருமாளின்செய்கையாயினும் அதனைப் பெருமாள்மேல் ஏற்றிச் சொன்னது. இராமனதுகருத்திற்கு ஏற்ப அவன்கட்டளையிட்டபடி இவன் செய்தனனாதலின் ஏவுதற்கருத்தாவின் வினையாதல்பற்றி யென்க. அன்றியும், இலக்குமணனும் திருமாலின்திருவவதாரமே யாதலால், அங்ஙனஞ்சொல்லத் தட்டில்லை. மற்றும் "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:." என்றபடி இராமனுக்கு இலக்குமணன் வலத்திருக்கையெனப்படுதலால், அங்ஙனங் கையாகிற இலக்குமணனது செயலை இராமன் மேல் ஒற்றுமைநயம்பற்றி ஏற்றிச்சொல்லுதல் தகுதியே. ("தன்சீதைக்கு, நேராவனென்றோர் நிசாசரிதான் வந்தாளைக், கூரார்ந்த வாளாற் கொடிமூக்குங் காதிரண்டும், ஈராவிடுத் தவட்கு மூத்தோனை வெந்நரகஞ், சேராவகையே சிலைகுனித்தான்" என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தமை காண்க; 'தம்முடையகையாலேயிறே தண்டிப்பது...... தம்முடையதோளாயிருக்கிற இளையபெருமாளை யிடுவித்துத் தண்டிப்பித்தார்' என்ற வியாக்கியானவாக்கியமும் உணரத்தக்கது.) சூர்ப்பணகை இராமலக்ஷ்மணரிடம் வரும்பொழுது அழகியவடிவங்கொண்டு வந்தமை தோன்ற 'கலைவணக்கு நோக்கரக்கி' என்றார். "மானின்விழிபெற்று, மயில்வந்ததென வந்தாள்," "செவ்வியநெடுங்கணயில்வீசி யயல்பாரா, நவ்விபெறதுங்கி யிறைநாணியயல்நின்றாள்" என்றார் கம்பரும். இங்கே, மூக்கு என்றது - மற்றும் அறுபட்ட உறுப்புக்களுக்கும் உபலக்ஷணம்.

கரனென்ற பெயர் - கொடியவனென்று பொருள்படும். இவன் இராவணனுக்குத் தம்பிமுறையாகுபவன். தண்டகாரணியத்தில் சூர்ப்பணகை வசிப்பதற்கென்று ஏற்படுத்திய ஜநஸ்தாநமென்னும் இராச்சியத்தில் அவளுக்குப் பாதுகாவலாகவும் அவளிட்டகட்டளைப்படி நடப்பதற்காகவும் இராவணனால் நியமித்து வைக்கப்பட்ட பெரிய அரக்கர்சேனைக்கு முதல்தலைவன். இராமலக்குமணரிடத்துக் கறுக்கொண்டுசென்ற சூர்ப்பணகையால் தூண்டப்பட்டுக் கரன் மிகப்பெரியசேனைகளோடும் அறுபதுலக்ஷம் படைவீரர்களோடும் பதினாலாயிரம் ரதாதிபதிகளோடும் சேனைத்தலைவர் பதினால்வரோடும் தூஷணன் திரிசிரசு என்னும் முக்கியசேனாதிபதிகளோடும் வந்து எதிர்க்க, இராமன் இலக்குமணனைச் சீதைக்குக் காவலாகவைத்துவிட்டுத் தான் தனியே நின்று பொருது அவர்களனைவரையும் கொன்றிட்டனன். தூஷணனென்ற பெயர்க்கு - (பலவாறு) தூஷிப்பவனென்று பொருள்.

பின்பு இராவணன் சூர்ப்பணகைவார்த்தையினாற் சீதைமேற் காதல்கொண்டு மாரீசனைத் துணையாக வேண்ட, அவன் மாயையாற் பொன்மானுருவங்கொண்டு, ஸ்ரீராமலக்ஷ்மணர் சானகியுடன் வசிக்கிற ஆச்சிரமத்தின் அருகிற் சென்று விளையாட, அதனைச் சீதை பார்த்து 'இப்பொன்மானைப் பிடித்துத்தரவேண்டும்'என்று இராமனைப் பிரார்த்திக்க, அப்பெருமான் அங்ஙனமே பிடித்தற்கு அதன்பின்தொடர்ந்து வெகுதூரஞ் சென்றும், அது அகப்படாமல் ஓட்டங்காட்டியதனால், இது மாயையென்று துணிந்து அதன்மேல் அம்பெய்து வதைத்தனன்.

வணக்குதல் - கீழ்ப்படுத்துதல். தோளுக்கு மலை யுவமை - ஆயுதங்களால் அழிக்கமுடியாத வலிமைக்கும், பருத்தோங்கிய வடிவிற்கு மென்க. செவிக்கு இனிய செஞ்சொலுடைமையாலும், தொண்டர்கள்பலருங் கடவுளைத் துதித்தது இப்பாஷையினாலே யாதலாலும், வடமொழியோடு ஒப்புமை இதற்கு உண்டேயன்றிப் பிறபாஷைகளுக்கு இல்லாமையாலும், 'வண்டமிழ்' எனப்பட்டது. அகஸ்தியர், ஆதியில் சிவபிரான்பக்கல் தமிழை உபதேசம் பெற்று வடதிசையினின்று தென்திசைக்குவந்து தன்பெயரால் அகத்தியமென்ற இலக்கணநூலை இயற்றி, அதனைத் தமதுமாணாக்கர்க்குக் கற்பித்துத் தமிழ்ப்பாஷையைத் தழைத்தோங்கச்செய்தன ராதலால், 'தமிழ்மாமுனி' எனப்பட்டனர். 'எய்தான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் தலைவணக்கிக் கைகூப்பியேத்தவல்லார்'—— இராமபிரானை அக்காலத்தில் தாம்கண்டுவணங்கித் தொழுது துதிக்கப்பெறாத குறையெல்லாந் தீரப் பிற்காலத்தில் தில்லைத்திருச்சித்திரகூடத்திற் கண்டு வணங்கித் தொழுதேத்துமவர்; தலையுங் கையும் வாயும் படைத்த பயன் தவறாதபடி அவற்றை உரியவிஷயத்தில் உபயோகிக்குந் திறமுடையார். அவர்கள் திரிதலால் தவமுடைத்துத் தரணி—"நாதனை நரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய, பாததூளி படுதலா லிவ்வுலகம் பாக்கியஞ் செய்ததே" என்றார் பெரியாழ்வாரும். இராமபிரான் திரிதலாற் பெற்ற பாக்கியத்தினும் அவனடியார்திரிதலாற் பெற்ற பாக்கியம் விசேஷமென்க.

வணக்கு - வணங்கு என்பதன் பிறவினை; மெலி வலியாதல், பிறவினைக்குறி. வரையென்னுங் கணுவின் பெயர் - அதனையுடைய மூங்கிற்குச் சினையாகுபெயராய், பின் அம்மூங்கில்விளையும் மலைக்குத் தானியாகுபெயராதலால், இருமடியாகுபெயர். அரக்கி - அரக்க னென்பதன் பெண்பால். தவம் - தபஸ் என்ற வடசொல்லின் விகாரம். உடைத்து - உடைமையென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று. தரணி யென்ற வடசொல் - (பொருள்களைத்) தரிப்பதென்று காரணப்பொருள்படும். 'வணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கி' என்ற தொடரில் ககரவொற்று அடுத்தடுத்து வந்தது, பிராசமென்னுஞ் சொல்லணி. (ரு)

6.—(இ - ள்.) தனம் மருவு வைதேகி பிரியல் உற்று - (தான்விரும்புஞ்)செல்வமாகப் பொருந்திய சீதாபிராட்டி பிரியப்பெற்று, தளர்வு எய்தி - (அதனால்) வருத்தமடைந்து, சடாயுவை வைகுந்தத்து ஏற்றி - சடாயுவென்னுங் கழுகரசைப் பரமபதத்திற் செலுத்தி, வனம் மருவு கவி அரசன் காதல் கொண்டு - (வாலிக்குஅஞ்சிக்)காட்டில் மறைந்துவசிக்கிற வாநரராசனான சுக்கிரீவனுடன் சினேகஞ்செய்துகொண்டு, வாலியை கொன்று - (அவனதுவிருப்பத்தின்படி அவன்தமையனான) வாலியை வதைத்து, இலங்கை நகர் - இலங்காபுரியை, அரக்கர் கோமான் சினம் அடங்க - (அரக்கர்க்குத்தலைவனாகிய) இராட்சதராசனான இராவணனுடைய செருக்கு அடங்கும்படி, மாருதியால் சுடுவித்தானை - அநுமானைக்கொண்டு எரிப்பித்தவனும், தில்லை நகர் திருசித்ர கூடந்தன்னுள்——, இனிது அமர்ந்த - இனிமையாய் எழுந்தருளியிருக்கிற, அம்மானை - சருவேசுவரனுமான, இராமன்தன்னை - இராமபிரானை, ஏத்துவார் - துதிக்கின்ற அடியார்களுடைய, இணை அடியே - உபயபாதத்தையே, ஏத்தினேன் - துதிக்குந்தன்மையேன், (யான்); (எ - று.)

இராவணன் மாயமான்வடிவுபூண்ட மாரீசனைக்கொண்டு இராமலக்குமணரைப் பிரித்துச் சீதை தனித்திருக்கின்ற சமயம் பார்த்து அவளை வலியஎடுத்துத் தேரின்மேல் வைத்துச் செல்லுமளவிலே அவள் கூக்குரலிட்டதைக் கேட்டுக் கழுகரசான சடாயு ஓடிவந்து எதிர்த்துப் பெரும்போர்செய்து அவனது கொடி முதலியவற்றைச் சிதைத்து முடிவில் அவனெறிந்த தெய்வ

வாளினாற் சிறகு அறுபட்டு வீழ, அரக்கன் சீதையைக் கொண்டுபோய் இலங்கையில் அசோகவனத்திற் சிறைவைத்திட்டான். பின்பு வந்த இராமலக்ஷ்மணர் பர்ணசாலையிற் சீதையைக்காணாமற் கலங்கி அவளைத் தேடிச்செல்லும் வழியில் சடாயு வீழ்ந்துகிடக்கக் கண்டு சோகிக்கையில், குற்றுயிருடன் விழுந்துகிடந்த அக்கழுகரசன் நடந்தசெய்தியைச் சிறிதுகூறி உயிர்நீப்ப, ராமபிரான் அவனுக்குப் பரமபதமளித்துச் சரமகைங்கரியஞ் செய்து முடித்தனன். ஜடாயு என்ற வடசொல்லுக்கு - ஜடா ஆயு என்று பதம்பிரித்து, பலமயிர்கள் சேர்த்துத்திரித்த சடைபோலப் பலவாய்மிக்குத் திரண்ட ஆயுளுடையவ னென்றும், சிறகில் உயிரையுடையவ னென்றும் பொருள்கூறுவர். சூரியசாரதியான அருணனது புத்திரரும் சம்பாதியினது தம்பியு மாகிய இவர், தசரதசக்கரவர்த்திக்கு உயிர்த்தோழராயிருந்தனர். இவர் பின்பு தசரதகுமாரர்களான இராமலக்ஷ்மணர்களைத் தண்டகாரணியத்திற் கண்டு அவர்களைத் தமதுபுத்திரர்போலவே பாவித்து அன்புபாராட்டி அவர்களுக்குப் பாதுகாவலாய் நிற்க, அவர்களும் தசரதரினும் வயதுமுதிர்ந்த இவரைத் தமது பெரிய தந்தையாகப் பாவித்து வந்தனர். வைதேஹீ என்ற வடமொழிப்பெயர் விதேகராசனது மரபில் வளர்ந்தவ ளென்று பொருள்படும்.

வாலீ யென்ற வடமொழிப்பெயர்க்கு - வாலில்வலிமையுடையவ னென்றும், வாலினின்று பிறந்தவ னென்றும் காரணப்பொருள் கூறுவர்; இவன், இந்திரன்மகன்: சுக்கிரீவனது தமையன்; கிஷ்கிந்தாநகரத்தையாண்ட வாநரராசன்; தன்னை எதிர்ந்தாரது வலிமையிற் பாதி தன்னிடம் வந்துகூடும்படி வரம்பெற்றவன்; இராவணனை ஒருகால் வென்று பின்பு அவனதுவேண்டுகோளின்படி அவனோடு அக்கினிசாட்சியாக நண்புகொண்டவன். இராமன் இலக்குமணனுடனே சீதையைத் தேடிச்செல்லுகையில் வழியில் எதிர்ப்பட்ட அநுமான் மூலமாகச் சூரியகுமாரனான சுக்கிரீவனோடு நண்புகொண்டு அவன்வேண்டுகோளின்படி அவனதுதமையனும் வாநரராசனுமான வாலியைத் தந்திரமாகக்கொன்று சுக்கிரீவனுக்குக் கிஷ்கிந்தைநகரத்தில் முடிசூட்டிவைத்தபின் அவனதுஉதவியால் இராவணாதியரை அழிப்பவனாயினன். வாலி முன்னமே இராவணனுடன் அக்கினிசாட்சியாக நட்புக்கொண்டிருந்தமைபற்றி அவனைத் தான் உதவியாகக்கொண்டால் இராவணாதிதுஷ்டர்களைத் தொலைக்கவகையில்லாமையால் இராமன் வாலியை நண்பாகக்கொள்ளாமல், சரணமடைந்த சுக்கிரீவனது வேண்டுகோளின்படி அவ்வாலியை வதைத்திட்டன னென்க. வாலிக்கு அஞ்சின சுக்கிரீவன் அவ்வாலி வரத்தகாத மதங்காசசிரமத்தில் மறைந்துவசித்தமைபற்றி, 'வனமருவு கவியரசன்' என்றார்.

சீதையிருக்குமிடத்தைத் தேடியுணர்தற்பொருட்டு இராமதூதனாய்ச் சென்ற அனுமான் கடல்கடந்து இலங்கைபுக்கு அசோகவனத்திற் சீதையைக் கண்டு பேசியபின்பு இராவணனுக்குத் தன்வரவைத் தெரியச்செய்து அவனைத் தான்நேரிற்கண்டுபேசக்கருதி அசோகவனத்தை அழித்ததுமன்றி அதற்காக வந்தெதிர்த்த அரக்கரனைவரையும் அழித்திட்டகாரணத்தால் இராவணகுமாரனான இந்திரசித்து வந்து எதிர்த்துப் பிரமாஸ்திரத்தாற் கட்டிக்கொண்டுசென்றபொழுது அக்குரங்கைக்கொல்லக்கருதிய இராவணனை விபீஷணன் 'தூதரைக் கொல்லலாகாது' என்று நீதிகூறி மறுக்க, பின்பு இராவணனேவலால் அரக்கர்கள் அனுமானதுவாலிற் கிழிசுற்றி நெய்யாலும் எண்ணெயாலும் நனைத்து நெருப்பூமூட்ட, அதுகொண்டு அவ்வனுமான் இலங்கைநகர முழுவதிலும் ஆங்காங்குத் தீப்பற்றவைத்து அந்நகரை எரித்திட்டனன். உத்தமதூதனான இவன் செய்த இச்செயல் தலைவனான இராமனது திருவுள்ளத்துக்குப் பாங்காயிருந்ததனால், 'மாருதியாற் சுடுவித்தான்' என்றார். மாருதி

யென்ற வடசொல்-வாயுவினது குமாரனென்று பொருள்படும்: தத்திதாந்த நாமம்; மாருதம் - காற்று.

'தனம்மருவு' என்பதற்கு - வேறுவகையாகவும் பொருள்கொள்ளலாம். தநம், வைகுண்டம், வநம், கபி, ராஜா, லங்கா, நகரம் - வடசொற்கள்.

இலங்கை - கடல்சூழ்ந்த தீவு. கோமான், மான் - பெயர்விகுதி. இனிது-இனிமைஎன்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு முற்றெச்ச வினையுரி. இனிதுஅமர்ந்த - அக்காலத்தில் அனுபவிக்கப்பெற்றிலோமே யென்னுங்குறைதீரப் பிற்காலத்தார் அனுபவிக்குமாறு அருள்கொண்டு சுலப னாய் அவ்வாறே சேவைசாதித்த என்றபடி. அடியே, ஏ - பிரிநிலை. (சு)

7. — (இ - ள்.) குரை கடலை - ஒலிக்கின்ற கடலை, அடல் அம்பால் - வலிமையையுடைய அம்பைக்கொண்டு, மறுக எய்து - கலங்கும்படி எய்ய தொடங்கி, குலை கட்டி - (அதில்) அணைகட்டி, அதனால் - அந்தஅணைவழி யாக, மறு கரையை ஏறி - (கடல்கடந்து) அக்கரை சேர்ந்து, எரி நெடு வேல் அரக்கரொடும் இலங்கை வேந்தன் இன் உயிர் கொண்டு - (பகைவர்களை) எரிக்கின்ற நீண்ட வேற்படையையுடைய இராக்கதர்களும் இலங்கைக்கு அரசனான இராவணனும் ஆகிய அனைவர்களுடைய இனியஉயிரைக் கவர்ந்து [கொன்று], அவன் தம்பிக்கு அரசும் ஈந்து - அவ்விராவணனது தம்பியான விபீஷணனுக்கு இராச்சியத்தைக் கொடுத்து, திருமகளோடு இனிது அமர்ந்த - இலக்குமியின் அவதாரமான சீதையுடனே இனிமையாகச் சேர்ந்த, செல்வன் - எல்லாவகைச் செல்வங்களையு முடையவனும், தில்லை நகர் திரு சித்ரகூடந்தன்னுள் அரசு அமர்ந்தான - தில்லைத் திருச்சித்திரகூடத்தில் தனதுமேன்மை தோன்ற வீற்றிருக்கின்றவனுமான இராமபிரானது, அடி தன்னை - திருவடிகளை, சூடும் - தலைமேற் கொள்ளுந லாகிற, அரசை அல லால் - அரசாட்சியைப் பெறவிரும்புவேனே யன்றி, மற்று அரசு அரசு ஆக எண்ணேன் - அதற்கு மாறாகச் சுவாதந்திரியம் பாராட்டுகிற அரசாட்சியை ஒருபொருளாகக் கருதமாட்டேன்; (எ - று.)—தான், ஏ - ஈற்றசை.

இராவணனாற் கவரப்பட்ட சீதாபிராட்டி இலங்கையிலிருக்கிற செய்தி யை அநுமான் சென்று அறிந்து வந்து சொன்னபின்பு இராமபிரான் வானர சேனையுடனே புறப்பட்டுச் சென்று கடற்கரையை யடைந்து கடலைக்கடக்க உபாயஞ் சொல்லவேண்டுமென்று அக்கடலரசனாகிய வருணனைப் பிரார்த் தித்து அங்குத் தருப்பசயனத்திலே படுத்து ஏழுநாளளவும் பிராயோபவேச மாகக் கிடக்க, சமுத்திரராசன் அப்பெருமானது மகிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருக்க, ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு, அனைவரும் நடந்து செல்லும்படி கடலை வற்றச்செய்வேனென்று ஆக்நேயாஸ்திரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே, வருணன் அஞ்சிநடுங்கி ஓடிவந்து அப்பெ ருமானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு ஒடுங்கிநிற்க, பின்பு இராமமூர்த்தி வானரங்களைக்கொண்டு மலைகளாற் சேதுபந்தனஞ் செய்தனன்.

இராமன் இராவணாதியரை அழித்தற்பொருட்டுப் பெரிய வானரசேனை யைச் சித்தப்படுத்திக்கொண்டு புறப்பட்டுக் கடற்கரை சேர்ந்தவளவில், இராவணன்தம்பியான விபீஷணன் தான் சொன்ன நல்லறிவைக் கொள் ளாத தமையனை விட்டுவந்து இராமபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அவனுக்கு அபயமளித்து அப்பொழுதே அவனை இலங்கைக்கு அரசனென முடிசூட்டி அவனால் இலங்கையின் நிலைமையை அறிந்து அவனுடனே கடல் கடந்து இலங்கைசார்ந்து அங்குப் பெரும்போர்புரிந்து இராவணனைச் சேனை யோடும் புத்திரமித்திராதியரோடும் கொன்று முன்சொன்னபடி விபீஷ ணனை இலங்கையரசனாக்கிச் சீதையை மீட்டுக்கொண்டு மீண்டனன்.

## பத்தாந் திருமொழி.

குரைகடல் - வினைத்தொகை. இன்னுயிர் - பண்புத்தொகை; இனிமை யென்ற பண்புப்பெயர், ஈறுபோய் முன்நின்ற இகரமும் கெட்டது. (எ)

8.—(இ - ள்.) அம் - அழகிய, நெடு - உயர்ந்த, பொன் மணி மாடம் - பொன்னையும் இரத்தினங்களையுங் கொண்டு அமைக்கப்பட்ட உயர்ந்த வீடுகளையுடைய, அயோத்தி - அயோத்தியா நகரத்துக்கு, எய்தி - மீண்டு வந்து, அரசு எய்தி-அரசாட்சியை யடைந்து, தான் முன் கொன்றான்தன் பெரு தொல் கதை அகத்தியன் வாய் கேட்டு - தன்னால் முன்பு கொல்லப்பட்டவனை இராவணனுடைய பெரிய பூர்வவிருத்தாந்தங்களையெல்லாம் அகஸ்திய மகாமுனிவன் வாயாற் சொல்லக் கேட்டு, மிதிலை செல்வி உலகு உய்ய திரு வயிறு வாய்த்த மக்கள் செம் பவளம் திரள் வாய் தன் சரிதை கேட்டான் - மிதிலாநகரத்தில் தோன்றிய ஜநகராசனது திருமகளான சீதை உலகமுழுவதும் வாழ்வடையும்படி பெற்ற தன் பிள்ளைகளான குசலவர்களுடைய சிவந்த பவழத்துண்டு போன்ற வாயினால் தனது சரித்திரமான ஸ்ரீராமாயணத்தைக் கேட்டருளினவனை, தில்லை நகர் திரு சித்ரகூடந்தன்னுள் எம்பெருமான் தன் - தில்லைத்திருச்சித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கிற எமது தலைவனுடைய, சரிதை - சரித்திரத்தை, செவியால் கண்ணால் பருகுவோம் - காதினாற் கேட்டு (அப்பெருமானைக்) கண்ணால் தரிசிக்கப்பெறுவோம் யாம்; (அதுவேயன்றி), இன் அமுதம் மதியோம் - இனிய தேவாமிருதத்தையும் (ஒரு பொருளாக) நன்குமதிக்கமாட்டோம்; (எ - று.)— அன்றே-அல்லவா? ஈற்றசை; தேற்றமுமாம். 'மதியோமொன்றே' என்றும் பாடம்.

இராமபிரான் பிராட்டியை மீட்டுக்கொண்டு விபீஷணனுடனும் அவனைச்சார்ந்த சில அரக்கர்களுடனும் சுக்கிரீவன் முதலிய வாநரவீரர்களுடனும் தானும் தன்மனைவியும் தம்பியுமாகப் புஷ்பகவிமானத்திலேறித் திருவயோத்தி சேர்ந்தனன். அங்கு இராமன்வரவை எதிர்பார்த்திருந்த பரதன் தம்பியான சத்துருக்கினனுடனே எதிர்கொண்டு வந்து இராமபிரான் முதலானவர்களை வணங்கி உபசரித்து அழைத்துக்கொண்டுசெல்ல, அங்கு ஸ்ரீராமபட்டாபிஷேக மகோத்ஸவம் வசிஷ்டர் சுமந்திரர் முதலிய பெரியோர்களால் வெகுசம்பிரமமாக நடந்தேறிற்று. இவ்வாறு இராமபிரான் திருவயோத்தியில் திருமுடிசூடி யெழுந்தருளியிருக்கையில், அகஸ்தியர் ஜமதக்நி பரத்துவாசர் வசிஷ்டர் கௌதமர் கௌசிகர் காசியபர் அத்திரி தௌமியர் முதலிய முனிவர்கள் பலர் அந்தச் சக்கரவர்த்தித்திருமகனைக் கண்டு கொண்டாடக் கருத்துக்கொண்டு அங்குவந்துசேர, சபையில்வீற்றிருந்த இராமபிரான் அவர்களை எதிர்கொண்டு அழைத்து வணங்கி உபசரித்துத் திவ்வியமான ஆசனங்களில் வீற்றிருக்கச்செய்து யோகக்ஷேமங்களை வினவ, அதற்கு அம்முனிவர்கள் 'எங்கட்கும் எல்லோர்க்கும் நெடுநாளாகப் பெருந்துன்பங்களை யிழைத்து வந்த கொடிய ராக்ஷசராசனான இராவணனையும், அவன் தம்பியான கும்பகர்ணனையும் அவர்களினும் மிகக்கொடியவனும் இராவணன்மகனுமான இந்திரசித்தையும், மற்றும்பல அரக்கர்களையும் வேரோடு அறுத்தருளிய நுமது கருணை யிருக்க, எங்களுக்கு என்ன குறை?' என்று கொண்டாடிப் பேச, அது கேட்ட இராமசந்திரன் 'அவ்வரக்கர்களுடைய பிறப்பும் வலிமையும் செயலும் அவர்கள்பெற்றவரங்களும் முதலிய வரலாறுகளையெல்லாம் சொல்லவேண்டும்' என்று அம்முனிவர்களை வினவ, அவர்களில் அகஸ்தியமகாமுனிவர் அனைத்தையுஞ் சொல்பவராய்ப் புலஸ்தியவம்ச விருத்தாந்தத்தையும், பூர்விகராக்ஷசர் செய்தியையும், இராவணாதியர் பிறப்பையும், அவர்கள்பெற்றவரங்களையும், இந்திரஜித்தின் உற்பத்தியையும், இராவணன் திக்குவிசயஞ்செய்த விவரத்தையும், அவன் ஆங்காங்குச் சாபம் பெற்றவகை முதலியவற்றையும் கூறினர்.

பின்பு பிராட்டி கருப்பமாயிருக்கையில், ஒருநாள், இராமன் அவளை நோக்கி 'நீ விரும்புவது ஏதேனும் உளதேல் உரை' என்றதற்கு, அவள், 'இன்னொருதரம் கங்கைக்கரையிலுள்ள முனிவர்களின் ஆச்சிரமங்களிற் சென்று அவ்விடத்தினழகை அனுபவிக்க விரும்புகிறேன்' என்று விண்ணப்பஞ் செய்ய, அதற்குப் பெருமான் 'அப்படியே ஆகட்டும்' என்று அருளிச்செய்தார். பிறகு ஒருநாள், ஓராண்டளவும் இராவணனின்வசத்தி லிருந்த சீதையைத் தாம் மீளஅழைத்துச் சேர்த்துக் கொண்டதைப்பற்றி அவளுடைய கற்புநிலையை அறியாத நாட்டார் சிலர் குறைகூறினரென்று ஒற்றர் சொல்லக் கேட்டறிந்த ஸ்ரீராமன், லோகாபவாதத்தால் வரும் அபகீர்த்திக்கு அஞ்சி மனைவியைக் காட்டிற்செலுத்திவிடத் துணிந்து முனிவராச்சிரமங்களைக் காணச் செல்வதென்ற வியாஜத்தால் இலக்குமணனைக்கொண்டு சீதையைக் கங்கைக்கரையிலுள்ள வால்மீகிமுனிவராச்சிரமத்தருகிற் சேர்த்துவிட்டனர். அங்கு வால்மீகிமாமுனிவர் தம் ஆச்சிரமத்தில் தவஞ் செய்யும் மகளிர்பலரைக் கொண்டு பிராட்டியை உபசரித்துவருகையில், அவள், இரண்டு குமாரரை ஈன்றாள். இரட்டைப் பிள்ளைகளாகப்பிறந்த அவர்கட்கு வால்மீகிமுனிவர் குசனென்றும், லவனென்றும் நாமகரணஞ்செய்து தாம்இயற்றிய ராமாயணமென்னும் ஆதிகாவியத்தைத் தக்க தாளலயங்களோடு யாழ்விட்டு மதுரமாப்பாடும்படி அவர்கட்கு இளமையிலேயே பயிற்றுவித்தனர். பின்னர் இராமபிரான் அசுவமேதயாகஞ்செய்கையில், பெரியசபைசேர்த்து வால்மீகிமுனிவருடன்வந்த அவரது சீடர்களான அக்குமாரர்களின்வாயால் அக்காவியத்தைக் கேட்டு உவந்தனர்.

அகஸ்த்யன் என்ற வடசொல் -(விந்திய) மலையை அடக்கியவனென்று பொருள்படும்; அகம் - நடவாதது, அசலம். கொன்றான்-கொல்லப்பட்டான்; செய்வினை, செயப்பாட்டுவினைப்பொருளது; இதில், அகரச்சாரியையும் படுவிகுதியும் தொக்கனவென்னலாம். பெருந்தொல்கதை - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். சனககுலத்தலைவனை மிதியென்னும் அரசனால் அமைக்கப்பட்டமைபற்றி, மிதிலா என்று பெயர். செல்வி - எல்லாச்செல்வங்களுக்கும் உடையவள்; செல்வமகளான இலக்குமியின் அம்சமானவள். குசலவர் இராமாயணப் பிரவசனஞ்செய்து அதனால் உலகத்தை நன்னெறியில் உய்த்தலும், இராமபிரான்காலத்திற்குப் பின் அப்பெருமான்போலவே நீதிமுறைதவறாது உலகத்தை இனிதுஆளுதலும் தோன்ற, 'உலகுய்யத் திருவயிறுவாய்த்த மக்கள்' என்றார். பவளத்திரள்வாய் - உவமத்தொகை.

செல்வி - செல்வன் என்பதன் பெண்பால்; இ-விகுதி. திருவயிறுவாய்த்தல் - பிரசவித்தல். பவளம் - ப்ரவாளமென்ற வடசொல்லின் சிதைவு. சரிதம் என்ற வடசொல், சரிதையென விகாரப்பட்டது. செவியாற் பருகுதல் - "பருகுவனன்ன வார்வத்த னாகி..... செவி வாயாக நெஞ்சு களனாகக், கேட்டவை கேட்டவை விடாதுஉளத்தமைத்தல்" ; கண்ணாற் பருகுதல் - "பருகுவான்போல நோக்கி" என்றார் பிறரும். ஆராவமுதமாகவுள்ள எம்பெருமானுடைய சேவையின் மிக்கஇனிமைக்கும், அங்ஙனமேயுள்ள அப்பிரானுடைய சரித்திரத்தின் மிக்க இனிமைக்கும் தேவாமிருதத்தின்இனிமை சிறிதும்ஈடாகாதென்னுங் கருத்தால், 'இன்னமுத மதியோம்' என்றார். (அ)

9.—(இ - ள்.) செறி தவம் - மிக்கதவத்தை யுடையனான, சம்புகன் தன்னை - (சூத்திரசாதியனான) சம்புகனை, சென்று கொன்று - (அவனிருக்குமிடந்தேடிச்) சென்று தலையறுத்து, செழு மறையோன் உயிர் மீட்டு - சிறந்த பிராமணகுமாரனுடைய உயிரை மீட்டுக்கொடுத்து, தவத்தோன் ஈந்த நிறை மணி பூண் அணியும் கொண்டு - மிக்கதவத்தையுடையரான அகஸ்திய பகவான் கொடுத்த பெருவிலையுள்ள இரத்தினஹாரமாகிய ஆபரணத்தை

யும் சாத்தியருளி, இலவணன்தன்னை தம்பியால் வான் ஏற்றி - லவணாசுரனைச் சத்துருக்நனைக்கொண்டு கொன்று வீரசுவர்க்கத்திற் குடியேற்றுவித்து, முனிவன் வேண்ட - துருவாசமுனிவனது சாபத்தால், திறல் விளங்கும் இலக்குமனை பிரிந்தான்தன்னை - பராக்கிரமம்விளங்கப்பெற்ற லக்ஷ்மணனைத் துறந்தவனும், தில்லை நகர் திரு சித்ரகூடந்தனனுள் உறைவானை - (தன்னை அக்காலத்திற்காணப்பெறாத குறை தீரப் பிற்காலத்தார் காணும்படி) தில்லைச் சித்திரகூடத்தில் (அப்படிப்பட்ட திவ்வியமங்களவிக்கிரகத்தோடு) நித்தியவாசம்பண்ணுகிறவனுமான இராமபிரானை, மறவாத உள்ளந்தன்னை உடையோம் - மறவாமல் எப்பொழுதும்தியானிக்கிற மனத்தையுடைய நாம், மற்று உறு துயரம் அடையோம் - இனி (எம்பெருமானை அனுபவிக்கப்பெற்றிலோமென்று)வருந் துன்பத்தை அடையமாட்டோம்; (எ - று.)—அன்று, ஏ - ஈற்றசை.

இராமபிரான் நீதிதவறாது இராச்சியபரிபாலனஞ்செய்துவருகையில், ஒருநாள் ஒருபிராமணன் இறந்த தன்மகனைத் தூக்கிக்கொண்டு அரண்மனைவாயிலில் வந்துவிழுந்து 'ஐயோ! எனதுஒரேபேறான மகனுக்கு அகாலத்தில் மிருத்து வந்ததே! என்செய்வேன்! தாய்தந்தையர் இருக்க மகன் மரிப்பது அரசாட்சியினதவறேயன்றி வேறன்று. உன்துரைத்தனநெறி வழுவியதனால் ஐந்துபிராயமுள்ள குழந்தையை இழந்த நானும் என்மனைவியும் உன்மாளிகைவாயிலிலே உயிர்விடுகிறோம்'என்று பலவாறு கதறிக் குறைகூறுவதைக் கேட்டு, சுவாமி, வியாகுலமடைந்து ஓடிவந்து அவ்வந்தணனைச் சமாதானப்படுத்தி உடனே வசிட்டர்முதலிய தம் வைதிகமந்திரியரை வரவழைத்து இச்செய்தியறிவிக்க, அவர்களுள் ஒருவரான நாரதமுனிவர் சற்று ஆலோசித்து இது அநதிகாரிசெய்யும் அறத்தின் பயனெனத் தோன்றுகின்றது; யாரோ அதிகாரமில்லாதவன் தவஞ்செய்கிறான்; அதனை ஆராய்ந்து களைந்தீராயின் இப்பிள்ளை பிழைத்தெழுவான்' என்று உரைத்தனர். அதுகேட்டவுடன் சுவாமி அம்மறையோன்மகனுடம்பை எண்ணெய்க்குடத்திலிட்டுக் கெடாமற் பாதுகாக்கக் கட்டளையிட்டுப் புஷ்பகவிமானத்தை வருவித்து அதன்மேல் ஏறி ஆகாயமார்க்கத்திற் சஞ்சரித்துக்கொண்டு எத்திசையிலுந் தேடுகையில், தென்திசையில் சைவலமென்னுங்கிரியின் அருகில் ஒருதடாகதீரத்தில் ஓர் மரத்தில் தலைகீழாகநின்று தவமியற்றும் ஒருவனைக் கண்டு சந்தேகித்து அவனைநோக்கி 'நீ எந்தவருணத்தான்? யாதும்பெறவேண்டி இவ்வண்ணம் கடுந்தவமியற்றுகின்றனை? உள்ளபடிசொல்'என்று வினவியதைக் கேட்டு அத்தவசி 'ஐயா! நான் சூத்திரசாதியிற் பிறந்தவன்; சம்புகனென்பது, என்பெயர்; இவ்வுடலோடு சுவர்க்கமடையவேண்டுமென இவ்வாறு தவமியற்றுகிறேன்'என்று விடைகொடுத்தனன். பின்பு அவனைநோக்கி இராமபிரான் ஓ சம்புக! இந்தயுகத்தில் சூத்திரனுக்குத் தவஞ்செய்யும் அதிகாரம் இன்மையால் நீ செய்வது அறத்திற்கு மாறேயாகின்றது; ஆதலின, அரசனான் நீதிப்படி உன்னை வதைப்பதே தண்டம்'என்று அருளிச்செய்ய, அவனும் 'ஆகல், அதுவும் எனக்குப் பேறே'என உடன்பட்டுநிற்கையில, சுவாமி வாளெடுத்து அவன்மேல் வீசினார். வீசவே, அவன் யாக்கைநீங்கி நற்கதிபெற்றனன் இங்ஙனம் சூத்திரமுனியை வதைத்த முகூர்த்தத்திலேயே, முன்பு உயிர்நீத்த பார்ப்பனச்சிறுவன் தூங்கியெழுந்தவன்போலப் பிழைத்தெழுந்தான்.

பின்பு ஸ்ரீராமன் அகஸ்தியமுனிவரது ஆச்சிரமத்துக்குச் சென்று அவரை வணங்க, அம்முனிவர் மிக்கஉபசாரங்களோடு அப்பெருமானுக்கு விருந்துசெய்து ஒருதிவ்வியாபரணத்தைக் கொடுக்க, அதனை இராமசந்திரர் ஆதரவோடுவாங்கித தரித்துக்கொண்டு விளங்கினர். இந்த அணி, விசுவகருமனால்

நிரூபிக்கப்பட்டது ; காந்தியாற் சூரியனைப்போன்றது; ஸ்வர்ணம் வஸ்திரப் ஆபரணம் முதலாக வேண்டுவனவற்றையெல்லாந் தரவல்லது; சுவேதனெ ன்னும் அரசனால் அகஸ்திய முனிவர்க்குக் கொடுக்கப்பட்டது.

மதுவென்னும் அசுரனது மகனான லவணனென்பவன் பலபராக்கிரம களிற்சிறந்து செருக்கி நல்லோர்களை நலிந்துவருவதை யமுனாதீரவாசிகளான முனிவர்கள் சொல்லக் கேட்ட இராமமூர்த்தி, அவனைக் கொன்று அவன இராச்சியத்தில் அரசாளுமாறு சத்துருக்கனாழ்வானை அனுப்ப, அவர் சென் தந்திரமாகப்பொருது அவனைவதைத்து அவனிருந்தவிடத்தில் மதுரையெ னும் நகரத்தைத் தாபித்து அங்கு அரசாண்டனர். போரிற்புறங்கொடாம இறந்தவர் வீரசுவர்க்கம் புகுவராதலால் ‘தம்பியால் வானேற்றி’ என்றார்.

இராமபிரான் நெடுங்காலம் இராச்சியாதிபத்தியம் நடத்தியபின்னர் ஒ நாள் காலருத்திரமூர்த்தி பிரமாவினால் ஏவப்பட்டு ஒருதவசிவடிவங்கொண் இராமனிடம்வந்து ஆசிகூற, சுவாமி அவர்க்கு முறைப்படி உபசாரம்இயற் ‘தேவரீர்வந்த காரியத்தை அருளிச்செய்யலாம்’ என்று சொல்ல, அவரு ‘என்னைத் தூதனுப்பிய மாமுனிவரின் வாக்கியங்களைச் செவிக்கொள்ள திருவுள்ளமாயின், நாமிருவரேயன்றி மற்று யாரு மிருத்தல்கூடாது ; யா யினும் நம்முடைய சல்லாபத்தைக் கேட்டாலும் இவ்விடத்துவந்தாலும் அவ கொலைக்குஉரியராம்படிகட்டளையிடவேண்டும்’ என்றதை அங்கீகரித்த இரா மூர்த்தி, இலக்குமணனை நோக்கி ‘இங்கு வேறு வாயிலோன் வேஎ டாம்; நீயே இருக்கக்கடவை : யாங்கள் இருவோமும் பேசுமிடத்து எ ரும் வரவொண்ணாது ; ஒட்டிக் கேட்கவும் ஒண்ணாது ; அவ்வாறு செ தால் வதைத்தண்டனைக்குப் பாத்திரமாவர் ; ஆதலின், நீ நன்று காக வேண்டும்’ என்று ஆணையிட்டு ஏகாந்தத்திற்சென்று அம்முனிவருட விரைவில் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுவதைப் பற்றிச் சம் ஷித்துக்கொண்டிருக்கையில், துருவாசமுனிவர் அரண்மனைவாயிலில் வந் ‘விரைவில் என்னை இராமனிடம் அழைத்துக்கொண்டு போகவேண்டு என்ன, இலக்குமணர் கைகூப்பிக்கொண்டு ‘சுவாமீ! காரியம் யாது? அ யேன் இருக்கின்றேன் அதனைச்சாதிப்பதற்கு’ என்றுகூறினார். அது செவி பட்டவுடன் கோபாக்கினிபொங்கி அம்முனி ‘இந்தக்ஷணத்திலேயே இரா னுக்கு நான்வந்ததைத் தெரிவிக்கவேண்டும்; அப்படிச்செய்யாமற்போனா உடனே இந்நகரத்தோடு நீங்களும் உங்கள்சந்ததியும் அழிந்துபோம்ப சபிப்பேன் ; நான் கோபத்தை அடக்கமாட்டேன்’ எனவே, இலக்குமண ‘என்ஒருவனுக்குக் கேடுவந்தாலும் வரட்டும் ; என்நிமித்தம் மற்றவர்க்கு வா திருந்தாற் போதும்’ என்றுநிச்சயித்துச் சுவாமிகட்டளையைக்கடந்து அர மனைபினுட்சென்று சந்நிதியில் இவ்வரவைத் தெரிவித்தார். அவரும் லனை அனுப்பிவிட்டுக் கோபமுனிவரைக் கண்டு வந்தனஞ்செய்து ‘யா பணி?’’ எனவினவ, அம்முனிவர் ‘யான் ஆயிரவருஷமளவும் தவஞ்செய் முடித்தேன் ; இப்போது பெரும்பசியால் வருந்துகின்றேன் ; அன்னந் த வேண்டும்’ என்றனர். அங்ஙனமே இரகுநாயகர் அவர்க்கு விரும்பிய போசனமளிக்க, அவர் புசித்துத் திருப்தியடைந்து வாழ்த்திச் சென்றன பிறகு இராகவபிரான் முன்பு காலதேவனுக்குச்செய்துகொடுத்த பிரதிஜ்ஞ யினின்று தவறாதிருக்கவேண்டித் தம்பியைநோக்கி ‘லக்ஷ்மணா! தக்கவ குக் கைவிடுவதும் வதைப்பதும் ஒக்கு மாதலால், உன்னை நான் கைவ டேன் ; என்முன் நில்லாமற் போ’ என்றருளிச்செய்ய, இளையவர் கண்ண வரச் சரயூநதிக்குச்சென்று நீராடிப் பிராணாயாமத்தாற் சுவாசத்தையடக் பரமபதம் புக்கனர் என்பது வரலாறுதலால், ‘முனிவன் வேண்ட’ எ தற்கு - முனிவடிவமாய்வந்த காலருத்திரமூர்த்தியின் வேண்டுகோளை நி

வேற்றவேண்டி. என்று பொருள்கொள்ளினும் அமையும். திறல் விளங்கும்- (தனக்குப்)பக்கபலமாய் விளங்குகிற என்றுமாம்.

மீட்டு, மீள் - பகுதி. அணியுங்கொண்டு என்ற உம்மை - கதைத் தொடர்ச்சிபற்றிவந்த இறந்ததுதழுவியஎச்சப்பொருளது. லக்ஷ்மணனென்ற திருநாமம் - (உத்தமபுருஷ) லக்ஷணங்களை யுடையவ னென்றும், (பகவத் கைங்கரிய) லக்ஷ்மியோடு கூடியவ னென்றும் பொருள்படும். உள்ளம் - அகத்துஉறுப்பு; அந்தக்கரணம். உறுதுயரம் - வினைத்தொகை. துயரம், அம் - சாரியை. (கூ)

10.—(இ - ள்.) அன்று - (தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுகிற) அந் நாளில், சர அசரங்களை வைகுந்தத்து ஏற்றி - (அயோத்தியாபுரியிலுள்ள) ஜங்கமமும் ஸ்தாவரமுமான எல்லாவுயிர்களையும் பரமபதத்திற்குப் போகச் செய்து, அடல் அரவம் பகை ஏறி - வலிமையையுடைய பாம்புகளுக்குப் பகையான கருடன்மேல் ஏறிக்கொண்டு, அசுரர்தம்மை வென்று இலங் கும் அணி நெடு தோள் நான்கும் தோன்ற - அசுரர்களை வென்று (அவ்வெற் றித்திரு) விளங்கப்பெற்ற அழகிய நீண்ட (தனது) திருக்கைகள்நான்கும் விளங்க, விண் முழுதும் எதிர் வர தன் தாமம் மேவி சென்று - பரமபதத்தி லுள்ளாரெல்லாரும் எதிர்கொண்டு உபசரிக்கும்படி தன துஸ்தானமான அப் பரமபதத்திலே போய்ப்புக்கு, இனிது வீற்றிருந்த - (தன்மேன்மையெல்லாம் தோன்றும்படி) இனிமையாக (த்திவ்வியசிங்காசனத்தில்) எழுந்தருளியிருந்த, அம்மான் தன்னை - சருவேசுவரனை, தில்லை நகர் திரு சித்ரகூடந்தன்னுள் என்றும் நின்றான் அவன் இவன் என்று ஏத்தி - (அந்தஇருப்பில் ஒன்றுங் குறையாமல் அவ்வாறே) தில்லைச்சித்திரகூடத்தில் எந்நாளும் (நமக்காக) நித் தியவாசம்பண்ணுகிற அப்பெருமான் இவ்விராமபிரானே யென்று அறிந்து துதித்து, தொண்டீர் நீர் நாளும் எப்பொழுதும் இறைஞ்சுமின் - அவனுக்கு அடியவர்களான நீங்கள் தினந்தோறும் எப்பொழுதும் வணங்கி உய்யுங்கள்; (எ - று.)—ஓ - இசைநிறை.

• இராமபிரான் லக்ஷ்மணனைத் துறந்ததனால் மிகக்கிலேசித்து இராச்சியத் தைவிட்டுச் செல்லத்தொடங்கியபோது அயோத்தியாநகரத்து உயிர்களெல் லாம் சுவாமியைச் சரணமடைந்து 'தேவரீர் எங்குச்சென்றாலும் அடியேங்க ளையும் உடனழைத்துக்கொண்டு செல்லவேண்டும்' என்றுபிரார்த்திக்க, ஸ்ரீ ராமன் அவர்களுடைய அன்பின்உறுதிப்பாட்டைக்கண்டு 'அப்படியே ஆகட் டும்' என்று அருளிச்செய்து அனைவரையும் தம்மைப் பின்தொடர்ந்துவரு மாறு பணித்தருளிப் பிரயாணப்பட்டனர். அப்பொழுது அந்நகரத்திருந்த மனிதர்களேயன்றி விலங்கு பறவை முதலிய அஃறிணைஉயிர்களும் அகமகிழ் ந்து சுவாமியின்பின் சென்றன. இங்ஙனம் பலரும் புடைசூழ ஸ்ரீபகவான் சரயூநதியில் இறங்கித் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளும்போது தம்மிடத்து இடையறாத அன்புகொண்டு பின்பற்றிச் சரயுவில் மூழ்கி உடம்பைத்துறந்த எல்லாவுயிர்கட்கும் பிரமலோகத்துக்குமேற்பட்டதாய்ப் பரமபதம்போலவே புக்கவர்மீண்டுவருதலில்லாத மேம்பாடுள்ள ஸாந்தாநிகமென்னும் உலகத்தை அளித்தனர். ஸ்ரீராமபிரான் பரமபதத்துக்குச் சென்றபோது சங்கசக்கரங்க ளிரண்டையுந் தரிக்கிற மேற்பாற்கரமிரண்டுந் தோன்றப்பெற்றமை விளங்க, 'அசுரர்தம்மை வென்றிலங்கு மணிநெடுந்தோள் நான்குந் தோன்ற' என்றார். இந்த அடைமொழியை 'வீற்றிருந்த' என்பதனோடாவது, 'சித்ரகூடந் தன்னுள் நின்றான்' என்பதனோடாவது இயைத்தலும் அமையும். 'அடலர வப்பகையேறி' என்றது, 'தன்தாமமேவி' என்றதனோடும், 'அசுரர்தம்மை வென்று' என்றதனோடும் இயைக்கத்தக்கது.

சர + அசரம் = சராசரம்; தீர்க்கசந்திபெற்ற வடமொழித்தொடர். சரம் - அசையும்பொருள், இயங்குதிணைப்பொருள். அசரம் - அசையாப்பொருள், நிலைத்திணைப்பொருள். அரவம் - அரா என்னுங் குறியதன்கீழ் ஆக் குறுகி 'அம்'சாரியைபெற்று அரவம் என நின்றது. அஸுரர் - சுரர்க்கு எதிரானவர்; சுரர் - தேவர். நெடுந்தாள் - முழந்தாளளவும் நீண்டுதொங்குகிற கை; ஆஜாநுபாகு. விண் - இடவாகுபெயர். தாமம் - வடசொல். தொண்டர் - முன்னிலைப்பன்மைக் குறிப்புவினையாலணையும்பெயர்; தொண்டரென்பதன் ஈற்றயல் திரிந்த விளியுமாம். (௧௦)

11.—(இ - ள்.) தில்லை நகர் திரு சித்ரகூடந்தன்னுள்—, திறல் விளங்கும் மாருதியோடு அமர்ந்தான் தன்னை - பலபராக்கிரமம் விளங்குகிற அநுமானுடனே நித்தியவாசம் பண்ணுகிற எம்பெருமானைக்குறித்து, எல்லை இல் சீர் தயரதன்தன் மகன் ஆய் தோன்றிற்று அது முதல் ஆ தன் உலகம் புக்கது ஈறு ஆ - அளவில்லாத புகழையுடைய தசரதசக்கரவர்த்தியின் குமாரனாய்ப் பிறந்ததுமுதல் பரமபதம்புக்கது இறுதியாக (ஸ்ரீராமாயணகதைமுழுதையும் சங்கிரகமாக அமைத்து), கொல் இயலும் படை தானை கொற்றம் ஒள் வாள் கோழியர் கோன் குடை குலசேகரன் சொல் செய்த - (பகைவர்களைக்) கொல்லுதல்பொருந்திய ஆயுதங்களையுடைய சேனையையும் வெற்றியையும் ஒளியையுமுடைய வாளாயுதத்தையுமுடையவரும் உறையூரிலுள்ளார்க்குத்தலைவரும் வெண்கொற்றக்குடையையுடையவருமான குலசேகராழ்வார் அருளிச்செய்த, நல் இயல் இன் தமிழ் மாலை பத்தும் வல்லார் - சிறந்தஇயற்றமிழிலக்கணத்துக்கு இசைந்த இனிய தமிழ்ப்பிரபந்தரூபமான இப்பத்துப்பாசுரங்களையும் கற்றுவல்லவர்கள், நலம் திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவார் - பரமபதத்தில்விளங்குகிற சருவேசுவரனுடைய திருவடிகளிற் சேர்வார்கள்; (எ-று.)—ஏ - தேற்றம்.

இளமையிற் பிரமனளித்த வரத்தினாற் சிரஞ்சீவியானவரும், இராமகதை உலகத்திலுள்ளளவும் தாம்சீவித்திருக்குமாறு ஸ்ரீராமனிடம் வரம்வேண்டிப்பெற்றவருமான அநுமான் இராமபிரான் தன்னடிச்சோதிக்குஎழுந்தருளியபோது அவனைவிட்டுப்பிரியமாட்டாது மனமிரங்க, அந்தஉத்தமபக்தனைத் தானும் விடமாட்டாமல் பெருமான் அவருடனே சித்திரகூடத்தில் வந்துவீற்றிருக்கின்றனனென்க. திறல் விளங்கும் மாருதி - தனக்குப்பக்கபலமாக விளங்கிய அநுமானென்றுமாம். தசரதன் என்ற வடமொழிப்பெயர் - பத்துத்தேர்களையுடையவனென்று பொருள்படும்; பத்துத்திக்கிலும் நடையின்றிச் செல்லவல்ல தேரையுடையவனென்று கருத்து. குலசேகராழ்வார் திக்விசயஞ்செய்தபோது சோழராசனை வென்று கீழ்ப்படுத்தி அந்நாட்டுக்கும் தலைமைபூண்டதனால், 'கோழியர்கோன்' என்றார். கோழி - உறையூர்; முற்காலத்து ஒரு கோழி நிலமுக்கியத்தால் யானையோடு பொருது அதனைப் போர்தொலைத்தல் கண்டு அந்நிலத்திற்செய்த நகராதலின், கோழி யென்று உறையூர்க்குப் பெயராயிற்று. தமிழ்மாலை - எம்பெருமானும் பிறரும் மேற்கொண்டு ஆதரிக்கத்தக்க இனிய பூமாலைபோன்ற பாமாலை. நலம் - நல்லுலகம். இப்பதிகம்வல்லதனாற் பெறும் எம்பெருமானருளால் பரமபதமடைவரென்க. திருமங்கையாழ்வார் தில்லைத்திருச்சித்திரகூடத்தின் விஷயமான பதிகத்தின் முடிவில் "சீரார்பொழில் சூழ்ந்தழகாய தில்லைத் திருச்சித்திரகூடத்துறை செங்கண்மாலுக்கு, ஆராதவுள்ளத்தவர் கேட்டுவப்ப வலைநீருலகுக் கருளே புரியும், காரார்புயற்கைக் கலிகன்றிகுன்றாவொலிமாலை யொரொன்பதோடொன்றும் வல்லார், பாராருலகமளந்தானடிக்கீழ்ப் பலகாலம் நிற்கும்படி வாழ்வர்தாமே" என்று பயனுரைத்ததுங் காண்க.

தோன்றிற்று - இறந்தகாலத்தொழிற்பெயர்; இன் - இடைநிலை, று - விகுதி; இதன்மேல் 'அது' என்றது, பகுதிப்பொருள் விகுதி: முதல் வேற்றுமைச் சொல்லுருபுமாம். கொல் - முதனிலைத்தொழிற்பெயர். படை - (பகைவரைப்) படுக்கும் கருவி. கொற்றம் - (பகைவரைக்) கொன்று அடைவதனைவெற்றிக்குக் காரணக்குறி; கொல் - பகுதி, து - சாரியை, அம் - **விகுதி**, மற்றவை - சந்தி. சொற்செய்த - சொன்ன; இதில், செய் - துணைவினை. நலம் - ஆகுபெயர். நாரணன் - நாராயணன் என்ற வடசொல்லின் சிதைவு.

இந்தப்பாசுரம், இப்பதிகத்தின் பயனுரைத்தது; இது, திருநாமப்பாட்டு எனவும் வழங்கப்படும். நாந்தி, பதிகம், பாயிரம் என்ற சொற்களால் இதனை வழங்குதலும் உண்டு. இது, ஆழ்வார் தம்மைத்தாமே பிறர்போலக் கூறியது. பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது', 'வடநூலார்தாமே பதிகமும் உரையும் செய்வார்', 'இனிச் சம்பந்தர் சடகோபர்முதலாயினாரும், திவாகரரும், பதினெண்கீழ்க்கணக்குச் செய்தாரும்முன்னாகப்பின்னாகப்பதிகங்கூறுவதுங்காண்க,' என்றவை,இங்கு அறியத்தக்கன.இது, ஒருவகைக் கவிசமய மாதலால், தற்புகழ்ச்சியாகாது.

---

## திருவங்கமாலையுரையின் அநுபந்தம்.

திருவங்கமாலை யென்னுந் திருப்பதிகம், இயலிசைநாடகமென்னும்மூவகைத்தமிழுள் இயற்றமிழின்பாற்பட்டதன்றி இசைத்தமிழின்பாற்பட்டதெனக் கொள்க. இரண்டடியாய் வருதலையும், முதலடியில் "தலை," "கடல்" என்றாற்போன்ற தனிச்சொற்கள் அவ்வடியின் முதற்சீருக்கு ஒத்த மோனையுடன் வருதலையும், தாளவொத்துக்கு ஏற்ப எழுத்துக்கள் நீட்டியுங் குறுக்கியும் இசைக்கப்படுதலையும், முதலடியின் முற்பகுதிதானே இரண்டாமடியின் பிற்பகுதியாய் மடக்கிவருதலையும், இசைப்பாவி லொன்றற்குரிய இலக்கணமெனக் காண்க. இது, "திருத்தாய் செம்போத்தே" என்றுதொடங்கும் பெரியதிருமொழிப்பதிகத்துக்கும் ஒக்கும்.

4 - ஆம் பாட்டு:—சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, முரலலென்பதற்கு-மோத்தலென்று பொருள் கொள்ளப்பட்டது. வாக்கேநோக்கியமங்கையென்பதற்கு-சொற்களின்வடிவமான பராசக்தி யென்றும், (அடியார்கள்பத்தியுடன்கூறுந் துதி)மொழிகளை விருப்பத்தோடு கருத்திற்கொள்ளுந் தேவியென்றும் பொருள் கொள்ளினும் அமையும்.

9 - ஆம் பாட்டு:—இராவணன் தவஞ்செய்து தனது இலங்கைநகர் அழியாதிருக்கும்பொருட்டுத் தாபித்துப் பூசிக்குமாறு சிவலிங்கமொன்று பெற்றுச் செல்வதை யுணர்ந்த தேவர்கள் விநாயகமூர்த்தியிடத்துமுறையிட, அவர் பிரமசாரிவடிவத்துடனே இராவணன்முன்னே தோன்றி அவனுக்குச் சிறுநீர்சுரக்கும்படி செய்தருள, அதுபொறுக்கமாட்டாமையால்இராவணன் அச்சிவலிங்கத்தை அந்தப்பிரமசாரியின்கையிற் கொடுத்துத் தான் ஜலவிஸர்ஜநத்துக்குச் செல்ல, கீழேவைக்கவொண்ணாதென்று இராவணன் பெற்ற அவ்விலிங்கத்தை அப்பிரமசாரி இராவணன் வருதற்குமுன் கீழேவைத்திட அங்குஅவ்விலிங்கம் நிலைநின்றதாக, அதனை எடுத்துக்கொண்டுபோகக் கருதி இராவணன் இருபது கைகளாலும் பற்றியிழுக்க, அது அவ்விடத்தைவிட்டுப் பெயர்ந்து வாராமல் பசுவின் காதுபோற் குழைந்த காரணத்தால் அத்தலத்துக்கு 'கோகர்ணம்' என்றும், அத்தலத்துச் சிவபிரானுக்கு 'மகா பலலிங்கநாதேசுவரர்' என்றும்பெயராயினவென்று அறிக. அத்தலத்து அம்பிகையின் பெயர் - பெரியநாயகியம்மை.

10 - ஆம் பாட்டு:—திருக்குற்றாலத்திலெழுந்தருளியிருக்கிற சிவபிரானது திருநாமம் - குற்றாலநாதேசுவரர். அம்பிகைபெயர்- குழல்வாய்மொழியம்மை. தலவிருக்ஷம் - குறும்பலா.

# கம்பர் வரலாறு.

இவர், சோழநாட்டிலே திருவழுந்தூரில் நான்காம்வருணத்திற் பிறந்தவர். இவரது சமயம், வைஷ்ணவமே.

இவர், இளமையிலேயே தந்தை இறந்ததனால், போஷகரில்லாமல் தாயுடனே திருவெண்ணெய்நல்லூரில் சடையப்பரென்னும் வள்ளலினிடம் போய்ச்சேர்ந்து, அவரால் ஆதரிக்கப்பெற்று, அவர்வீட்டுப்பிள்ளைகளுக்குப் பாடசாலைக்குப்புத்தகமெடுத்துக்கொண்டுபோகின்றவராய் அவர்களுடன் படித்துவந்தனர். இவர்க்குச் சரசுவதீகடாக்ஷமும், கம்பரென்னும்பெயரும் உண்டானதைப்பற்றி, ஒரு கதை உண்டு: இவர் அங்ஙனம் பள்ளியிற் படித்துவரு நாளில், அவ்வுபாத்தியாயர், தமக்கு வைரபுரமென்னுங் கிராமத்திலுள்ள கம்பங்கொல்லையினைக்கொல்லைகளைக் காப்பதற்காகத் தம்மிடத்திற் படிக்கும் பிள்ளைகளைத் தினம் ஒவ்வொருவராக அனுப்பும் முறைப்படி ஒருநாள் இப்பிள்ளையை அனுப்ப, இவரும் அன்று காலைதொடங்கிக் கொல்லையிற் காத்துவந்து நல்லவெயிலில் நித்திரைவந்ததனால்,அக்கொல்லையினருகிலிருந்த காளிகோயிலிற் போய்ப் படுத்துத்தூங்கினார். தூங்குகையிற் கொல்லையில் ஒருகுதிரை வந்து மேய்வதாகக் கனாக்கண்டு எழுந்து பார்க்க, கனவிற் கண்டபடியே பயிரை அவ்வூராள்வோனாகிய காளிங்கராயனது குதிரை மேயக் கண்டு, அதனைத் துரத்தியும் அதுபோகாமையால் அஞ்சிநடுங்கிக்காளிகோயிலுக்கெதிரேபோய் நின்று புலம்பினார். அது கண்டு காளி கருணைகூர்ந்து பிரசன்னையாகி, 'பிள்ளாய்! அழாதே; உன் நாவை நீட்டு' என்றாள். இவர் அங்ஙனமே நீட்ட, தேவி அதிற் பீஜாக்ஷரத்தை எழுதி அநுக்கிரகித்தனள். பின்பு இவர் திரும்பிச்சென்று கொல்லையிற் போய்ப்பார்க்க, அப்பொழுதும் குதிரை அப்புறம்போகாது அங்கேயே மேய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது காளிகாதேவியின் அனுக்கிரகத்தாற் சரசுவதீகடாக்ஷம் பெற்ற இவரது வாயினின்றும், அதுகண்ட கோபத்தால், தற்செயலாக, "வாய்த்த வயிரபுர மாகாளி யம்மேகேள், காய்த்த தினைப்புனத் துக் காலைவைத் துச்—சாய்த்துக் கதிரைமாளத்தின்ற காளிங்கராயன், குதிரை மாளக் கொண்டுபோ" என்று ஒருகவி உண்டாயிற்று. அங்ஙனம் இவர் பாடியவுடனே அக்குதிரை கீழே விழுந்து இறந்தது. அதனைக் கேட்டறிந்த உபாத்தியாயர் ஓடிவந்துபார்த்து அதிகாரியின் கோபத்திற்கு ஆளாவோமே யென்று கலக்கமுற, இவர், முன் பாடிய வெண்பாவின் நான்காம்அடியை "குதிரைமீளக் கொண்டுவா" என்று திருப்பிப்பாட, மாண்டகுதிரை மீண்டெழுந்தது. காளிங்கராயன் இதனைக் கேள்வியுற்று அக்காலத்தில் அரசு செலுத்திவந்த குலோத்துங்க னென்னுஞ் சோழனுக்கு அறிவிக்க, அவன் அச்சிறுவனைத் தான்பார்க்கவேண்டுமென்று வருவித்தனன். அங்ஙனமே இவர் கோலுங்கையுமாய்ப் போய்நிற்க அவன், *'இக்கம்பனா அங்ஙனஞ் செய்தவன்?' என்றனன். இதனாலும் கம்பங்கொல்லையைக்காத்ததனாலும், இவர்க்குக் கம்பர் என்று பெயராயிற்று இதற்கு வேறுசில காரணமுங் கூறுவர். இவர் பின்பு சோழராசனது ஸம்ஸ்தான வித்துவான்களுக்குத் தலைவராகி இராசசபைக்கு நாள்தோறுஞ்சென்று சமயோசிதமாகவும் சாதுரியமாகவும் பலகவிகள் பாடிப் பிரசங்கிக்கத்தலைப்பட்டு "புவிச்சக்ரவர்த்திகள் போற்றிப் பழிச்சுங், கவிச்சக்ரவர்த்தியாங் கம்பர்" என்பது போன்ற பலவிருதுகூறப் புலமை செலுத்திவந்தனர். இவர்க்கு அம்பிகாபதி யென்று ஒருமகன் பிறந்து, அவனும் சிறந்த வித்துவானாய் இவரோடு ராஜசபைக்கு நாடோறும் போய்ப் பெருமை பெற்றுவந்தனன்.

* கம்பன் - கம்புடையவன்; கம்பு=கொம்பு: உலகவழக்கு.

கம்பர் இராமாயணம் பாடியது, சடையப்பவள்ளலினது பெருமுயற்சியால். எங்ஙனமெனின்,—அவர் மகாகவியாகிய கம்பரது புலமைத்திறம் விளங்குமாறு இவரை ஏதாவது ஒரு பிரபந்தம் பாடும்படி செய்யவேண்டுமென்று சோழராசனுக்கு அறிவிக்க, அவன் தனியே ஒருவரைப் பாடச்செய்தலினும் இருவரை ஒருசேரப் பாடும்படி செய்தாற் புலமைத்திறம் நன்றாக விளங்குமென நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் 'ஸ்ரீராம சரித்திரத்தைத் தமிழ்ப்பாவினாற் பாடிமுடிக்கவேண்டும்' எனக் கட்டளையிட்டனன். கட்டளையிட்டபின்பும் கம்பர் பலநாள் பாடாமலிருந்து, ஒட்டக்கூத்தர் சுந்தரகாண்டம் வரையிற் பாடிமுடித்து யுத்தகாண்டம் பாடிக்கொண்டிருக்கையில், மறுபடி அரசனால் ஏவப்பட்டு, இவ்விராமாயணம் பாடினார். பாடுகையிற் பிரதிதினம் இராப்பொழுதெல்லாம் வடமொழிப் புலவர்களை வைத்துக்கொண்டு வால்மீகம் ஆத்யாத்மம் போதாயநம் முதலிய ராமாயணங்களையும், பலபுராணங்களையும் ஆராய்ச்சி செய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறு பாடல்வீழுக்காடு யுத்தகாண்டம் வரையில் ஆறுகாண்டமும் பதினாயிரத்துச் சில்லறை பாடல்களாற் பதினைந்து நாளிற் பாடி முடித்தனர். அங்ஙனமிருக்கையில் ஒருநாள், கம்பர், ஒட்டக்கூத்தர் வீட்டு வாயிலின் வழியே போகையில், அவர், தாம்செய்த இராமாயணம் கம்பராமாயணத்திற்கு முன் தலையெடாதென அறிந்து அதனைக்கிழித்தெறிந்து கொண்டிருக்க, கண்டு, அவ்விடஞ்சென்று, அதற்குள் யுத்தகாண்டம் வரையிற் கிழிபட்டுப் போகவே, மிச்சமான உத்தரகாண்டத்தை அப்படியே கிழியாது வைத்திருக்க வேண்டிக்கொண்டார்; அதுவே கம்பராமாயணத்திற்கு ஏழாவது காண்டமாக வழங்கலாயிற்று. கம்பர் அம்பிகாபதிக்கு விவாகம் நடத்தியபோது சடையப்ப வள்ளல் சிறிதுகாலந்தாழ்த்து வந்ததனால் இருக்கஇடம்பெறாது சலதாரையோரத்தில் ஒதுங்கி நின்றதைப் பார்த்து வருந்திய தம்மனைவியை நோக்கி 'இவரை நாம் வைக்கவேண்டிய இடத்தில் மேலாகவைப்போம்' எனக்கூறியிருந்தபடி, தம்மை ஆதரித்த அச்சடையப்பப்பிரபுவை நன்றிமறவாமையால் இராமாயணத்தில் அங்கங்கே சிறப்பித்துச் சொல்லியிருக்கிறார். பின்னர் இராமாயணம், திருவரங்கம்பெரியகோயிலில்மேட்டழகியசிங்கர் சிரக்கம்பஞ்செய்யுமாறு நாதமுனிகள் திருவோலக்கத்தில் அரங்கேற்றப்பட்டது. அந்தக் காலம் முதலியவற்றை

"எண்ணிய * சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்பநாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றினானே" எனக் காண்க.

இவர் சரசுவதியந்தாதி பாடியதைப்பற்றி வழங்குவதொரு வரலாறு:— கம்பர் ஒருகால் சோழராசனோடு மனஸ்தாபப்பட்டுச் சோழநாட்டை விட்டுச் சேரநாடுசேர்ந்து கம்பரிடத்தில் அடைப்பைக்காரனா யிருந்தவனென்று தம்மைச் சொல்லிச் சேரராசனிடத்தில் அடைப்பைக்காரனாயமர்ந்து அங்குத் தமது கல்வித்திறமைகாட்டி அரசனுடைய அன்பையும் மதிப்பையும் பெற்றுச் சிறந்து வாழ, அதுகண்ட அச்சேரசம்ஸ்தான வித்துவான்கள் பொறாமைகொண்டு ஓர் அம்பட்டனுக்குப் பொருள்கொடுத்து அவனைக்

---

* சகாத்தம்—சாலிவாகநசகாப்தம்: இப்பொழுது நடப்பது, ௧௮௨௧; ஆகவே, கம்பர்காலம் இப்பொழுதைக்கு ஆயிரம்வருஷங்களுக்கு முன்பு என்க. சிலாசாசநபரிசோதகர், முதலாவது குலோத்துங்க சோழன் பிறந்த காலம் ௮௱ - வருடங்களுக்கு முன்பு என்பர். ௧௱ - வருடம் வித்தியாசப்படும்.

கொண்டு அடைப்பைக்காரராயிருந்த கம்பரைத் தனது தயையனென்று சொல்லிச் சாதித்து அவமானப்படுத்த முயன்றார்கள். அப்பொழுது கம்பர் சரசுவதியைத் தியானித்து 'தாயே! இந்த ஆபத்காலத்தில் அடியேனைப் பாதுகாக்கும் பொருட்டுத் திருவுளமிரங்கி உனது இடக்காற் சிலம்பை என்னிடம் கொடுத்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வாறே நாமகள் அனுக்கிரகித்ததனால், அவளுடைய வச்சிரச்சிலம்பொன்று உடனே கம்பர்கையிற் கிடைத்தது; அதனை அவர், அரசனுக்குக் காணிக்கையாகக் கொடுத்து 'இதன் இணையான மற்றொன்று என் தம்பியான இந்த அம்பட்டனிடம் இருக்கிறது; அதனையும் பெற்றுக்கொள்ளவேண்டும்' என்று வேண்டினார். காண்பவர் கண்கூசும்படி சொலிக்கின்ற அவ்வொற்றைச்சிலம்பைக் கையில் வாங்கிப் பார்த்து ஆச்சரியங்கொண்ட அரசன் அந்த அம்பட்டனை நோக்கி 'உன்பங்கிலுள்ள மற்றொரு சிலம்பைக் கொண்டுவா' என்று சொல்ல, அவன் மிகஅஞ்சி 'இல்லை' என்றான். கம்பர் அதனைப் பொய்ச்சாதனையென்று வற்புறுத்திக் கூற, அரசன் கட்டளைப்படி ஏவலாளர்கள் அம்பட்டனைக் கட்டியடிக்கலானார்கள். அடிபொறுக்கமாட்டாமல் அவன் 'இந்த அடைப்பைக்காரருக்கும் எனக்கும் யாதொருசம்பந்தமுமில்லை, இந்தச்சம்ஸ்தானத்துவித்துவான்கள் என்னைக்கொண்டு இப்படியெல்லாம் செய்வித்தார்கள்' என்று உண்மையைச் சொல்லி நிலைநிறுத்தினான். பின்பு அரசன் கம்பரை நோக்கி 'இந்த அற்புதச்சிலம்பு உனக்கு ஏது?' என, கம்பர் 'இது சரசுவதியினது' என்று சொல்லி அதனை மெய்ப்பிக்கும் பொருட்டுச் சரசுவதியைத் தியானித்துச் சரசுவதியந்தாதி யென்னும் இந்நூலைப் பாடித் தோத்திரித்தவளவிலே, அக்கலைமகள் ஒற்றைக்காற்சிலம்பு ஒலிக்க நடனஞ்செய்து கொண்டு பிரதியக்ஷமாகத் தோன்றி 'எங்கே சிலம்பு?' என்று கம்பரைக் கேட்க, இவர் அரசன்கையி லிருந்த சிலம்பை வாங்கி அத்தேவியின் இடத் திருவடிக்கு நேரே நீட்ட, அது அத்திருவடியிற்போய் ஏறின மாத்திரத்தில், கலைவாணி அந்தர்த்தானமாய்விட்டாள். அதுகண்டுவியந்த சேரன் கம்பரை நன்குவிசாரித்து அவர்இன்னாரென்றஉண்மையைஅறிந்துகொண்டான்.

இவர்செய்த வேறுநூல்கள் - ஆழ்வார்நூற்றந்தாதி யென வழங்குகின்ற சடகோபரந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கைவழக்கம்முதலியன.

இவர்காலத்து இருந்த வித்துவான்கள் - புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தர், ஔவை முதலியோர்.

இவர் சரித்திரவிவரத்தை விநோதரசமஞ்சரி, புலவர்புராணம்முதலிய நூல்களிற் காணலாம்.

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர் சயங்கொண்டான் விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன் கோவை யுலா வந்தாதிக் கொட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக் காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா தொருவர் பகரொணாதே"

என்பதனால், இவர், விருத்தம்பாடுதலில் மிகச்சிறந்தவரென விளங்கும்.
'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிசொல்லும்', 'கல்வியிற் பெரியவன் கம்பன்' என்ற பழமொழிகள் இவரது கல்வித்திறத்தை மெச்சி வழங்கியன.

---

# சரசுவதியந்தாதி.

சரசுவதியினது அந்தாதி என விரியும்; சரசுவதியின் விஷயமாக அந்தாதித்தொடையாற் பாடப்பட்டதொரு பிரபந்த மென்பது பொருள். இத்தொடர்மொழியில் தொக்குநின்ற ஆறும் வேற்றுமை யுருபின் பொருளாகிய சம்பந்தம், விஷயமாக வுடைமை; விஷ்ணுபுராணம், விநாயகரகவல் என்பவற்றிற்போல. ஸரஸ்வதீ என்ற வடசொல் - (எங்கும்) வியாபித்தலையுடையளென்று காரணப்பொருள்படும். இவள் - பிரமன்மனைவி, கல்விக்குஉரிய தெய்வம். அந்தாதி - அந்தத்தைஆதியாக வுடையது; வேற்றுமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; வடமொழித் தொடர்: தீர்க்கசந்தி: அந்த ஆதிஎனப் பிரிக்க. அந்தாதியாவது - ஒருசெய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்த செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது. இங்ஙனம் பாடும் நூலின் ஈற்றுச்செய்யுளின் அந்தமே முதற்செய்யுளின் ஆதியாக அமைதல், மண்டலித்த லெனப்படும். இது, தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றும். இதனைச் சிறுகாப்பியத்தில் அடக்குவர் ஒருசாரார்.

இந்நூல் - முதலிற் காப்புச்செய்யுளாகவுள்ளஇரண்டு வெண்பா நீங்கலாக முப்பது கட்டளைக்கலித்துறைகளால் அமைந்தது.

## காப்பு.

காப்பு - காத்தல்; 'பு' விகுதி பெற்ற தொழிற்பெயர்: அது - இங்கு, காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகுபெயர். ஆகவே, கவி தமக்கு நேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர் பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து.

இக்காப்பு இந்நூலாசிரியர்க்கு இஷ்டதேவதையும் இந்நூலுக்குத் தலைவியுமான சரசுவதியின் விஷயமானதாதலால், இதனை, வழிபடுகடவுள் வணக்கத்தோடு ஏற்புடைக்கடவுள் வணக்கமு மா மென்று கொள்ளலாம். (வழிபடுகடவுள் - தம்மாற் பூசிக்கப்படும் தெய்வம். ஏற்புடைக் கடவுள் - தாம் பாடத்தொடங்கிய நூலுக்கு ஏற்ற தெய்வம்.)

1.—(இ - ள்.) ஆய - பொருந்திய, கலைகள் அறுபத்து நான்கினையும் - அறுபத்துநான்குவகைக் கல்விகளையும், ஏய - தகுதியாக [உரியபடி], உணர்விக்கும் - (தனக்கு அடிமைப்பட்ட என்போலியர்க்குத்) தெரியச் செய்தருளுகிற, என் அம்மை - எனது தாய் போன்றவளும், தூய உரு பளிங்கு போல்வாள் - பரிசுத்தமான திருமேனி ஸ்படிகம்போல வெண்ணிறமாக இருக்கப்பெற்றவளும் ஆகிய சரசுவதீதேவி, என் உள்ளத்தினுள்ளே இருப்பள் - எனது மனத்திலே (எப்பொழுதும்) எழுந்தருளியிருக்கிறாள்; (ஆதலால்), இங்கு இடர்வாராது - இவ்விடத்தில் துன்பமொன்றும் வரமாட்டாது.

கலைகளெல்லாவற்றிற்குந் தலைவியும், அவற்றையெல்லாம் தன் அடியார்க்கு அருள்பவளும், சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்று வகைக் குணங்களுள் சத்துவகுணத்தையே யுடையவளென்பது தோன்ற வெண்ணிறமாய் விளங்குபவளும் தன் அடியாரது புலமைத்திறத்துக்கு இடையூறு நேரிடாதபடி பரிபாலிப்பவளும், ஒருகால் இடையூறு நேர்ந்தாலும் அதனை உடனே ஒழிக்கவல்லவளு மான சரசுவதியை யான் வழிபடு கடவுளாகக் கொண்டு அன்போடு தியானிக்கின்றேனாதலால், அவள் யான் நினைத்த வண்ணமாய் எனது உள்ளக்கமலத்தில் வந்து எழுந்தருளியிருக்கிறாள். ஆதலால், யான் இயற்றத்தொடங்கிய இப்பிரபந்தத்துக்கும், மற்றும் யான்விரும்

பும் நற்பேறுகளுக்கும் இடையூறொன்றும் வரமாட்டா தென்று துணிந்து கூறியவாறும்.

ஆய - ஆகிய, இறந்தகாலப் பெயரெச்சம்: ய் - காலங்காட்டும் இடைநிலை. கலா, அம்பா, ரூபம், ஸ்படிகம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கலைஞானம் அறுபத்து நான்கு - சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம், தர்க்கம், வியாகரணம், சோதிஷம், வைத்தியம், சில்பம், கணிதம், சங்கீதம், நாட்டியம் முதலியன; அகராதியிற் காண்க. உம் - முற்றுப் பொருளது. எய-செயவெனெச்சம்; எய்-பகுதி. மிக்க அன்புடைமையும், நன்குமதிக்கப்படுதலும் பற்றி, 'அம்மை' என்றார். இருப்பள் என்பதில், பகரவிடைநிலை, எதிர்கால முணர்த்தாது தன்மைமாத்திரத்தை உணர்த்திற்று.' இங்கு என்பது - மூவிடங்களுள் தன்மையிடத்தை உணர்த்தும்; என்னிடத்து என்றபடி. வாராது என்ற எதிர்மறைமுற்றில், ர் - விரித்தல் விகாரம்.

2.—(இ - ள்.) (சரசுவதிதேவியினுடைய), படிகம் நிறமும் - ஸ்படிகம் போன்ற வெண்ணிறத்தையும், பவளம் செம் வாயும் - பவழம்போலச்சிவந்த வாயையும், கடி கமழ் தாமரை பூ போல் கையும் - வாசனைவீசுகிற(செந்)தாமரைமலர் போலச் சிவந்த திருக்கைகளையும், துடி இடையும் - உடுக்கை போன்ற இடையையும், அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்- இரவும் பகலுமாகிய எப்பொழுதும் (இடைவிடாது) தோத்திரஞ் செய்தால், கல்லும் கவி சொல்லாதோ - (அசேதனமான) கல்லும் கவிபாடமாட்டாதோ? [தவறாது பாடுமென்றபடி]; (எ-று.)

எவ்வளவு அறிவீனர்களும் சரசுவதியைத் தோத்திரித்தால் அவளருள் பெற்றுக் கவிபாடக் கூடுமென்று அவளுடையமகிமையை உணர்த்திய வாறு. வாழ்த்து, வணக்கம், தலைமைப்பொருளுரைத்தல் என்ற மூன்று வகை மங்களங்களுள், முந்தின செய்யுள் - தியானமென்னும் மனவணக்கத்தையுணர்த்தியது; இச்செய்யுள் - தலைமைப்பொருளுரைத்தது.

படிகநிறம், பவளச்செவ்வாய், தாமரைபோற்கை என்பன வினை பயன் மெய் உரு என்ற நால்வகையுவமைகளில் உருவுவமை; (உரு-நிறம்.) துடியிடை - மெய்யுவமை; (மெய் - வடிவு.) உடுக்கைபோல மேலும் கீழும் அகன்று நடுச்சிறுத்திருக்கும் இடை யென்க. ஸ்படிகம், ப்ரவாளம், தாமரஸம், அநவரதம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கவி - தற்சமவடசொல். பாடுவோனை யுணர்த்துவதாகிய இச்சொல் - அவனாற் பாடப்பட்ட செய்யுளை யுணர்த்தும்போது கருத்தாவாகுபெயராம். கடி - உரிச்சொல். கல்லும், உம்- இழிவு சிறப்பு. அநவரதமும், உம்மை - முற்றுப்பொருளது. மற்றை உம்மைகள் - எண்ணுப்பொருளன. சொல்லாதோ என்பதில், இரண்டு எதிர்மறை - உடன்பாட்டுப்பொருளை யுணர்த்தித் தேற்றககருத்தை விளக்கும்.

---

## நூல்.

1.—(இ - ள்.) சீர் தந்த - சிறப்பு அமைந்த, வெள் இதழ் பூ கமலம் - வெண்ணிறமான இதழ்களையுடைய அழகிய தாமரையை [வெண்டாமரைமலரை], ஆசனம்-இருக்குமிடமாகக்கொண்டு அதில் வீற்றிருக்கிற, தேவி-தலைவியும் —செம் சொல் தார் தந்த-செவ்விய சொற்களின் வரிசையை உண்டாக்கிக்கொடுத்த [கவித்தெய்வமான என்றபடி], என் மனம் தாமரை ஆட்டி - எனது மனமாகிய தாமரைமலரில் வீற்றிருந்து அதனை யாள்பவளும்,—சரோருகம் மேல் - திருமாலின் நாபித்) தாமரைமலரின் மேல் (தோன்றி), பார் தந்த- உலகங்களைப் படைத்த, நாதன்-தலைவனான பிரமதேவன், இசை தந்த - ஸ்வரங்களோடு வெளியிட்ட, ஆரணம் - வேதமாகிய,

பங்கயத்தாள் - தாமரைமலரில் வீற்றிருப்பவளுமான சரசுவதியினுடைய, வார் தந்த சோதி - மிகுதியாக வெளிவீசுகிற ஒளியையுடைய, அம்போருகம் தாளை-செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை, வணங்குதும்-வணங்குவோம், (யாம்) ; (எ - று.)—ஏ - ஈற்றசை.

ஆதியில் திருமால் தனதுநாபியில் தோன்றிய பிரமனுக்கு வேதங்களை உபதேசிக்க, அவன் பின்பு அவற்றை உலகத்தில் வெளியிட்டன னுதலால், 'சரோருகமேற் பார்தந்தநாத னிசைதந்த ஆரணம்' எனப்பட்டது: "தன்னுபி வலயத்துப் பேரொளிசேர், மன்னிய தாமரை மாமலர் பூத்து அம்மலர் மேல், முன்னங் திசைமுகனைத் தான்படைக்க மற்றவனும், முன்னம் படைத்தனன் நான்மறைகள்" எனத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்ததையுங் காண்க. படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிற்கும் உரிய முதற்கடவுளரான திரிமூர்த்திகளில் ஒருவனுதலால், 'நாதன்' என்றார். மனத்தாமரை-இருதயகமலம். அன்பால்நினைவாரது உள்ளக்கமலத்தில் வந்து வீற்றிருத்தல்பற்றி, 'என் மனத்தாமரை யாட்டி' என்றார். தார் - மாலை. 'செஞ்சொல் தார் தந்த' என்றது, தாமரையாட்டிக்கு அடைமொழி. செவ்விய பாமாலையைப் பாடிய என்று பொருள்கொண்டு, 'என்' என்பதற்கு அடைமொழியாக்குதலும் ஒன்று. ஆட்டி - ஆளன் என்பதன் பெண்பால்; ஆள் - பகுதி, இ - பெண்பால்விகுதி, ட் - எழுத்துப்பேறு, ளகரம் டகரமானது - சந்தி. வேதத்துக்கு உரிய ஸ்வரம் உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதம் ப்ரசயம் என நான்காம். வேதம் சரசுவதி வாழ்தற்கு இனிய உறைவிடமாதலால், 'பங்கயம்'எனப்பட்டது. மூன்றும் அடியினால், 'நாமகள்'என்னும்படி பிரமனது வேதமோதும் வாக்கில் வசிப்பவ ளென்பதும் தோன்றும். 'வார்தந்த' என்றதில், வார் என்ற வினைப்பகுதியின்மேல், தா - துணைவினை. வார்தல் - மிகுதல். வணங்குதும் என்ற தன்மைப்பன்மையைக் கவிகளுக்கு உரிய இயல்புபற்றி வந்த தென்றாவது, தன்னைப் போன்ற அடியார்களையும் உளப்படுத்திய தென்றாவது கொள்க. கமலாஸநம், தேவீ, மநஸ், தாமரஸம், ஸரோருஹம், நாதன், பங்கஜம், ஜ்யோதி, அம்போருஹம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. கமலாஸநம் - தீர்க்கசந்தி பெற்ற தொடர்மொழி. சரோருகம் என்பது - குளத்தில் முளைப்ப தென்றும் (ஸரஸ் - நீர்நிலை), பங்கஜம் என்பது - சேற்றில் முளைப்ப தென்றும் (பங்கம் - சேறு), அம்போருகம் என்பது - நீரில் முளைப்பதென்றும் (அம்பஸ் - ஜலம்) காரணப் பொருள்படும். இவை - இங்ஙனம் தோன்றும் பிறவற்றுக்கெல்லாம் காரணக்குறி யாகாது தாமரை யொன்றற்கே பெயராய் வழங்குதல் காரணவிடுகுறி. சீர் - ஸ்ரீ என்ற வடசொல்லின் சிதைவென்பர். ஆரணம் - தற்சம வடசொல்.

இச்செய்யுளில், ஒருபொருளையேகுறிக்கிற கமலம்,தாமரை,சரோருகம், பங்கயம், அம்போருகம் என்ற பலசொற்கள் வந்தது, பொருட்பின்வருநிலையணி. (க)

(இந்நூலின் 2, 3 - ஆம் செய்யுள்கள் விலக்கப்பட்டன.)

2.—(இ - ள்.) இயலானது கொண்டு-கல்வியைக் கொண்டு, நின் திருநாமங்கள் ஏத்துதற்கு முயலாமையால் - உனது திருப்பெயர்களைத் துதித்தற்கு முயலாததனுல், தயமாறுகின்றேன் - நிலைகலங்குகிறேன் ; இந்த மூவுலகும் செயலால் அமைத்த கலை மகளே - இந்த மூன்றுவகை யுலகங்களையும் தன்செயலாற் படைத்தருளிய சரசுவதியே! நின் திரு அருளுக்கு அயல் ஆ விடாமல் - உனது சிறந்த கருணைக்குப் புறம்பாக விட்டிடாமல், அடியேனையும் உவந்து ஆண்டருளே - (உனக்கு) அடிமைப்பட்டவனை என்னையும் (மற்றை யடியார்களைப்போலவே) அன்புகொண்டு பாதுகாத்தருள்வாய்.

இந்த மூவுலகு-மேல் கீழ் நடு என்பன. சகலலோகங்களையும் படைத்த கடவுளான பிரமனது தொழிலை உபசாரமாக அவன்மனைவிமே லேற்றி 'இந்த மூவுலகுஞ் செயலா லமைத்த கலைமகளே' என்றார். அன்றியும், பிரமனது சத்திசொரூபமான இவள் அவனது படைப்புத்தொழிற்கு உதவியாதலுங் காண்க. இனி, உலகத்தார் எல்லோரையும் தனது நிகழ்ச்சியால் நடைபெறச்செய்த என்றலும் ஒன்று. கலைமகள் - கல்விக்கு உரிய மகள். இயலானதுகொண்டு என்பதற்கு-இயற்றமிழ்ப்பாடல்களினால்என்றும் பொருளுரைக்கலாம். இதில், 'ஆனது' என்றது - பகுதிப்பொருள் விகுதி, கொண்டு - மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு. முயலாமை - எதிர்மறைத் தொழிற்பெயர். முயலுதல - பிரயத்தனப்படுதல். அயலா என்பதில், 'ஆ'என்பது - ஆக என்பதன் விகாரம். அயல் - வெளியிலக்கு. அடியேன் - அடிமையென்னும் பண்பினடியாப் பிறந்த தன்மையொருமைகுறிப்புவினையாலணையும்பெயர்; உம்மை - எச்சப்பொருளோடு இழிவுசிறப்பு. நாமம் - வடசொல.

3.—(இ - ள்.) அருக்க உதயத்தினும் சந்திர உதயம் ஒத்து அழகு எறிக்கும் - சூரியோதயத்தைக்காட்டிலும் மிகுதியாக விளங்குவதொரு சந்திரோதயத்தைப் போன்று அழகியஒளியை வீசுகிற,திரு கோலம்-திருமேனியையுடைய, நாயகி - தலைவியும், செம் தமிழ் பாவை - செவ்விய தமிழுக்கு உரிய தேவதையும், திசை முகத்தால் இருக்கு ஓதும் நாதனும் தானும் எப்போதும் இனிது இருக்கும் - நான்குதிக்கையும் நோக்கிய நான்குமுகங்களால் (நான்கு) வேதங்களையும் ஓதிக்கொண்டிருக்கிற தன்கணவனான பிரமதேவனும் தானுமாக எப்பொழுதும் கூடி இனிமையாக வீற்றிருக்கிற, மரு கோலம் நாள் மலராள்-வாசனையுள்ளஅழகிய அன்றுமலர்ந்ததாமரைப் பூவில் வாழ்பவளுமான சரசுவதி, என்னை ஆளும் மட மயில் - என்னை அடிமை கொண்டு பாதுகாக்குந் தேவதையாவள்; (எ - று.)

மடமயில் — மடப்பமுள்ள மயில்; மடப்பம் - இளமைக்குணம். மயில் போன்ற சாயலுடையவளை 'மயில்' என்றது, உபசாரவழக்கு; உவமையாகு பெயர். சரசுவதியினது அழகிய திருமேனி வெண்ணிறமாய்ச் சூரியனொளியினும் மேலாகப் பிரகாசித்தல்பற்றி, 'அருக்கோதயத்தினுஞ் சந்திரோதயமொத்து அழகெறிக்குந் திருக்கோலம்' எனப்பட்டது. அருக்கோதயத்தின் என்றதில், ஐந்தனுருபு - எல்லைப்பொருளது; உம்-உயர்வுசிறப்பு. அர்க்கோதயம், சந்த்ரோதயம் - குணசந்திபெற்ற வடமொழித்தொடர்கள்; அ, ஆ முன் உ, ஊ வரின் இரண்டுங்கெட ஓர் ஓகாரம் தோன்றும். அருக்கனது உதயம், சந்திரனது உதயம் என ஆறாம்வேற்றுமைத்தொகை. நாயகி - நாயகனென்பதன் பெண்பால். செந்தமிழ் - சுத்தமான தமிழ், கலப்பில்லாத தமிழ். இதற்கு மாறானது, கொடுந்தமிழ் எனப்படும். இருக்கு - ருக் என்ற வடசொல்லின் விகாரம்; இது, நான்குவேதங்களில் ஒன்றற்குச் சிறப்புப்பெயராவதோடு எல்லாவேதங்கட்கும் பொதுப்பெயராகவும் நிற்கும். நாள் மலர் - புதியமலர். (௩)

4.—(இ - ள்.) மயிலே - (சாயலில்) மயில் போன்றவளே! மடம் பிடியே - (நடையழகில்) இளமையான பெண்யானை போன்றவளே! கொடியே - (மெல்லிய வடிவங்கொண்டு ஒல்கிஒசியுந்திறத்தில்) பூங்கொடிபோன்றவளே! இள மான் பிணையே- (பார்வையழகில்) இளமையான பெண்மான் போன்றவளே! குயிலே — (இனியகுரலில்) குயில்போன்றவளே! பசு கிளியே- (இனிமையாகக் கொஞ்சிப் பேசுதலில்) பச்சைக்கிளி போன்றவளே! அன்னமே- (நடையழகில்) அன்னப்பறவை போன்றவளே! மனம் கூர் இருட்கு ஓர் வெயிலே - (ஜனங்களுடைய) மனத்தின் மிக்க அஜ்ஞானமாகிய இருளைப்

போக்குதற்கு ஒப்பற்றதொரு சூரியகாந்திபோன்றவளே! நிலவு எழு மேனி-சந்திரகாந்திபோன்ற வெள்ளொளி விளங்குகிற திருமேனியையுடைய, மின்னே - மின்னல்போலப் பிரகாசிப்பவளே! இனி வேறு தவம் பயிலேன்-இனி வேறு தவமெதனையும் செய்யமாட்டேன்: மகிழ்ந்து உனது பொன் பாதங்களே பணிவேன் - மகிழ்ச்சிகொண்டு உனது திருவடிகளையே வணங்குவேன்; (எ-று.)—ஈற்று ஏகாரம் - பிரிநிலை; மற்றவை - விளியுருபு.

மயில் முதலியன - உவமையாகுபெயர். பிடி - யானையின் பெண்மைப் பெயர்; இதன் ஆண்பால்-களிறு. பிணை - மானின் பெண்மைப்பெயர்; இதன் ஆண்பால் - கலை. கூர் - உரிச்சொல். புறவிருளை நீக்குகிற வெயிலினும் அகவிருளை நீக்குகிற இதற்கு உள்ள சிறப்பு விளங்க 'ஓர் வெயில்' என்றார். நிலவு - நிலா என்பதன் விகாரம்; "குறியதன்கீழ் ஆ" என்னுஞ்சூத்திரவிதி. பொன் - அழகு. பொற்பாதம் - பொன்போலச்சிறந்த பாதமுமாம். பொன் அணிஅணிந்த பாத மெனினுமாம்; இப்பொருளில், பொன்-கருவியாகுபெயர். மயில் - மயூரம். அன்னம் - ஹம்ஸம். (௪)

5.—(இ - ள்.) பாத அம்புயத்தில் பணிவார்தமக்கு - தனது திருவடித் தாமரைகளில் விழுந்து வணங்குபவர்களுக்கு, பல கலையும் - பலவகைச்சாஸ்திரங்களையும், வேதாந்த முத்தியும் - வேதாந்தத்திற் கூறப்படுகிற மோக்ஷத்தையும், தந்துஅருள் - கொடுத்தருள்கிற, பாரதி-பாரதியென்னும் ஒருதிருநாமம் உள்ளவளும், வெள் இதழ் - வெண்ணிறமான இதழ்களையுடைய, பூ - அழகிய, சீத அம்புயத்தில் - குளிர்ந்த தாமரைமலரில், இருப்பாள் - வீற்றிருப்பவளுமான சரசுவதி, என் சிந்தையுள்ளே இருப்ப - எனது மனத்திலே வீற்றிருத்தலால், இனி எனக்கு புவியில் பெறல் அரிது ஆவது எது ஆம் - இனிமேல் எனக்கு உலகத்தில் பெறுதற்கு அரியதாகும் பொருள் யாதாகும்? [யாதுமில்லை யென்றபடி]; (எ-று.)

யான் சரசுவதியை இடைவிடாது தியானித்து அவளுடைய மாறுக்கருணையைப் பெற்றேனாதலால், இனி எனக்கு எல்லாப்பேறுகளும் எளிதிற் கைகூடு மென்பதாம். பாதாம்புஜம், வேதாந்தம், சீதாம்புஜம் - தீர்க்கசந்தி பெற்ற வடமொழித்தொடர்கள். அம்புஜம் - நீரில்தோன்றுவது: அம்பு - நீர் வேதாந்தம் என்பது - வேத அந்தம் எனப் பிரிந்து, வேதத்தின் ஈற்றுப்பகுதியும் தேர்ந்தகருத்துமாகிய உபநிஷத்துக்களைக் குறிக்கும். பூர்வகாண்டம் உத்தரகாண்டம் என வேதம் இரண்டாகப் பகுக்கப்பட்டு, அவற்றில் யாகாதி கிரியைகளைக் கூறுகிற முந்தின பாகம் கருமகாண்டம் என்றும், கடவுளைப் பற்றிக் கூறுகிற பிந்தியபாகம் ஞானகாண்டம் அல்லது பிரமகாண்டம் என்றும் கூறப்படும். முக்தி என்ற வடசொல் - எல்லாப்பற்றுக்களையும் விட்டு அடையுமிடம் என்றும், பாரதீ என்ற வடசொல் - எல்லாவற்றையும் பரிப்பவள் என்றும் [பரித்தல் - நிர்வகித்து நடத்தல்] காரணப்பொருள்படும். புவி - வடசொல். (௫)

6.—(இ - ள்.) இனி நான் உணர்வது - இனி நான் தியானிப்பது,—எண் எண் கலையாளை - அறுபத்துநான்கு கலைஞானங்கட்கும் உரியவளும், இலகு தொண்டை கனி நாணும் செம் இதழ் - விளங்குகின்ற கொவ்வைப் பழம் (ஒப்பாகமாட்டாது) வெள்குதற்குக் காரணமான சிவந்தவாயிதழையும், வெள் நிறத்தாளை - வெண்மையான திருமேனிநிறத்தையும் உடையவளும், கமலம் அயன் தனி நாயகியை - தாமரைமலரில்வாழ்கிற பிரமனுடைய ஒப்பற்ற மனைவியும், அகில அண்டமும் பெற்ற தாயை - எல்லாஅண்டகோளங்களையும்பெற்ற தாயும், மணம் பனி நாள் மலர் உறை - வாசனையையுடைய குளிர்ந்த அன்றுபூத்த தாமரைப்பூவில் வீற்றிருக்கிற, பூவையை - கிளிபோ

ன்றவளும், ஆரணம் பாவையை - வேதங்கட்கு உரிய அதிதேவதையுமான சரசுவதியையேயாம்; (எ - று.)

எண்ணெணண்கலை-பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். தொண்டை-ஓர்கொடி. தொண்டைக்கனி நாணுஞ்செவ்விதழ்- கொவ்வைக்கனியினும் மிகச் சிறந்த இதழ் என்றபடி. நாணும் இதழ் - பெயரெச்சம் காரியப்பொருளது; 'நோய்தீரும்மருந்து' என்றவிடத்திற்போல.'செவ்விதழ்வெண்ணிறத்தாள்' என்றவிடத்து முரண்தொடை இருத்தல் காண்க. அஜன்என்ற வடசொல், அயன்என விகாரப்பட்டது; திருமாலினிடத்துத்தோன்றியவனென்றுபொருள்படும்; அ-விஷ்ணு. பூவை, பாவை- உவமையாகுபெயர்கள். (சு)

7.—(இ - ள்.) பாவும் - பாடல்களும், தொடையும் - தொடைகளும், பதங்களும் - சொற்களும், சீரும் - சீர்களும், பல விதம் ஆமேவும் - பலவகையாக அமையப்பெற்ற, கலைகள் - நூல்களை, விதிப்பாள் - நிர்வகிப்பவளான சரசுவதிக்கு, இடம் - இருப்பிடமாவன,—முதிய விதியின் நாவும் - (எல்லாப்பிராணிகளுக்கும்) மூதாதையான பிரமனுடைய நாக்கும், பகர்ந்த தொல் வேதங்கள் நான்கும்-(அவனால்) சொல்லப்பட்ட பழமையான நான்கு வேதங்களும், நறு கமலம் பூவும் - வாசனையையுடைய வெண்டாமரைமலரும், திரு பதம் பூவால் அணிபவர் புந்தியுமே - தனது திருவடிகளை மலர்களைக்கொண்டு இட்டு அருச்சிக்கிற அடியார்களுடைய மனமுமே யாம்; (எ-று.)

பா - வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா முதலியன. துறை, தாழிசை, விருத்தம் என மூன்றுவகையான இவற்றினினங்களும், பா என்றதில் அடங்கும். தொடை - எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது. அது, எதுகை மோனை முரண் முதலாகப் பலவாம். பதங்கள் - பகுபதமும், பகாப்பதமும்; பெயர் வினை முதலிய சொற்களெனினுமாம். சீர் - ஓரசைச சீர் முதலியன. இவற்றின்தன்மையை இலக்கணநூல்களிற் காண்க. தொடையும், சீரும் - பாவின்உறுப்பு. கலைகள்விதிப்பாள் - கல்வித்தெய்வமென்றபடி. விதி - படைத்தற் கடவுள். அவன் பிதாமகன் எனப்படுகிற முதன்மைதோன்ற, 'முதியவிதி' என்றார். தொல் வேதம் - பண்புத்தொகை. வேதம் - ஒருவராலும் ஆக்கப்படாமல் கடவுள்போல நித்தியமாக வுள்ளதென்பது தோன்ற, 'தொல்வேதம்' எனப்பட்டது. இதனை ஆதியில் திருமால் பிரமனுக்கும், பின்பு பிரமன் மற்றையோர்க்கும் வெளியிட்டுக் கூறினரேயன்றி யாரும் இதனைச் செய்தவரல்லரென அறிக. இதுபற்றி, வேதத்துக்கு 'செய்யா மொழி' என ஒருபெயர் வழங்கும். வேதம் என்ற வடசொல் - நன்மைதீமைகளை விதிவிலக்குக்களால் அறிவிப்பதென்று பொருள்படும்; வித் - அறிவித்தல். வேதங்கள் நான்கு - ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்பன. புந்தி - புத்தி என்ற வடசொல்லின் விகாரம். (எ)

8.—(இ - ள்.) உந்தியில் தோன்றும் பிரான் புயம் தோயும் ஒருத்தியை - (திருமாலினது) நாபியினின்று தோன்றிய கடவுளான பிரமதேவனுடைய தோள்களைத் தழுவுகிற சரசுவதியாகிய ஒருத்தியை, புந்தியில் கூர் இருள் நீக்கும் புதிய மதியம் என்கோ - (ஜனங்களுடைய) மனத்தின் மிக்க அஜ்ஞானமாகியஇருளைப் போக்குகிற புதிய சந்திரனென்று சொல்வேனோ! அந்தியில் தோன்றிய தீபம் என்கோ - மாலைப்பொழுதில் ஏற்றப்பட்டுவிளங்குவதான விளக்கென்று சொல்வேனோ! நல் அரு மறையோர் சந்தியில் தோன்றும் தபனன் என்கோ - சிறந்த அருமையான வேதங்கட்கு உரியவரான பிராமணர்கள் நமஸ்காரஞ்செய்கிற காலைச்சந்தியிலே உதித்துவிளங்குகிற சூரியனென்று சொல்வேனோ! மணி தாமம் என்கோ - இரத்தினஹாரமென்று சொல்வேனோ! (எ - று.)

மிகப் பிரகாசிக்கிற சரசுவதியினது திவ்யசொரூபம் சந்திரசூரிய அக்கினி யர் என்னும் முச்சுடராகவும், இரத்தினமாலையாகவும் விகற்பிக்கலாம்படி யுள்ள தென்பது, தேர்ந்த கருத்து.

புறவிருளை நீக்குகிற சந்திரனினும் இதற்குள்ள மேம்பாடு விளங்க, 'புதிய மதியம்' என்றார். மதியம், அம் - சாரியை. ஸந்த்யாஎன்ற வடசொல்- அந்தி என்றும், சந்தி என்றும் விகாரப்பட்டது. பகலொடு இரவு சேருஞ் சமயத்தையும், இரவொடு பகல் சேருஞ் சமயத்தையும் உணர்த்தும் இப்பொ துப்பெயர்- இங்குச் சிறப்பாய் முறையே மாலைச்சந்தியையும், காலைச்சந்தியை யுங் குறித்தது. என்கோ - என்கு ஓ எனப் பிரிக்க. என்கு - என்பேன்; என் - இடைச்சொற் பகுதி, கு- தன்மையொருமை விகுதி; [நன்-வினை-அ.] இதுவே எதிர்கால முணர்த்தும்; [நன் - பத - கஅ.] இனி, 'என்கவோ' என்பது, 'என்கோ' என விகாரப்பட்ட தென்றலு மொன்று: என்பே னாகவோ என்று பொருள்; வியங்கோள்முற்று, தன்மை யொருமைக்கு வந்த தென்க. தீபம், தபநன், தாமம், புஜம் - வடசொற்கள். (அ)

9.—(இ - ள்.) ஒருத்தியை - ஒப்பற்றவளும், ஒன்றும் இலா என் மனத் தின் உவந்து தன்னை இருத்தியை-யாதொருநற்சிந்தனையு மில்லாத எனது மனத்திலே மகிழ்ச்சிகொண்டு தன்னை வீற்றிருக்கச்செய்தவளும், வெள் கம லத்து இருப்பாளை - வெண்டாமரைமலரில் வீற்றிருப்பவளும், எண் எண் கலை தோய் கருத்தியை - அறுபத்துநான்கு கலை ஞானமும் நிறைந்த மனத் தையுடையவளும், ஐம்புலனும் கலங்காமல் கருத்தை எல்லாம் திருத்தியை - (தன் அடியார்களுடைய) பஞ்ச இந்திரியங்களும் நிலைகலங்காதபடி (அவர்க ளுடைய) மனத்தை யெல்லாம் திருந்தச்செய்பவளும், திசை நால் முகன் தேவியை - நான்குதிசையையும் நோக்கிய நான்கு முகங்களையுடையவனான பிரமனது மனைவியுமான சரசுவதியை, யான் மறவேன் - நான் (ஒருகாலும்) மறக்கமாட்டேன் [இடைவிடாமல் எப்பொழுதும் தியானிப்பேன் என்றபடி].

ஒருத்தி - ஒன்று என்பதன் அடியாப் பிறந்த பெண்பாற் பெயர்; இதன் ஆண்பால் - ஒருத்தன், ஒருவன்; இதில், து - சாரியை. 'ஒன்றுமிலா என் மனத்தின் உவந்து தன்னை இருத்தி'—அடியவர்க் கெளியளாய் அவர் மனத் தில் வந்து வீற்றிருக்கும் பேரருளுடையவ ளென்றபடி: ஒன்றும் - எண்ணல ளவாகு பெயர்; உம் - இழிவுசிறப்பு. இருத்தி, இரு என்பதன் பிறவினை யான இருத்து - பகுதி; திருத்திட, திருந்து என்பதன் பிறவினையான திரு த்து - பகுதி: இரண்டிலும், இ - கருத்தாப்பொருள் விகுதி. எண்ணெண் கலை - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். கருத்தி, இ - பெயர் விகுதி. இங்கே, பொறி, புலனெனப்பட்டது; ஐம்பொறி - மெய் வாய் கண் மூக்குச் செவி. அவை நிலைகலங்குதலாவது - தீநெறியால் ஐம்புலன்களிற் செல்லல். ஐம்புலனும், உம்மை - முற்றுப்பொருளது. மனத்தின், இன் - ஏழனுருபு.

10.—(இ - ள்.) தேவரும் - தேவர்களும், தெய்வம் பெருமானும் - அத் தேவர்கட்குத் தலைவனான இந்திரனும், நால் மறை செப்புகின்ற மூவரும் - நான்கு வேதங்களினாலுஞ் சொல்லப்படுகிற (அயன் அரி அரன் என்னுந்) திரிமூர்த்திகளும், தானவர் ஆகி உள்ளோரும் - அசுரர்களாயுள்ளவர்களும், முனிவரரும் - இருஷிசிரேஷ்டர்களும், யாவரும் - (மற்றும் உயர்திணையின் பாற்பட்ட) அனைவரும், ஏனைய எல்லா உயிரும் - மற்றை [அஃறிணையாக வுள்ள] எல்லாவுயிர்களும், ஞானம் புரிகின்றது - அறிவு கொண்டிருத் தல், இதழ் வெளுத்த பூ வரு மாதின் அருள் கொண்டே - வெண்ணிறமான இதழ்களையுடைய தாமரைமலரில் வாழ்கிற சரசுவதியினுடைய கருணையினா லேயாம்; (எ - று.)

உயர்திணையும் அஃறிணையுமாகிய எல்லாவுயிர்களும் கொள்ளும் இயற்கையறிவுக்கும் செயற்கையறிவுக்கும் சரசுவதியின் அருளே காரணமென்பது கருத்து. மூவர் - தொகைக்குறிப்பு. தாதவர் - (காசியபமுனிவரது மனைவியருள்) தநு என்பவளது புதல்வர்; வடமொழித் தத்திதாந்தநாமம். முனிவரர் - வடமொழித் தொடர். ஏனைய - ஏனை யென்னும் இடைச்சொல்லடியாப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம். வெளுத்த என்பதில், வெண்மையென்னும் பண்பிரடி விகாரப்பட்டு வினைத்தன்மையடைந்த வெளு என்பது - பகுதி. அடைமொழி கொடாமல் 'பூ' என்றும், அது - எல்லாமலர்களிலும் சிறந்ததாகிய தாமரையைக் குறிக்கும். மாது - விரும்பப்படும் அழகுடைய பெண். புரிகின்றது - நிகழ்காலத்தொழிற்பெயர். (க0)

11.—(இ - ள்.) புரிகின்ற சிந்தையினூடே - (தன்னை) விரும்பிப்பயிலுகின்றவர்களுடைய மனத்தினுள்ளே, புகுந்து புகுந்து - (அவர்கள பயிலப்பயில) நன்றாகச் சென்று ஊன்றி, இருளே அரிகின்றது - (அவர்கள் மனத்திலுள்ள அஜ்ஞானமாகிய) அகவிருளை அழிக்கின்றதும்,—ஆய்கின்ற எல்லா அறிவின் அரு பொருளை தெரிகின்ற இன்பம் கனிந்து ஊறி-(நுட்பமாக) ஆராய்கிற எல்லாருடைய அறிவினாலும் அருமையான தத்துவப்பொருளை அறிந்து அதனால் (அவரவர்) அடைகிற ஆனந்தம் முதிர்ந்து ஊறப்பெற்று, நெஞ்சம் தெளிந்து முற்ற - (அவர்களுடைய) மனம் தெளிவடைந்து முதிரும்படி, விரிகின்றது - (அம்மனத்திற்) பரவுகின்றதும்,—எண் எண் கலைமாது உணர்த்திய வேதமே - அறுபத்துநான்குகலைகளுக்கும் உரிய மகளான சரசுவதியினாற் சொல்லப்பட்ட வேதமேயாம்; (எ - று.)—வேதமும் என்ற உம்மை - அசைநிலை.

'புரிகின்ற சிந்தையினூடே புகுந்துபுகுந் திருளை அரிகின்றது' என்றது - பொதுப்பட வேதம் தன்னை யோதி உணர்வாரது அறியாமையைப் போக்கி, அவர்க்கு நல்லறிவுச்சுடர் கொளுத்துந் தன்மையை விளக்கும். 'ஆய்கின்ற .....விரிகின்றது' என்றதனால், நுட்பமாக வேதாந்தத்தை ஆராய்பவர் உண்மைப்பொருளையுணர்ந்து அதனால் ஆனந்தமடைந்து மனந்தெளிந்து மேன்மையடையுந்திறம் விளக்கப்பட்டது. வேதம் வித்யாசொரூபமாதலால், 'கலைமாதுணர்த்திய வேதம்' எனப்பட்டது. சிந்தையினூடு, ஊடு - ஏழனுருபு, இன் - சாரியை; ஏ - சாரியை. புகுந்து புகுந்து, அடுக்கு - இடைவிடாமைப் பொருளது. அரிதல் என்னும் வினையின் ஆற்றலால், இருளின் திணிமை விளங்கும். நெஞ்சம், அம் - சாரியை. (கக)

(இங்கு மூன்றுசெய்யுள்கள் விலக்கப்பட்டன.)

12.—(இ - ள்.) தா இல் எழில் - குற்றமில்லாத அழகையுடைய, பெரு தாமரை மணக்கும் - சிறந்த தாமரைமலரிற் பொருந்தி வசிக்கிற, கலை கூட்டம் பிணை தனக்கு - கலைஞானங்களின்தொகுதிக்குஉரியவளான பெண்மான் போன்ற சரசுவதிக்கு, கண் தாமரை மலர் கரு தாமரைமலர் - கண்களாகிய தாமரைமலர்கள் கருநெய்தல் மலர்போலும்; காமரு தாள் அரு தாமரை மலர்-(யாவராலும்) விரும்பப்படுகிற [அழகிய] திருவடிகளாகிய அருமையான தாமரை மலர்கள், செம் தாமரை மலர் - செந்தாமரைமலர்போலும்; ஆலயம் ஆ தரும் தாமரை மலர் - எழுந்தருளியிருக்கு மிடமாக அமைந்த தாமரை மலர், வெள் தாமரை மலர் - வெண்டாமரை மலராம்; (எ-று.)

கவி, சமத்காரமாக, கருந்தாமரை செந்தாமரை வெண்டாமரை என்ற மூவகைத் தாமரை மலரையும் கலைமகளோடு இயைபுபடுத்தி யுரைத்தார். கருநெய்தல் - கருந்தாமரை எனப்படுதலை, அதற்கு வடமொழியில் வழங்கும் 'நீலாம்புஜம்' என்ற பெயரினாலும் அறிக. மகளிர் கண்ணுக்குக் கருநெய்தல்

மலருவமை - கருமை மென்மை அழகுகளுக்கு. 'கண்டாமரைமலர்' என்ற பாடம் இலக்கணத்துக்கு ஒத்தது; "ணனவல்லினம் வரட் டறவும்" என்ற சூத்திரத்து "அல்வழிக்கு அனைத்துமெய் வரினு மியல்பாகும்மே" என்றது காண்க. பெரியோருடைய பாதத்தை 'திருவடித்தாமரை' என்றும், அவர்களுடைய கையை 'கைத்தாமரை' என்றும் இவவாறு உபசாரமாகக் கூறும் தகுதிபற்றி 'கண்தாமரைமலர்,' 'தாள் தாமரைமலர்' என்றார். காமரு என்பது - காமம் மருவு என்பதன் விகாரம். ஆலயம் - வடசொல். ஆ - விகாரம். தா - உரிச்சொல். மணத்தல் - கூடுதல். 'பெருந்தாமரை மணக்கும்' என்பதற்கு - சிறந்த தாமரை மணம் வீசுகிற என்று பொருள் கொள்ளினுமாம்; தாமரைமலரில் எப்பொழுதும் வசித்தலும், பதுமினி யென்னும் உத்தம சாதிமாதரின்மேனி தாமரைமணம்வீசுமென்ற நூற்கொள்கையும்,இங்ஙனங் கூறுதற்குக் காரணங்களாம். இனி, தாமரைமலர் மணம்வீசுதற்குக் காரணமான எனறலு மொன்று. இவளுடைய திருமேனியின் ஸ்பர்சத்தால்தாமரை மலர் மணம்வீசுமென இவளுடைய திவயகந்தத்தின்சிறப்பை யுணர்த்தியபடி. அன்றி, பெருந்தாமர் - பரந்தாமர்; சிறந்தசோதியையுடைய கடவுள்; இங்கே பிரமதேவர். அவரை, மணக்கும் - மணஞ்செய்து கொண்ட என்று உரைக்கவும் இடமுண்டு. பிணை - உவமையாகுபெயர்; கண்ணேக்கில் உவமம். **சொற்பொருட்பின்வருநிலையணி.** நான்காமடியில், மானின்பரியாயநாமமாகிய மரை கலை பிணைஎன்ற சொற்கள் அமையவைத்தது, ஒருவகைக் கவிசாதுரியம். (கஉ)

13.—(இ-ள்.) கனம் - மேகம்போன்ற, கேசம் பந்தி - கூந்தற் பாரத்தையுடைய, கலை மங்கை-கல்விமகளான சரசுவதியினுடைய, பாதம்கமலங்கள்-திருவடித்தாமரை மலர்களை,—தொல் வேதம் - அநாதியான வேதம், தனக்கே துணி பொருள் என்னும் - தனக்கே உரியதென்று நிச்சயிக்கப்பட்ட பொருள் என்று சொல்லும்; சதுர் முகத்தோன் - நான்முகத்தவனான பிரமன், எனக்கே சமைந்த அபிடேகம் என்னும்-எனக்கே உரியதாக அமைந்த கிரீடமென்று சொல்வான்; இமையவர் தாம் - மற்றைத் தேவர்கள் தாங்கள், மனம் கேதம் மாற்றும் மருந்து என்ப - (தங்கள்) மனத்திலுள்ள (அறியாமையாகிய) நோயைத் தீர்க்கும மருந்து என்று சொல்வார்கள்; சூடும் மலர் என்பன் யான்-(யான் தலையின்மேற்)சூடும் பூவென்றுசொல்வேன்; (எ-று.)

இது, பலபடப்புனைவணி; வடநூலார் உல்லேகாலங்காரம் என்பர். ஒருபொருளைப் பலர் பலதன்மைகளினாலே பலபொருளாகச் சொல்லுதல் இதன்இலக்கணம். தனக்கே, எனக்கே,ஏ-பிரிநிலை. அபிஷேகம்-வடசொல். "சில்லரிக் கிண்கிணி மென் தெய்வமலர்ச் சீறடியைத், தொல்லை மணிமுடிமேற் சூட்டினன்" என்றபடி ஊடல் தணிக்கும் காலத்துக் கணவன் மனைவியின் பாதத்தை முடிமேற் கொள்வதோர் இயைபுபற்றி, அபிஷேக மென்பானுமினன். மனக்கேதம் - வடமொழித்தொடர். கேதம் - துன்பம். என்பார் - பலர்பால் முற்று; என் - இடைச்சொற் பகுதி, ப - விகுதி; இதுவே எதிர்காலங் காட்டும். கனம், கேசபங்க்தி என்ற வடசொற்றொடர்கள் விகாரப்பட்டன. கேசபந்தி - மயிரொழுங்கு. (கங)

14.—(இ-ள்.) கமலந்தனில்இருப்பாள்-தாமரைமலரில் வீற்றிருப்பவளும் கடவுளர் - தேவர்கள், விருப்போடு - விருப்பத்துடனே, அம் கரம் கமலம் குவித்து - அழகிய கைகளாகிய தாமரைமலர்களைக் கூப்பி [அஞ்சலிசெய்து] போற்றும் - துதிக்கிற, மெல் பூவை - மென்மையான கிளிபோன்றவளும் ஆரணி - வேதங்களின் சொரூபமாயிருப்பவளும், காரணி - (எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பவளும் (ஆகிய), கலை மங்கை - கலைமகள்,—ஒரு காலந் தம் கருத்துள் வைப்பார் கம் மலம் - (தன்னை) ஒரு முறை தமதுமனத்திலுள்

வைத்துத் தியானிப்பவர்களுடைய அறிவின் குற்றங்களை,—கண்ணில் கருணை கமலந்தனை கொண்டு கண்டு - (தனது) திருக்கண்களினின்று வெளியாகிற அருள்வெள்ளத்தைக் கொண்டு (அவர்களைக்) கடாக்ஷித்து, கழிக்கும் - போக்கிவிடுவாள்; (எ-று.)

கமலம் என்ற வடசொல் - முதலிரண்டடிகளில் தாமரையென்ற பொருளிலும், மூன்றுமடியில் நீர்என்ற பொருளிலும் வந்தது: கம் - அறிவு; இந்திரியமுமாம். இதற்குத் தலையென்று ஒருபொருளுள்ளதனால், கமலம் என்பதற்கு-தலைவிதியென்று பொருள்கொள்ளுதலும் ஒன்று; அன்றி, கமலமென்பதை அகமலம், அல்லது பாதகமலம் என்பதன் முதற்குறைவிகாரமெனக் கொண்டாலும் பொருள்படும்: மனக்குற்றம் அல்லது பாவதோஷம் எனக் காண்க. விருப்பு - அன்பு, பக்தி; விரும்பு என்ற முதனிலைதிரிந்ததொழிற்பெயர். கடவுளர் - (இவவுலகசம்பந்தத்தைக்) கடத்தலையுடையவர், கடவுள் என்பதில், உள - தொழிற்பெயர்விகுதி. 'ஒருகால்' என்பதனை 'கண்டு' என்பதோடு சேர்த்து ஒருமுறை அருணோக்கஞ்செய்தமாத்திரத்தில் தீர்த்திடுவாள் என்றுங் கொள்ளலாம். (கச)

15.—(இ - ள்.) காரணன்-காரணமென்னும் ஆகமத்தில் எடுத்துச்சொல்லப்பட்டவனான சிவபிரானது, பாகமும்-இடப்பக்கத்திலும், சென்னியும்-முடியின்மேலும், சேர்தரு - (முறையே) சேர்ந்துள்ள, கன்னியரும் - இளமகளிரான-பார்வதி கங்கை யென்பவர்களும், நாரணன் ஆகம் அகலா திருவும் - திருமாலினதுமார்பை விட்டுநீங்காத [மார்பில் நித்தியவாசஞ்செய்கிற] இலக்குமியும், ஓர் நால் மருப்பு வாரணன் தேவியும் - ஒப்பற்ற நான்குதந்தமுள்ள ஐராவதமென்னும் யானையையுடையவனான இந்திரனது மனைவியான இந்திராணியும், மற்று உள்ள தெய்வம் மடந்தையரும் - மற்றையதேவமாதர்களும், (ஆகிய அனைவரும்), ஆரணம் பாவை பணித்த குறு ஏவல் அடியவரே - வேதங்களின் சொரூபமான சரசுவதிதேவி கட்டளையிட்ட சிறியஏவல்தொழில்களைச் செய்யும் அடியார்களேயாவர்; (எ - று.)

என்றது, அறிவுக்குஉரிய தெய்வமான சரசுவதியினது தலைமையை மிகுதியாகப் புகழ்ந்து துதித்தவாறும்: காரணம் - சைவாகமநூல் இருபத்தெட்டில் ஒன்று; இங்கே காரணன் என்றது, உபலக்ஷணவகையால் எல்லாஆகமங்களினாலும் பிரதிபாதிக்கப்படுகிறவனென்றவாறும். இனி, யாவர்க்கும் முதல்வராகிய திரிமூர்த்திகளில் ஒருவன் என்றகருத்தால் காரணன் எனக் கூறியதாகக் கொள்ளுதலும் ஒன்று. மலையரசனாகிய இமவானினது பெண்களாகிய உமை கங்கை என்ற இருவரும் சிவபிரானைச் சேர்ந்தனராதலால், 'காரணன்பாகமுஞ் சென்னியுஞ் சேர்தரு கன்னியர்' எனப்பட்டனர். கங்கையைச் சிவபிரானுக்குமனைவியென்றற்குக்காரணம் - சிவபிரானை நீங்காது சேர்ந்திருத்தலும், குமாரனையுண்டாக்குதற்குச் சிவபிரான் வெளிபடுத்திய அனற்பொறிகளை யேற்றுக்கொண்டமையுமாம்.

உமை சிவன்பாகஞ்சேர்ந்த கதை:—பிருங்கி யென்னும் மகாமுனி தன்னைவிலக்கிச் சிவபிரானைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்யக்கண்ட பார்வதிதேவி, தன்பதியை நோக்கி 'முனிவர் என்னைப்பிரதக்ஷிணம் செய்யாமைக்கு ஏது என்?' என்றுவினவ, சிவபிரான் 'இம்மைமறுமைப்பயன்களைப் பெற விரும்புபவர் உன்னையும், முத்திபெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர் என்ன, அதுகேட்ட தேவி பெருமானைப் பிரியாதிருக்குமாறு தவம்புரிந்து வாமபாகம் பெற்றன ளென்பதாம்.

கங்கை சிவபிரான்சென்னிசேர்ந்த கதை:—சூரியகுலத்துத்தோன்றிய சகரசக்கரவர்த்தி, கபிலமுனிவரது கண்ணின்கோபத்தீக்கு இலக்கா

உடலெரிந்து சாம்பலாய் நற்கதியிழந்த தனதுமூதாதையரான சகரபுத்திரர் அறுபதினாயிரவரையும் நற்கதிபெறுவிக்கும்பொருட்டு நெடுநாள் தவஞ்செய்து கங்காநதியைத் தேவலோகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில் அதன் விசையோடுவரும் வெள்ளப்பெருக்கை ஏற்றுக்கொள்ளுதற்கு ஏற்ற வலிமை பூமிக்குஇல்லை யென்ற காரணத்தால் அவ்வரசன் சிவபிரானைப் பிரார்த்திக்க, அவன்வேண்டுகோளின்படி அப்பெருமான் அந்நதியைச் சடைமுடியிலேற்றுப் பின்பு சிறிதுசிறிதாகப் பூமியில் விட்டருளின னென்பதாம்.

காரணம், பாகம், வாரணம் - வடசொற்கள். கந்யா, நாராயணன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. சேர்தரு, தாளென்ற இணைவினை விகாரப்பட்டது. குறுமை + ஏவல் = குற்றேவல்; பண்புருபுபோய்த்தன் ஒற்றிரட்டிற்று. ஓர் - ஒன்று என்பதன்விகாரம்; உகரம்பெருமலும்,முதல்நீளமலும்நின்றது.

16.—(இ - ள்.) அடி வேதம் நாறும் சிறப்புஆர்ந்த - திருவடிகள்வேதங்களில் வாசனைவீசப்பெறுகிற மேன்மைநிறைந்த, வேதம் அனைத்தினுக்கும் முடிவே - வேதங்களெல்லாவற்றுக்குந் தேர்ந்தகருத்தாகவுள்ளவளே! தவளம் புளரி மின்னே - வெண்டாமரைமலரில் வீற்றிருக்கிற மின்னற்கொடிபோல விளங்குபவளே! முடியா இரத்ன வடிவே - அழியாத இரத்தினம் போலப் பிரகாசிக்கிற வடிவமுடையவளே! மகிழ்ந்து பணிவார்தமது மயல் இரவின் விடிவே - அன்புகொண்டு வணங்கும் அடியார்களுடைய அஞ்ஞான மயக்கமாகிய இருளிரவை யொழிக்குஞ் சூரியோதயமாகவுள்ளவளே! என்னை அறிந்து ஆள்வார் - எனதுநிலைமையை அறிந்து என்னை அடிமைகொண்டு பாதுகாப்பவர், தலந்தனில் - உலகத்தில், வேறு இலை - (உன்னையன்றி) வேறுயாரு மில்லை; (எ - று.)—ஏ - தேற்றம்.

தமக்குக் கலைமகளையன்றி வேறுகதியின்மையை வெளியிட்டார். 'அடிவேதம்நாறும் சிறப்பார்ந்த' என்றது, சரசுவதிக்கு அடைமொழி; அவளுடைய திருவடி வேதங்களிற் பரிமளித்தலாவது - வேதங்களில் எங்கும் இடைவிடாது துதிக்கப்படுதல். திருவடித்தாமரையென்னும் வழக்கை உட்கொண்டு, 'அடி நாறும்' என்றன ரென்க. இனி, திருவடிகள் வேதங்களின்வாசனைவீசப்பெற்ற என்று பொருளுரைத்தாலும் முன்போலவே கருத்துக்கொள்ளலாம்; (வில்லிபுத்தூரார்பாரதத்தில் "கங்கையு நான்மறையுந் துளவுங் கமழ் கழலிணை", "கங்கையினறலுங் காளியன்முடியுங் காளிந்திக்கரையுமே கமழும், பங்கயமலர்கள்" என்றவை இங்கு ஒப்புநோக்கத்தக்கன.) வேதம்அனைத்தினுக்கும் முடிவு - வேதங்களின் உத்தரபாகமும் தேர்ந்தகருத்து மான வேதாந்தத்திற் சித்தாந்தஞ்செய்யப்பட்ட மெய்ப்பொருளாகவுள்ளவ ளென்றபடி; வேதாந்தசொரூபமாகவுள்ளவ ளென்றலும் ஒன்று. தவளம், ரத்நம் - வடசொற்கள். புளரி - முட்களையுடைய அரியையுடைய தெனப் பொருள்படுங் காரணக்குறி: வேற்றுமைத்தொகையன்மொழி. அரி = அரை; தண்டின் மேற்புறம். மின் - உவமையாகுபெயர். விடிவு - பொழுதுவிடியுங்காலம், சூரியோதயம்; தன்அடியார்களின் அகவிருளையொழிப்பவளென்க.

17.—(இ - ள்.) வெள் தாமரை மலர் - வெண்டாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற, சேயிழையே - செவ்வியஆபரணங்களையுடையவளே! வேறு இலை என்று - (உன்னையன்றி) வேறு (கதி) இல்லையென்று நிச்சயித்து, உன் அடியாரில் யானும் கூடி - உனதுஅடியார்களில் நானும் ஒருவனாகச் சேர்ந்து, விளங்கும் நின் பேர் கூறலை குறித்து நின்றேன் - சிறப்புப்பெற்று விளங்குகிற உனதுதிருநாமங்களைச் சொல்லுதலைக் குறிக்கொண்டுநின்றேன்; ஐம்புலம் குறும்பு ஆய் - பஞ்சஇந்திரியங்களின் பொல்லாங்குகளாகிய, மாறு

அலை கள்வர் - எதிர்த்து (வழி) பறிக்கிற திருடர்கள், மயக்காமல் - (என்னை) மயங்கச்செய்யவொட்டாதபடி, நின் மலர் தாள் நெறியில் சேறலை - உன்னுடைய திருவடித்தாமரைகளின் வழியே செல்லுந்திறத்தை, ஈந்து அருள் - (எனக்குக்) கொடுத்தருள்வாய்; (எ - று.)

("நல்லவை செய்யத் தொடங்கினும் நோனுமே, அல்லன அல்லவற்றிற் கொண்டுய்க்கும் - எல்லி, வியனெறிச் செல்வாரை யாறலைத்துண்பார், செலவுபிழைத் துய்ப்பபோல்" என்றபடி) நேர்வழியிற் செல்பவரை வழிக்கொள்ளைக்காரர் அதைவிட்டுக் கொடுவழியிற் செல்லும்படி சூழ்ச்சிசெய்வது போல எனது பஞ்ச இந்திரியங்கள் என்னைமயக்கித் தீநெறிச்செலுத்தாதபடி நீ என்பக்கல் அருள்செய்து என்னை உன்திருவடியை விடாது பின்பற்றிச்செல்லுதலாகிய நன்னெறியிற் செலுத்தவேண்டுமென வேண்டியபடி. பேர் - மரூஉ. 'குறும்பாமாறலைகள்வர்' எனக்கொண்டு, குறும்பாம் ஆறு அலை கள்வர் எனப்பிரித்து, ஆறு அலை கள்வர் - வழிபறிக்குந் திருடர் என்று பொருள் கொள்ளுதல் பொருந்து மாயினும் மோனைத் தொடைக்குச் சேராமை அறிக. அலைகள்வர் - பிறவினை வினைத்தொகை. சேறல் - செல்லுதல்; தொழிற் பெயர்; செல் - பகுதி, தல் - விகுதி, பகுதிமுதல்நீண்டது - விகாரம், தகரம் றகரமான விடத்து லகரம் கெட்டது - சந்தி. சேயிழை - பண்புத்தொகையன்மொழி; செம்மை + இழை = சேயிழை; இங்கே, செம்மை - அழகு; நிறமெனக் கொள்ளலாகாது; "வெள்ளைக்கலை யுடுத்து வெள்ளைப் பணிபூண்டு, வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை ......தாய்" ஆதலால். கள்வர், கள் - பகுதி, வ் - பெயரிடைநிலை. (கஎ)

18.— (இ - ள்.) ஆதி - பழமையான, கலா மயில் - கல்விக்கு உரிய மயில்போலுஞ்சாயலுள்ள மகளும், வல்லி - கொடிபோன்றவளுமான சரசுவதியினது, பொன் தாளை - அழகியதிருவடிகளை, அடைந்தவர்க்கு - சரணமடைந்தவர்களுக்கு, தர்க்க மார்க்கங்கள் சேதிக்கல் ஆம் - (தம்மையெதிர்த்து வாதப்போர் செய்பவர்களுடைய) வாதநெறிகளைக் கண்டித்தல் இயலும்; எவ்வெவர் சிந்தனையும் சோதிக்கல் ஆம் - யார்யாருடைய மனத்தின் நிலைமையையும் ஆராய்ந்தறிதல் இயலும்; உற போதிக்கல் ஆம் - (எல்லோர்க்கும் எல்லாவிஷயங்களையும்) நன்றாகச் சொல்லியுணர்த்துதல் இயலும்; சொன்னதே துணிந்து சாதிக்கல் ஆம் - தாம் சொன்ன பொருளையே சித்தாந்தமாக நிச்சயித்து நிலைநாட்டவல்ல திறமைஉண்டாம்; மிக பேதிக்கல் ஆம் - (தமது கொள்கைக்கு மாறாகப் பிறர்சொன்ன பூர்வபக்ஷங்களையெல்லாம்) மிகுதியாகக் கண்டிக்குந்திறம் உண்டாம்; முத்தி தான் எய்தல் ஆம் - மோக்ஷத்தை எளிதில் அடைதல் கைகூடும்; (எ - று.)

சரசுவதியைச் சரணமடைந்தார்க்கு அவளருளால் இம்மையிலுண்டாகும் வாதசக்தி போதநாசக்தி முதலிய சக்திவிசேஷங்களும், மறுமையில் முத்தியும் கைகூடுகிற சிறப்பை இதில் வெளியிட்டார். சேதிக்கல், சோதிக்கல், சாதிக்கல், பேதிக்கல் என்றவற்றின் பகுதி - வடமொழியடியாய் பிறந்த வினை; கு - சாரியை, அல் - விகுதி. தர்க்கமார்க்கம், சிந்தநா, முத்தி, ஆதி, வல்லீ - வடசொற்கள். கலா - வடசொல், ஆவீறு ஐயாகாது நின்றது. எவ்வெவர் என்றதில், அடுக்கின்ற வினா - எஞ்சாமை குறிப்பது. சொன்னது - இறந்தகால வினையாலணையும்பெயர்; இதில், 'இன்' இடைநிலை முதல் தொக்கது. எய்தல் என்ற தொழிற்பெயரில், எய்து - பகுதி, அல் - விகுதி: (அம்புசெலுத்துதலென்னும் பொருளில், எய் - பகுதி, தல் - விகுதி.) (கஅ)

19.—(இ - ள்.) நாள் மலர் - அன்றுமலர்ந்த தாமரைப்பூப்போன்ற, அம் கையில் - அழகிய கைகளில், ஏடும் - ஏட்டுப் புத்தகத்தையும், அணி வட

மும் - அழகிய ஜபமாலையையும், அடையாளம் - தனக்குஉரிய அறிகுறியாக, உடையாளை - கொண்டுள்ளவளும், நுண் இடை ஒன்றும் இலாளை - நுட்பமான இடை சிறிதும்இல்லாதவளும், உபநிடதம் படையாளை - உபநிஷதத்துக்களைத் தன் பரிவாரமாக வுடையவளும், எ உயிரும் படைப்பாளை - எல்லாப்பிராணிகளையும்சிருஷ்டிப்பவளும், நறு பதுமம் தொடையாளை - வாசனை வீசுகிற செந்தாமரைமலர் மாலையையுடையவளுமான சரசுவதியை, அல்லது - அல்லாமல், இனி மற்று யாரை தொழுவது - இனிமேல் (யான்) வேறுயாரை வணங்குவது? (எ - று.)

வேறுயாரையும் வணங்கேனென்றும், பிறரெவரும் வணங்குதற்கு உரியவரல்லரென்றும் கூறியபடியாம். இனி, 'இனி' என்றது - அவளைச்சரணமடைந்தபின்பு என்றபடி. சரசுவதி இடக்கையிற் புத்தகத்தையும், வலக்கையிற்படிகமாலையையும் உடையளென அறிக. இவை சரசுவதிக்கு அடையாளமாகக் கூறப்படுதலை, பெருந்தேவனார்பாரதத்தில் "புத்தகமு ஞானத்துமுத்திரையும் பொற்பளிங்கும், வைத்த கமண்டலமும் வன்னிகையும் - முத்து, வடங்கொண்ட மார்பினுள்" என்றதனாலும், கம்பராமாயணத்தில் "புத்தகம் படிகமாலை குண்டிகை பொருள்சேர் ஞான, வித்தகந்தரித்த செங்கைவிமலை" என்றதனாலும் காண்க. இனி, நாள்மலர் என்பதற்கு - புதியதாமரை மலர்களையும் என்று பொருள் கொண்டு, நான்குகைகளுள் மற்றையஇரண்டில் தாமரைமலர்களைத் தரித்துள்ளாளென்றலு மொன்று.

இனி, அடையாளமென் [illegible]து, ஞானமுத்திரையாகவுமாம்; அதாவது - பிறர்க்கு நல்லுணர்வை உப[illegible]க்கும் அறிகுறி; அது - கட்டைவிரல்நுனியையும் சுட்டுவிரல் நுனியையு[illegible] ஒன்றுசேர்த்து மற்றை மூன்று விரல்களும் நேர்நிற்க வைக்கும் நிலை. படிகமாலை, ஜபமந்திரத்தைத் தொகையிடுதற்கு உரியது. மணிவடமெனப் பதம்பிரித்து உரைத்தல், மோனைத்தொடைக்கு இயையாது. இடை மிகச்சிறுத்துள்ள தென்னும்பொருளில் அதிசயோக்தி வகையால் அதை இல்லையென்றேசொல்லுங் கவிமரபு பற்றி, 'நுண்ணிடையொன்றுமிலாள்' என்றார். உபநிஷதம், பத்மம் - வடசொற்கள். உபநிடதப்படையாள் என்றது - உபநிடத்துக்களுக்குத் தலைவியென்றும், அவற்றால் வழிபட்டுத் துதிக்கப்படுபவள் என்றுங் கூறியபடியாம். மூன்றாமடியில் "படையாள்,' 'படைப்பாள்' என்ற சொற்கள் இங்கு வெவ்வேறு பொருளில் வந்தாலும் ஒன்றுக்கொன்று எதிர்மறையான பொருளுந் தரக்கூடியதனால் அவற்றைஒருங்[illegible]தொடரவைத்தது, தொடைமுரண்; "மொழியினும்பொருளினும் முரணுதல்முரணே" என்றார்தொல்காப்பியனார். இது - சொல்தொடைமுரண். இரண்டாம் அடியில் 'உடையாள்,' 'இலாள்' என்பன வந்தது, பொருள்தொடைமுரண். தொடை - தொடுக்கப்படுவது. மற்று - இடைச்சொல். தொழுவது என்ற தொழிற்பெயர் - இங்கே வினைமுற்றாய் நின்றது.

20.—(இ - ள்.)வழுவாத - தவறுபடாத, செம் சொல் - செவ்வியசொற்களையுடைய, கலை மங்கைபால் - கல்விக்கு உரிய மகளான சரசுவதியினிடத்தில்,அன்பு வைத்தவர் - பக்தியுள்ளவர்கள்,—(அப்பிராட்டியை)தொழுவார் - நமஸ்கரிப்பார்கள்; வலம் வருவார் - பிரதக்ஷிணஞ்செய்வார்கள்; துதிப்பார் - தோத்திரம்பண்ணுவார்கள்; தம் தொழில் மறந்து - தம்செயலை மறந்து [பரவசப்பட்டு], விழுவார் - கீழ்விழுவார்கள்; அரு மறை மெய் தெரிவார் - (அறிதற்கு) அரிய வேதங்களின் உண்மைப்பொருளை உணர்வார்கள்; இன்பம் - ஆனந்தத்தால், மெய் புளகித்து - உடல் மயிர்சிலிர்க்கப்பெற்று, அழுவார் - புலம்புவார்கள்; இனும் - இன்னும், கண்ணின் நீர்மல்குவார் - ஆனந்தக்கண்ணீர் பெருகப்பெறுவார்கள்; என்கண் ஆவது என்னை-(இப்படிப்பட்ட செயல்களுள்) என்னிடத்து உண்டாவதுயாது? [எதுவுமில்லை என்றபடி.]

பக்திகாரியமான மெய்ப்பாடொன்றும் என்னிடத்தில்இல்லையென்று கவி தமது விநயத்தை வெளியிட்டபடியாம். இனும் - தொகுத்தல். என் கண், கண் - ஏழனுருபு. (உ0)

21.—(இ - ள்.) வைக்கும் பொருளும் - (பாடுபட்டுத் தேடி) வைக்கும் (பொன்னும் மணியும் நெல்லுமாகிய) செல்வங்களும், இல்வாழ்க்கை பொருளும்-சம்சாரவாழ்விலுள்ள (மக்களும் சுற்றமுமாகிய) ஐசுவரியங்களும், மற்றை பொருளும் - (ராஜாங்கம் வாகனம் அடிமை என்னும்) மற்றை ஐசுவரியங்களும் (ஆகிய அஷ்டைசுவரியங்களும்), பொய்க்கும் பொருள் அன்றி - நிலையின்றி அழியும்பொருள்களாகுமேயலலாமல், நீடும் பொருள் அல்ல-(அழிவின்றி) நீடூழிகாலம் நிலைத்துநிற்கும்பொருள்களல்ல; பூதலத்தில் மெய்க்கும் பொருளும் - நிலவுலகத்தில் [இம்மையில்] அழியாது நிலைத்துநிற்கும்பொருளும், அழியா பொருளும் - (மறுமையில்) அழிவில்லாத ஐசுவரியமும், விழு பொருளும்-(இவற்றினும்) சிறந்ததான முத்திச்செல்வமும், உய்க்கும் பொருளும் - (முத்தியிற்)சேர்ப்பதான தத்துவப்பொருளும், கலை மான் உணர்த்தும் உரை பொருளே - கல்விக்கு உரிய மகளான சரசுவதி சொல்லுஞ் சொற்களின் பொருளேயாம்; (எ - று.)

செல்வப்பொருள்போ லன்றிக் கல்விப்பொருள் சாசுவதமா யிருக்குந் தன்மையும், சரசுவதியின் உருவமான சொல் நித்தியமென்றலும், இங்கு விளக்கப்பட்டன. இல் - வீடு: அதில் வாழ்தல் - இல்வாழ்க்கை; வாழ்க்கை-கை விகுதி பெற்ற தொழிற்பெயர்; விழு - சிறப்பையுணர்த்தும் விழுமம் என்னும் உரிச்சொல்லின் விகாரம். மான் - உவமையாகுபெயர். (உக)

22.—(இ - ள்.) வந்து-(அருகில்) வந்து, வந்தித்து-தன்னை நமஸ்கரித்து, அருள் ஆய் - (தனது) திருவருளுக்கு இலக்காகி, விளங்குமவர்க்கு - சிறப்புற்றவர்களுக்கு, ஒளி ஆய்-பிரகாசமாகி [புலனாய்த்தோன்றி], அறியாதவருக்கு இருள் ஆய்-(தனதுமகிமையை)உணராதவர்களுக்குப் புலனாகாதுநின்று, விளங்கும் - சுயம்பிரகாசமாய் விளங்குகின்ற, நலம் கிளர் மேனி - அழகுமிக்கதிருமேனியையும், இலங்கு இழையே-விளங்குகிற ஆபரணங்களையுமுடையவளான சரசுவதியே! பொருளால் இரண்டும் பெறல் ஆகும் என்ற பொருள் பொருளோ - ('அறம் பொருள் இன்பம் என்ற திரிவர்க்கத்தில் இடையிலுள்ளதான) பொருளினால் (அறமும் இன்பமுமாகிய மற்றை) இரண்டுபொருள்களையும் அடையலாம்' என்று சிறப்பித்துக் கூறப்பட்ட செல்வப்பொருள் சிறந்தபொருளாமோ? [ஆகா]; மருளாத சொல் கலை பொருளோ வான் பொருள் - அறியாமையது மயக்கத்தையொழிக்கிற சொற்களையுடைய கல்விப்பொருளோவெனின் சிறந்தபொருளாம்; (எ - று.)

கலைமகளாகிய உனக்குஉரியதான கல்விப்பொருளே சிறந்தபொருளாமென்றும், மற்றையழியுந்தன்மையதான செல்வப்பொருள் அப்படிப்பட்ட சிறந்தபொருள் அன்றென்றும் கவி தாம் சரசுவதியின்விபவத்தை அறிந்து பாராட்டுந்தன்மையை அப்பிராட்டியின் சன்னிதியிலே விண்ணப்பஞ்செய்ததாகும், இது பொருளா லிரண்டும் பெறலாகுமென்றபொருள்-"அறனீனு மின்பமுமீனுந்திறனறிந்து, தீதின்றிவந்தபொருள்", "ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எணபொரு, ளேனையிரண்டு மொருங்கு", "வடுவிலாவையத்து மன்னிய மூன்றில், நடுவணதெய்த விருதலையு மெய்தும், நடுவணது எய்தாதா னெய்தும் உலைப்பெய்து, அடுவதுபோலுந் துயர்," "பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே யம்மூன்றும், ஆராயிற்றானே யறம்பொருளின்பமென்று, ஆரா ரிவற்றி னிடையதனை யெய்துவார், சீராரிருதலையு மெய்துவர்," "இல்லார் இருமையும் நல்லஎய்தார்", "வறியார் இருமை யற்

யார்" என்பன காண்க. வான் - உரிச்சொல். முதலடியில், ஓகாரம் - எதிர்மறை; இரண்டாமடியில், ஓகாரம் - தெரிநிலை. (உஉ)

23.—(இ - ள்.) சொல் மானை கருதினர்க்கு - சொற்களுக்குரிய மகளான சரசுவதியைத் தியானித்தவர்களுக்கு,—திரு முகம் - அழகிய முகம், இலங்கும் - (மலர்ந்து) விளங்கும்; மெய்யில் - உடம்பில், புளகம் எழும் - மயிர்ச்சிலிர்ப்பு உண்டாம்; கண்கள் நீர் மலங்கும் - கண்களில் ஆனந்தபாஷ்பம்ததும்பும்; பழுது அற்ற வாக்கும் வலிக்கும் - குற்றமில்லாத வாய்ச்சொல்லும் உறுதிபெறும்; மனம் மிகவே துலங்கும் - மனம் மிகுதியாகத் தெளிவுபெறும்; முறுவல் செய களி கூரும் - புன்சிரிப்புஉண்டாம்படி சந்தோஷம் மிகும்; சுழல் புனல் போல் கலங்கும் பொழுது தெளியும் - நீர்ச்சுழிபடுகிற நீர்போலக் கலக்கமுண்டாம்பொழுது அக்கலக்க மொழியும்; (எ - று.)

"உறுங்கவலொன் றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வி" ஆதலால், 'சுழல்புனல்போல் கலங்கும்பொழுது தெளியும்' எனப்பட்டது. வாக்குவலிக்கும் என்பதற்கு - சிறந்தசொற்கள் வெளிவரு மென்றும், செல்வாக்குஉண்டாகு மென்றுங் கருத்துக் காண்க. வாக் - வடசொல். செய - தொகுத்தல்.

(இங்கு ஒரு செய்யுள் விலக்கப்பட்டது.)

24.—(இ-ள்.) பெரு திருவும் சய மங்கையும் ஆகி - ஸ்ரீமகாலக்ஷ்மியின் சொரூபமும் ஜயலக்ஷ்மியின்சொரூபமுமா யுள்ளவளும், என பேதைநெஞ்சில் இருந்து அருளும் - எனது அறிவின்மையையுடைய மனத்தில் வீற்றிருக்கின்றவளும், (ஆகிய), செம் சொல் வஞ்சியை - செவ்வியசொற்களுக்குஉரிய மகளான சரசுவதியை, போற்றின் - துதித்தால்,—(அவள்), எல்லா உயிர்க்கும் - (துதிக்கின்ற) அச்சனங்களெல்லோர்க்கும், பொருந்திய ஞானம் தரும் - நிலையான நல்லுணர்வை அளித்தருள்வாள்; இன்பம் வேதம் பொருளும் தரும் - பேரின்பத்தைக்கூறுகிற வேதத்தின்பொருளையும் விளக்கியருள்வாள்; திருந்திய செல்வம் தரும் - சுத்தமானசெல்வத்தைக் கொடுத்தருள்வாள்; அழியா பெரு சீர் தருமே-அழிவறறதானபெரிய முத்திச்செல்வத்தைபுந் தந்தருள்வாள்; (எ-று.)

அழியாப்பெருஞ்சீர் - என்றும் அழிதலில்லாத பெருங்கீர்த்தி யெனினுமாம். வஞ்சி - நீர்வஞ்சிக்கொடி; அதுபோல் மெல்லியளாய் ஒல்கி யொசியும் மகளுக்கு உவமையாகுபெயர். (உச)

சரசுவதியந்தாதி முற்றிற்று.

---

## திருவங்கமாலை அநுபந்தம்.

திருவங்கமாலைக்கு உரிய பண் - சாதாரி. (சாதாரியென்பது - பண் இருபத்துநான்கில் பகற்பண் பன்னிரண்டனுள் ஒன்று.) திருமுறைகண்ட அபயகுலசேகரசோழமகாராஜாவும், நம்பியாண்டார்நம்பியும், சிவபெருமான் அருளிச்செய்தபடி, திருநீலகண்டப்பெரும்பாணர்மரபிற் பிறந்து சிவபிரானருளாற் பண்களை யுணர்ந்த ஒருபெண்ணின் உதவியால், தேவாரத்திருப்பதிகங்களுக்குப் பண் ணடைவு வகுத்தனரென்பதை யறிக. இத்திருவங்கமாலை போன்ற பெரியதிருமொழிப்பதிகத்துக்குப் பரசுராகமும் ஆதிதாளமும் உரியனவெனப் பிற்காலத்தார் கொண்டிருக்கிறார்கள்.

---

# பழமொழி.

பழமையாகிய மொழி யென விரியும்; அல்வழிப்புணர்ச்சி, பண்புத்தொகை; என்றது, தொன்றுதொட்டு உலகவழக்கத்தில் உபயோகிக்கப் பட்டுவருகிற சிலவகை வாக்கியங்களைக் குறிக்கும். மொழி - சொல்: வாக்கியத்துக்கு இலக்கணை. பழமொழி ஒவ்வொன்றை இறுதியில் அமைத்து நீதியைக் கூறுகிற பாடல்களினாலாகிய தொரு நூலுக்கு 'பழமொழி' என்ற பெயர், இருமடிக்கருவியாகுபெயராம்; இருமடிச்சினையாகுபெய ரெனக் கொள்ளினும் தவறாகாது.

உவமையாகவாயினும், திருஷ்டாந்தமாகவாயினும், வேற்றுப்பொருள் வைப்பாகவாயினும், மற்றுஞ்சிலவகையாகவாயினும் ஒவ்வொரு பழமொழி இறுதியில் அமைக்கப்பட்ட நானூறுவெண்பாக்களையுடையது இந்நூல் ஆதலால், பழமொழிநானூறு எனவும் வழங்கப்படும். (இவ்வருஷத்துப் பாடமாகிய செய்யுள்கள், அவற்றில் ஆங்காங்குத் தேர்ந்தெடுத்தவை.) இந்நூற் செய்யுள்கள், உலகவழக்கச்சொல்லைத் தழுவிக்கொண்டு சொல்லுதலால், உலகவழக்குநவிற்சியணியை யுடையனவாம்; இவ்வணியை வடநூலார் லோகோக்தியலங்கார மென்பர்: இந்நூற்செய்யுள்களிற் காணப்படுகிற பழமொழிகளிற் பல இக்காலவழக்கில் இல்லையாயினும் அக்காலத்துவழங்கியன வென்று அறிக.

இந்நூல், நான்கடிவெண்பாக்களாகிய நேரிசை இன்னிசை வெண்பாக்களினால் அமைந்தது.

இந்நூல், நச்சினார்க்கினியர் முதலிய சிறந்த பழையஉரையாசிரியர்களால் எடுத்து ஆளப்பட்ட பிரமாண நூல்களுள் ஒன்று. இந்நூலுக்குப் பழைய பொழிப்புரை யொன்று உண்டு. இந்நூல் கடைச்சங்கத்தார் காலத்துத் தொகுக்கப்பட்டு வழங்கும் பதினெண் கீழ்க் கணக்குக்களுள் ஒன்று. கடைச்சங்கத்தார்காலத்த தெனவே, இந்நூல் இப்பொழுதைக்கு கஅ00 - வருஷங்களுக்கு முந்திய தென விளங்கும். பதினெண்கீழ்க்கணக்குக்களாவன:—நாலடியார், நான்மணிக்கடிகை, இனியவைநாற்பது, இன்னாநாற்பது, கார்நாற்பது, களவழிநாற்பது, ஐந்திணையைம்பது, ஐந்திணையெழுபது, திணைமொழியைம்பது, திணைமாலைநூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்பர்; "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணை முப், பால் கடுகங் கோவை பழமொழி மாமூலம், மின்னிலைகாஞ்சியோ டேலாதி யென்பவே, கைந்நிலையொ டாங் கீழ்க்கணக்கு" என்ற பழம்பாடலை யுணர்க. இப்பாட்டில் 'நால்' என்றதை 'ஐந்திணை' என்பதனோடுங் கூட்டுக. முப்பால் - திருக்குறள்; மற்றவை வெளிப்படை. கீழ்க்கணக்காவது - அறம் பொருளின்பங்களைப்பற்றியனவும், குறைந்த அடிகளையுடையனவு மாகிய வெண்பாக்களினா லமைந்த நூல். மிக்கஅடிகளையுடைய பலவகைப்பாக்களால் வருவது, மேற்கணக்கு எனப்படும். இந்நூல் செய்த ஆசிரியர்

## முன்றுறை யரையனார்.

முன்றுறை யென்னும் ஊரை யாண்ட சிற்றரச ராதலால், முன்றுறை யரையனாரென்று இவர்க்குப்பெயர்வழங்கிய தென ஊகிக்கலாம். அரையன் - அரசன என்பதன் போலி; 'ஆர்' என்ற பலர்பால்விகுதி, உயர்வுபற்றிவந்தது. "பிண்டியினீழற் பெருமா னடிவணங்கிப், பண்டைப் பழமொழி நானூறுங் - கொண்டினிதா, முன்றுறைமன்னவ னான்கடியுஞ் செய்தமைத்த, இன்றுறை வெண்பா விவை" என் வழங்கும் இந்நூற்சிறப்புப்பாயிரத்தால், இவர்

சைனசமயத்தவரென்பது மாத்திரம் தெரிகிறது. மற்றை இவரதுசரித்திர விவரம் தெரியவில்லை.

1.—(இ - ள்.) எல்லாம் - எல்லாவளங்களும், இவர் - நிறைந்த, வரை நாட - மலைகளையுடைய நாட்டையுடைய அரசனே!—தமரை இல்லார்க்கு - உறவினரையுடையவரானாதவர்க்கு, நகரமும் காடு போன்று ஆங்கு (சனநெருக்கமுள்ள) நகரமும் (சனசஞ்சாரமில்லாத) காடாகத் தோன்றுவதுபோல,—கல்வியான் ஆய கழி நுட்பம் கல்லார்முன்-கல்வியறிவினால் அறியத்தக்க மிக்கநுட்பமானபொருள்களைக் கற்றறியாதவர்முன்னிலையிலே, சொல்லிய நல்லவும் - (கற்றறிந்தோர்) எடுத்துச்சொன்ன நன்மொழிகளும், தீய ஆம் - (அவர்கட்குத்) தீமைவிளைப்பனவாகத் தோன்றும்; (எ - று.)

உறவினரில்லாதார் நகரத்தைக் காடெனக் கொள்ளுதற்குக் காரணம் அவர்மனநிலையே யாதல்போல, கல்வியறிவில்லாதார் நல்லவற்றைத் தீயவை யெனக் கொள்ளுதற்குக் காரணம் அவரது மனநிலையேயா மென்பது கருத்து. உவமையணி. கல்வியறிவில்லாதவர்க்கு உறவினரில்லாதவரும், நன்மொழிகட்கு நகரமும், அவை தீயனவாகத்தோன்றுதற்கு அது காடாகத்தோன்றுதலும் உவமையெனக் காண்க. 'எல்லாம் இவர்வரைநாட' என்றது, ஆடூஉமுன்னிலை. பொதுவானநீதிநூல்களிலும் இலக்கணநூல்களிலும் சிலவிடத்து ஓர்ஆணையாவது ஒருபெண்ணையாவது முன்னிலைப்படுத்திக் கூறுதல், கவிமரபு; ஆடவரை முன்னிலைப்படுத்திக் கூறுவது ஆடூஉமுன்னிலை யெனவும், மகளிரை முன்னிலைப்படுத்திக்கூறுவது மகடூஉமுன்னிலை யெனவும்படும். இந்நூற்செய்யுளில் வருகிற ஆடூஉமுன்னிலைகளெல்லாம் பாண்டியராசனைக் குறிப்பன வென்றும், இந்நூலாசிரியர் சிற்றரசராய் ஆண்ட முன்றுறையென்னும் ஊர் பாண்டியநாட்ட தென்றும் கூறுவர். நாட்டின் நீர்வளத்துக்கும் பொருள்வளத்துக்கும் காரணமான மலைகளையுடைமை கூறுவார் "எல்லாம்இவர்வரைநாட' என்றார். இவர்தல் - செறிதல்.

இவர்வரை - வினைத்தொகை. தமர்-தம்மவர்; தாம் - பகுதி, முதல்குறுகிற்று, அர் - விகுதி. இன்மையென்பது - இல்லாமையெனக் கொண்டால் செயப்படுபொருள்குன்றியவினையும், உடையதல்லாமையெனக்கொண்டால் செயப்படுபொருள் குன்றாதவினையுமாகும்: ஆதலால், இங்கு'தமரையில்லார்' எனச் செயப்படுபொருளோடு புணர்த்துக்கூறினார். நகரம் - வடசொல். உம்-உயர்வுசிறப்பு. போன்று-போன்றுஎன்னும் எச்சத்தின் திரிபு. ஆங்கு-உவமவுருபு. ஆய-ஆகிய. கழி-மிகுதியுணர்த்தும் உரிச்சொல்;[நன்-உரி-கரு] நுட்பம்- பண்புப்பெயர்; நுண் - பகுதி, அம் - விகுதி, ணகரம் மகரமானது - சந்தி. முன் - இடமுன்; ஏழாம்வேற்றுமையுருபுமாம். நல்ல, தீய - பெயர்கள். நல்லவும், உம் - உயர்வுசிறப்பு.

முன்னிரண்டடிகளுக்கு - 'கல்வியானாய மிக்கநுண்மையறிவால் ஒருவன் கல்லாதார்முன்புசொல்லிய நல்லபொருள்களும் தீயபொருள்களாம்' என்பதும், ஆடூஉமுன்னிலைக்கு - 'எல்லாப்பொருள்களாலும் விரும்பப்படாநின்ற வரைநாடனே'என்பதும் பழையவுரை; இவ்வுரைக்கு, நுட்பம், எல்லாம் என்றவற்றில், மூன்றனுருபு தொக்கதெனவேண்டும். 'நுட்பம்' என்பது, 'சொல்லிய' என்பதைக் கொள்ளும். இவர்தல்-விரும்புதல். இவர்வரை-செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த வினைத்தொகை யென்க. (க)

2.—(இ - ள்.) வண்டு - (கண்ட ஆண்) வண்டுகள், வேட்கையால் - (பெண்வண்டென்று கருதித் தாம்கொண்ட) காதலால், வழி படரும் - விடாது பின்செல்லப்பெற்ற, வாள் கண்ணாய் - ஒளியையுடைய கண்களையுடையவளே!—வித்தகர் - அறிவுடையார்,—கேட்பாரை நாடி-(தாம்சொல்லும்பொருளைக்) கேட்டற்குஉரியாரை (முன்) ஆராய்ந்து, கிளத்தப்படும் பொருட்கண்

வேட்கை அறிந்து - (தம்மாற்) சொல்லப்படும் பொருளினிடத்து (அவர்) விருப்பம்(கொள்வரென்பதையும்) அறிந்துகொண்டு, உரைப்பர் -( தாம் ஒன்றைச்) சொல்வார்கள் ; (ஏனெனில்,—) தோற்பது கொண்டு அவை புகார் - தமக்குத்தோல்வியுண்டாகும் விஷயத்தை மேற்கொண்டு சபையிற் செல்லார் ; (ஆதலால்) ; (எ - று.)

தாம்சொல்லும் விஷயத்தைப் பிறர் விரும்பிக்கேளாமல் அலட்சியஞ் செய்தால் அதனைத் தமதுமேன்மைக்கு ஒருபெருங்குறையாக எண்ணி அங்ஙனங் கீழ்மையுண்டாகாதபடி ஒழுகுதல் அறிவுடையாரது இயல்பாதலால், அவர் தமதுசொல்லைக்கேட்டற்குஉரியஅதிகாரிகள் இன்னாரென்பதையும், தாம்சொல்லும் விஷயத்தினிடத்தில் அவர்கட்கு விருப்பமுண்டா மென்பதையும் முந்திச் செவ்வையாக ஆராய்ந் தறிந்துகொண்டே பின்பு ஒன்றைச் சொல்வரென்று கருத்து. இங்ஙனஞ்சொன்னால், முன்பாட்டிற் சொன்னபடி நல்லவை தீயவையாகா என்க. 'கேட்பாரைநாடி' என்பதற்கு - கேட்போரது நிலைமையை அவர்குறிப்பால் அறிந்து என்றும், 'கிளத்தப் படும் பொருட்கண் வேட்கையறிந்து உரைப்பர்' என்பதற்கு - தாம்சொல்லும் பொருளினிடத்துக் கேட்பார்க்கு விருப்பமுண்டாகக் கூடிய வழியை அறிந்து அவ்வாற்றாற் சொல்வர் என்றும், 'வித்தகர்' என்பதற்கு - அறிவும் சதுரப்பாடுமுடையரான மந்திரிகளென்றும் பொருள்கொள்ளினும் அமையும். திருக்குறளில், 'மன்னரைச் சேர்ந்தொழுகல்' என்ற அதிகாரத்தில் "குறிப்பறிந்து காலங்கருதி வெறுப்பில, வேண்டுப வேட்பச் சொலல்" என்றதை உணர்க.

'வேட்கையால் வண்டு வழிபடரும் வாட்கண்ணாய்' என்றது, மகடூஉ முன்னிலை. கரியவடிவுபற்றி மகளிர்கண்ணுக்கு வண்டு உவமைகூறப்படும். இங்கு அவர்கண்களைப் பெண்வண்டுகளென்று கருதி ஆண்வண்டுகள் காதல் கொண்டு பின்தொடரும் என்றது, மயக்கவணி ; (" பருவமங்கையர் பங்கய வாண்முகத்து, உருவவுண்க(ண்)ணை யொண்பெடையா மெனக், கருதி பன்பொடு காமுற்று வைகலும், மருதவேலியின் வைகின வண்டரோ" என்ற கம்பராமாயணத்தையுங் காண்க.) இனி, இத்தொடர்க்கு - 'தம்காதலாலே வண்டுகள் பூவென்று பின்செல்லாநின்ற ஒளியினையுடைய கண்ணாய்' என்று உரைப்பர் பழையவுரைகாரர்.

கிளத்தப்படும், கிளத்து - பகுதி, (கிளத்துதல் - சொல்லல்.) அ - சாரியை, படு - செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் விகுதி, ஆகக் கிளத்தப்படு என்ற பகுதியின்மேல் உம் - எதிர்காலப்பெயரெச்ச விகுதி, மற்றவை - சந்தி. பொருட்கண், கண் - ஏழனுருபு. வேட்கை - விரும்புதல், தொழிற்பெயர் ; வேள் - பகுதி, கை - விகுதி, ளகரம் டகரமானது - சந்தி. வாள் - ஒளியை யுணர்த்தும்போது உரிச்சொல். வாட்கண்ணாய் - வாள்போலக் கூரியகண்களையுடையவளே யெனினுமாம். தோற்பது - எதிர்கால வினையாலணையும்பெயர் ; தோல் - பகுதி. புகாஅர் - அளபெடை, செய்யுளோசை நிறைக்கவந்தது : மாத்திரை - மூன்று. அவை - ஸபா என்ற வடசொல்லின் சிதைவு. (உ)

3.—(இ - ள்.) நலம் மிக்க - நல்வளங்கள் மிகுந்த, பூ - அழகிய, புனல் ஊர - நீர்வளப்பத்தையுடைய ஊரையுடைய அரசனே !—புலம் மிக்கவரை புலமை தெரிதல் - கல்வியறிவுமிக்கவர்களுடைய அக்கல்வியறிவை ஆராய்ந்தறிதல், புலம் மிக்கவர்க்கே புலன் ஆம் - அவ்வறிவுமிக்கவர்களுக்கே உள்ளதாம் ; பொது மக்கட்கு ஆகாதே - (அதனை யறிதல் - அவ்வறிவுச்சிறப்பில்லாத) சாமாந்யசனங்கட்கு முடியாததே ; (எதுபோலவெனின்,—) பாம்

பின கால் பாம்பு அறியும் - பாம்பினுடைய கால்களை (அதற்கு இனமான) பாம்புகளே அறியும் (பிறபிராணிகள் அறியமாட்டா ; அதுபோல) ; (எ-று.)

பாம்பின்காலைப் பாம்பே அறிதல்போல, அறிஞரது அறிவின் திறத்தை அறிஞரே அறிவர் என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. ஈற்றடி-உபமான வாக்கியம் ; முன்னிரண்டடி - உபமேயவாக்கியம்: இரண்டுக்கும் இடையில் உவமவுருபு கொடாமை காண்க. 'நலம்மிக்க பூம்புனலூர' என்றது, ஆடூஉ முன்னிலை. பூம்புனல் - தாமரைமுதலிய பூக்களையுடைய நீரென்னுமாம். ஊரன், நாடன் என்பன - மருதநிலத்தலைவன் பெயர். புலமிக்கவர்க்கே, ஏ-பிரிநிலை. புலனும் - விளங்கும். ஆகாதே, ஏ - தேற்றம். பாம்பின, அ - ஆறனுருபு ; இன் - சாரியை. புலமிக்கவரைப் புலமை தெரிதல் - இரண்டுசெயப்படுபொருள் வந்த வினை ; உருபுமயக்கமாகக் கருத்துக்கொள்க; 'பசுவைப் பாலைக் கறந்தான்' என்றாற்போல. நலம் - நன்மை: 'அம் விகுதிபெற்ற பண்புப்பெயர். மிகு என்ற குறிலிணைப்பகுதி, ஒற்றிரட்டி இறந்தகாலங் காட்டிற்று. முன்னிரண்டடியில் சொற்பொருட்பின்வருநிலையணி இருத்தல் காண்க. (௩)

4.—(இ - ள்.) உலகம் ஆண்டவன் - (முன்பு ஒருகாலத்தில்) மூவுலகத்தையும் அரசாண்டவனான மகாபலிசக்கரவர்த்தி,—எனக்கு எளிது ஆம் என்று-(மூவடிநிலங்கொடுப்பது) எனக்கு எளியது ஆகுமென்று சொல்லி, மேம் துணை அறியான் - (தன்மந்திரிசொல்லை) விரும்பும் அளவை அறியாதவனாய், மிக்கு - (செருக்கு) மிகுந்து, நீர் பெய்து - (வாமன மூர்த்தியின் கையில்) தானநீர்த்தாரையை வார்த்துத் தத்தஞ்செய்து, இழந்தான்-(அவ்வுலகங்களையெல்லாம்) இழந்துவிட்டான்;(ஆதலால்),தோம்உடைய தொடங்குவார்க்கு-குற்றமுடைய காரியங்களைச் செய்யத்தொடங்குபவர்களுக்கு, தாம் தீர வாரா நோய் இல்லை - தமக்குத்தாமே உண்டாக்கிக்கொள்ள வராத நோய்கள் இல்லை [எல்லாத் துன்பங்களும் வருமென்றபடி] ; (எ - று.)—ஏ - தேற்றம்.

கருவங்கொண்டு உற்றதுணைவர்சொல்லைக் கொள்ளாமலிகழ்ந்து தமக்குத்தோன்றியவாறே தகுதியல்லாதகாரியத்தைச் செயயத்தொடங்குபவர், அங்ஙனம் தன்ஆப்தமந்திரியின் சொல்லைக் கொள்ளாமல் இகழ்ந்து தன் மனம் போனபடியே வாமனனுக்குத் தாரைவார்த்துக் கொடுத்த மாவலி தன் செயலாலே தான் உலகங்களையிழந்து சிறுமைப்பட்டாற்போல, எத்துணைச் செல்வராயினும் அவ்வளவையும் தம்செயலாலேயேஇழந்துவருந்துவரென்பது கருத்து. [redacted]வேற்றுப்பொருள்வைப்பணி. முன்னிரண்டடி - சிறப்புப் பொருளும், பின்னிரண்டடி - பொதுப்பொருளுமாம்.

முன்னிரண்டடியிற் குறித்த கதை :—மகாபலியென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரன்முதலிய யாவரையுஞ் சயித்து மூன்றுஉலகங்களையுந் தன்வசப்படுத்தி அரசாண்டுசெருக்குக்கொண்டிருந்தபொழுது அரசிழந்ததேவர்கள் திருமாலைச்சரணமடைந்து வேண்டி அப்பெருமான் குள்ள வடிவான வாமநாவதாரமெடுத்து அந்தப்பலியினிடஞ் சென்று தன்காலடியால் மூவடிமண் வேண்டியபோது அவ்வசுரராசன் அங்ஙனமே கொடுக்கிறேனென்று வாக்குதத்தஞ்செய்கையில் அருகுநின்ற அசுரகுருவாகிய சுக்கிராசாரியன் 'உன்னை வஞ்சனையால் அழிக்கும் பொருட்டுத் திருமால் தானே இங்ஙனம் வந்துள்ளானாதலின், அவனுக்குக் கொடாதே' என்று சொல்லி அன்போடு விலக்க, அதுகேளாமல் இகழ்ந்து மகாபலி 'என்னிடம் ஒன்றை யிரப்பவன் புருஷோத்தமனாயின், அவனுக்கு நான் அதனைக் கொடுத்துப் புகழ்பெறாது விடுவேனோ?' என்றுகூறித் தாரைவார்த்துத் தத்தஞ்செய்ய, உடனே வாமநமூர்த்தி திரிவிக்கிரமனாகி ஆகாயத்தை அளாவி

வளர்ந்து ஓரடியால் பூலோகத்தையும் ஓரடியால் மேலுலகத்தையும் அள
து மற்றோரடிக்காக அவன்முடியிற் கால்வைத்து அவனைப் பாதாளத்தி
அழுத்தி அடக்கின னென்பதாம். ஓரடியாற் பூலோகத்தை யளந்தபோது
அதன்கீழுள்ள உலகங்களும் அடங்கிவிட்டதனால், மாவலி அனைத்துலகை
மிழந்தன னென்க.

அளபெடை நான்கும் - செய்யுளோசைநிறைக்கவந்தன. ஆண்டவன்
ஆள் - பகுதி. ஆகும்என்ற செய்யுமென் முற்றின் ஈற்றுயிர்மெய்யும், மே
வும் என்ற செய்யுமெனெச்சத்தின் ஈற்றுயிர்மெய்யுங் கெட்டு ஆம், மே
என நின்றன; [நன் - வினை - உஉ.] மேற்துணையறியானென்பதற்கு - தன
பக்கல் அன்புள்ள துணைவனது குணத்தை யறியாதவனாய் என்றும் பொ
ருள்கொள்ளலாம். தோம் - தோஷம் என்ற வடசொல்லின் சிதை வெ
பர். தாம்தரவாராநோய் இல்லை - இரண்டு எதிர்மறை உடன்பாட்டை
யுணர்த்தின. தரஎன்ற செயவெனெச்சம் - காரணப்பொருள தாதலால்
இறந்தகாலம். உடைய என்பது - பலவின்பாற்குறிப்பு வினையாலணையு
பெயர். அறியான் - எதிர்மறை முற்றெச்சம். (ச

5.—(இ - ள்.) மிக்கு - மிகுதியாக, பெருகி - வெள்ளம்பெருகி, மி
புனல் - (ஆறுமுதலியவற்றின்)சிறந்தசலம், பாய்ந்தாலும் - (தன்னிடம்மே
மேற்) பாயப்பெற்றாலும், உப்பு ஒழிதல் செல்லா - தனதுஉவர்ப்புத்தன்மை
நீங்குதல்பெறாத, ஒலி கடல்போல்-ஒலிக்கின்ற கடல்போல,——மிக்கஇன
நலம் நன்கு உடைய ஆயினும்-சிறந்தநல்லினத்தை மிகுதியாக உடையவரா
னாலும், கீழ் - கீழ்மக்கள், என்றும் - எப்பொழுதும், மனம் நலம் ஆகா - மன
த்தின்நன்மையுடையவராகமாட்டார்; (எ - று.) ——— ஆம் - அசை.

நல்லநீர் மேன்மேல் எவ்வளவு சேர்ந்துகொண்டேவந்தாலும் கடலி
இயல்பாகிய உவர்ப்பு நீங்காதவாறுபோல, நல்லினச்சேர்க்கை எவ்வளவு
ந்தாலும் கீழ்மக்களின் இயல்பான கீழ்மைக்குணம் நீங்கவேமாட்டா தெ
பது கருத்து; உவமையணி. இனநலம்—நற்குணநற்செய்கையுடையா
சேர்க்கை. கீழ்மக்களுடைய இழிவை விளக்குதற்கு 'கீழ் உடையவாயினு
ஆகா' என அஃறிணையாற் கூறினார்: இழிப்புப்பற்றிவந்த திணைவழு
மைதி; [நன் - பொது - உஅ.] கீழ்என்றது - பால்பகாஅஃறிணைப்பெயராய்
பன்மைமுற்றைக் கொண்டது; [நன் - பெயர் - உச.] பாய்ந்தாலும், ஆ
னும் என்ற உம்மைகள் - உயர்வுசிறப்பு. என்றும் என்ற உம்மை - முற்று
பொருளது. (

6.—(இ - ள்.) கான் அட்டு நாறும் கதுப்பினாய் - (...வகைநறுமலர்
களையுடைய பூஞ்) சோலையை வென்று அதனினும்மிகுதியாக மணம்வீசுகி
கூந்தலையுடையவளே! தாம் நட்டு ஒழுகுதற்கு - தாம் (பிறரோடு) சிநேக
கொண்டுநடத்தற்கு, தக்கார் என வேண்டா - அவர் தகுதியுடையவர் அல்ல
தகாதவர் என்று ஆராயவேண்டுவதில்லை; யார் நட்பே ஆயினும் நட்பு செ
ள்ளல் வேண்டும் - எத்தன்மையோரது சிநேகமேயானாலும் அதனைக் கொள்
தல்வேண்டும்; முயல் நாய் நட்டால் நல்ல தீற்றாதோ - முயல் நாயோ
சினேகஞ்செய்தால் அந்நாய் அம்முயலுக்கு நல்லவுணவுகளை உண்பியாதோ
[உண்பிக்கு மென்றபடி.]; (எ - று.)

எப்படிப்பட்டவரோடாயினும் மாறுபாடுகொள்ளாது சினேகஞ் செ
தால் அவர்களால் நன்மையுண்டாமென்ற பொதுப்பொருளை விளக்குதற்
இயல்பில் தனக்குப்பகையான நாயோடு முயல் சிநேகித்தால் அந்நாய் அ
முயலுக்குஅன்போடுநல்லவுணவுகளைஉண்பித்தலை எடுத்துக்காட்டினார்; இ
முன்னிரண்டடியிற் கூறிய விஷயத்திற்கு ஏதுவாதலால், ஏதுவணியா
'கானட்டுநாறுங் கதுப்பினாய்' என்றது, மகடூஉமுன்னிலை. அட்டுஎன்பதி

9 என்ற பகுதி, ஒற்றிரட்டி இறந்தகாலங் காட்டிற்று. அடுதல் - வெல் தல். கான் நட்டு ஏனப் பதம்பிரித்து, பூஞ்சோலையை நட்புக்கொண்டு தாவது ஒத்து எனினு மமையும். அவ்வுரைக்கு, நட்டு என்றது - உவம சகமாம். நட்டு, நட்பு,நட்டால்என்பவற்றில், நள்-பகுதி.வேண்டா-வேண்டு ான்றதன் எதிர்மறை. நட்பேயாயினும், ஏகாரமும் உம்மையும் - இழிவு ரப்பு. தீற்றுதல் - தின்பித்தல்; உண் என்னும் பகுதியிலிருந்து ஊட்டு னப் பிறவினை வருதல்போல, தின் என்னும் பகுதியிலிருந்து தீற்று என பிறவினை வந்த தென்க. தின்என்ற பகுதி முதல்நீண்டது, று - பிற னைவிகுதி, னகரம் றகரமானது - சந்தி. தீற்றுதோ, ஓ - எதிர்மறை; இ ண்டுஎதிர்மறை-உடன்பாட்டை வற்புறுத்தின. நல்ல - பெயர். (சு)

7.—(இ - ள்.) அறை - கற்பாறைகளில், பொங்கி பாய் - மிக்குவந்து ாய்கிற,அருவி-நீரருவிகளையுடைய,அணி மலை-அழகியமலையையுடைய,நாட- ாட்டையுடைய அரசனே! அம் கண்-அழகிய இடத்தையுடைய, விசும்பின்- ஆகாயத்திலே நின்று, அகல் நிலா பாரிக்கும்-மிக்கநிலாவைப் பரப்புகிற,திங்க ளும் - சந்திரனும், தீங்கு உறுதல் - (பாம்பினால்) தீமை யடைதலை,காண்டும் - ார்த்துள்ளோம், (ஆதலால்), உறற்பால யார்க்கும் உறும் - (விதிவசத்தால்) நரக்கடவனவான துன்பங்கள் யாவர்க்கும் நேர்ந்தேவிடும்; (எ - று.,—ஆல் - ற்றசை.

விதி எவரையும் விடாது; எப்படிப்பட்டவர்க்கும் வரவேண்டியது ந்தேதீரும் என்பதுகருத்து; ஆதலால், ஊழ்வினையினால்வரும் விபத்துக்களு குஅஞ்சி வருந்தலாகாது என்றபடி.

முன்னிரண்டடியிற் கூறிய சிறப்புப்பொருள் கொண்டு ஈற்றடியிற் கூ ம் பொதுப்பொருளைச் சாதித்தலால், வேற்றுப்பொருள்வைப்பணி. தனிச் சொல்லோடு கூடிய மூன்றுமடி - ஆடூஉமுன்னிலை. கிரகணகாலத்திற் சந் திரனது சாயை சூரியமண்டலத்தை மறைத்தலையும், பூமியின்சாயை சந்திர மண்டலத்தை மறைத்தலையும இராகுகேதுக்களென்னும் கரும்பாம்பு செம் பாம்புகள் அச்சூரியசந்திரரைப் பிடித்து வாய்க்கொண்டு வருத்துகின்றன வென்று கூறுதல், கவிகளுடைய கொள்கை. பாற்கடல் கடைகையில் தோன்றிய அமிருதத்தைக் கலசத்துடன்ஏற்றுக்கொண்ட திருமால் தேவர் களையும் அசுரர்களையும் வெவவேறுகோட்டியாக இருக்கச்சொல்லி அமிருத த்தைத் தேவர்கட்குக் கொடுத்துவரும்பொழுது இராகுவென்னும் ஓரசுரன் தானிருத்தற்குரிய அசுரர்கூட்டத்தைவிட்டுத் தந்திரமாகத் தேவர்கூட்ட த்தினிடையிலே புகுந்து கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சூரியசந்திரர் குறிப்பித்தமாத்திரத்தில் எம்பெருமான் அவனை அகப்பையால் அடித்துத் தலைவேறு உடல்வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அந்தத் தலையும் உடம்பும் விஷ்ணுவின்அநுக்கிரகத்தால் இராகுகேதுக்க ளென்ற இரண்டுகிரகங்களாகிச் சூரியன் முதலிய ஏழுகிரகங்களோடு சேர் ந்து தம்மேற் கோள்சொன்ன சூரியசந்திரர்க்குப் பகையாய்ச் சிற்சிலகாலத் தில் அவர்களை மறைக்கின்றன வென்பது வரலாறு. இனி, 'தீங்குறுதல்'என் றது, கிருஷ்ணபக்ஷத்தில் நாளுக்குநாள் தேய்ந்துபோதலை யெனினுமாம்.

அகல்நிலா - வினைத்தொகை. திங்களும், உம் - உயர்வுசிறப்பு. காண் டும் என்பதில், டும்என்ற தன்மைப்பன்மைவிகுதி இறந்தகாலங் காட்டிற்று; [நன் - பத - கஅ.] உறற்பால- உறுதற்குரிய பான்மையையுடையன; வரத் தக்கவை. பால - பான்மையென்னும் பண்பினடியாப் பிறந்த பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். தீங்குறுதல்எனவந்ததற்கு ஏற்ப, உறற்பால என்பதற்கு -வரவேண்டிய துன்பங்கள் என்று பொருள்கொள்ளப்பட்டது.

"அங்கண்விசும்பி னகனிலாப் பாரிக்குந், திங்கள்" என்ற தொடரும், "உறற்பால யார்க்கு முறும்" என்ற அடியும், நாலடியாரிலும் வந்துள்ளன.

8.—(இ - ள்.) பண் - இராகத்தினது தன்மையை [அதாவது இசைப் பாட்டிற்குஉள்ள இனிமையை], கொண்ட - (தன்னிடத்திலே) கொண்ட, தீம் சொல் - மதுரமான சொற்களையும், பணை தோளாய் - பருத்த தோள் களையுமுடையவளே!— நண்பு ஒன்றி தம்மாலே நாட்டப்பட்டார்களை - சிநேகஞ்செய்து தம்மாலே நிலைநிறுத்தப்பட்டவர்களை, கண் கண்ட குற்றம் உள எனினும் காய்ந்தீயார் - தம்கண்காணப் (பின்பு) அவர் செய்த குற்றங் கள் உள்ளனவானாலும் கோபியார், (பெரியோர்): தம் கன்று சா கறப்பார் யார் உளரோ - தம்கன்றிற்குப் பால்விடாமல் அதுசாம்படி (பசுவைக்) கறப்ப வர் யாவர்(உலகத்தில்) உள்ளார்? [எவருமில்லையென்றபடி]; (எ - று.)

தம்கன்று சாகும்படி பசுவின்பாலை முற்றும் கறந்துவிடாமை அக்கன் றையுடையார்க்கு இயல்பாதல்போல, தம்மாற்சிநேகிக்கப்பட்டார் துன்பம டையும்படி அவரைக்கோபியாமை சிநேகங்கொண்ட பெரியோருடையஇயல் பென்க. எனவே, அவர்செய்தபிழையைப் பொறுப்ப ரென்பதாம். **எடுத்துக் காட்டுவமையணி.** முதல்வாக்கியம் - உபமேயம்; கடைசிவாக்கியம் -உபமா னம். காயார் என்ற எதிர்மறை வினைமுற்று, 'காய்ந்தீயார்' என விகாரப் பட்டு வந்தது; இது, வினைத்திரிசொல் எனப்படும். (கலித்தொகையில், மதி யென்ற பொருளில் "மதித்தீத்தை" என்றும், மருளென்ற பொருளில் "மருதீவாள்" என்றும்,வாரானென்றபொருளில்" வந்தீயான்"என்றும், உரு என்ற பொருளில் "உற்றீயா" என்றும்,நிற்றலென்றபொருளில்"நின்றீயல்" என்றும் வந்தன காண்க.) காய்ந்து ஈயார் எனப் பிரித்து இருசொல்லாகக் கொண்டு நலிந்து பொருள் கொள்ளுதல் பொருந்தாமை உணர்க. பண்கொ ண்டஎன்பதற்கு-பண்ணையொத்தஎன்றும்பொருள்கொள்ளலாம்; கொண்ட- உவமவுருபு: ("யாழ்கொண்ட விமிழிசை" எனக் கலித்தொகையிலுங் கா ண்க.) இராமாயணத்திற் சீதைவனம்புகுபடலத்தில் 55 -ஆம்செய்யுளில் "பண்பிறந்தசொல்"என்றதனோடு இதனைஒப்பிடுக.தீம்+சொல்-தீஞ்சொல்; (கடுஞ்சொல் என்ற பொருளில் 'தீச்சொல்' எனவரும்; அது,தீமை+சொல் என்பன புணர்ந்தது; தீமையென்பதனடியாப் பிறந்த பெயரெச்சம் - தீய என்றும், தீம் என்பதனடியாப் பிறந்த பெயரெச்சம்-தீவிய என்றும் நிற் கும்.) மகளிர்தோள் பருத்திருத்தல் நல்லிலக்கண மாதலால், 'பணைத் தோள்' எனப்பட்டது; இதற்கு - மூங்கில்போலுந் தோள் என்றும் பொ ருள் கொள்ளலாம். வளைந்தெழுகிற இளமூங்கில் - மகளிர்தோளுக்கு வளைந் தெழுந்து திரண்டிருண்டு நீண்டவடிவத்திலும் செப்பிலும் உவமையாம். சாவ+கறப்பார்=சாக்கறப்பார்; செயவெனெச்சத்தின் ஈற்றுஉயிர்மெய் கெ ட்டது; "சாவவென்மொழியீற்றுயிர்மெய் சாதலும் விதி" என்றார் நன்னூ லார். (கலித்தொகையில் 'சாவக்குத்தி' என்பது, 'சாக்குத்தி' என வந்ததுங் காண்க.) கன்று - இளமைப்பெயர். ஒன்றி - பொருந்தி. (அ)

9.—(இ - ள்.) ஒருவர்—, உள்ளது-தமக்குஉள்ள ஒருபொருளை, ஒருவ கை வைத்தக்கால்-(பாதுகாத்துவைத்துக்கொடுக்கும்படிஅடைக்கலமாக) மற் றொருவருடைய கையிற் கொடுத்துவைத்தால், கொள்ளும் பொழுதே தா கொள்ளார் கொடுக்க - (அப்பொருளைவைத்தவர்)வேண்டும்போதே (வைக்க ப்பட்டவர்)தாம்கொள்ளாமலேகொடுத்துவிடக்கடவர்(இங்ஙனமன்றி),அத னை நிலை பொருள் என்று நீட்டித்தல் வேண்டா-(பிறர்க்கு உரியதாகிய) அப்பொ ருளை (த்தமக்கு) நிலைத்தலையுடைய பொருளென்றுகொண்டு (அவர்க்குக்கொ டாமல்)இழுக்கடித்தல் தகுதியன்று: (அங்ஙனம் மறைத்தாலும் அப்பொரு மறைக்கஇயலாமல் வெளிப்பட்டுவிடும்: எதுபோலவெனின்,—) புலை பெ

ருள் தங்கா வெளி - சண்டாளரிடத்துஉள்ள (இறைச்சியும் தோலு மாகிய தீநாற்றமுடைய பொருள்கள் மறைத்துவைத்தாலும்) மறைந்திராதவையாய் வெளிப்பட்டுவிடும், (அதுபோல) ; (எ - று.)

எனவே, தாம் மறைத்தது பலராலும் அறியப்படுதலால், அருவருப் போடு இகழப்படுவ ரென்பது, குறிப்பெச்சம். 'புலையரிடத்துஉள்ள பொ ருள் அடங்காவாய் வெளியாம்' என்ற உபமானவாக்கியத்தைக் கொண்டு 'அடைக்கலப்பொருளை மறைக்க இயலாது' என்ற உபமேயக்கருத்தை விளக் கியது, பிறிதுமொழிதல் என்னும் அணி. இந்த இறுதிவாக்கியம் முந்தின வாக்கியத்துக்கு ஏதுவாய் நின்றது, ஏதுவணி; இவ்வாறு இரண்டுஅணி சேர் ந்ததனால், சேர்வையணி. புலைப்பொருள் மறைக்கமுயன்றாலும்மறைபடாது துர்க்கந்தம் வீசுதலால் வெளிப்படுதலையும், அது ஒருவர் இரகசியமாகச்செய் தகுற்றம் மறைந்தேயிராமல் எங்ஙனமாயினும் வெளிப்பட்டுவிடுதற்கு உவ மையாதலையும், " மறைவழிப்பட்ட பழிமொழி தெய்வம், பறையறைந்தாங் கோடிப் பரக்கும்—கழிமுடைப், புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடி னும், சென்றுதைக்கும் சேயார் முகத்து" என்ற நீதிநெறிவிளக்கச் செய்யு ளிலுங் காண்க.

உள்ளது - ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். வைத்தக்கால்- எதிர்காலவினையெச்சம் : வை-பகுதி, கால்-காலங்காட்டும் எச்சவிகுதி; து அ - சாரியைகள், மற்றவை - சந்தி. ஒருவர்கை வைத்தல் - இவர் கவராது மீளக் கொடுப்ப ரென்ற நம்பிக்கையோடு ஒருவர்வசத்தில் ஒப்பித்தல். கொள்ளுதல் மீளப்பெற்றுக்கொள்ள விரும்புதல். ஏ - தேற்றம்; விரைவையுங் குறிக்கும். கொள்ளார் - எதிர்மறைப்பலர்பால் முற்றெச்சம். இங்கே, கொள்ளுதல் - நமக்கேஉரியதாக்கிக்கொள்ளுதல் ; அபஹரித்தல். நிலை-முதனிலைத்தொழிற் பெயர் ; நிலைப்பொருள் - இரண்டனுருபும்பயனுந் தொக்கதொகை. நீட்டித் தல் - காலந்தாழ்த்தல்; கொடுக்கத்தாமதித்தல்: இத்தொழிற்பெயரில், நீட்டி - பிறவினைப்பகுதி. தங்கா - எதிர்மறைப் பலவின்பால்முற்றெச்சம் ; தங்காமல் என ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சமாகக் கொள்ளினு மாம். புலை என் னும் சாதிப்பண்பு - ஆகுபெயராய் அச்சாதியாரை உணர்த்திற்று. (௯)

10.—(இ - ள்.) கொக்கு ஆர் - மாஞ்சோலையால் நிறைந்த, வளம் வயல் ஊர - வளப்பமுள்ள கழனிகளையுடைய ஊரையுடைய அரசனே!— தக்கா ரோடு ஒன்றி தமர் ஆய் ஒழுகினர் - (அறிவு ஒழுக்கங்களினால்) தகுதியையு டையவரோடு சேர்ந்து (அவர்க்கு) நண்பராய் ஒழுகினராதலால், மிக்கார் என் று - (இவர்) நற்குணம்மிக்கவ ரென்று எண்ணி, சிறியாரை தாம் தேறார் - அற்பகுணமுடையவரை (ப்பெரியோர் தாம்) நம்பி அவரைச்சேர்த்துக்கொள் ளமாட்டார்: அக்காரம் சேர்ந்த மணல் தினல் ஆமோ — சர்க்கரையோடுசேர் ந்த மணலைத் தின்னலாமோ ? (எ - று.)— ஆல் — ஈற்றசை.

சர்க்கரையோடு சேர்ந்ததென்ற காரணத்தால் மணலைத் தின்னலாகா மைபோல யோக்கியரோடு சேர்ந்தவ ரென்ற காரணத்தால் அயோக்கியரை யோக்கியரென்று கொள்ளலாகா தென்பது கருத்து. எடுத்துக்காட்டுவமை யணி. கொக்கு என்பது-மாமரமென்னும் பொருளதாதலை "எக்கர்டு நுண் மணல்மே லெங்கும், கொக்கின் பழம் வீழ் கூடலுரே" எனப் பெரியதிருமொ ழியிலுங் காண்க. இது துளுவநாட்டுச்சொல்லாகிய திசைச்சொல். இனி, கொக்கு ஆர் - நீர்வளத்தாற் கொக்குஎன்னும் நீர்வாழ்பறவைகள் நிறைந்த எனினுமாம். தினல் - தொகுத்தல். அக்காரம் - இக்ஷுஸார மென்ற வட சொல்லின் சிதைவென்பர் ; கருப்பஞ்சாறு என்று பொருள் ; அதனலாகிய சருக்கரைக்கு இங்கு இலக்கணை. (௰)

11.—(இ - ள்.) வான் ஓங்கு - மேலுலகமளவும் உயர்ந்துவளர்ந்த, மால் வரை - பெரிய மூங்கில்களையுடைய, வெற்ப - மலையையுடைய அரசனே! ———கறுத்து - (தம்மேற்) கோபித்து, ஆற்றி - (அக்கோபம்) மிக்கு, கடிய தம்மை செய்தாரை - கொடியதீங்குகளைத்தமக்குச் செய்தவர்களையும், பொறுத்து ஆற்றி சேறல் - (அவர்பிழையைப்) பொறுத்து அவர்க்கு நன்மை செய்து நடத்தலே, புகழ் - கீர்த்தியைத் தருவது ; (அங்ஙனமன்றி),ஒறுத்து ஆற்றில் - (அவர்களைத் தாமும்) கோபித்து அக்கோபம்மிக்குநடந்தால், பயம் இன்றே - (அதனால்) யாதும் நற்பயனு மில்லை ;(ஏனெனில்),—தான் நோன்றிட சால்பு வரும் - ஒருவன் தான் (பிறர்பிழையைப்) பொறுத்தலாலேயே (அவனுக்குச்)சால்பென்னும்மேன்மை உண்டாம்,(ஆதலால்); (எ - று.)——ஆல் - ஈற்றசை.

பிறர் தமக்குச்செய்ததீச்செயல்பலவற்றையும்பொறுத்துஅவர்க்குநன்மை செய்தால் புகழும் மேன்மையு முண்டா மென்பது கருத்து. "ஒறுத்தார்க் கொருநாளையின்பம் பொறுத்தார்க்குப், பொன்றுந்துணையும் புகழ்," "இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால், என்னபயத்ததோ சால்பு" என்ற திருக்குறள்கள் இங்கு உணரத்தக்கன. தம்மை-உருபுமயக்கம். கடிய-கடுமையென்னும் பண்பினடியாப்பிறந்த பலவின்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். சேறல் - செல்லுதல். வரை - கணு ; மூங்கிற்குச் சினையாகுபெயர். இன்றே, ஏ - தேற்றம். நோன்றிட - காரணப்பொருட் செயவெனெச்சம் : இறந்தகாலம்; நோல் - பகுதி, இடு - துணைவினை, து- சாரியை, அ - விகுதி, மற்றவை - சந்தி. சால்பு-பலகுணங்களாலும் நிறைதல்,குணபூர்த்தி; சால் - உரிச்சொற்பகுதி, பு - தொழிற்பெயர்விகுதி. வெற்பன் - குறிஞ்சிநிலத் தலைவன்.

12.—(இ - ள்.) உரை முடிபு காணான் இளமையோன் என்ற - (வாதிப்பிரதிவாதிகள் சொன்ன) சொற்களைக்கொண்டு உண்மையை உணரமாட்டாத இளமைப்பருவத்தா னென்று தன்னை இகழ்ந்துபேசிய, நரைமுது மக்கள்-மயிர்நரைத்த முதுமைப்பருவமுடைய பெரியோர், உவப்ப - மகிழ்ச்சியடையும்படி, சோழன் - கரிகாற்சோழ னென்னும் அரசன், நரை முடித்து - முதுமைப்பருவம்பூண்டுவந்து, சொல்லால் முறை செய்தான்-(வாதிப்பிரதிவாதிகள் என்னும் இருதிறத்தாருஞ் சொன்ன) சொற்களைக்கொண்டே ஆராய்ந்தறிந்து நீதி செலுத்தினன் ; (ஆதலால்), குல விச்சை கல்லாமல் பாகம் படும் - தம்தம் குலத்துக்குஉரிய கல்விகள் கற்பதற்குமுன்னமே (அவரவரிடம்) செவ்வையாக அமையும் ; (எ - று.)

கரிகாற்சோழன் மிக்க இளமைப்பருவத்திலேயே முடிசூட்டப்பட்டு அரசாளத்தொடங்கியகாலத்தில் முதியவர்கள் அவனைக்குறித்து 'இருவர்தம் முன்மாறுபட்டுவந்து தம்தமக்குஅனுகூலமாகச் சிலசொன்னால் அவற்றைக் கொண்டே உண்மைநிகழ்ச்சியை யுணர்ந்து நீதிநெறி தவறாது வழக்குத்தீர்த்தற்கு வேண்டிய அறிவு நிரம்புதலில்லாத இளமையுடையான் இவன்' என்று இகழ்ந்து பேச, அதனையுணர்ந்த அவ்வரசன் நரைத்த மயிரைத் தன்தலையில் முடித்துக்கொண்டு முதுமைப் பருவத்துக்கு உரிய வேஷம்பூண்டு சபைக்குவந்து அம்முதியவர் மகிழும்படி ஒழுங்காக வியவகாரவிசாரணை செய்து நியாயமான தீர்ப்புச் சொல்லின னென்பது, இங்குக் குறித்த வரலாறு. 'என்பது : தம்முன் மனுதலையாயினு ரிருவர் தமக்கு முறைமைசெய்யவேண்டி வந்து சிலசொற்சொன்னால் அச்சொல்லின் முடிவுகொண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவுநிரம்பாத இளமைப்பருவத்தா னென்றிகழ்ந்த நரைமுதுமக்கள் உவக்கும்வகை நரைமுடித்துவந்து, முறைவேண்டிவந்த இருதிறத்தாரும் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறைசெய்தான் கரிகாற்பெருவளத்தா னென்னுஞ் சோழன் ; ஆத

லால், தத்தம்குலத்துக்குத் தக்க விச்சைகள் கற்பதற்குமுன்னே செம்பாகம் உளவாம் என்றவாறு' என்ற பழையஉரையையும், "இளமை நாணி முதுமை யெய்தி, யுரைமுடிவு காட்டிய வுரவோன்" என்ற மணிமேகலையையும், "முதியோர, ரவைபுகுபொழுதில் தம்பகை முரண்செலவும்" என்ற பொருநராற்றுப்படையையும் காண்க. அவரவர் பிறந்த குலத்துக்கு ஏற்ற வித்தை அவரவர் கல்லாமலிருக்கையிலேயே அவர்கட்கு இயல்பில் விளங்கு மென்ற பொதுப்பொருளைக் கரிகாற்சோழனுடைய சரித்திரமாகிய சிறப்புப்பொருளைக்கொண்டு சாதித்ததனால், வேற்றுப்பொருள்வைப்பணி. "பொய்யுடையொருவன்சொல்வன்மையினால் மெய்போலும்மேமெய்போலும்மே," "மெய்யுடையொருவன் சொலமாட்டாமையாற், பொய்போலும்மே பொய்போலும்மே" ஆதலால், உரைமுடிவுகாணுதல் அரிதென்றும், "அதனால், இருவர் தஞ் சொல்லையும் எழுதரங் கேட்டே இருவரும் பொருந்த வுரை"த்தல் வேண்டுமென்றும் அறிக.

முடிபு - 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர். நரை-மயிர்வெளுத்தல்; முதுமைக்கு இலக்கணை. குலவித்யா என்ற வடமொழித்தொடர் விகாரப்பட்டது. கல்லாமல் - எதிர்மறைவினையெச்சம். பாகம் - வடசொல்; பாகம்படும் - பக்குவமாய்ச் சரிவர அமையும் என்றபடி; பெரும்பான்மையமையுமென் றுரைத்தலுமாம். இனி, 'குலவிச்சை கல்லாமற் பாகம்படும்' என்பதற்கு - குலவித்தையைக்கற்காமலே நடுவுநிலைமையுண்டாம் என்று பொருள்கொள்வாரும் உளர்; அது சிறப்பன்று. அரசனது குலவித்தை - தருமசாஸ்திரமும் நீதிசாஸ்திரமும், யானை தேர் குதிரையென்னும்இவற்றின் நூல்களும்முதலியன.

13.—(இ - ள்.) பல்லி கெரித்த சினை போலும் - பல்லியினுடைய முட்டையை நெரித்தாற்போன்ற, நீள் இரு புன்னை பொரி பூ - ஓங்கிவளர்ந்த பெரியபுன்னைமரத்தினது நெற்பொரியின்நிறம்போன்ற நிறமுள்ள மலர்ந்த பூக்களினுடைய, இதழ் - இதழ்கள், உறைக்கும் - உதிர்ந்துசொரியப்பெற்ற, பொங்கு நீர் சேர்ப்ப - கடல்துறையையுடைய அரசனே!— உரைத்தாரை - (தம்மைக்குறித்து நிந்தனை) கூறினவர்களை, மீது ஊரா - செயலால்எதிர்த்து அடக்கமாட்டாமல், மீ கூற்றம் - வாயினால்எதிர்த்துச்சொல்லும்வார்த்தை,— நரி கூ கடற்கு எய்தா ஆறு - நரியின்கூப்பாடு கடலைச்சேர்ந்து அதன் ஓசையைக் குறைபடுத்தமாட்டாத விதம்போலும்; (எ - று.)

கடலினது மிக்கஓசையைக் கேட்டு அதனை அடக்கக்கருதி நரி கூவியொலித்தால் அக்கூச்சல் அக்கடலொலியை அடக்கமாட்டாதவாறுபோலவே, பிறர் வரம்புகடந்து பேசுதலைக் கேள்விப்பட்டு அதனை அடக்கக்கருதித் தாமும் இகழ்ந்துபேசினால் அப்பேச்சு அவர்களை அடக்கமாட்டாதென்பதாம். உரைத்தாரை மீதூரா மீக்கூற்றம் - உபமேயம், நரிக்கூக்கடற்கெய்தாவாறு - உபமானம்; உவமவுருபுதாராமல் உபமான உபமேயங்களுக்கு ஐக்கியத்தை ஆரோபித்துக்கூறியதனால்,காட்சியணி. பல்லி....சேர்ப்ப - ஆடூஉமுன்னிலை.

மீதூரா - ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம்; அவ்வகைப் பெயரெச்சமாகக் கொள்ளினும் அமையும். மீது ஊர்தல் - மேலிட்டுநடத்தல்; வெல்லுதல். மீக்கூற்றம் - மிகுதியாகச்சொல்லுதல்: தொழிற்பெயர்; கூறு - பகுதி, அம் - விகுதி, றகரமெய் - விரித்தல் விகாரம்; கூற்று என்ற பெயர்ச்சொல் அம் சாரியை பெற்றதெனினுமாம். நெரிக்கப்பட்ட பல்லிமுட்டை - மலர்ந்த புன்னைப்பூவுக்கு நிறமும் வடிவும் பற்றிய உவமை. நெற்பொரி - அப்பூவின் இதழுக்கு உவமையாம். 'இறைக்கும்' என்றும் பாட முண்டு. நீள் புன்னை - வினைத்தொகை. இரும்புன்னை - பண்புத்தொகை. பொங்குநீர் - மிகுதியான நீர், அலைபொங்குகிற நீர்; எனவே, கடலாயிற்று. சேர்ப்பன் - நெய்தனிலத் தலைவன்பெயர். கடலும், கடல்சார்ந்தஇடமும், நெய்தல்நிலம். புன்னைமரம்,

அந்நிலத்துக்கு உரியது. கூ - கூப்பீடு ; முதனிலைத்தொழிற்பெயர். கடற்கு எய்தா ஆறு - கடற்குச் சேராதவகை. (கங)

14.—(இ - ள்.) எருமை மேல் நாரை துயில் வதியும் - எருமையின் முதுகில் நாரையென்னும்நீர்ப்பறவை தூக்கங்கொள்ளப்பெற்ற, ஊர - நாட்டையுடையவனே !—அருமை உடைய பொருள் உடையார் - பெறுதற்கு அரிய பொருள் யாதாயினும்ஒன்றைத் தாம்பெற்றுள்ளவர், தம்கண் கருமம் உடையாரை நாடார் - தம்மிடத்துக் கொள்ளுந்தொழிலுடையாரைத் தாம் தேடிச்செல்லார்; (எதுபோலவெனின்),—குளம் தொட்டு தேரை வழி சென்றார் இல் - குளத்தைத்தோண்டிவிட்டு (அதில்வசிக்கச்செய்தற்கு)த் தவளையுள்ளவிடம் தேடிச்செல்பவர் இல்லை, (அதுபோல) ; (எ - று.)

பிறர்க்குக்கிடைத்தற்குஅரிய பொருள் யாதாயினுமொன்று ஒருவரிடத்தில் இருந்தால் அவரால் அப்பயன்கொள்ளவேண்டிப் பிறர் அனைவரும் தாமே அவருள்ளவிடந் தேடி அவரிடம் வந்துசேர்வர்; ஆதலால், அவர் தம்பாற் பயன்கொள்வாரைத் தாம்தேடிச்செல்லவேண்டுவதில்லை : இதற்குத் திருஷ்டாந்தம் - ஒருவர் குளம்வெட்டினால் அதில் வசித்தற்குத் தவளைகள் தாமே தேடிவந்து சேர்கின்றன ; ஆதலால், தவளையுள்ளவிடந்தேடி அவர் செல்லவேண்டியதில்லை என்பதாம். **எடுத்துக்காட்டுவமையணி.** முன்வாக்கியத்திற் கூறிய பொதுப்பொருளைப் பின்வாக்கியத்திற் கூறிய சிறப்புப்பொருள் கொண்டு சாதித்ததாக்கி **வேற்றுப்பொருள்வைப்பணி** எனினும் அமையும். முன்வாக்கியம்—உபமேயம் ; பின்வாக்கியம் - உபமானம். 'எருமை மேல் நாரைதுயில்வதியு மூர' என்ற ஆடூஉமுன்னிலை, அந்நாட்டின் மருதநிலச்சிறப்பை விளக்கும். எருமை -அந்நிலத்துக்கு உரிய விலங்கு ; நாரை-அந்நிலத்துக்கு உரிய பறவை. நீர்வளமிக்க அவ்விடத்தில் நிரம்ப மீனுண்டு மதர்த்த நாரைகள் நீர்நிலைகளில் மெத்தெனத்துழாவி இடையிடையே அசைவின்றிநிற்கின்ற எருமைகளின்மேற் கண்வளருமென நீர்வளமிகுதியை வருணித்தவாறு.

கர்மம் - வடசொல். துயில்வதியும் - தூக்கத்தோடு தங்கு மென்க. வதி- வசி என்பதன் விகாரம். தொட்டு,தொடு - பகுதி: தொடுதல்-தோண்டுதல்.

15.—(இ - ள்.) இசைவ கொடுப்பதும் - (இரப்பவர்க்குத் தம்மாற் கொடுத்தற்கு) இயன்றபொருள்களைக் கொடுத்தலும், இல் என்பதும் - (தம்மிடத்துஇல்லாதபொருள்களை அவர்க்கு) இல்லையென்றுசொல்வதும், வசை அன்று- (ஒருவர்க்குக்) குற்றமல்ல ; வையத்து இயற்கை - (இவ்விரண்டும்)உலகத்தார் செயலேயாம் ; அஃது அன்றி - அவ்வாறல்லாமல், பசை கொண்டவன் நிற்க பாத்து உண்ணான் ஆயின் - (இவன் என்னிடத்து இரக்கங்கொள்வனென்று தன்பக்கல்) நம்பிக்கை கொண்ட ஒருவன்(பசித்து) நிற்கக்கண்டும் (அவனுக்குத் தன்னிடத்துள்ள உணவைப்) பகுத்துக்கொடுத்து(மிச்சத்தைத் தான்) உண்ணானால், நசை கொன்றான் செல உலகம் இல்-அங்ஙனம் ஆசையைக் கெடுத்தவனுக்கு மறுமையிற்சேரும் நல்லுலக மில்லை ; (எ - று.)

இரப்பவர்க்குத் தம்மாற் கொடுக்கக்கூடிய பொருளைக் கொடுத்துத் தம்மிடத்து இல்லாத பொருள்களை இல்லையென்பது உலகத்தார்க்கு இயல்பாதலின், அது ஒருவர்க்குக் குற்றமாகாது. தன்னைநம்பிவந்த ஒருவன் பசித்து நிற்க, அவனுக்குத் தன்னிடமுள்ள உணவில் ஒருபகுதியைக் கொடாமல் தான்மாத்திரம் தனியேயுண்பது பெருங்குற்றமாம். அவ்வாறு ஒருவன் உண்பானாயின் அவனுக்கு மறுமையில் இன்பந்தரும் நற்கதி யில்லை என்பது கருத்து. எனவே,தானங்கள்பலவற்றினும் அந்நதானமே பெரிதாதலால், பசித்தவர்க்குப் போசனமளிப்பது யாவர்க்கும் இன்றியமையாத கடனென்றதாயிற்று; "கொடுப்பி னசனங் கொடுக்க" என்றார் நான்மணிக்கடிகையிலும்.

" இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வை பத்தியற்கை - நசையழுங்க, நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ செய்ந் நன்றி, கொன்றாரிற்குற்றமுடைத்து" என்ற நாலடியார்ச்செய்யுளோடு இச் செய்யுளை ஒப்பிடுக. இசைவ - எதிர்காலப்பலவின்பால் வினையாலணையும் பெயர். கொடுப்பது, என்பது - எதிர்காலத்தொழிற்பெயர்கள். உம்மை இர ண்டும் - எண்ணுப்பொருளன. அளபெடையிரண்டில், முந்தியது - செய்யு ளோசைகுன்றாவிடத்து வந்ததனால், இன்னிசையளபெடை; பிந்தியது-செய் யுளோசைநிறைக்கவந்த அளபெடை; இரண்டும், குறில் நெடிலாய் நீண்டு அளபெடுத்தவை. 'வேறு இல்லை உண்டு' என்பவைபோல, 'அன்று' என்ப தும் இருதிணைஐம்பால்மூவிடங்களுக்கும் பொதுவாக வழங்குதலால், 'கொ டுப்பதும், என்பதும், வசையன்று' என்ற முடிபு, வழாநிலையேயாம். வையம், பொருள்களை வைக்குமிடம்; சனங்களுக்கு இடவாகுபெயர். இங்கு ஆய்தம் மெய்போ லொலித்தது. நிற்க என்ற செயவெனெச்சம் - இங்கு உடனிகழ்ச் சிப்பொருள தாதலால், நிகழ்காலம். பாத்து - பகுத்துஎன்பதன் மரூஉ. கொல் லுதல் - சிதைத்தல்; " செய்ந்நன்றி கொன்றமகற்கு" என்றவிடத்திற்போல. தன்வீட்டுக்குவந்த விருந்தினனை ஒருவன் உபசரியாவிட்டால், முகம்வாடிப் போகிற அவ்விருந்தினன் தன்பாவத்தை அவ்வீட்டுக்காரனுக்குக் கொடுத்து அவன்புண்ணியத்தைத் தான்கைக்கொண்டுபோகிறா னென்பது நூல்துணிபு ஆதலால், 'பசைகொண்டவ னிற்கப் பாத்துண்ணானாயின், நசைகொன்றான் செல்லுலக மில்' என்றார். (கடு)

16.—(இ - ள்.) போற்றப்படுவார் - (ஒருவரால்) பாதுகாக்கப்படுபவர்,— உரிதனின் தம்மோடு பிரிவு இன்றி உழந்தமை கண்டு - (அப்பாதுகாப்பவர்) உரிய அன்பினால் தம்மோடுபிரிதலில்லாமற் கலந்துபழகினமையைப் பார்த்து, பிரிவு இன்றி தாம் பெற்றதனால் உவவார் - (மனத்தில்) மாறுபாடொன்று மில்லாமல் (அவரால்) தாம்பெற்ற பொருளினால் திருப்திப்படாமல் மேன்மே லும் ஆசைப்படாநிற்பர்; (அது குற்றமாம்; ஏனெனின்,—) பெரிதுஅகழின் பாம்பு காண்பாரும் உடைத்து - மேன்மேல் தோண்டிக்கொண்டே சென் றால் பாம்பைக் காண்பவரையும் உடையது, (உலகம், ஆதலால்); (எ-று.)

பொன் மணி முதலிய பொருள்கள் படுகிற சுரங்கம் ஒருவர்க்குத் தற் செயலாய் நேர்ந்தால் அவர் அதிற்கிடைத்தவளவு அப்பொருள்களை யெடுத் துக்கொண்டு அவ்வளவோடு திருப்திப்படாமல் இன்னும் அவை அதிக மாக அங்குக் கிடைக்கக்கூடு மென்று அவ்விடத்தை மேன்மேல் தோண்டிக்கொ ண்டேசென்றால் அங்கு அப்பொருள்கள் கிடையாமல் தீண்டினமாத்திரத் திற்கொல்வதான பாம்பைக் கண்டு அதனால் தீங்குஅடையவுங்கூடும் என் பது, 'பெரிதுஅகழிற் பாம்புகாண்பாரு முடைத்து' என்பதன் கருத்து. இந்த உபமானவாக்கியம், ஒருவர் பிறரொருவரால் தமக்குக்கிடைத்தவளவில் திருப் திப்படாமல் பேராசைப்பட்டு அவரை மேன்மேல் நிர்ப்பந்தித்தால் அவரிடம் வெறுப்பைப்பெற்றுத் துன்பமடையவுங்கூடும் என்ற உபமேயக்கருத்தை விளக்கிற்று; பிறிதுமொழிதலணி. ஆதலால், தம்மிடம் பிறர் உரிமைபாரா ட்டித் தம்மோடு மிகப்பழகித் தம்மைப் பாதுகாப்பதே காரணமாகத் திருப்தி யின்றி மேன்மேல் அவரிடம் பொருள்பெறுமாறு பேராசைகொள்ளக்கூ டாது என முன்வாக்கியத்துக்குப் பின்வாக்கியம் காரணமானது, ஏதுவணி.

உரி - உரிமை யென்ற பண்பு ஈறுபோயிற்று; தன் - சாரியை, இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருளது. உழந்தமை - இறந்தகாலத்தொழிற்பெயர்; உழ பகுதி. அகழின் - எதிர்கால வினையெச்சம். காண்பாரும், உம் - இழிவு சிறப்பு; இறந்ததுதழுவிய எச்சமுமாம். உடைத்து - உடைமை யென்னும்

பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று ; இதற்கு 'உலகம்' என்ற தோன்றாஎழுவாய் வருவிக்கப்பட்டது. பெரிது - வினையுரி. (கசு)

17.—(இ - ள்.) விடல் அரிய - விடுதற்கு அரியதான, துப்பு உடைய வேட்கையை - உணவின்சம்பந்தமான ஆசையை, நீக்கி - ஒழித்து, படர்வு அரிய நல் நெறிக்கண் நின்றார் - ஒழுகுதற்கு அரியதான சன்மார்க்கமாகிய தவத்தில் சலியாது நின்றவர், இடர் உடைத்து ஆய் - (ஏதேனும்நோயினால் தமக்குத்) துன்பம் உண்டானகாலத்தில், பெற்ற விடக்கு நுகர்தல் - (தாம் கொண்ட சீலவிரதம் தவறிக்) கிடைத்ததோர் இறைச்சியை உண்டுஉய்தல், —கடல் நீந்தி கன்று அடியுள் ஆழ்ந்துவிடல் - (முதலில் கடத்தற்கு அரிய) கடலை நீந்திக் கரையேறி (ப்பின்பு) கன்றின்குளம்படி பதிந்தவிடத்து நிற்கும் நீரிலே அமிழ்ந்துவிடுதலோடு ஒக்கும் ; (எ-று.)

மனம் பொறிவழியே போகாதுநிற்றற்பொருட்டு விரதங்களால் உணவு சுருக்கிப் பசிதாகங்களைப் பொறுத்துக் காய்இலைநின்றும் நீரைமாத்திரமேபருகியும் அதுவுமில்லாமலும் அரியபெரியதவத்தைச் செய்துவருபவர் இடையில் அத்தவத்துக்கு உரிய சீலத்தைக் கைவிட்டு அதற்கு முற்றும்மாறான மாமிச போசனத்தைச் செய்வராயின் அது, கடலைநீந்திக் கரையேறின ஒருவன் ஒருகன்றின்குளம்புபதிந்த விடத்தில்நிற்கும் சின்னீரில் அழுந்தினாற்போலும் என்பதாம் ; மிக்கஎளிமைக்கு இடமா மென்பது கருத்து. அருளும் ஆசாரமு முடையார்க்கு இயைவதன்றான மாமிசபோசனத்தின்குற்றம் இதில்விளக்கப் பட்டது. காட்சியணி; நுகர்தல் ஆழ்ந்துவிடல்போலும் என்னாது, நுகர்தல் என்னும் உபமேயத்தையே ஆழ்ந்துவிடல் என்னும் உபமானமாக ஒற்றுமை ப்படுத்திபுரைத்தமை காண்க.

'விடலரிய துப்புடைய வேட்கை' என்பதற்கு - விடுதற்குஅரிய வலிமை யையுடையதான ஐம்புலவாசை யெனினும் அமையும். 'இடருடைத்தாட்ப் பெற்ற விடக்கு' என்பதற்கு-ஒருபிராணிக்கு இம்சையுண்டாக்கினதனாலேயே பெறப்படுகிற மாமிசமென்று உரைப்பாருமுளர். கன்று+அடி=கற்றடி ; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. கன்று - பசுவின்கன்று; இளமைப்பெயர். அடி என்றது, அதுபதிந்தவிடத்து நீர்க்கு இருமடியாகு பெயர். ஆழ்ந்துவிடல் என்பதில், விடு என்றது - துணிவை விளக்கும். ஆய்- ஆக: எச்சத்திரிபு. துப்பு - தொழிற்பெயர் ; து - பகுதி ; துத்தல் - உண்ணு தல், பு - விகுதி. (கஎ)

18.—(இ - ள்.) நிரந்து எழுந்த - புதராக ஒருங்கு[illegible]ழுந்தன்மை யுள்ள, வேயின் - மூங்கில்போல, திரண்ட - திரண்டுள்ள, தோள் - தோள்களையும், வேல் கண்ணாய் - வேலாயுதம்போற் கூரிய கண்களையுமுடையவளே ! — பரந்த திறலாரை - (யாவரும் உணரும்படி எங்கும்) பரவி வெளிப் பட்ட பெருமையையுடையவர்களை, பாசி மேல் இட்டு கரந்து மறைக்கலும் ஆமோ - பாசிபோன்ற சிலசொற்களையுஞ் செய்கைகளையுங் கொண்டு தெரி யாதபடி ஒளித்தலும் இயலுமோ ? [இயலாது என்றபடி]; விண் இயங்கும் ஞாயிற்றை கை மறைப்பார் இல் - வானத்திற்செல்லுகிற சூரியனைத் தம்கை யால் மறைக்கக்கூடியவர் இல்லை ; (எ-று.)

தனது ஆயிரம்கிரணங்களை உலகமுழுவதும் வீசிக் கொண்டு வானத்தில் விளங்குகிற சூரியனைக் கையினால் மறைக்கமுடியாமைபோலவே, லோகப்பிர சித்தராயுள்ளவர்மேல் எளியசிலநிந்தனைகளைச் சொல்லியும் அவர்க்குமாறாகச் சிலஅற்பச்செயல்களைச் செய்தும் அவரதுபுகழை மறைத்தல் முடியாது என் பதாம். எடுத்துக்காட்டுவமையணி. மிகுதியாகப்பட[illegible]ர்ந்து பெருநீரை மேலே மூடினாலும் நிலைக்கொள்ளுந்திற மில்லாத பாசி, மிகுதியாகக் கூறினாலும்

செய்தாலும் நிலைபெறாத எளியசொற்களின் மேலும் செயல்களின் மேலும் நின்றது ; உவமையாகுபெயர்.

மறைக்கல், கு - சாரியை ; உம் - இழிவுசிறப்பு. ஓ - எதிர்மறை. ஞாயிறு=நாயிறு ; போலி. பசுநிறமுடையது, பாசியெனக் காரணக்குறி; பசுமையென்ற பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டது. 'நிரந்தெழுந்த' என்பதற்கு - தசைநிறைந்துபருத்தெழுந்த என்று உரைத்து, அதனைத் தோளுக்கு அடைமொழியாக்குவாரு முளர். வேயின், இன் - ஐந்தனுருபு, ஒப்பு. கரந்து மறைக்கல் - ஒருபொருட் பன்மொழி. (கஅ)

19.—(இ - ள்.) மிக்கு உடையர் ஆகி - (தலைமையையும் பொருளையும்) மிகுதியாக உடையவராய், மிக மதிக்கப்பட்டாரை - (எல்லோராலும்) மிகுதியாக நன்குமதிக்கப்பட்டவரை, ஒற்கப்பட முயறும் - (அத்தலைமையும் பொருளும் போய்ச்) சிறுமையுடையராம்படி செய்யமுயலுவோம் (யாம்), என்றல் - என்று (ஒருவர்) நினைத்து அங்ஙனஞ் செய்யத் தொடங்கல், இழுக்கு ஆகும்- (அத்தொடங்கினவர்க்கே) துன்பத்துக்குக்காரணமாய்முடியும் ; நற்கு எளிது ஆகி விடினும் - மிகவும்சிறியதாய் எடுத்தற்கு இலேசாயிருந்தாலும், நளிர் வரைமேல் கல் - பெரிய மலையிலுள்ள கல்லை, கிள்ளி - (கைந்நகத்தாற்) கிள்ளத்தொடங்கி, கை உய்ந்தார் - கை (வருந்துதலினின்று) தப்பினவர், இல் - (எவரும்) இல்லை ; (எ-று.)

கல்லைக்கிள்ளினால் கைநோகுமேயொழிய அக்கல்லுக்குச் சிறிதுஊறுபாடும் உண்டாகாதவாறுபோல, ஆற்றலிற்சிறந்த பெரியாரைக் கீழ்மைப்படுத்தத் தொடங்கினால் அங்ஙனந்தொடங்கினவர்க்குத் துன்பமுண்டாகுமேயொழிய அவ்வலியார்க்குச் சிறிதுதுன்பமும் உண்டாகாது என்பதாம். **எடுத்துக் காட்டுவமையணி.** கற்கிள்ளிக்கையுய்ந்தார் இல் - "கற்கிள்ளிக்கையிழுந்தற்று" என்றார் நாலடியாரிலும்.

ஒற்கம் - தளர்ச்சி ; தொழிற்பெயர் : ஒல்குஎன்பதன் விகாரமான ஒற்கு- பகுதி, அம் - விகுதி. முயறும் - தன்மைப்பன்மை எதிர்காலவினைமுற்று ; முயல் - பகுதி, தும் - விகுதி, லகரம்கெட்டது - சந்தி. நன்கு என்ற மென்றொடர்க்குற்றியலுகரம், நற்குஎன வன்றொடராயிற்று. நளிர்வரை - குளிர்ச்சியையுடைய மலையெனினுமாம். (கக)

20.—(இ - ள்.) வைத்ததனை - தாம் தேடிச்சேமித்துவைத்தபொருளை, வைப்பு என்று - (தமக்குப் பின்பு சமயத்தில் உதவும்)சேமப்பொருளென்று, உணர்க - (எவரும்) எண்ணுதிருக்கக்கடவர்; அதனை - அங்ஙனந் தேடிச் சேமித்துவைத்தபொருளை, வழங்கி தாம் துய்த்து-செலவுசெய்து தாம் அனுபவித்து, இரு பாலும் அத்தக - (இம்மை மறுமை யென்னும்) இரண்டிடத்துக்கும் அழகிதாக, தக்க உழி நோக்கி அறம் செய்யின் - தகுந்தஇடத்தை[சற்பாத்திரத்தை] ப்பார்த்துத் தானமாகிய தருமத்தைச் செய்தால், அஃது அன்றே - அவ்வாறு அறஞ்செய்தலன்றே, எய்ப்பினில் வைப்பு என்பது - தாம் தளர்ந்தகாலத்தில்(தமக்குஉதவும்) நிதியென்று சொல்லப்படுவது; (எ - று.) —ஆதலால், அறஞ்செய்தலையே வைப்பென்று உணர்க என்றபடி.

தாம் பாடுபட்டுத்தேடிப் புதைத்துவைத்த பணம் அம்மாத்திரத்தால் தமக்கு ஒருபோதும் உறுதிதரும் உதவியாகாது ;அதுகொண்டு செய்யும் நல்லறமே இம்மையிற் புகழையும் மறுமையிற் புண்ணியத்தையும் விளைத்து இவ்வுலகீத்தும் போம்வழிக்கும் நல்லதுணையாகு மாதலால் எவரும் அறஞ்செய்தல்வேண்டு மென்பது கருத்து. நிறைசெல்வம் நீரிற் சுருட்டும் நெடுந்திரை போல நிலையில்லாத தாகையாலும், முன்னை நல்வினைப்பயனால் ஒருகால் அது சிறிது காலம் நிலைபெற்றிருக்கு மாயினும் உடம்பு நீரிலெழுத்துப்போல நிலையற்ற தாதலாலும், தாம் தேடிவைத்த பொருள் தமக்குப் பயன்

படாதாதலால், 'வைத்ததனை வைப்பென் றுணரற்க' என்றார். அறஞ்செய்தற்கு உதவியாக உடம்பைப் பாதுகாத்தல் இன்றியமையாததென்பதற்கு 'தாம் அதனைத் துய்த்து வழங்கி' என்றும், இம்மையில் அழியாவுடம்பாகிய புகழும் மறுமையில் நற்கதியும் பெறுவதே பெரும்பயனென்றற்கு 'இருபாலும் அத்தக' என்றும், பாத்திராபாத்திரவிவேகமின்றி அபாத்திரத்தில் அறஞ்செய்தல் தீமையையே விளைக்குமாதலால் 'தக்குழி நோக்கி' என்றும் கூறினார். 'தக்குழி' என்றது, தீவினைசெய்தலின்றி நல்லொழுக்கமுடையராய்த் தானம் பெறுதற்கு உரியராவாரை யுணர்த்தும். அப்படிப்பட்டவர்க்குக்கொடுத்த பொருள் மிக்கபயன்தருதலை "அறப்பயனும், தான் சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்துவிடும்" என்ற நாலடியாரினும் அறிக. தீயோர்க்கு ஈந்தால் அப்பொருள்கொண்டு அவர் செய்யுந் தீவினைப்பயன் ஈந்தவனையுஞ் சாருமென்பதனை அறிக. செய்யின் என்றது, செய்தலின் அருமையை விளக்கும்.

வைத்தது - இறந்தகாலவினையாலணையும்பெயர்; செயப்பாட்டுவினைப்பொருளில்வந்த செய்வினை. வைப்பு-'பு'விகுதிபெற்ற தொழிற்பெயர்; தொழிலாகுபெயராய் வைக்கப்பட்டபொருளைக் குறித்தது. உணரற்க - எதிர்மறைவியங்கோள்; அல் - எதிர்மறையிடைநிலை. துய்த்து, எய்த்து என்பவற்றில்—துய், எய் - பகுதிகள். இருபாலும், உம்மை - முற்றுப்பொருளது. அத்தக - அழகுதக; 'அம்' என்பதுபோல 'அ' என்பதும்-அழகு என்னும் பொருளில் வருதலை, பத்துப்பாட்டுநச்சினார்க்கினியருரையால் அறிக. தக - அமைய. தக்குழி - தக்கவுழி; பெயரெச்சவீறு தொகுத்தல்; புக்ககம், வேட்டகம் என்றவற்றிற்போல. அஃதன்றே - இங்கு ஆய்தம் மெய்போல்ஒலித்தது. அன்றே-அல்லவோ; பிரசித்தியைக் குறிக்க வந்தது; தேற்றம். எய்ப்பு - தளர்தல்; 'பு' விகுதி பெற்ற தொழிற்பெயர்; தளர்ச்சிநேருங்காலத்துக்குத் தொழிலாகுபெயர். என்பது - செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த எதிர்காலவினையாலணையும்பெயர். (௨௦)

21.—(இ - ள்.) உற்றான் உறான் எனல் வேண்டா—ஒருவன் (தனக்கு) வேண்டியவன் வேண்டாதவன் என்று ஆராயவேண்டுவதில்லை; ஒள் பொருளை-(தனது) சிறந்ததானபொருளை, கற்றானை நோக்கியே கைவிடுக்க - கற்றறிந்தவனை நாடித் தேர்ந்து(அவனுக்கே) உதவக்கடவன்; கற்றான் - (அப்பொருளுதவியைப் பெற்ற) அக்கல்வியறிவாளன், கிழவன் உரை கேட்கும் - (தான் பெற்ற அப்பொருட்கு)உரியவனது சொல்லைக் கேட்டு அதன்படிநடப்பான்; கேளான் எனினும் - அங்ஙனம் கேட்டு நடவானாயினும், எருது உண்ட உப்பு இழவு அன்று - எருதுஉண்டஉணவு (ஒருவனுக்கு) நஷ்டமன்று; (எ - று.)

மிகுதியாக உழைத்து உதவுந்தன்மையதான எருதுக்கு ஒருவன் நன்றாகஉணவுகொடுத்து அதனைச்செவ்வையாகப் போஷிப்பானாயின் அது அந்தயசமானனுக்கு இம்மையிலேயே நன்றாக உழைத்து உதவக்கூடும்; ஒருகால் அங்ஙனம் உழைத்து உதவாவிடினும் விலங்கிற்குஉணவளித்து அதனைப்போஷித்தல் அறமாதலால், அவ்வறப்பயன் மறுமையிற் கைகூடும்: ஆதலால், ஒருவனுக்கு எருதுஉண்டஉப்புஒருபோதும்நஷ்டமாகாது; அதுபோலவேஒருவன் பலவாற்றால் உதவக்கூடியகற்றறிவுடையானுக்குப்பொருளுதவிசெய்தால் அக்கல்விமான் நன்றியறிவினால் இம்மையிலேயே அப்பொருள்கொடுத்தானுக்கு வேண்டுவன செய்யக்கூடும்; ஒருகால் அங்ஙனஞ் செய்யாவிடினும் விவேகியாதலால் சத்பாத்திரமாகிற அவனுக்குக் கொடுத்த பொருளினால் மறுமையிற் புண்ணியப்பயன் கைகூடும்; ஆதலால் அப்படிப்பட்டவனுக்கே பொருளுதவி செய்க என்பது கருத்து. நான்காமடியில் உபமானத்தைக்கொண்டு உபமேயத்தைப் பெறவைத்தது, பிறிதுமொழிதலணி. 'உப்பு' என்பது - -உண

வுக்குப் பொதுப்பெயராதலே 'உப்பிட்டவரை யுள்ளளவும் நினை' என வழங்கும் பழமொழியிலுங் காண்க. அறுவகைச்சுவையுள்ளும் உப்புச் சிறந்ததாதலால், அத்தலைமைபற்றி, அச்சிறப்புப்பெயர் பொதுப்பொருளின் மேலதாம்.

உற்றான - உறவினன், நண்பன்; அங்ஙன மல்லாதவன், உறான். 'கைவிடுக' என்றும் பாடம். கிழவன் - கிழமையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர்; பெண்பால் - கிழத்தி, (வயது முதிர்ந்தவ னென்னும் பொருளில், பெண்பால் - கிழவி; பகுதி - கிழம்.) 'இழிவன் றெருதுண்ட வுப்பு' என்று பாடமோதி, கற்றவன் தன்னைக் கல்வியறிவாளனுக்கிய ஆசிரியன் போதித்த உபதேசத்தைக் கேட்டு அவ்வாறே நடப்பன்; அங்ஙனம் நடவானாயினும் அவனுக்கு ஈந்த பொருள் நிஷேதமன்று; எருது வாய்வைத்த பண்டம் போன்றதாமென்று உரைத்தலும் ஒன்று. நாய் கழுதை முதலிய சிலஅபரிசுத்தமான பிராணிகள் வாய்வைத்தபண்டம் அசுத்தமாய்விடுதல்போல எருது பசு முதலிய சில பரிசுத்தமான பிராணிகள் வாய்வைத்த பண்டம் அசுத்தமாவதில்லையென்பது, தருமசாஸ்திரக்கொள்கை. உறுஅன் - அளபெடை, செய்யுளோசைநிறைக்க வந்தது. ஒண் பொருள் - நல்வழியால் ஈட்டப்பட்ட பொருள்; பண்புத்தொகை. ஏ - பிரிநிலை. • (உக)

22.—(இ - ள்.) வய மா போல் - புலிபோல, ஆலித்து பாயும் - ஆரவாரஞ் செய்துகொண்டு பாய்கிற, அலை கடல் - அலையெறிகின்ற கடலினது, தண் சேர்ப்ப - குளிர்ந்த துறையையுடைய அரசனே! பயன் நோக்காது - மறுமைப்பயனைக்கருதாமல், ஆற்றவும் பாத்து அறிவு ஒன்று இன்றி - மிகுதியாகப் பகுத்தறியும் அறிவு சிறிது மில்லாமல், இசை நோக்கி ஈகின்றார் - புகழின் பொருட்டே கொடுக்கின்றவர்களுடைய, ஈகை - கொடையானது, கூலிக்கு செய்து உண்ணும் ஆறு - கூலிக்கு வேலைசெய்து உணவுபெற்று உண்ணும் வகைபோலாம்; (எ-று.)

பயன் நோக்காது - தானஞ்செய்தற்குஉண்மையானபயன்இன்னதென்று உணராமல்; அருளினல்பிறர்க்குஒன்றைக்கொடுத்தால் தமக்குமறுமையில் புண்ணியப்பயன் கைகூடுமென்பதை ஆராயாமல் என்றபடி. ஆற்றவும்பாத்தறிவொன் றின்றி இசை நோக்கி யீகின்று ரீகை - பாத்திராபாத்திரவிவேகமில்லாமல் புகழுக்கே பாடுபட்டு டம்பார்த்தமாகக் கண்டவர்க்குங் கொடுத்தல். கூலிக்குச் செய்துண்ணுதலாவது - உணவே கூலியாகக்கொண்டு வேலைசெய்தல். பொருட்கூலிக்குத் தொழில்செய்து கையிற் பொருள்சேர்த்து வைத்துக் கொள்ளாமல் அன்றன்றை யுணவுக்கே பாடுபட்டுத் தொழில் செய்தவன் தொழில் செய்ய வலிமையில்லாத முதுமைப்பருவம் வந்தபோது எவ்வாறு வருந்தித்தவிப்பனே அவ்வாறே சத்பாத்திரத்தில் தானஞ்செய்து நல்வினை சேர்த்துவைத்துக்கொள்ளாது வீண்பெருமைக்கே பாடுபட்டுக் கண்டபடி பொருட்செலவு செய்தவர் தேகமொழியுங்காலத்துப் போம்வழிக்குத் துணையின்றித் தவிப்ப ரென்பார் 'கூலிக்குச் செய்துண்ணு மாறு' என உவமையெடுத்துக் கூறினர். அன்றன்றை உணவையே பெரிதாக எண்ணுது பொருள்சேர்க்க முயன்றவர்க்கு நல்லுணவு தானே கிடைத்தல் போல, புகழையே முக்கியமாகக்கருதாமல் மறுமைப்பெரும்பயனை நோக்கித் தானஞ்செய்கிறவர்களுக்கு இம்மையில் அழியாப்புகழும் தானகவேஅமையு மென்பது குறிப்பு. காட்சியணி; உபமேய உபமானங்களுக்கு ஒற்றுமைதோன்றக் கூறிய வாறு காண்க.

பயன் - பயம்என்பதன் இறுதிப்போலி. ஆற்றவும், உம்மை - உயர்வு சிறப்பு. ஈகை - 'கை' விகுதிபெற்ற தொழிற்பெயர். வயமா - வலிமையையுடைய விலங்கு; எனவே, சிங்கமுமாம். "வய வலியாகும்" என்ற தொல்காப்பியத்தால், வயஎன்பது - வலிமையையுணர்த்துவதோர் உரிச்சொல்லா

தலை அறிக; வயம் - வெற்றியுமாம். அலை கடல் - வினைத்தொகை; 'அலைக் கடல்' என்ற பாடம் - 'அலைகளையுடையகடல்' என்ற பழையவுரைக்குச் சேரும். கூலிக்கு - நான்கனுருபு, பொருட்டுப்பொருளில் வந்தது. (உஉ)

23.—(இ - ள்.) கறங்கு நீர் - ஒலிக்கிற நீர், கால் அலைக்கும் - காற்றினால் அலைக்கப்பெற்ற, கானல் - கரைச்சோலையையுடைய, அம் - அழகிய, சேர்ப்ப -கடல்துறையையுடையஅரசனே !(அறிவுடையோர்),தாம்உடைய - தாம் உடையனவான பொருள்களை, தாம் போற்றல் அன்றி - தாமே பாதுகாத்தலல்லாமல், தமர் சிறந்தார் என்று - நம்மைச் சார்ந்தவரான இவர் (நமக்குச்) சிறந்தவரென்றுஎண்ணி, தேற்றார் கை மறந்தானும் வையார் - நம்பத்தகாதவரான பிறருடைய வசத்திலே மறந்தாயினும் ஒப்பிக்கமாட்டார்; (ஏனெனில்,—) இறந்தது பேர்த்து அறிவார் இல் - (தம்கையினின்றும்)போன பொருளை மீண்டு வரக்கண்டறிபவர் இல்லை; (ஆதலால்); (எ - று.)

("வித்தம் பரஹஸ்தகதம் கதம்" என்ற வடமொழிமேற்கோளின்படி) தம்கையினின்று பிறர்கையிற் போன பொருள் அங்ஙனம் போயேவிடுமேயன்றி மீள வரப்பெறுத லரிதாதலால், எவரையும் நம்பி அவர்கையில் தம் கைப்பொருளை ஒருபோதும் கொடுக்கக்கூடாது, அதனைத் தாமே எப்பொழுதும் பாதுகாக்கவேண்டும் என்பதாம்; சச்சந்தனென்னும் அரசன் கட்டியங்காரனென்னும் மந்திரியை நம்பித் தனக்கு உயிரெனக் கொண்டு "எனக்கு உயி ரென்னப்பட்டான் என்னலாற் பிறரை யில்லான்" என்று அபிமானித்து மற்றை நன்மந்திரிகள் சொன்ன "ஒருவன்மேற் கொற்றம் வைப்பின் நிலந் திரு நீங்கும்" என்றது முதலிய உறுதிமொழியைக் கொள்ளாதாய் அவனிடத்தில் தனது அரசாட்சியை ஒப்பித்துத் தான் மனையாளோடு சுகித்திருக்க, அத்துர்மந்திரி அரசனைக்கொன்று எல்லாவற்றையும் தனக்கே உரியதாக்கிக்கொண்டனன் என்ற சீவகசிந்தாமணி வரலாறு, இங்கு உணரத்தக்கது. பின்வாக்கியம் முன்வாக்கியத்துக்கு ஏதுவானதனால், ஏதுவணி.

ஆனும் - ஆயினும் என்பதன் விகாரம்; உம் - இழிவுசிறப்பு. தாம் உடைய - எழுவாய்த்தொடர். உடைய - பலவின்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். தேற்றார்=தேறார்; றகரமெய் - விரித்தல்விகார மென்றாவது, தன்வினைப்பொருளில்வந்த பிறவினையென்றாவது கொள்க; இங்கே, செய்வினை செயப்பாட்டுவினைப் பொருளது. கானல் - நெய்தனிலச்சோலை. இறந்தது - பெயர். (உ௩)

24.—(இ - ள்.) பூவின் - நீலோற்பலமலர்போல, பொலிந்து - அழகிதாய் விளங்கி, அகன்ற - பரந்துள்ள, கண்ணாய் - கண்களையுடையவளே! நோவ உரைத்தாரை - தமக்குமனவருத்தமுண்டாம்படி கோபித்துத் தம்மை வைதவர்களை, தாம் பொறுக்கல்லாதார் - தாம் பொறுக்கமாட்டாதவர், நாவின் - (தம்முடைய) நாவினால், ஒருவரை வைதால் - தாம் பிறரொருவரைக் கோபித்து வைதால், வயவு உரை அது-அங்ஙனம்வைத வசைச்சொல், இல்லை தீ ஊட்டும் திறம் அன்றே - அயலார்வீட்டை நெருப்புக்கு உணவாகச்செய்யும் விதம் போன்றதேயாம்; (எ-று.)

பிறர் தம்மை வையும்போது தமக்கு எவ்வளவு மனவருத்த முண்டாகிறதோ, அவ்வளவு வருத்தம் தாம் பிறரை வையும்போது அவர்க்கும் உண்டாகுமென்று உணர்ந்து எவரையும் வையாதிருத்தலே பிறரையுந் தம்மைப்போலப் பாவிக்கும் அறிவுடைய பெரியோர்க்கு அழகு; அங்ஙனமன்றிப் பிறரை வைதல், அயல்வீட்டில் தீப்பற்றவைத்தலோடு ஒக்கும் பெரும்பாதகமாமென்பது கருத்து. தம்வீட்டில் தீப்பற்றினு லுண்டாகுந் துன்பத்தை யறிந்துவைத்தும் அங்ஙனமே பிறரையுங் கருதாது பிறர்வீட்டில்தீக்கொளுவுதல் நடுவுநிலைமைக்குச் சிறிதும்தகாமை காண்க. "காவா தொருவன் தன்வாய்

திறந்து சொல்லுஞ் சொல், ஓவாதே தன்னைச் சுடுதலால்-ஓவாதே, ஆய்ந்தமைந்த கேள்வி யறிவுடையா ரெஞ்ஞான்றும், காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து" என்றார் நாலடியாரிலும். உபமேயத்தை நோக்கி, உபமானத்தில், இல் - பிறர்இல் என்று கொள்ளப்பட்டது. **காட்சியணி**; உபமேயஉபமானங்களை ஒற்றுமைப்பட வைத்ததனால். பொறுக்கல்லாதார்——பொறு - பகுதி, ஆர் - விகுதி, ஆ-எதிர்மறையிடைநிலை, கல் - ஆற்றலுணர்த்தும்இடைநிலை, த் - எழுத்துப்பேறு, மற்றவை - சந்தி. நாவின், இன் - ஐந்தனுருபு, ஏது. பூவின், இன் - ஐந்தனுருபு, ஒப்பு.வயவு=வசவு.ஊட்டும் - உண்பிக்கும்.

25.—(இ - ள்.) அறிவு இல்லார் - அறிவில்லாதவர், ஆயிரவர் ஆனும் தொக்கக்கால் - ஆயிரம்பேர் ஒருங்குசேர்ந்தாலும், மா இருஞாலத்து-மிகவும் பெரிய உலகத்திலே, மாண்பு ஒருவன்போல்கலார் - அறிவின்பெருமையையுடைய ஒருவன்போல் விளங்கமாட்டார்கள்; (எதுபோல வெனின்,—) பல் மீனும் - பலநட்சத்திரங்களும் (ஒருங்குசேர்ந்தாலும்), பாய் இருள் நீக்கும் மதியம் போல் நிலா காய்கலா ஆகும் - (உலகத்திற்பரவிய) இருளை நீக்குகிற சந்திரன்போல நிலாவை வீசமாட்டாவாம், (அதுபோல); (எ - று.)

பலநட்சத்திரங்கள் ஒருங்குகூடினாலும் ஒரு சந்திரனுக்குச்சரியாக மாட்டா வன்றோ; அதுபோல அவிவேகிகள் பலர்கூடினாலும் விவேகி யொருவனுக்கு ஒப்பாகா ரென்பது கருத்து; **எடுத்துக்காட்டுவமையணி.** சந்திரனில்லாத இரவு ஒளிபெற்றிராதவாறு போல, அறிவுடையோனில்லாத சபை ஞான வொளி பெற்றிரா தென்க.

ஆயிரவர் - எண்ணடியாப்பிறந்த பெயர்; இங்கு ஆயிர மென்றது, மிகுதி குறித்து நின்றது. தொக்கக்கால் - எதிர்கால வினையெச்சம்; தொகு-பகுதி, கால் - காலங்காட்டும் விகுதி, பகுதியினிடையில் ககரவொற்று இரட்டியது - விரித்தல் விகாரம், அ - சாரியை, மற்றவை - சந்தி. மா இரு - ஒருபொருட் பன்மொழி. மா+இரு=மாயிரு; "ஏனையுயிர்வழி வவ்வும்" என்றபடி வகரமெய் பெறாது யகரமெய் பெற்றது; நிலைமொழி உரிச்சொல்லாதலின்: "இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்." மாண்பு - பு விகுதிபெற்ற பண்புப்பெயர். போல்கலார், காய்கலா என்றவற்றில், கு-சாரியை, அல் — எதிர்மறையிடைநிலை. மதியம், அம் - சாரியை. மின்னுவது மீன் எனக் காரணக்குறி: மீன் - இங்கே விண்மீன். (உரு)

26.—(இ - ள்.) மரையா - காட்டுப்பசுக்கள், கன்று ஊட்டும் - (அச்சமின்றி அன்போடு தம்) கன்றுக்குப் பாலூட்டப்பெற்ற, மலை நாட-மலையையுடைய நாட்டையுடைய அரசனே! நிரை தொடி தாங்கிய - வரிசைப்பட்ட [பலவாகிய] தொடியென்னும் வளையை யணிந்த, நீள் தோள் - நீண்ட தோள்களையுடைய, மாற்கு எனும் - திருமாலுக்கேயாயினும், உரை ஒழியா ஆகும் - (குற்றஞ்செய்தானாயின் அக்குற்றஞ்செய்தா னென்னும்) பழிச்சொற்கள் ஒருநாளும் நீங்காதனவாம்;(ஆதலால்), உயர்ந்தோர்கண் குற்றம்- உயர்ந்தோரிடத்துள்ள குற்றங்கள், நரை ஆன் புறத்து இட்ட சூடு - வெள்ளையெருதின் உடம்பின்மே லிட்ட சூடுபோல, மாயா - ஒருபோதும் மறையாவாம்; (எ - று.)

நற்குண நற்செய்கைகளிற் சிறந்தவனும் உலகத்தைப் பாதுகாக்குந் தொழிலைக் கொண்டவனும் புருஷோத்தமனுமான திருமால் குற்றஞ் செய்தாலும் அவனுக்கும் அழியாப்பழி நிலைபெறு மாதலால், உயர்ந்தோரிடத்துக் குற்றம் மிக விளங்கு மென்பது கருத்து. 'நரையான் புறத்திட்ட சூடு' என்றது, நன்குவிளங்குதலைக் காட்டவந்த உவமை; **தொகையுவமையணி.** "பெருவரை நாட பெரியார்கட் டீமை, கருநரை மேற் சூடேபோற் றோன்றும்—கருநரையைக், கொன்றன்ன வின்னா செயினுஞ் சிறியார்மேல், ஒன்

றனுந் தோன்றாக் கெடும்" என்ற நாலடியாரும், "கன்றி முதிர்ந்த கழியப் பன்னாள் செயினும், ஒன்றுஞ் சிறியார்க ணொன்றானுந் தோன்றாவாம், ஒன்றாய்விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம், குன்றின்மே லிட்டவிளக்கு" என்ற இந்நூற்செய்யுளும் இங்கு நோக்கத்தக்கன. பெருமையுடையோர் சிறிதுங் குற்றஞ் செய்யாது தம்மைக் காக்கவேண்டு மென்றவாறு.

நிரைதொடி - வினைத்தொகை. கைகள் நீண்டிருத்தல் உத்தம புருஷ லட்சணம். உம் - உயர்வுசிறப்பு. மரையா - மானி லொருசாதியுமாம்.

27.—(இ - ள்.) வீங்கு தோள் - பருத்ததோள்களையுடைய, செம்பியன் - சோழராச னொருவன், சீற்றம் விறல் - கோபத்தாலும் பராக்கிரமத்தாலும், விசும்பில் தூங்கும் எயிலும் தொலைத்தலால் - ஆகாயத்திற் சஞ்சரிக்கிற மதில்களையுடைய (அசுரர்களது) நகரத்தையும் (தேவர்கட்காக) அழித்தத னால், முடியும் திறத்தால் முயல்க - (எப்பொழுதும் ஒருகாரியத்தை) அது முடியும் வகையால் (ஆலோசித்து அரியதென்று பின்னிடாமல்) முயற்சி செய்யவேண்டும்; தாம் கூர் அம்பு அடி இழுப்பின் - ஒருவர்தாம் கூர்மையான அம்பை நன்றாக இழுத்துப்பிரயோகித்தால், அரண் இல்லை - (அதுபட்டு ஊடுருவமாட்டாத) பாதுகாவல் இல்லை; (எ - று.)—ஆங்கு - அசை. 'யாங் கும் என்ற பாடத்துக்கு - எப்பொழுதும் என்க.

முன்னொருகாலத்தில் திரிபுரத்துஅசுரர்போலச் சிலஅசுரர்கள் ஆகாய மார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய தெய்வத்தன்மை யுள்ள மூன்று மதில்களை வரத்தாற் பெற்று அவற்றினுள்ளே தாம் சிறிதும் அச்ச மின்றிச் சிறந்த பாதுகாப்போடு இருந்துகொண்டு அந்நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களிற் பறந்து சென்று பல இடங்களையும் பாழாக்கி நிலவுல கத்தை வருத்தித் தேவர்களையும் பயப்படுத்தி வருகையில், பல பெரியோர் களுடைய வேண்டுகோளினால் சிவபிரான்போல ஒரு சோழராசன் கோபங் கொண்டு சென்று பொருது அம்மதில்களை அழித்தனனென்பது, இப்பாட் டிற்குறித்த வரலாறு. இவன் இக்காரணத்தால் 'தூங்கெயிலெறிந்தசோழன்' எனப் பெயர் பெற்றான்; இவன், காவிரிப்பூம் பட்டினத்து அரசாண்டவன்; ("ஒன்னாருட்குந் துன்னருங்கடுந்திறல், தூங்கெயிலெறிந்தநின் னூங்கணோர்" என்ற புறநானூற்றையும், "வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோன், ஓங்கரணங் காத்த வுரவோன்கா ணம்மானை, ஓங்கரணங் காத்த வுரவோ னுயர்விசும்பில், தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை, சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை" என்ற சிலப்பதிகாரத்தையும், "தூங் கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்" என்ற மணிமேகலையையும், "தேங்கு தூங்கெயி லெறிந்த அவன்" என்ற கலிங்கத்துப்பரணியையும், "கூடார்தம், தூங்கு மெயி லெறிந்த சோழன்" என்ற விக்கிரம சோழனு லாவையும், "பொதுமடக, வாங்கெயில் நேமி வரையாக மண்ணாண்டு, தூங் கெயில் கொண்ட சுடர்வாளோன்" என்ற குலோத்துங்கசோழனுலாவையுங் காண்க.

எப்படிபட்டகாரியத்தையும் அது முடியும்படியானவிதமாய் ஆலோசி த்து அரிதென்று கருதாது முயன்றால் முடியுமென்பதற்கு இச்சரித்திரத்தை நிதர்சநமாகக் காட்டினார். கூரிய அம்பின்அடிக்குதையை நன்றாக இழுத்து அதனைத்தொடுத்தால் அதற்கு இலக்காய் அழியாத அரணில்லை யென்ற உப மானவாக்கியம், நன்குமுயன்றால்முடியாதகருமமில்லை என்ற உபமேயக்கருத் தை விளக்குதலால், பிறிதுமொழிதலணி.

தோள் பருத்திருத்தல், உத்தமபுருஷலக்ஷணம். இனி, வீங்கு தோள் - போரென்றால் பூரித்துவளருந் தோ ளெனினுமாம். - செம்பியன் - சைப்ய னென்னும் வடசொல்லின் சிதைவு; அச்சொல் - சிபியினது மரபின னெ

ன்று பொருள்படும். சிபிசக்கரவர்த்திபிறந்த சூரியகுலத்தில் தோன்றியமை பற்றி, சோழனுக்கு இப்பெயர். சீற்றம் - அம்விகுதிபெற்ற தொழிற்பெயர்; சீறு - பகுதி, ற் - விரித்தல்விகாரம். எயில் - மதில்; மதிற்சிறப்பையுடைய நகரத்துக்கு இங்கே இலக்கணை; உம்-உயர்வுசிறப்பு.அரண் - கோட்டை, மதிள், அவசம். செம்பியனுடைய சீற்றம் விறலையுடைய மதிலைத் தொலைத்தலால் என்றும் பொருள்கொள்ளலாம்; விறல் - வலிமை. (உஎ)

28.—(இ - ள்.) குடி பிறந்தார் - உயர்ந்தகுலத்திற் பிறந்தவர், கற்றது ஒன்று இன்றி விடினும் - தாம் படித்தது ஒன்றுமில்லை யாயினும், மற்று-அங்ஙனம் உயர்குடியிற் பிறவாமல், ஒன்று அறிவாரின் - ஒப்பற்ற கல்வியை அறிந்தவர்களைக் காட்டிலும், மிக்க மாண நல்லர்-மிக்க மாட்சிமையுண்டாகச் சிறந்தவராவர்; ஆல் - ஆதலால், பொற்ப உரைப்பான் புக வேண்டா - சிறந்த நீதிச்சொற்களை (அவர்க்கு யாரும்) சொல்லுதற்குச் செல்லவேண்டுவதில்லை [அவரிடத்து எல்லாமுறைமைகளும் இயல்பிலேயேஅமைந்திருக்கும்]; கொல்சேரி துன் ஊசி விற்பவர் இல் - கொல்லத்தெருவில் ஊசியை விற்கப்புகுபவர் இல்லை; (எ - று.)

நல்லறிவும் நற்குண நற்செய்கைகளும் உயர்குடிப்பிறந்தார்க்கு இயற்கையாயும், மற்றையோர்க்குச் செயற்கையாயும் உள்ளன வாதலால், அவ்வுயர்குடிப்பிறந்தார்க்குப் பிறர் யாதும்நீதிபோதனை செய்யவேண்டுவதில்லை; அங்ஙனம் எவரேனும் செய்யத்தொடங்கினால் அது, ஊசியைச் செய்யுஞ்சாதியராகிய கொல்லர்கள் வசிக்குமிடத்தில் பிறர் ஊசிவிற்கப் புக்காற்போல இன்றியமையாததன்றாதலோடு சிறிதும் மதிப்பில்லாததுமாம் என்பது கருத்து. எடுத்துக்காட்டுவமையணி. 'பொற்பவுரைப்பான் புகவேண்டா' என்றதை, நாலடியாரில் "யாதும், அறங்கூறவேண்டா அவற்கு" என்றாற்போலக் கொள்க.

கற்றது - வினையாலணையும்பெயர். உம் — இழிவுசிறப்பு. மற்றுஎன்னும் இடைச்சொல், வினைமாற்றுப்பொருளில் வந்தது. அறிவாரின், இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. மாண் - பண்படி. பொற்ப - பொலிவுணர்த்தும் பொற்பு என்னும் உரிச்சொல்லின்மேற் பிறந்த பலவின்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். உரைப்பான் - எதிர்காலவினையெச்சம்; பான் - காலங்காட்டும்விகுதி. கொல்லர் - கருமார்; கொல் - இரும்பையடித்து வேலைசெய்யுஞ் சாதி. சேரி-சேருமிடம். துன் ஊசி - தைத்தற்கு உரிய ஊசி; துன்னல்-தைத்தல். (உஅ)

29.—(இ - ள்.) ஒருவர்க்கு அல்லல் அடைந்தக்கால் - ஒருவர்க்குத்துன்பம்வந்தால், அவர்க்கு நல்ல கிளைகள் எனப்படுவார் - அவர்க்குச் சிறந்த உறவினர்களென்று சொல்லப்படுபவர்கள், நல்ல வினை மரபின் - (தாம்செய்யும்) நல்லதொழிலின்முறைமையால் [தக்க உபாயத்தால்], அதனை நீக்கும்அது - அத்துன்பத்தைத் தீர்க்கிற அச்செய்கை, மனை மருந்து ஆய மரம் - தம்வீட்டிலுள்ள மருந்தாய் உதவும் மரத்தோடு ஒக்கும்; (எ - று.)—மற்று - இரண்டிடத்தும் அசை. ஏ - ஈற்றசை.

தனது எல்லாவுறுப்பும் நோய்கட்கு மருந்தாகப்பெறும் வேம்புமுதலிய மரங்கள் கொள்ளுதற்குஅரிய இடத்தில் நிற்றலன்றி ஒருவருடைய வீட்டிலே நின்றால் அது அவர்க்கு வேண்டியபொழுதெல்லாம் எளிதில்உதவி நோய்தீர்த்துப் பயன்படுதல்போல, ஒருவர்க்குத் துன்பம்நேர்ந்தால் உள்ளன்புடைய உறவினர் அப்பொழுதே அவர்க்குப் பலவாற்றாலும் உதவி அத்துன்பத்தை உடனே தீர்த்து மிகப்பயன்படுவர் என்பதாம். காட்சியணி; நீக்குமது மருந்து போலும்' என்னாது, 'நீக்குமதுவே மருந்து' என உபமேயத்தை உபமானமாகவே கூறியமை காண்க.

மரபின், இன்-ஐந்தனுருபு, ஏது. 'மனைமர மாய மருந்து' என்றதை, திருக்குறளில் "மருந்தாகித் தப்பா மரத்தற்றால்" என்றதனோடு ஒப்பிடுக.

30.—(இ - ள்.) ஆற்றவும் கற்றார்-மிகவும் படித்தவர்களே, அறிவு உடையார் - அறிவுள்ளவராவர்: அஃது உடையார் - அக்கல்வியறிவுஉள்ளவர்களது புகழ், செல்லாத - போய்ப்பரவாத, நாடு - தேசம், நால் திசையும் இல்லை - நான்குதிக்குக்களிலும் இல்லையாம்: (ஆகவே), அ நாடு - அப்புகழ்சென்றநாடுகள் யாவும், வேறு நாடு ஆகா - (அவர்கட்கு) அயல்தேசங்களாகா; தமவே ஆம் - தமக்குஉரிய தேசங்களே யாம்; ஆயினால் -அவ்வாறு ஆனபின்பு [அங்ஙனமாதலால் என்றபடி], ஆறு உணா வேண்டுவது இல் - (எந்நாட்டிக்குச் செல்வதானாலும் அவர்கட்கு) வழியுணவு கையிற்கொண்டுபோகவேண்டுவதுஇல்லை.

நன்றாய்க்கற்றறிந்த புலவர்களது புகழ் எத்தேசத்தும் பரவுதலால், அவர்கள் எந்தத்தேசத்துக்குச் சென்றாலும் அங்குள்ளார் அக்கற்றோரை எதிர்கொண்டுவந்து உபசரித்துச் சிறப்புச்செய்வர் என்பது கருத்து. "கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாஞ் சிறப்பு" என்ற மூதுரையையும், "யாதானுநாடாமாலூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல்லாத வாறு" என்ற திருக்குறளையுங் காண்க. இங்ஙனம் பிறநாடுகளுந் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்துசெய்தற்கு ஏதுவாதலால், மிகச்சிறந்ததான கல்வியையே எப்பொழுதும் கற்கவேண்டு மென்பது குறிப்பிக்கப்பட்டது. இச்செய்யுளிலுள்ள வாக்கியங்களைப் படிப்படியாகத் தொடர்ச்சிப்பட வைத்தது, **ஒற்றைமணிமாலையணி**; வடநூலார் ஏகாவளியலங்காரம் என்பர்.

'உடையார்' என்ற சொல் இரண்டனுள், பின்னினது-அவர்புகழுக்கு ஆகுபெயர். 'அஃதுடையார் நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை' என்பதற்கு - 'அக்கல்வியாலாய அறிவினை யுடையார்க்கு நான்குதிசையின்கண்ணும் சொற்செல்லாத நாடில்லை' என்பது, பழையவுரை. தம - பலவின்பாற்குறிப்புவினையாலணையும் பெயர்; தாம் - பகுதி, முதல்குறுகிற்று, அ - விகுதி. ஏ - தேற்றம். வேறு+நாடு=வேற்றுநாடு; ஆறு+உணா=ஆற்றுணா: நெடிற்றொடர் அல்வழியிலும் வேற்றுமையிலும் றகரவொற்று இரட்டிற்று. உணா - உணவு என்பதன் விகாரம். ஆற்றுணா - வழிக்கு வேண்டிய உணவு என நான்கனுருபும்பயனுந்தொக்கதொகை; கட்டுச்சோறு; தோட்கோப்பு. (௩0)

31.—(இ - ள்.) எமக்கு துணை ஆவார் வேண்டும் என்று எண்ணி-(தனியராயுள்ள) நமக்கு (த்துன்பம்வந்தால் அதனைத் தீர்த்துஉதவுதற்கு) உற்ற துணையாகுபவர் வேண்டு மென்று கருதி, தமக்கு துணை ஆவார் தாம் தெரிதல் வேண்டா - தமக்குத் துணையாகுபவரைத் தாம் தேடுதல் வேண்டுவதில்லை:(ஏனெனில்,—)பிறர்க்கு பிறர் செய்வது ஒன்று உண்டோ - ஒருவர்க்கு மற்றொருவர் செய்வது ஒன்று உண்டோ? இல்லை——; தமக்கு மருத்துவர் தாம் - தமக்கு (நோய்தீர்க்கும்) வைத்தியராகுபவர் தாமே, (ஆதலால்.)

ஒவ்வொருவரும் தேகபோஷணத்துக்கு வேண்டிய உணவு முதலியன கொள்ளுதலில் தாம்ஜாக்கிரதையுடையராயிருந்தால்அவர்க்கு வியாதிநேராது: நேராதாகவே, "மருந்தென வேண்டாம் யாக்கைக்கு அருந்தியது, அற்றது போற்றி யுணின்" என்றபடி அவர்க்கு மருந்தும், அதனை யளிக்கும் வைத்தியருடைய உதவியும் வேண்டுவதில்லை; அப்படிப்பட்ட ஜாக்கிரதையுடையோர்க்கு எக்காரணத்தினாலாவது நோய் நேர்ந்தாலும் அதனை அவர் வைத்தியருதவியிலலாமல் தாம்செய்யும் பரிகாரத்தாலேயே தீர்த்துக் கொள்ளக்கூடும்; அன்றி, வைத்தியருதவியைக் கொள்வார்க்கும் அவர் சொன்னவழியில் நிற்றல், மருந்தின் துன்பம் பொறுத்தல், நோய்நிலையை உள்ளபடி யுணர்த்தல் முதலிய தம்முயற்சியில்லாமல் நோய் நீங்குதல் அரிது: ஆகவே, உலகத்திற் பலவாற்றாலும் தம்தமக்கு வைத்தியராகுபவர் அவரவர்தாமே; அதுபோலவே

தாம் ஜாக்கிரதையுடையரா யொழுகுவார்க்குத் துன்பம் நேராது ; ஒருகால் நேர்ந்தாலும் அவர் அதனைத் தமதுமுயற்சியால் நீக்கிக்கொள்ளக்கூடும் ; அங்ஙனம் நீக்கமாட்டாது பிறருதவியைக் கொள்வார்க்கும் தமதுஜாக்கிரதையில்லாவிடின் யாருதவியும் பாதுகாக்கமாட்டாது; ஆகவே, ஒவ்வொருவரும் தம்தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்ளுதற்கு உரியரே யன்றிப் பிறருதவியைத் தேடுதல் பயன்தருவதன்று என்பதாம். **எடுத்துக்காட்டுவமையணி.**

எமக்கு-இயல்புபற்றிவந்த தனித்தன்மைப்பன்மை. வேண்டும் என்பது-ஒருவகை வியங்கோள்வினைமுற்று. மருத்துவர் - மருந்து தருபவர் ; மருந்து - பகுதி, மென்றொடர்க்குற்றியலுகரம் வன்றொடர்க்குற்றியலுகரமாயிற்று; அர் - விகுதி ; குற்றியலுகரம் சிறுபான்மை உயிர்வரக் கெடாது வகரவுடம்படுமெய் பெற்றது. ஒவ்வொருவர்க்கும் மற்றவர் அன்னியரே யாதலால், 'பிறர்க்குப்பிறர்' என்றார்; 'உண்டோ'என்பதை அடுத்து 'இல்லை' என மீளவுங் கூறினது, வற்புறுத்துதற்கு. துணையாவார்த்தாம் - "இயல்பின் விகாரம்."

31.—(இ - ள்.) மரம் பயில் சோலை மலை நாட - மரங்கள் இடைவிடாது நெருங்கிய சோலைகளையுடைய மலையையுடைய நாட்டையுடைய அரசனே!—பந்து நாடும் கால் - செவ்வையாக ஆராயுமிடத்து, நிரந்து வழிவந்த நீசருள் எல்லாம் - இடைவிடாது பரம்பரையாகப் பிறந்துவந்த கீழ்மக்களெல்லாருள்ளும், பண்பு உடையார் ஒருவர் தோன்றார் - நற்குணமுடையவர் ஒருவரும் காணப்படார் : (எதுபோலவெனின்,——) குரங்கினுள் நல் முகத்தஎன்றும இல் - (விகாரமுகமுள்ள)குரங்கினத்தில்அழகிய முகமுள்ளவை எககாலத்தும் இல்லை, (அதுபோல) ; (எ - று.)

தம்தாதை மூதாதை முதலாக வம்சபரம்பரையாய்க் கீழ்மக்களாகவுள்ளவர்களில் எவ்வளவு தேடிப்பார்த்தாலும் நன்மகனொருவனேனும் உளனாகமாட்டான் எனகிற உபமேயத்திற்கு, முகவிகாரமுள்ள குரங்கின்சாதியில் அழகிய முகமுடையது இல்லை என்ற திருஷ்டாந்தம் காட்டினார் ; **எடுத்துக்காட்டுவமையணி.** சோலைமலை - பாண்டிய நாட்டிலுள்ள தொருமலையுமாம் ; அது, திருமாலிருஞ்சோலைமலை யென வழங்கும். நீசர் - வடசொல். பயிலல்-அடர்தல். முகத்த - பலவின்பாற் குறிப்புவினையாலணையும் பெயர் ; அத்து - சாரியை. நாடுங்கால் — எதிர்காலப்பெயரெச்சத்தொடர் ; கால் - காலமென்பதன் விகாரம். (கஉ)

33.—(இ — ள்.) கட்டு அலர் - (அரும்புகள்) முறுக்கவிழ்ந்து (இதழ்) மலரப்பெற்ற, தார் - பூமாலையைத் தரித்த, மார்ப-மார்பையுடைய அரசனே! ஒருவர் முட்டு இன்று உடைய பொழுதின் கண் - ஒருவர் குறையின்றிச் செல்வமுடையரா யிருந்தகாலத்தில், அட்டிற்று தின்பவர்-(அவரை யடுத்து அவர் வீட்டிற்) சமைத்த உணவை உண்டு வாழ்பவர், ஆயிரவர் ஆப - மிகப்பலராவர் ; கலி ஊழ் காலத்து - இக்கலியுகத்திலே, கெட்டார்க்கு நட்டாரோ இல்- செல்வமொழிந்தவர்களுக்குத் துணையாய் உதவும்சினேகிதரோ ஒருவரும் இல்லை ; (எ - று.)

ஒருவர் செல்வமுடையரானபோது அவர்க்குப் பலபேர் நண்பராய் வந்து சேர்ந்து அவர்பொருளை உண்டுவாழ்ந்தாலும் அவர்க்கு வறுமைநேர்ந்தால் அக்காலத்தில் நண்பரென்று நின்று உதவுவார் ஒருவருமில்லையாகின்றனர்; இது, கலியுகதருமமென வெறுத்துக் கூறியவாறு. "உண்டாய போழ்திலுடைந்துழிக் காகம்போல், தொண்டாயிரவர் தொகுபவே - வண்டாய்த், திரிதருங் காலத்துத் தீதிலிரோ வென்பார், ஒருவரு மிவ்வுலகத்தில்" என்றார் நாலடியாரிலும்.

இன்றி எனனும் எதிர்மறைக்குறிப் வினையெச்சம், இன்று என ஈறு திரிந்தது ; [நன் - உயிர் - உக.] இது, 'உடைய' என்னுங் குறிப்புப்பெய

ரெச்சத்தைக் கொண்டு முடியும். அட்டிற்று - ஒன்றன்பால் இறந்தகால வினையாலணையும்பெயர் ; அடு என்பதன் விகாரமான அட்டு-பகுதி, இன்—கா லவிடைநிலை, று - பாலுணர்த்தும் விகுதி. உண்பவர் என்ற பொருளில் தின் பவர் என வந்தது, பொதுப்பொருளின்மேல்நின்ற சிறப்புவினையாம். ஆப: பலர்பால் முற்று : ஆ - பகுதி ; ப - விகுதி, எதிர்காலங்காட்டிற்று. ஏ - தேற் றம். நட்டாரோ, ஓ - தெரிநிலை : உயர்வுசிறப்புமாம். அட்டில் து தின் பவர் என்று பதம்பிரித்து, அட்டில் - அவருடைய சமையல்வீட்டிலுள்ள, து-உணவை, தின்பவர் என்று உரைப்பாரும் உளர். ‘உடையார் இல்லார்’ என்னும் உலகவழக்குப்பற்றி, செல்வமுள்ளகாலம் ‘உடையபொழுது’ எனப் பட்டது. கலியூழிக்காலம் - கலிபுருஷனுடைய அதிகாரம் நடக்குங்காலம் ; செ ய்ந்நன்றிமறத்தல் முதலிய பாவச்செயல்களுக்கு இடமான காலம். (௩௩)

34.—(இ - ள்.) ஆற்றும்-கல்விகற்றற்கு (ஏற்ற) வன்மையுள்ள, இள மைக்கண் - இளமைப்பருவத்தில், கற்கலான்-கல்விகல்லாது கழித்த ஒருவன், மூப்பின்கண் - (கல்விகற்றற்குஏற்ற வன்மையில்லாத) முதுமைப்பருவத்தில், போற்றும் - (கல்வியை) ஆதரித்துக் கற்றுவல்லனுவன், எனவும் புணரு மோ - என்று நினைக்கவும் சொல்லவுங் கூடுமோ ? [கூடாது என்றபடி]; சுரம் ஆற்ற போக்கி - (பிரயாணிகளை) மிகவும் வழியைக் கடந்துபோக விட்டு, உல்கு கொண்டார் இல்லை-(அவரிடத்துப்) பொருட்சுங்கம் வாங்கினவர் இல் லை ; மரம் போக்கி கூலி கொண்டார் இல்லை - மரக்கலத்தினின்று (பிரயாணி களைக்) கரையேறிப்போகவிட்டு (அவரிடத்து) க்கூலிவாங்கினவரும் இல்லை.

பண்டங்கொண்டாயினும் வண்டிகொண்டாயினும் வழிச்செல்பவர் சுங் கம்வாங்குமிடத்தைக்கடந்து செல்லுமுன்னமே சுங்கக்காரர் அவரிடத்துச் சுங்கப்பொருளை வாங்கிவிடுதல் எளிதே யன்றி அவரை அப்பால் வெகுதூரம் போகவிட்டபின்பு அவரிடத்துச் சுங்கம்வாங்குதல் அரிதாம் ; ஓடமேறிச்செ ல்பவர் ஓடத்தினின்று இறங்குதற்கு முன்னமே ஓடக்காரர் அவரிடத்துக் கூலிவாங்குதல் எளிதேயன்றி அவரை ஓடத்தினின்று இறங்கிக் கரையேறிப் போகவிட்டபின்பு அவரிடத்துக் கூலிவாங்குதல் அரிதாம் : அவைபோலவே, “இளமையிற் கல்”, “இளமைப்பருவத்துக்கல்லாமை குற்றம்”என்றபடி கல் விகற்றற்கு ஏற்றகாலமான இளமைப்பிராயத்திற் கற்றல் எளிதேயன்றி அப் பருவத்தைக் கடந்துபோகவிட்டு முதுமையில் கற்றுத் தேர்தல் அரிதாம் என்பது கருத்து. எடுத்துக்காட்டுவமையணி. முற்பாதியிற் கூறிய உப மேயத்துக்குப் பிற்பாதியில் இரண்டுதிருஷ்டாந்தங் கூறினார்.

கற்கலான்—கல் - பகுதி, கு - சாரியை, அல் - எதிர்மறையிடைநிலை, ஆன் - விகுதி ; இனி, எதிர்மறையாகாரம் புணர்ந்துகெட்ட தெனக்கொண்டு, ‘கில்’ என்பதுபோல ‘கல்’ என்பதையும் ஆற்றலுணர்த்துவதோ ரிடைநிலை யென்றலும் ஒன்று. மூப்பு-மூக்குங்காலம் ; ‘பு’ விகுதிபெற்ற தொழிலாகுபெ யர் : மூ-பகுதி. போற்றுதல் - பேணுதல். போற்றும் - செய்யுமென் முற்று ஆ ண்பாலுக்குவந்தது. எனஎன்ற செயவெனெச்சம் - தொழிற்பெயர்த் தன்மைப் பட்டு, ‘புணரும்’ என்ற வினைமுற்றுக்கு எழுவாயாய் நின்றது : அன்றி, எனப் புணரும் என்பதை ஒருசொல்தன்மைப்பட்ட தெனக்கொண்டு, என்று சொ ல்லத்தகுவனோ என்று உரைத்து, ‘கற்கலான்’ என்பதை எழுவாயாக்கினும் அமையும். உம் - இழிவுசிறப்பு. ஓ - எதிர்மறை.சுரம்-வழி. போக்குஎன்ற பிற வினைப்பகுதியில், போ - தன்வினைப்பகுதி யெனக் கொண்டால் கு-பிறவினை விகுதியென்றும், போகு - தன்வினைப்பகுதி யெனக் கொண்டால் அப்பகுதி இடையொற்று இரட்டிப்பிறவினைகாட்டிற்று என்றுங் கொள்ளலாம். இதன் தன்வினை - போகுஎன்றும், போய் என்றும் நிற்கும். உல்கு - தீர்வைப்பொ ருள் ; சுல்கம் என்ற வடசொல்லின் விகாரம். மரக்கலமென்பது பலவிடங்களி

ல் 'கலம்' என நிற்றல்போல, இங்கு 'மரம்'எனநின்றது; "மரத்தார் இம் மா ணுக்குடிப்பிறந்தார்" என நாலடியாரிலும் இங்ஙனம் காண்க: இவ்வாறு ஒரு பெயரின்ஒருபகுதியால் அப்பெயர் முழுவதையுங் குறித்தல், கவிமரபு.(இதனை வடநூலார்'நாமைகதேசே நாமக்ரஹணம்' என்பர். சத்தியபாமையை, ஸத்யா என்றும், பாமா என்றும் வழங்குவர்.) இனி, மரம் என்பதை அதனாலாகிய தோணிக்குக் கருவியாகுபெய ரெனக் கொள்ளலுமாம். (௩௪)

35.—(இ - ள்.) உணற்கு இனிய - பருகுதற்கு இனியதான, இன் நீர்- நல்லநீர், பிறிது உழி இல் - வேறோரிடத்துமில்லை, என்னும் - என்று எண் ணுகிற, கிணறு அகத்து தேரை போல் - கிணற்றினுள்ளே வாழுந் தவளைபோ ல, ஆகார் - ஆகாதவராய், கணக்கினை - ஒருசாஸ்திரத்தையே, முற்ற - முடி யுமளவும், பகலும் - நாள்தோறும், முனியாது இனிது ஓதி கற்றலின் - வெ றுப்புக்கொள்ளாமல் விரும்பித் தாமே படித்து அறிதலினும், கேட்டலே நன் று - (பலசாஸ்திரப்பொருள்களையுங் கற்றோரிடத்துக்) கேட்டுணர்தலே சிறந் ததாம்; (எ-று.)

கற்றறிந்தோரது உதவியின்றி எல்லாநூல்களையுந் தாமாகவே கற்பது கூ டாமையாலும், சிறிதளவுகற்பினும் அது ஐயந்திரிபுகளாற் பழுதுபடுதலாலும், அவ்வாறு ஒருவர் தாமே வருந்தி ஒன்றைக் கற்றுஉணர்தலினும் பலசாஸ்திர ங்களை யறிந்தவரிடம் கேட்டு உணர்தல் சிறப்புடையதெனக் கேள்வியின்சி றப்புக் கூறப்பட்டது. 'கிணற்றுத்தவளை நாட்டுவள மறியாது' என்றபடி ஒரு கிணற்றிலுள்ள தவளை தான்வேறொன்றையுமுணராமையால் தான்கண்ட அக்கிணற்றுநீரை யொழிய வேறு அதனினுஞ்சிறந்த தண்ணீர் உலகத்திலில் லையென்றுகருதி அந்நீரையே குடித்துக் காலத்தைக் கழிப்பதுபோல, பற்பல விஷயங்களையுங் கற்றறிந்தோரிடங் கேட்டறியாது தாமே சிறிதளவுகற்ற ஒரு வர் பிறிதொன்றுமுணராமைபற்றி ஒருநூற்குத் தாம்அறிந்த பொருளையன் றிப் பிறிதுசிறந்தபொருளில்லையென்றுகருதி அதனையேயுணர்ந்து காலங்கழி யாது, கிணற்றுநீரினுஞ்சிறந்த நன்னீர்நதிகள் பலவுள்ளனபோலத் தாமுணர் ந்தபொருளினுஞ்சிறந்த நுண்பொருள்கள் பல உலகத்தில் நிறைந்திருக்குமாத லால் அவைபலவற்றையும் கற்றோரிடத்துக் கேட்டுணர்தல் சிறப்புடையதெ ன்றதாயிற்று.

உணற்கு - எதிர்காலவினையெச்சம்; கு-காலங்காட்டும் விகுதி, அல்-சாரி யை; இதனைத்தொழிற்பெயரின்மேல் வந்த நான்காம்வேற்றுமை யென்பாரு முளர். 'இந்நீர்'என்றுபாடமோதி, இத்தன்மையநீர் என்று உரைத்தல் சிறக் கும்.கணக்கு என்பது - நூல் என்னும் பொருளதாதலை "கணக்காயர்," "சமய க்கணக்கர்" என்ற விடங்களிலுங் காண்க. இனி, கணக்கு என்பதற்கு - தர்க்க சாஸ்திரம், அல்லது கணித சாஸ்திரம் என்று பொருள்கொண்டு, இம்மைக் கேயுதவுங் கருவிநூல்களையே முக்கியமாகக் கருதி வெறுப்பின்றி விருப்பத் தோடு எப்பொழுதும் கற்றலினும் முத்திதரும் உறுதிநூற்பொருள்களை நல் லாசிரியரிடத்து உபதேசம் பெறுதலே சிறந்ததென்று பொருள்கூறுவதும் பொருந்தும். பகலும், உம்மை - தொறுப்பொருளது. கற்றலின், ஐந்தனு ருபு - எல்லைப்பொருளது. ஏ - பிரிநிலையோடு தேற்றம். நன்று - பண்டுடி யாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. பிறிது—பிற - இடைச்சொற்பகு தி, இ - சாரியை, து- ஒன்றன்பால்விகுதி, பகுதியீற்றகரம் தொக்கது - விகா ரம். முற்ற ஓதியென இயையும். (௩௫)

36.—(இ - ள்.) மது மயங்கு - தேன் நிறைந்த, பூ - மலர்களைச்சூடிய, கோதை - கூந்தலையும், மாண் இழாய் - மாட்சிமைப்பட்ட ஆபரணங்களை யும் உடையவளே!—தெரியின் - ஆலோசிக்குமிடத்து,—சிறியவர் எய்திய செல்வத்தின் - கீழ்மக்கள் பெற்ற செல்வத்தைக்காட்டிலும், பெரியவர் நல்

குரவு - மேன்மக்கள் (பெற்றுள்ள) வறுமை, மாண நன்றே - மிகவும் நல்லதேயாம் [உலகத்து மிகப்பயன்படு மென்றபடி]; (இதற்குத் திருஷ்டாந்தம்), மோரின் - (புதிய) மோர்போல, முது நெய் - பழகிய நெய், தீது ஆதலோ இல் - தீயதாவது இல்லை [நல்லதேயாம்]; (எ - று.)——தீது ஆதலோ இல் - பயன்படாமையுடையதாகுதலோ இல்லை; உலகத்து மிகப்பயன்படு மென்றபடி.

நெய் எப்படியிருந்தாலும் தேகத்துக்கு ஆரோக்கியகர மென்பதும், மோர் அவ்வாறு ஆரோக்கியகரமன் றென்பதும் வைத்தியர் துணிபு. உணவின் பண்டமும் தயிரின்பரிணாமமு மாகிற மோர், நெய் என்ற இரண்டனுள் நெய் இயல்பிற் சிறந்த தாதலால், அது பழகிப்போனாலும் அதற்கு அச்சிறப்புக் குறைவதில்லை: மோர் இயல்பில் அங்ஙனஞ்சிறப்புடையதன் றாதலால், அது புதிதாயிருக்கையிலும் அதற்கு அவ்வகைச்சிறப்பு உண்டாவதில்லை; அதுபோலவே, உலகத்திலுள்ள கீழ்மக்கள் மேன்மக்கள் என்னும் இருவகை மனிதரில் மேன்மக்கள் இயல்பிற் சிறந்தவராதலால், அவர் வறியரானாலும் அவர்க்கு அச்சிறப்புக் குறைவதில்லை: கீழ்மக்கள் அங்ஙனம் இயல்பிற் சிறந்தவரல்ல ராதலால், அவர்க்குச் செல்வமுண்டாயிருக்கையிலும் அவ்வகைச் சிறப்பு உண்டாவதில்லை யென்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. மோரின் புதுமையினும் நெய்யின் பழமை மேம்பட்டதாதல் போலக் கீழ்மக்களுடைய செல்வத்தினும் மேன்மக்களுடைய வறுமை மேம்பட்டதாகுமென உபமான உபமேயப்பொருத்தங் காண்க. போஜனப்பிரியராயுள்ளவர் நெய்யைவிரும்புவதும், மோரை விரும்பாமையும் உலகவியல்பு: ஆகவே, நெய் கொஞ்சமாயிருந்தாலும் பயன்படுவதுபோல, மோர் அதிகமாயிருந்தாலும் பயன்படுவதில்லை; அதனால், அவற்றிற்கு முறையே மதிப்பிற் சிறப்பும் சிறப்பின்மையும் அமைகின்றன. மேன்மைக்குணமுள்ள பெரியோர் ஏழைமை யடைந்தாலும் ஜனங்களுக்குப் பிரியமானவராய் நடந்து இயன்றமட்டும் உதவி நன்குமதிப்பையடைகின்றனர்; கீழ்மைக்குணமுள்ள சிறியோர் செல்வரானாலும் பலர்க்கும் உதவுதலும் ஜனங்களுக்குப்பிரியமுள்ளவராய் நடத்தலும் நன்குமதிப்பையடைதலு மில்லை: தீயவற்றையே செய்வர் என்க. பெரியோர் வறியரான போது உதவிச் சிறப்படைகிறஅவ்வளவு சிறியோர் செல்வரானபோதும் உதவிச் சிறப்படையா ரென்பதை "செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன, செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்," "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினுங், கள்ளிமேற் கைநீட்டார் சூடும்பூ அன்மையால், செல்வம் பெரிதுடைய ராயினுங் கீழ்களை, நள்ளா ரறிவுடையார்" என்ற நாலடியாரினாலும் அறிக.

'தெரியின்' என்றதை மத்திமதீபமாக உபமேயவாக்கியம் உபமானவாக்கியம் என்னும் இரண்டிலுங் கூட்டலாம். சிறியவர் - அற்பர். பெரியவர் - மகான்கள். 'எய்திய' என்ற இறந்தகாலப்பெயரெச்சத்தில், எய்து - பகுதி, இன் என்ற இடைநிலை ஈறுதொக்கது, விகாரம். செல்வத்தின, இன் - ஐந்தனுருபு, எல்லை. மாண - மாட்சியென்னும் பண்பி னடியாகப் பிறந்த வினையெச்சம். மாண நன்றே யென இயையும். ஏ - தேற்றம். 'மாண்ட பெரியவர்' என்ற பாடம், 'மாட்சிமைப்பட்ட பெரியோர்' என்ற பழையஉரைக்குச் சேரும். நல்குரவு - தொழிற்பெயர்; நல்கூர் - பகுதி, அது குறுகினது விகாரம், அ - சாரியை, வு - விகுதி; உ - விகுதி யெனக் கொண்டால், வகரம் - உடம்படுமெய் என்க. மாணிழை, முதுநெய் - பண்புத்தொகைகள். 'மதுமயங்குபூங்கோதை மாணிழை' என்ற அன்மொழித்தொகைப்பெயர் ஈறுதிரிந்து விளியேற்றது. மோரின், இன் - ஐந்தனுருபு, ஒப்பு. தீதாதலோஎன்ற ஓகாரம் - தெரிநிலை. மது - வடசொல். செல்வம் - (எவரிடத்தும் நிலைத்திராமல்

நீங்கிச்) செல்லுந்தன்மைய தென்று பொருள்படுங் காரணக்குறி ; செல் - பகுதி, அம் - விகுதி, வ் - பெயரிடைநிலை. பெரியவர்வறுமை நன்று என்ற தனால், பெரியவர் செல்வம் நன்றென்பது கூறாமலே அமையும் ; அதனை, நெய்யின்முதுமை தீதாதலில்லை என்றதனால் நெய்யின்புதுமை நன்றாமென் பது அமைதல்போலக் கொள்க. நல்குரவும் நன்று என இழிவுசிறப்பு உம் மைவிரித்து அவ்வும்மையை முதுநெய்யுந் தீதாதலில்லையென உபமானத்தி லுங் கூட்டினும் இக்கருத்து நன்குவிளங்கும். அப்பொழுது, மோரின் என் பதற்கு - மோரைக்காட்டிலும் என்றும் உரைக்கலாம். (௩௬)

37.—(இ - ள்.) கண் பாட்ட - (மகளிரது) கண்களின் தன்மையாயுள்ள, பூ - கருங்குவளைமலர்களையுடைய, கழி - கழிகளையும், கானல் - கடற் கரைச்சோலைகளையுமுடைய, அம் - அழகிய, தண் - குளிர்ந்த, சேர்ப்ப - நெய்தல்நிலத்தையுடைய அரசனே!——மேலாயார் - மேன்மைக்குணமுள்ளவர், வல் பாட்டவர் பகை கொள்ளினும் - வலியதன்மையையுடையவரோடு பகைமைகொள்வதானாலும், (கொள்ளலாம்) ; புல் பாட்டவர் பகை கோடல் - எளியதன்மையையுடையவரோடு பகைமைகொள்ளுதல், பயம் இன்றே - (புகழாகிய) பயன் இல்லாததேயாம் ; வெள் பாட்டம் வெள்ளம் தரும் - வெள்ளைமேகத்தின்வரவு நீர்ப்பெருக்கைத் தருமோ ? [தராது என்றபடி].

பாட்டம் - மேகம்திரண்டெழுதல் ; இது இப்பொருளதாதலை 'ஒருபாட்டம் மழைபொழிந்தது'என்னும்வழக்கினாலும் உணர்க. வெண்பாட்டமாவது- நீரைக் கருக்கொள்ளாத வெண்ணிறமான மேகத்தின் எழுச்சி. நீர்கொண்ட கார்மேகத்தின் எழுச்சியாயின் மழைபொழிந்து வெள்ளத்தைத்தரவல்லதாம். நீர்கொள்ளாத வெண்மேகத்தின் எழுச்சி அங்ஙனம் மழைபெய்து வெள்ளந் தரவல்ல தன்றன்றே ? அதுபோலவே, பெரியோர் பிறரோடு பகைமைகொண்டு பொருது தம் வலிமையையும் வெற்றியையும் நிலைநாட்டக்கருதியவிடத்துத் தம்மோடொத்த வலியவரோடாயினும் தம்மினும்மேம்பட்ட வலியவரோடாயினும் பகைமைகொண்டால் அது பெருமைக்குக்காரணமாம்: அங்ஙனமன்றி, தம்மினும்எளியவரோடு பகைமைகொள்வாராயின் அது புகழ்தராது என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. 'வலியோரோடும் பகைகொள்ளலாகாது' என்னும் பொதுமொழியைக் கருதி,'கொள்ளினும்'என்றஉம்மைகொடுத்தார்.

பாட்டவர் - பாடு என்னும் பகுதியின்மேற் பிறந்த பலர்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்; பகுதி நெடிற்றொடர்க்குற்றியலுகரம் டகரவொற்று இரட்டிற்று ; அ - சாரியை, அர் - விகுதி, பற்றமை - சந்தி. மேல்ஆயார் - மேலானவர்; ய் - இறந்தகாலஇடைநிலை. கோடல் - தொழிற்பெயர்; கொள்- பகுதி, தல் - விகுதி, பகுதிமுதல்நீண்டது - விகாரம், தகரம் டகரமானவிடத்து ளகரம் கெட்டது - சந்தி. ஏ - தேற்றம். பாட்ட - பாடு என்பதன்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். தரும்=தருமோ ? இங்கு, எதிர்மறைப்பொருளதாகிய ஓகாரத்தை வருவித்துமுடித்தது, இசையெச்சம். இசையெச்சத்தை வடநூலார் 'காகு' என்பர் : அது சொல்லுங்கால் முகவிகாரமாவது ஒலிவிகாரமாவது தோன்ற நிற்கும் ; இங்கே 'தரும்'என்பதை வினாப்பொருள்தோன்ற ஒலிவேறுபடுத்தி உச்சரித்தல்வேண்டும். கொள்ளின் - எதிர்காலவினையெச்சம். 'கொள்ளலாம்' என்ற வினைமுற்று, அவாய்நிலையால் வருவித்துமுடிக்கப் பட்டது. (௩௭)

38.—(இ - ள்.) அணி மலை நாட - அழகிய மலைகளையுடைய நாட்டையுடைய அரசனே !——இணர் ஓங்கி வந்தாரை - தொடர்ச்சியாக மேம்பட்டு வந்தவர்களை, என் உற்றக்கண்ணும் - (அவர்கள்) எவ்வகைத்துன்பத்தையடைந்தாலும், உணர்பவர் - அறிவுடையவர், அஃதே உணர்ப - அவ்வாறே [உள்ளபடியே] அறிந்து நன்குமதிப்பார்கள்;(எதுபோலவெனின்—), அளறு

ஆடிக்கண்ணும் - சேறு மேல்மூடியிருந்தாலும், உணர்வார்க்கு - அறிந்து மதிக்கவல்லவர்க்கு, மணி மணி ஆகிவிடும் - சிறந்த இரத்தினம் அவ்வகை இரத்தினமாகவே தோன்றும், (அதுபோல) ; (எ - று.)

சிறந்த இரத்தினத்தின்மேல் எவ்வளவு மாசு படிந்திருந்தாலும் அவ்விரத்தினத்தின் இயல்பை உள்ளபடி உணர்ந்து நன்குமதிக்குந்திறம் இரத்தின பரீக்ஷையில் வல்லவர்க்கு இருத்தல்போல, பரம்பரையாகச்சிறந்துவந்தவர் மிக்கதுன்பத்தையடைந்து எவ்வளவுகீழானநிலையில் இருந்தாலும் அவர்களுடையபெருமையை உள்ளபடியுணர்ந்து நன்குமதிக்குந்திறம் அறிவுடையார்க்கு உண்டு என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. "மாசு படினும் மணி தஞ்சீர்குன்றாவாம்" என்றபடி மாசுபடிந்தாலுந் தனதுபெருமைகுன்றாமை சிறந்தசாதியிரத்தினத்துக்கு இயல்பாதல்போல, எவ்வளவுதுன்பம் நேர்ந்தாலும் தமதுமேன்மைநிலை குறையாமை உயர்குடிப்பிறந்த மேன்மக்கட்கு இயல்பா மென்பது, இங்கு விளங்கும்.

இணர் - பூங்கொத்து ; இங்கே, இலக்கணையாய், தொடர்ச்சியுடைமையென்னும்பொருளில் வந்தது. உற்றக்கண் - எதிர்காலவினையெச்சம் ; உறு - பகுதி, கண் - காலங்காட்டும் விகுதி, பகுதியிடைறகரவொற்று இரட்டியது - விரித்தல்விகாரம், அ-சாரியை, மற்றவை - சந்தி. ஆடிக்கண் - ஆடியக்கண் என்பதன் தொகுத்தல்விகாரம் ; இதில், இ அ-சாரியைகள். உம் இரண்டும் - இழிவுசிறப்பு. இரண்டாம்அடியில், ஆய்தம் மெய்போல்ஒலித்தது. உணர்ப - பலர்பாலெதிர்காலமுற்று ; ப-பாலோடு காலத்தையும் உணர்த்தும் விகுதி. 'ஆகிவிடும்' என்பதில், 'விடு' என்பது - தேற்றப்பொருளை உணர்த்திற்று.

39.—(இ - ள்.) களிகள் போல் - கள்ளைக்குடித்து அதன்களிமயக்கத்தால் உடம்புஅசைகிறவர்கள்போல, நாவாய் தூங்கும் - மரக்கலங்கள் அசையப்பெற்ற, கடல் சேர்ப்ப — கடல்துறையையுடைய அரசனே !——கோவாத சொல்லும் - பொருந்தாதவற்றைச் சொல்லுகிற, குணன் இலா மாக்களை - நற்குணமில்லாத மனிதர்களை, நா வாய் அடக்கல் - (அங்ஙனம்பொருத்தமின்றிப்பேசப்பழகிய) நாவையுடைய வாயை யடக்குதல், அரிது ஆகும் - (பிறர்க்கு) இயலாததாம் ;(எதுபோல வெனின்—), வளி வாங்கி தோட்கு எறிவாரோ இல் - காற்றைப் பிடித்துத் (தம்முடைய)தோள்களின்மேற் கொண்டு தரிக்க வல்லவர் இல்லை ; (அதுபோல) ; (எ - று.)— 'வளிதோட் கிடுவாரோ வில்' என்ற பாடமே, 'காற்றை வாங்கித் தம்முடைய தோண்மேலே இடவல்லார் இல்லை' என்ற பழையவுரைக்குச் சேரும்.

இன்ன சமயத்தில் இன்ன இடத்தில் இன்னபடி அடிப்பது என்ற ஒரு வகை நியமம் இல்லாமல் தான் போனபடியெல்லாம் வீசுந் தன்மையதான காற்றை அங்ஙனம வீசாதபடி பிடித்துக்கட்டித் தமது தோளின்மேல் இட்டு வைத்தல் எத்துணைவல்லார்க்கும் இயலாதது போல, மனம்போனபடியெல்லாம் பேசுந்தன்மையுள்ள துர்க்குணமுடைய அவிவேகிகளை அங்ஙனம் பேசாதபடி வாயடக்குதல் யார்க்கும் இயலாது என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. களிகள்-கள்ளுண்டு மயங்கியவர். 'நாவாய் களிறுகள்போல் தூங்கும்' என்று பாடமோதி, மரக்கலங்கள் மதயானைகள்போல அசையும் என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. வெளியூர்ச் சரக்குகள் வந்துசேர்தற்கும் உள்ளூர்ச் சரக்குகள் வெளியூர்கட்குச் செல்லுதற்கும் உபயோகமாகக் கப்பல்கள் தங்குந் துறைமுகத்தையுடையானெனநகரச்சிறப்புக்கூறியவாறு;இதனால், அந்நகரத்தில் வேண்டும் பண்டங்கட்குக்குறைவில்லை யென்பது விளங்கும்.

கோவாத - முறைபிறழ்வான விஷயங்கள் ; எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும்பெயர் ; கோ - பகுதி ; கோததல் — தொடர்ச்சியுடைமை; ஆ-எதிர்மறை இடைநிலை, த்-எழுத்துப்பேறு, அ - விகுதி, வகரமெய்-சந்தி.

குணன் - குணம் என்பதன் இறுதிப்போலி. இலா - தொகுத்தல்; இல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரொச்சம்; இதில், இல் என்ற பகுதியே எதிர்மறை காட்டியதனால், ஆ-சாரியை. 'மக்கள்' என்னாது 'மாக்கள்' என்றதனால், அவர்களுடைய பகுத்தறிவின்மை விளங்கும். மக்கள் - ஐம்பொறியுணர்வையேயன்றி மனமென்பதோரறிவையும் உடன்உடையார்; மாக்கள்-மனவுணர்ச்சியில்லாமல் ஐம்பொறி யறிவுமாத்திரத்தையேயுடைய ஒருசார் விலங்குபோன்ற மனிதர்; இவ்வேறுபாடு "மாவும் மாக்களும் ஐயறிவின வே," "மக்கள் தாமே ஆறறிவுயிரே" என்ற தொல்காப்பியச் சூத்திரங்களைக்கொண்டு அறியத்தக்கது. 'குணனிலாமாக்கள்' என்றது, நற்குணமில்லாதவர் விலங்கின் தன்மையர் என்னும் இழிவு தோன்றற்கு. இனி, குணன் இல் ஆமாக்களை என்று பிரித்து, நற்குணமில்லாத காட்டுப்பசுப்போன்ற கொடிய அவிவேகிகளை யெனினும் அமையும்; ஆமா - காட்டுப்பசு. மாக்களை வாயடக்கல் - இரண்டு செயப்படுபொருள்வந்த வினை; உருபுமயக்கமாக, மாக்களுடைய வாயை யடக்குதல் என்று கருத்துக்கொள்க. 'நாவாய்' என்பது-கப்பலை யுணர்த்தும்போது வடமொழிச சிதைவாகிய ஒருமொழியும், நாவையுடைய வாய் என்னும் பொருளில் இரண்டனுருபும் பயனுந் தொக்க தம்ழ்த் தொடர்மொழியுமாம்; இது, பொதுமொழிக்கு உதாரணமாகத்தக்கது. வாய்ப் பறையாகவும் நாக் கடிப்பாகவும் பேசப்படுதலால், நாவாயெனப்பட்டது. தூங்குதல் - அசைதலாதலை "தூங்குங் களிறோ துயருறூ" என்றவிடத்துங் காண்க. 'வாங்கி வளி தோட்கு எறிவாரோ வில்' என்பது, காற்றைப் பிடித்துக் கைகளால் அடிக்கவல்லவர் இல்லை யென்றும் பொருள்படும். 'வாங்கி வளி தோட்கிடுவாரோ வில்' என்ற பாடத்துக்கு - வாளியென்னுங் காதணியை வாங்கித் தோளுக்கு இடுபவர் எவரு மில்லையென்று பொருளுரைத்து, இயலாமையை விளக்கும் உவமை யாக்குவாரு முளர்; அவவுரைக்கு, வளி-குறுக்கல்விகாரம். தோட்கு=தோளில்: உருபுமயக்கம். எறிவாரோ, ஓ-தெரிநிலை. 'நாவாயடக்கல்' என்பதற்கு - 'நாவினிடத்தை யடக்குதல்' என்பது பழைய வுரை. (கக)

40.—(இ - ள்.) கிளர் - விளங்குகிற, மணி - இரத்தினங்களையுடைய, நீடு - உயர்ந்த,கல் வெற்ப - கல்மயமான மலைகளையுடைய அரசனே!—நாடி - ஆராய்ந்து, நமர் என்று - நம்முடையவர் என்றுகொண்டு (தம்மை) அபிமானித்து, நன்கு புரந்தாரை - நன்றாக (த்தம்மை) ப்பாதுகாத்துவருகிறவர்களுக்கு, பிறரோடு கேடு சூழ்தல் - (நன்றிகெட்டவர் சிலர்) அயலாரோடு (சேர்ந்து) வஞ்சனையாகத் தீங்குசெய்யத்தொடங்குதல்,தாம்இருந்த கோடு நினைப்பு இன்றி குறைத்துவிடல் - தாம் ஏறியிருக்கிற மரக்கிளையை ஆலோசனையில்லாமல் தாமே வெட்டிவிடுதலோடு ஒக்கும்; (எ - று.)

ஒருவன் தான் ஒருமரக்கிளையின்மீது ஏறியிருக்கையில் ஆலோசனையில்லாமல் அக்கிளையின் அடியை வெட்டினால் வெட்டப்பட்ட அக்கிளை விழும்போது தானும் விழுந்து தன்முயற்சியால் தானே அழிவதுபோல, ஒருவன் தான் ஒருவரைஅடுத்து அவருடைய ஆதரவைப் பெற்றுவாழ்கையில் ஆலோசனையில்லாமல் அவர்க்குத் தீங்குசெய்யத்தொடங்கினால் அவர் தீமையடையும்போது தானுந் தீமையடைந்து தன்முயற்சியால் தானேயழிவன் என்பதாம். 'சூழ்தல் குறைத்துவிடல்போலும்' என்னாது, உபமேய உபமானங்கட்கு அபேதம் தோன்ற, சூழ்தலையே குறைத்துவிடுதலாகச் சொன்னது, காட்சியணி. 'நமர்என்று' என்பதற்கு - 'நமக்கு இவர் தமரானவர் என்று மதித்து' என்பது பழையவுரை. 'புரந்தாரை' என்றவிடத்து 'புறந்தந்தாரை' என்றும், 'புறந்தந்தார்க்கு' என்றும் பாடமுண்டு; புறந்தருதல் - பாதுகாத்தல். 'பிறர்' என்றது, அவர்பகைவரை. சூழ்தல் என்பதற்கு - ஆலோசித்தல்என்

றும் பொருள்கொள்ளலாம். செய்ந்நன்றியறிதல் சிறிதுமில்லாமல் தம்மைப் பரிபாலிப்பவர்க்குத் தாம் தீங்குநினைத்தல்மாத்திரமே தமக்குத் தீமை விளைக்கும் என்னுங் கருத்து அமையும். சிறந்தஇரத்தினங்க ளுண்டாகிற ஆகரங்களையுடைய மலையென மலைவளங் கூறியவாறு. நினைப்புஇன்றி - நாம்விழுவோம் என்பதை நினையாமல் என்றபடி; இது, உபமேயத்துக்கும் ஒக்கும்.

நமர் - கிளைப்பெயர்; நாம் - பகுதி, முதல்குறுகிற்று, அர் - விகுதி. நன்கு - 'கு' விகுதி பெற்ற பண்புப்பெயர். புரந்தார், புர - பகுதி; புரத்தல் - காத்தல். புரந்தாரை=புரந்தார்க்கு: உருபுமயக்கம். கேடு - கெடுதி; முதனிலை திரிந்த தொழிற்பெயர். கிளர்மணி, நீடுகல - வினைத்தொகைகள். குறைத்துவிடல் என்பதில், விடு என்பது - துணிவை விளக்கும். (௪0)

41.—(இ - ள்.) மது மன்னும் - தேன் நிறைந்த, வீ - மலர்கள், நாறு - வாசனைவீசப்பெற்ற, கானல் - கரைச்சோலைகளையுடைய, விரி திரை தண் சேர்ப்ப - பரவுகிற அலைகளையுடைய குளிர்ந்த கடல்துறையையுடைய அரசனே!—இது மன்னும் தீது என்று இசைந்தது அதுஉம் - இச்செயல் (இவர்க்கு) மிகவும் தீங்கைத்தருவதா மென்று (பிறர்) சொல்லும்படி வந்துபொருந்திய அச்செயலும், ஆவார்க்கு - நன்மையடையும் ஊழ்வினையுடையவர்க்கு, மன்னும் நல்லதே ஆகும் - மிகவும்நல்லதேயாய்விளையும்; தீ நாள் திரு உடையார்க்கு இல் - தீமையைத்தரும் நாள்கள் நல்வினையுடையவர்க்கு இல்லை.

தீமைவிளைக்கிற நாள்க ளென்று பொதுப்பட ஏற்பட்டுள்ள நாள்கள் புண்ணியபரிபாகமுடையவர்க்குத் தீயபயன்களை விளைக்கமாட்டா வாதலால், பிறர்அஞ்சும்படிநேருகிற தீங்குகளெல்லாம் நல்வினையுடையார்க்கு நல்லவையேயாய்முடியும் என்பதாம். வேற்றுப்பொருள்வைப்பணி; முந்தினவாக்கியம் - சிறப்புப்பொருள், பிந்தினவாக்கியம் - பொதுப்பொருள். பொதுப்பொருள் கொண்டு சிறப்புப்பொருள் சாதிக்கப்பட்டது; சிறப்புப்பொருள் கொண்டு பொதுப்பொருள் சாதிக்கப்பட்டதாக மாற்றியுரைப்பினும்பொருந்தும். திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சமணர்களை வென்று சைவமதத்தை நிலைநிறுத்தும்பொருட்டு வேதாரணியத்திலிருந்து பாண்டியநாட்டுக்குச் செல்லத் துணிந்தபோது, திருநாவுக்கரசுநாயனார் 'இப்போது தேவரீர்க்குக் கிரகங்கள் வலியில: ஆதலால், தேவரீர் அவ்விடத்துக்கு எழுந்தருளுதற்கு உடன்படுவது ஒண்ணாது' என்றுசொல்லி மறுத்ததற்கு, சம்பந்தமூர்த்தி 'பரமசிவன் எம்முடையசிந்தையையே கோயில்கொண்டுவீற்றிருத்தலினால்எமக்குத் தீங்கு வாராது: எல்லாம் நன்மையேயாம்' என்னுங் கருத்தை "வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன் மிகநல்ல வீணை தடவி, மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந் தெ னுளமே புகுந்த வதனால், ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி பாம்பிரண்டு முடனே, ஆசறு நல்ல நல்ல வவைநல்ல நல்ல வடியா ரவர்க்கு மிகவே" என்றுதொடங்கிப்பாடிய கோளறு பதிகத்தால் வெளியிட்டுப் பிரயாணப்பட்டுப் பாண்டிநாடுசேர்ந்து எல்லாம்நல்லனவாகவேபெற்று மீண்டுவந்தன ரென்ற செய்தி பெரியபுராணத்திற் பிரசித்தம்; இதுபோன்ற வரலாறுகள் 'தீநாள் திருவுடையார்க்கு இல்' என்பதற்கு நிதர்சனமாம். ஆவார்-ஆக்கமுடையார்; 'திருவுடையார்' என்றதும்அவரையே. மன்-மிகுதியுணர்த்தும்இடைச்சொல்; [நன் - இடை - கஅ.]உம்மை - சிறப்பு. மன்னும் என்பதைப் பெயரெச்சமாக் கொண்டு, மிக்க என்று உரைத்து, தீது நல்லது என்றவற்றிற்கு அடைமொழியாக்கினும் அமையும். என்று=என்ன; எச்சத்திரிபு; [நன் - வினை - உஎ.] இசைந்தது - இறந்தகாலவினையாலணையும் பெயர். உம் - இழிவுசிறப்பு. செய்யுளோசை குன்றாத இடத்துக் குறில் நெடிலாய் நீண்டு அளபெடுத்ததனால், இன்னிசை யளபெடை. தீநாள் - பண்புத்தொகை. நல்லதே, ஏ - பிரிநிலையோடு, தேற்றம்.

இச்செய்யுளின் அருத்தாபத்தியால், இது மிகவும் நல்லதென்னும்படி வந்த நற்செயலும் போகூழுடையார்க்குத் தீயதேயாய் விளையு மென்னும் பொருள் தோன்றும்; "அஞ்சுமிகு தீவினையின் ஆரமிர்தும் நஞ்சாம், நஞ்சும் அமிர்தாம் உரிய நல்வினையின் மாதோ" என்ற வில்லிபுத்தூரார் பாரதத்தையுங் காண்க. (சுக)

42.—(இ - ள்.) அறை ஆர் - அறுப்புப் பொருந்திய [அறுத்துச் செய்யப்பட்ட], அணி வளையாய் - அழகிய வளையல்களையுடையவளே! தெற்ற பரிந்து தீர்ப்பர் எனப்பட்டார்க்கு - (தம் துன்பத்தைக் கேட்டால்) மிகவும் இரங்கி (அதனை)த் தீர்ப்ப ரென்று (தம்மாற்) கருதப்பட்டவர்க்கு, ஒருவர்- (அறிவுடைய) ஒருவர், உற்ற குறையை தெற்ற தாம் உரைப்ப - (தமக்கு) நேர்ந்த குறையைத் தெளிவாக [மறைத்திடாமல் வாய்விட்டு]த் தாம் சொல்வர்; (எதுபோலவெனின்—), தீர்தல் உறுவார் - (நோய்)தீரவேண்டியவர்,— நோய் - (தாம்கொண்ட) அந்நோயை, மருத்துவர்க்கு மறையார் - (அந்நோய் தீர்த்தற்கு உரிய) வைத்தியர்க்கு மறைக்கமாட்டார் [ஒளியாமற் கூறுவர்], (அதுபோல); (எ-று.)

தமது நோய் தீரவேண்டுமென்று விரும்புகிறவர் அந்நோயைத் தீர்த்தற்கு உரிய வைத்தியரிடம் ஒளியாமல் தெரிவிப்பதுபோல, தம்மிடத்துள்ள குறைகளைப் போக்கிக்கொள்ள வேண்டுமென்று கருதுகிறவர் தம்பக்கல் அன்புகொண்டு அவற்றைத் தீர்த்தற்கு உரியாரிடம் அவற்றைச் சொல்லக்கடவர் என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. தம்மிடத்துள்ள குறையைப் பலரும் அறிய மானக்கேடர்கக் கண்டவரிடத்தும் பயனின்றிச் சொல்லிக்கொள்ளலாகாது; தமக்கு இரங்கி அவற்றைத் தீர்க்குந்தன்மையர் இன்னரென்று நன்கு கண்டறிந்து அவரிடத்திலேயே சொல்லிக்கொள்ளவேண்டு மென்க. தமது நோய் வெளியிற் சொல்லத்தகாததா யிருப்பினும் அது வைத்தியரிடத்தில் மாத்திரம் ஒளிக்கத்தக்கதன் றாதலால், அவ்வாறு தீர்க்கவல்லவரிடத்தில் மாத்திரம் ஒளிக்கத்தகாத குறைக்கு அது உபமானமாகக் கொள்ளப்பட்டது. "என்பா யுகினு மியல்பிலார் பின்சென்று, தம்பா டுரைப்பரோ தம்முடையார் - தம்பாடு, உரையாமை முன்னுணருமொண்மையுடையார்க்கு, உரையாரோ தாமுற்றநோய்" என்ற நாலடியாரோடு இச்செய்யுளை ஒப்பிடுக.

தெற்ற - நிச்சயமாக, வெளிப்படையாக: இடைச்சொல். ஒருவர் தீர்ப்பரெனப்பட்டார்க்கு என்றுஎடுத்து, தீர்ப்பரென்று நம்பப்பட்டவராகிய ஒருவர்க்கு என்று உரைத்து, 'மானமுடையார்'என்ற தோன்றாஎழுவாய் வருவித்துமுடிப்பினுமாம். உற்ற குறை - தாம்விரும்பிய காரிய மெனினுமாம். உரைப்ப - பலர்பால்முற்று. சங்கு யானைத்தந்தம் முதலியன கொண்டு அறுத்து வளைசெய்யப்படுதலாலும், பொன்வளையிலும் அறுத்துத்தொழில்செய்தலுண்டாதலாலும், 'அறையார் வளை' என்றார். இனி, அறை ஆர் - ஒலி நிறைந்த என்றுமாம்; ஒலிக்கின்ற, நிறைந்த என்றுங் கொள்ளலாம். மருத்துவர் - மருந்து தருபவர். (சஉ)

43.—(இ - ள்.) இலங்கை கிழவற்கு இளையான் - இலங்காபுரிக்கு உரிய அரசனான இராவணனது தம்பியாகிய விபீஷணன், பொலம் தார் இராமன் துணை ஆக போதந்து - பொன்மயமான மாலையை யணிந்த இராமபிரானைத் துணையாகக் கருதி (இலங்கையினின்று) வந்து (சரணமடைந்து அதனால்), இலங்கைக்கே போந்து இறை ஆயதூஉம் பெற்றான் - அவ்விலங்காபுரிக்கே மீண்டு அரசனாகுஞ்சிறப்பையும் அடைந்தான்: (ஆதலால்), பெரியாரை சார்ந்து கெழீஇலார் இல்-பெரியோரை அடுத்து (அச்சார்பினால்)பயன்பெறாதவர் எவரு மில்லை; (எ - று.)

பெரியாரைத் தமக்குத் துணையாகக்கொண்டவர்களுக்கு எல்லாத்துன்பங்களுமநீங்கி மேன்மேற் சிறப்பு உண்டாமென்பது கருத்து. இலங்கைக்கு அரசனாயிருந்த இராவணன் இராமபிரானுடைய பத்தினியான சீதாபிராட்டியை யெடுத்துவந்து சிறைசெய்து நிர்ப்பந்தித்ததைக் காணப்பொறாமல் அவனுடைய தம்பியான விபீஷணன் அவனுக்குப் பலவாறு நற்புத்திசொல்ல, அதுகேட்டு அவன் நல்வழிப்படாமை கண்டு, அவனைத் துறந்து அவன்மேற் படையெடுத்துவந்த ஸ்ரீராமனைச் சரணமடைந்து, அப்பொழுதே இலங்கைக்குஅரசனென்று சொல்லப்பட்டது மன்றி, இராவணசங்காரஞ் செய்தவுடனே தானே அவ்விலங்கையிற் பட்டாபிஷேகஞ் செய்யப்பெற்றன னென்ற வரலாறு, இங்குப் பெரியாரைத்துணைக்கொண்டு பயன்பெறுதற்கு நிதர்சநமாக எடுத்துக்காட்டப்பட்டது. வேற்றுப்பொருள்வைப்பணி: முந்தினவாக்கியத்திற் கூறிய சிறப்புப்பொருள்கொண்டு பிந்தின வாக்கியத்திற் கூறிய பொதுப்பொருள் சாதிக்கப்பட்டது. 'இலங்கை கிழவற்கு இளையான்'என்றதனால், தன்விஷயத்திற் கொடுந்தீமை செய்தவனான இராவணனுடைய தம்பியாயிருக்கையிலும் அடைக்கலமென்று அடிபணிந்தவளவிலே சரணாகதவற்சலனான இராமபிரான் அவனுக்கு அபயமளித்து ஆதரித்தமை குறிப்பித்ததாயிற்று. இலங்கையரசனது தம்பி, தமையனால் அவ்விலங்கையினின்று துரத்தப்பட்டவன், மீள அவ்விலங்கைக்கே சென்று சேர்ந்து அதன் அரசும்பூண்டன னென்பது நன்குவிளங்க, 'இலங்கைக்கே பேர்ந்து இறையாயதூஉம்பெற்றான்'என்றார். பெரியார்-அறிவொழுக்கங்களிற்சிறந்தமகான்கள்.

பொன்+தார்=பொலந்தார்: இப்புணர்ச்சி, தொல்காப்பிய விதியினால் அமைந்தது; நன்னூலின்படி, பொலம் தார் என்று பிரித்து, மகரவீற்றுப் புணர்ச்சியில் அடக்கவேண்டும். பொலந் தார் - பொன்னினாலாகியஆரம்; அழகிய மாலை யெனினுமாம். போதந்து - போந்து; தா - துணைவினை. பேர்ந்து-பெயர்ந்து; மரூஉ. ஆயதூஉம், உம்மை - உயர்வுசிறப்பு; எச்சவும்மையாகவுங் கொள்ளலாம்; அளபெடை - இன்னிசை கருதியது. கெழீஇலார் - கெழுவியிலார் அல்லது கெழுமியிலார் என்ற சொல் விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசை யளபெடை; நிறைந்திலா ரென்பது பொருள். ஆயது-இறந்தகாலத்தொழிற்பெயர்; ஆ - பகுதி, ய் - இடைநிலை, அ-சாரியை, து-விகுதி. இலங்கைகிழவற்கு இளையான் - நான்கனுருபு, முறைப்பொருளது. சார்ந்து - காரணப்பொருளில்வந்த இறந்தகாலவினையெச்சம். இலங்கைக்கே, ஏ-பிரிநிலை. (௪௩)

44.—(இ - ள்.) சால மறைத்து ஓம்பி - மிகவும் மறைத்துப் பாதுகாத்து, சான்றவர் கை கரப்ப - சான்றோராயுள்ள மந்திரிகள் (புலனாகாதவண்ணம்) அச்செயலை ஒளிக்கவும்,—காலை கழிந்ததன் பின்றையும் - சிறிதுகாலங் கழிந்ததன்பின்பும்,—மேலை கறவை கன்று ஊர்ந்தானை - முன்னொருகாலத்துப் பசுவின்கன்றின்மீது தேர்செலுத்திய தனதுபுத்திரனை, தந்தையும் ஊர்ந்தான் - தந்தையாகிய சோழனும் தேரை மேற்செலுத்தித் தண்டித்தான்; (ஆதலால்), முறைமைக்கு - இராசநீதி செலுத்துதற்கு, மூப்பு இளமை இல்- முதுமையும் இளமையும் என்னும் வேறுபாடு இல்லை; (எ-று.)

சோழநாட்டில் திருவாரூரில் அரசியற்றிய மனுநீதிகண்டசோழ னென்னும் அரசனது புத்திரன் இளம்பிராயத்தில் ஒருநாள் தேரிலேறி வீதியிற் செல்லுகையில், ஒரு பசுக்கன்று துள்ளிவந்து அத்தேர்க்காலின் அடியில் அகப்பட்டு இறந்தது; அதுகண்ட தாய்ப்பசு மிகவருந்திற்று; அதைஅறிந்த இராசகுமாரனும் மிகவும் மனம்வருந்தினான்; இப்படியிருக்கையில், கன்றை யிழந்த பசு அத்துன்பம்பொறுக்கமாட்டாமற் கதறிக்கொண்டு கண்ணீர் பெருக ஓடிச்சென்று அரசனது அரண்மனைவாயிலிற் கட்டியுள்ள ஆராய்ச்சி

மணியைத் தன்கொம்பினால் அடித்தது; அவ்வொலிகேட்டஅரசன் விரைந்து வந்து அங்கிருந்தஒருமந்திரியால் நடந்தசெய்தியை அறிந்து அந்தப்பசுவின் முகத்தைப் பார்த்துப்பார்த்து மனந்தளர்ந்து 'இதற்குப் பரிகாரம் யாது?' என்று மந்திரிகளைக்கேட்க, அவர்கள் 'கோவதத்திற்குத் தருமசாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட பிராயசித்தத்தைக் குமாரனுக்குச் செய்விப்பதே தருமம்' என்றார்கள்; அரசன் 'இந்தப் பிராயச்சித்தம், கன்றையிழந்து அலறுகிற இப்பசுவின் துன்பத்திற்கு ஈடாகாது; இப்பசு தன்கன்றையிழந்து துயரடைதல்போல நானும் என்மகனையிழந்து துயரடைவதே நீதி' என்று சொல்லித் தனதுபுத்திரனை அங்குவரவழைத்து ஒருமந்திரியைநோக்கி 'இந்தப் பிள்ளையை வீதியிலேகிடத்தித் தேரை மேல்நடத்தக்கடவாய்' என்றுகட்டளையிட்டான்; அந்தஅமைச்சன் அவ்வாறு செய்யத்துணியாமல் அரசன் கட்டளைக்கு அஞ்சித் தன்னுயிரைவிட்டான்; அதையறிந்து அரசன் தனதுபுத்திரனைத் தானே கொண்டுபோய் வீதியிற்கிடத்தித் தேரை மேலேஓட்டினான்; இந்த அரியசெய்கையைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்; தேவர்கள் பூமாரிபொழிந்தனர்; இவ்வரசனது தருமநெறியையும் நடுவுநிலைமை சிறிதுந்தவறாதபெருந்தன்மையையுங் கண்டு களித்துச் சிவபிரான் பிரதியக்ஷமாய்த் தரிசனந்தந்து, பசுக்கன்று இராசகுமாரன் மந்திரி இம்மூவரையும் பிழைத்துஎழுந்திருக்கச்செய்தருளி மறைந்தனரென்ற வரலாறு, பெரியபுராணத்திற் கூறப்பட்டுள்ளது. ("அவ்வருக்கன் மகனாகி மனு மேதினி புரந்து அரியகாதலனை ஆவினதுகன்று நிகரென்று, எவ்வருக்கமும் வியப்ப முறைசெய்த கதையும்" என்ற கலிங்கத்துப்பரணியும், "மையல்கூர்சிந்தையாவிற்கு முற்றத் திருத்தேரில், மைந்தனை யூர்ந்த மறவோனும்" என்ற விக்கிரமசோழனுலாவும், "பார்மேல், மருளும் பசுவொன்றின் மம்மர்நோய் தீர, உருளுந் திருத்தே ரூரவோன்" என்ற குலோத்துங்கசோழனுலாவும் இங்குக் காணத்தக்கன.) இராசகுமாரன் பசுவின்கன்றின்மீது தேரூர்ந்ததற்கும் அதனையறிந்து அரசன் அப்புதல்வனைத் தண்டித்ததற்கும் இடையிற் சிலகாலங் கழிந்த தென்பதும், இராசகுமாரன் செய்த குற்றம் அரசனுக்குத்தெரியாமலிருக்கும்படி மந்திரிகள் குறிக்கொண்டு மறைத்துவந்தன ரென்பதும், இச்செய்யுளினால் விளங்கும். மனுநீதிகண்டசோழமகாராசன், பசுக்கன்றைத்தேர்க்காலின்கீழ் அகப்படுத்திக்கொன்ற தன்இளங்குமாரனையுங் கொன்றானாதலால், இளையோன் முதியோ னென்ற பேதங் கொள்ளாது நடுவுநிலைமையோடு நீதிசெலுத்துதலே தகுதி யென்பது கருத்து: வேற்றுப்பொருள்வைப்பணி; சோழன்கதையாகிய சிறப்புப்பொருள்கொண்டு இராசநீதியாகிய பொதுப் பொருள் சாதிக்கப்பட்டது. இச்சோழன் மனுநீதிசசோழ னென்றும், மனுச்சோழ னென்றும், மனுமுறைகண்டசோழ னென்றும் வழங்கப்படுவன்.

சான்றவர் - (பல குணங்களால்) மிக்கவர்; சால் - உரிச்சொற்பகுதி. கறவை - கறப்பது; கற - பகுதி, ஐ - கருத்தாப்பொருள்விகுதி. தந்தை, தாம் - பகுதி, முதல் குறுகிற்று; தை - முறைப்பெயர் விகுதி. (சச)

45.—(இ - ள்.) கல்பால் - மலையில், இலங்கு - (தோன்றி) விளங்குகிற, அருவி - நீரருவி பாயப்பெற்ற, நாட - நாட்டையுடைய அரசனே!— நல் பால - நல்ல குடியிற் பிறந்த, கற்றாரும் - கற்றுணர்ந்தவர்களும், நாடாது சொல்லுவர் - (சில சமயங்களில்) ஆராயாமற் (சிலசொற்) சொல்வார்கள்; (அங்ஙனமிருக்க), இல் பாலர் அல்லார் - உயர்குடியிற்பிறந்தவ ரல்லாதவருடைய, இயல்பு இன்மை - (ஆராய்ந்துபேசும்)இயற்கை யில்லாமையைக்குறித்து, நோவது என் - வருந்தவேண்டுவது என்ன? சொல் பால - சொல்லின் பகுப்புக்களில், சோராதார் - தவறுபடாதவர், யாரானும் இல் - (உலகத்தில்) யாவரு மில்லை; (எ - று.)—மற்று - அசை.

நல்லகுடியிற்பிறந்து கல்விகற்றவர்களும் ஒவ்வொருசமயத்தில் ஆலோசனையின்றித் தவறாகச் சிலசொற்சொல்வரென்றால், அவ்வுயர்குடிப்பிறப்புங்கல்வியுமில்லாதவர் ஆராயாதுசொல்வரென்பதைப்பற்றி வருந்தவேண்டுவதில்லையே என்ற சிறப்புப்பொருளை, சொல்லின்பகுப்புக்களிற் சோர்வுபடாதவரில்லையென்ற பொதுப்பொருள் கொண்டு சாதித்ததனால், **வேற்றுப்பொருள்வைப்பணி.**

நற்பால - குறிப்புப்பெயரெச்சம்; பால் - இடம். கற்றாரும், உம் - உயர்வுசிறப்பு. கற்பால், பால் - ஏழனுருபு. மற்றியார் - குற்றியலிகரம். ஆனும் - ஆயினும் என்பதன் விகாரம். சொற்பால - பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; பால் - பகுப்பு. 'நற் பால கற்றாரும்' என்பதற்கு - 'நன்மைதருந்தன்மையனவான நூல்களைக் கற்றறிந்தவரும்' என்று உரைத்தல், இரண்டாம்அடியில் 'இற்பாலரல்லார்' என்றதனோடுநோக்க இயையாமைகாண்க.

46.—(இ - ள்.) மாடம் அழிந்தக்கால் - ஒரு வீடு (கட்டுக்கோப்புக்) குலைந்து சிதைந்தால், மரம் - (அம்மாடத்திலுள்ள) மரம் முதலான வலிய உறுப்புக்கள், மற்றும் எடுப்பது ஓர் கூடத்திற்கு துப்பு ஆகும் - வேறு கட்டப்படுவதொரு வீட்டுக்கு உதவியாம்; அஃதே போல் - அதுவேபோல, பெரியார் - இயல்பிற் பெருமைக்குணமுடையவர், பீடு இல்லாக்கண்ணும் - செல்வம் அழிந்தவிடத்தும், பெரு தகையர் - (தமது) பெருமைக்குணத்தினின்று வழுவாமல்அக்குணமுடையராகியே பிறர்க்குஉதவுவர்: ஈடுஇல்லதற்கு-இயல்பில் வலிமையில்லாத பொருளுக்கோ, பாடு இல்லை - (பிறிதொன்றற்கு உதவும்) பெருமை யில்லை; (எ-று.)

வலிமையுள்ளபொருளுக்கு எக்காலத்தும் பிறிதொன்றற்கு உதவுந்தன்மை யுண்டு என்பதை முதல்மூன்றுஅடிகளால் உபமானபூர்வமாக எடுத்துக்காட்டி,வலிமையில்லாதபொருளுக்குஅப்படிப்பட்டபெருமையில்லைஎன்பதை ஈற்றடியில் விளக்கினார். **உவமையணி.**

கூடம் மரத்திற்குத் துப்பாகும் என்பது, மரம் கூடத்திற்குத் துப்பாகுமென உருபுபிரித்துக்கூட்டப்பட்டது. 'மரம்' என்றது - மற்றை வலிமையுள்ள உறுப்புக்களுக்கும் உபலக்ஷணம். இரண்டாம்அடியில், ஆய்தம்மெய்போல் ஒலித்தது. அழிந்தக்கால், இல்லாக்கண் என்பவற்றில்—கால், கண் என்பன - எதிர்காலங்காட்டும் வினையெச்சவிகுதி; முந்தினதில், து அ - சாரியைகள்: பிந்தினதில், அ - சாரியை. இல்லாக்கண் என்பதை இல்லாத இடத்து என ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத் தொகாநிலைத்தொடராகவும் கொள்ளலாம். உம் - இழிவுசிறப்பு. (௪௬)

47.—(இ - ள்.) தழங்கு குரல் - முழங்குகிற ஓசையையுடைய, வானத்து - மேகத்தினின்று, தண் பெயல் பெற்றால் - குளிர்ச்சியான மழை நீர் தம் மேற்பெய்யப்பெற்றால், கிழங்கு உடைய எல்லாம் - கிழங்கை உள்ளேயுடைய கொல்லைகள் முதலியவை யாவும், ஓர் ஆற்றால் முளைக்கும் - ஒருவகையால் மீளவும்முளைத்தெழும்; அவரை - அத்தன்மையரை [பழையதாகப் பகைமையை உள்ளத்திற்கொண்டு சமயம்வாய்க்குமிடத்து வெளிக்காட்டுந் தன்மையரை], விழைந்து-விரும்பி, வேர் சுற்ற கொண்டு ஒழுகல் வேண்டா-(ஒருவரும்) நட்பாகக்கொண்டு நடக்கக்கூடாது; பழம் பகை நட்பு ஆதல் இல் - பழமையாகப்பகைமையுடையோர் நண்பராவது(ஒருகாலத்தும் இல்லை.

அகத்துப் பகைமையுடையோர் காலபேதத்தால் அப்பகைமையை வெளிக்காட்டாமல் உள்ளேமறைத்துவைப்பராயினும் சமயம்வாய்க்குமிடத்து அப்பகைமையை வெளிப்படுத்தித் தீங்குசெய்வராதலால், அத்தன்மையரோடு சிநேகஞ்செய்யலாகாது. பழமையாகப்பகைமையுடையவர் அப்பகைமையை முழுவதும் ஒழித்து மனங்கலந்தசிநேகிதராய் நடப்பது எக்காலத்து மில்லை

'யென்பதாம். உவமையணி. 'வேர்சுற்ற' என்பது - இலக்கணையாய், வினேகமாக என்னும் பொருளில் வந்தது; 'கிளை'என்பது-நண்பரையும் சுற்றத்தாரையும் உணர்த்துதல்போல: மரத்துக்கு வேர்போலத் தமக்கு அவர் ஆதாரமாக என்றபடி. சுற்ற - படர, நிலைகொள்ள.

பெயல் - பெய்தல்; மழைநீர்க்குத் தொழிலாகுபெயர். உடைய - பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். (சஎ)

48.—(இ - ள்.) அடங்கி - (தாம்) அடக்கமுடையவராய், ஐந்தினை அகப்பட காத்து - (தமது) பஞ்சேந்திரியங்களையும் (தமக்கு) வசப்பட்டிருக்கும்படி பாதுகாத்து, தொடங்கிய மூன்றினால் மாண்டு - தாம்செய்யத்தொடங்கிய நற்செயல்களில் (மனம் மொழி மெய் என்னும்) திரிகரணங்களாலும் மாட்சிமைப்பட்டு, ஈண்டு உடம்பு ஒழிய செல்லும் வாய்க்கு ஏமம் - இவ்வுலகத்தில் உடம்பு ஒழிய (த்தாம்) [உயிர்] செல்லும் மறுமையுலகத்திற்கு உறுதி தருவதாகும் நல்வினையை, சிறு காலை செய்தாரே - இளம்பிராயத்திலேயே செய்துவைத்துக்கொண்டவர்களே, கொல்லி மேல் கோட்டை வைத்தார் - கொல்லியென்னும் மலையின்மேல் நெற்கூடுகட்டிவைத்தவரோடு ஒப்பாவர்.

கொல்லி என்பது - சேலம்ஜில்லாவிலுள்ள தொரு மலை; இது, தமிழ் நூல்களிற் பெரிதும் பாராட்டிக் கூறப்பட்டுள்ளது. இங்கே, இது, பத்திரமான இடத்துக்கு நிதர்சனமாக எடுத்துக் காட்டப்பட்டது. பத்திரமான இடத்தில் நெற்கோட்டைகட்டிவைத்தவர் எப்படிப்பட்ட பஞ்சம் வந்தாலும், விசாரப்படவேண்டியதில்லையன்றோ? அதுபோலவே, மறுமைக்கு உதவும் நல்வினையை இளமையிலேயே செய்துவைத்துக்கொண்டவர் விசாரப்படமாட்டார் என்பதாம். உபமேயத்தை உபமானமாகவே சொன்னது, காட்சியணி. ஐந்து - மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகள்; அவற்றை அகப்படக் காத்தலாவது - அவை முறையே தமக்கு உரிய விஷயங்களான ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்னும் ஐம்புலன்களின்மேற் கண்டபடி செல்லவொண்ணாதவாறு அடக்கி ஆளுதல். மனம் அடங்காமலும் ஐம்பொறிகள் தம்வசப்படாமலும் மனோ வாக்குக் காய மென்னும் மூன்றுகரணங்களும் ஒற்றுமைப்படாமலுஞ் செய்த செய்கை நல்வழிக்குத் துணையாவதில்லை யாதலால், 'அடங்கி யகப்பட்ட வைந்தினைக் காத்துத் தொடங்கிய மூன்றினால் மாண்டு' என்றார். 'ஈண்டு உடம்பு ஒழிய' என்றதனால் உடம்பு நிலையில்லாததென்பதும், 'செல்லும் வாய்க்கு ஏமம்' என்றதனால் மறுமையில் உயிருடன் வந்து உதவுவது நல்வினையொன்றேயென்பதும், 'சிறுகாலைச் செய்தார்' என்றதனால் பின்பு நல்வினை செய்யலா மென்று சிறிதுந் தாமதிக்கலாகாது என்பதும், 'செய்தாரே கொல்லிமேற் கோட்டைவைத்தார்' என்றதனால் அங்ஙனம் நல்வினைசெய்துவிட்டால் பின்பு கவலையற்றிருக்கலா மென்பதும் விளங்கும்.

ஐந்து, மூன்று - எண்ணலளவாகுபெயர்கள். தொடங்கிய - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயர். மாண்டு - மாட்சியென்னும் பண்பினடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம். வாய் - இடம். ஏமம் என்பதை ஹேமம் என்ற வடசொல்லின் விகாரமாகக் கொண்டு பொன்போல அரியதான அல்லது சமயத்திற்குஉதவுகிறநல்வினையென்றும், க்ஷேமம் என்ற வடசொல்லின் சிதைவாகக் கொண்டு உயிர்க்கு உறுதிதருவதான நல்வினையென்றும் பொருள்காணலாம். செய்தாரே, ஏ - பிரிநிலையோடு, தேற்றம்.

'கொல்லிமேற் கொட்டு வைத்தார்' என்ற பாடத்துக்கு-('உண்ணுதற்கு உரிய கிழங்குகள்நிறைந்துள்ளதான) கொல்லிமலையில் (அக்கிழங்குகளைத் தோண்டி யெடுத்தற்குஉரிய) கொட்டு என்னுங் கருவியை வைத்துள்ளவர் போலக் கவலையற்றிருப்பார்' என்பது பொருள். (சஅ)

49.—(இ - ள்.) விரி திரை - பரவுகிற அலைகள், பார் எறியும் - கரையை மோதுகிற, முந்நீர் துறைவ - கடல்துறையையுடைய அரசனே ! பரியப்படுபவர் - (தம்மால்) விரும்பிப் பாதுகாக்கத்தக்கவர், பண்பு இலார் எனும் - நற்குணமில்லாராயினும், சான்றோர் - பெரியோர், திரிய பெறுபவோ - (அவரைப் பாதுகாத்தலாகிய தமது உரிமையினின்று) தவறப் பெறுவரோ ? [தவறார்]; ஊர் அறிய நட்டார்க்கு உணா கடன் அன்றோ - ஊரிலிலுள்ளவரெல்லாரும் அறியத் தம்மோடு உறவுசெய்தவர்க்கு உணவுகொடுத்தல் கடமையன்றோ ? (எ - று.)

வேற்றுப்பொருள்வைப்பணி; முந்தினவாக்கியத்திற் கூறிய சிறப்புப் பொருள், பிந்தினவாக்கியத்திற் கூறிய பொதுப்பொருள் கொண்டு சாதிக்கப்பட்டது. எனும் - எனினும் என்பதன் மரூஉ. ஓ - எதிர்மறை. அன்றோ - தேற்றம். முந்நீர் - படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று நீர்மையுடையது என்று பொருள்படுங் காரணக்குறி; பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. நீர்மை - தன்மை; இப்பண்புப்பெயர் ஈறுபோயிற்று. இனி, ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்றுவகை நீரை யுடைய தென்று கொள்ளுதலு மொன்று. 'துறைவன்' என்பது - நெய்தல்நிலத்தலைவன்பெயர்; ழ இதில், வ் - பெயரிடைநிலை. கடன் - கடம் என்பதன் இறுதிப்போலி. ஊர் - இடவாகுபெயர். நட்டார் - இறந்தகால வினையாலணையும்பெயர்; நள் - பகுதி. உணா - உணவு என்பதன் விகாரம். (சக)

50.—(இ - ள்.) சுடப்பட்டு - (இளமைப்பருவத்திற் பிறரால்) சுடப்பட்டும், உயிர் உய்ந்த - தப்பி உயிர்பிழைத்த, சோழன் மகனும் - (இளஞ்சேட்சென்னி யென்னுஞ்) சோழராசனது புத்திரனான கரிகாற்சோழனும், பிடர்த்தலைப்பேரானை பெற்று - இரும்பிடர்த்தலையாரென்னும் பெயரையுடைய தன்மாமனை(த் தனக்குத் துணையாக)ப் பெறுதலால், கடை கால் - பின்னொருகாலத்தில், செயிர்அறு செங்கோல் செலீஇயினான் - (தனக்குரிய) அரசாட்சியைப்பெற்றுக் குற்றமற்றசெங்கோலைச் செலுத்தினான்;(ஆதலால்), உயிர் உடையார் எய்தா வினை இல்லை - உயிருடையவர் அடையாததொரு நற்பயன் இல்லை; (எ - று.)

பாண்டியன் கருங்கையொள்வாட்பெரும்பெயர்வழுதியை இரும்பிடர்த்தலையார் பாடிய தென்று புறநானூற்றில் ஒருசெய்யுள் இருக்கிறது; அச்செய்யுளில் இவர் அவனுடைய யானைசசிறப்பைக் கூறுமிடத்து "பொன்னோடைப் புகரணிநுதல், துன்னருந்திறற் கமழ்கடாஅத், தெயிறுபடை யாக வெயிற்கத விடாஅக், கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கிற், பெருங் கை யானை யிரும்பிடர்த் தலையிருந்து, மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயாக், கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி" என்று பாடியிருக்கின்றனர்: இங்கு இவர் உபயோகித்த 'இரும்பிடர்த்தலை' என்ற தொடரின் அருமை பாராட்டி அதனால் இவர்க்கு இரும்பிடர்த்தலையாரென்று பெயர்வழங்கினரென்பர். இனி, (யானையினது) பெரிய கழுத்தினிடத்தே யேறிவீற்றிருந்ததனாலாவது, பெரியபிடரியோடுகூடிய தலையையுடையராயிருந்ததனாலாவது, இரும்பிடர் அல்லது இரும்பிடர்த்தலை என்ற ஊரிலிருந்ததனாலாவது, வேறு எக்காரணத்தினாலாவதுஇரும்பிடர்த்தலையா ரென்று பெயர்பெற்ற இவர்தாம் பாடும் பாட்டில் தமது பெயரைக் குறிப்பாகத்தோன்றுமாறு 'இரும்பிடர்த் தலை'என்ற தொடர் அமையச் சமத்காரமாகப் பாடினரென்றுங் கொள்ளலாம். தாம் பாடும் பாட்டில் தமது பெயரை வேறோராற்றால் அமையவைத்தல், சிறுபான்மை கவிகளியல்பு. இதுபோன்ற பிறவற்றுக்கும் இது கொள்க.

"ஏதி ஜீவந்தம் ஆநந்தோ நரம் வர்ஷசதாதபி" [மனிதன் இறவாது பிழைத்திருந்தால் நூறுவருஷங் கழித்தாயினும் அவனுக்குப் பாக்கியம் நேர்கிறது] என்ற ஆன்றோர் மொழியின்படி ஒருவர் உயிருடனிருந்தால் எக்காலத்திலாயினும் அவர்க்குப் பலநன்மைகளும் உண்டாம் என்றபொதுப்பொருளை, இளமையிற் சுடப்பட்டும் உயிரிழவாது கால்கரிந்தமாத்திரத்தோடு தப்பிப் பிழைத்ததனாற் கரிகாலன் பின்பு அரசுபெற்று வாழ்ந்தனனென்னும் வரலாறாகிய சிறப்புப்பொருள்கொண்டு விளக்கினார்; **வேற்றுப்பொருள் வைப்பணி.**

கரிகாற்சோழனது தந்தையின் பெயர், பராந்தகசோழனென்று சில நூல் கூறும். செங்கோல் - கோணலில்லாத நேர்மையான கொம்பு; அது போல நீதிதவறுதலில்லாத அரசாட்சிக்கு அது உவமை யாகுபெயர்; இதன் எதிர்மொழி - கொடுங்கோல். செலுத்தினன் என்ற சொல் செலீஇயினனென விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசை யளபெடை. எய்தா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (௫௦)

51.—(இ - ள்.) வாள் திறலானை - (நந்தகம் என்னும்) வாளாயுதத்தின் வலிமையுடையவனான திருமாலை, அ ஞான்று - அக்காலத்தில் [முன்னொருகாலத்தில்], வளைத்தார்கள் - (பாற்கடலிற்சென்று)வளைத்துக்கொண்ட மது கைடபன் என்னும் அசுரர் இருவரும், வீட்டிய சென்றார் - (அத்திருமாலைக்) கொல்லுதற்கு (நெருங்கி)ச் சென்றார்களாக, (அப்போது அத்திருமாலின் திருவுருவம்), விளங்கு ஒளி காட்ட - விளங்குகிற ஒளியைக் காட்ட, பொருவு அறு தன்மை கண்டு - ஒப்பில்லாத அவ்வடிவின் தன்மையைக் கண்டு, அஃது ஒழிந்தார் - (தாம் நினைத்துச்சென்ற)அக்கொலையைத் தவிர்ந்து நின்றார்கள்; உருவு திரு ஊட்டும் ஆறு அஃது ஆல் - அழகிய தன் உருவமே தனக்கு நன்மையையுண்டாக்கும்வகை அத்தன்மைத்தன்றோ? (எ - று.)

மது கைடபனென்பவர், ஆதிசிருஷ்டிகாலத்தில் தோன்றினவர்; மகா பலசாலிகளான இவ்வசுர ரிருவரும் செருக்கித் திருப்பாற்கடலில் இழிந்து, அங்குப் பள்ளிகொண்டிருக்கிற திருமாலை எதிர்த்துப் பெரும்போர்செய்ய, இவர்களை அப்பெருமான் தொடையால் இடுக்கிக் கீழேதள்ளிக் கால்களால் மிதித்துத் துவைத்து வதைத்தனனென்ற வரலாறு, புராணப்பிரசித்தம். இவ்வசுரர்கள் திருமாலை யெதிர்த்துச் சென்றபோது அப்பெருமானது திருவுருவம் திவ்யதேஜஸை வெளிவீசி அது கண்டு அவர்கள் திகைக்கும்படி செய்தது என்ற செய்தி, இச்செய்யுளில் விளக்கப்பட்டது. ஒருவருடைய சொரூபத்தின் கம்பீரமான காட்சியே அவர்க்கு இடையூறுதவிர்ந்து மேன்மைவிளைதற்குக் காரணமாமென்ற பொதுப்பொருளை மேற்குறித்த வரலாறாகிய சிறப்புப்பொருள்கொண்டு விளக்கினார்; **வேற்றுப்பொருள்வைப்பணி.**

வீட்டிய - எதிர்காலவினையெச்சம்; வீட்டு - பகுதி, இய - காலங்காட்டும்விகுதி. மூன்றாமடியில் ஆய்தங்கள் மெய்போலொலித்தன. ஆல்-தேற்றம். உருவு - ரூபம் என்ற வடசொல்லின் சிதைவு. சென்றார்-செல்ல, முற்றெச்சம். வளைத்தார்கள் - வினையாலணையும்பெயர்; கள் - விகுதிமேல்விகுதி.

52.—(இ - ள்.) இலங்கு இழாய் – விளங்குகிற ஆபரணங்களை யுடையவளே!—(ஒருவர்), உள்ளூரவரால் முதல் உணர்ந்தார் எனினும் - உள்ளூரில்வாழ்பவர்கள்மூலமாக (ப்பிறனொருவனுக்குள்ள) பொருளின் சிறுமையை அறிந்தனராயினும், எள்ளாமை வேண்டும் - (அவனைப் பொருளில்லாதவனென்று) இகழாதிருத்தல்வேண்டும்;(ஏனெனில்—),அழுங்கல்- ஒலியையுடைய, முது பதி அங்காடி - பழமையான ஊரினிடத்துள்ள கடைவீதியில், தள்ளாமேயும் – ஒழிவின்றி மேய்ந்துதிரிகிற, பழங் கன்று - பழமையான பசுவின்

கன்று, ஏறு ஆதலும் - (வளர்ந்து) வலிய எருதாகுதலும், உண்டு - உளது, (ஆதலால்) ; (எ- று.)

'தன்னைப்போஷிப்பா ரெவருமில்லாததும், பலசனங்கள் ஒருங்குகூடுதலால்ஒலிமாறாத பழமையானநகர்க்கடைத்தெருவிலே அகப்பட்டவற்றைமேய்ந்துதிரிந்துகொண்டிருந்ததுமான எளிய மெலிந்த கன்று வளர்ந்து வலியஎருதாதலுமுண்டு' என்ற உபமானவாக்கியத்தைக்கொண்டே, 'கதியற்றவனும் ஒரு வரையறையின்றிக் கண்டவிடத்தும் எப்பொழுதும் இரந்து உயிர்வாழ்பவனு மான எளிய ஏழை ஒருகாலத்து மிக்கசெல்வனாதலுமுண்டு'என்ற உபமேயத்தைப் பெறவைத்தது, பிறிதுமொழிதலணி. ஆதலால், ஒருவனைப் பொருளிற்சிறியவனென்று நிச்சயமாகஅறிந்தாலும் அவனைப் பொருளில்லாதவனென்றுஇகழலாகாது என முன்வாக்கியத்துக்குப் பின்வாக்கியம் காரணமாய்நின்றது, ஏதுவணி. இவ்விரண்டுஅணியுஞ் சேர்ந்துவந்தது, சேர்வையணி. உள்ளூரவர் - அவன்வசிக்கிற ஊரிலேயுள்ளவர். 'உள்ளூரவரால்' என்பதில், ஆல் என்பதை அசையெனக் கொண்டு, தாம் அவன்இருக்கிற ஊரிலுள்ளவரும் அதனால் அவனுடையமுதற்பொருளினளவை உள்ளபடியறிந்தவருமாயினும் என்று பொருள்கொள்ளினும் அமையும். ஆல் என்பதை ஆதலால் என்பதன் விகாரமாகக் கொள்ளவும் இடமுண்டு. முதல் உணர்ந்தாரெனினும் - ஆதிதொடங்கி அறிந்துள்ளாராயினும் என்றுமாம். பழங் கன்று - பழகிய கன்று. கன்று - இங்கே, ஆண்கன்று.

எள்ளாமை - எதிர்மறைத்தொழிற்பெயர். வேண்டும்-'உம்'விகுதிபெற்ற வியங்கோள். இலங்கிழை என்ற பண்புத்தொகையன்மொழி, ஈறுதிரிந்து விளியேற்றது. தள்ளா - ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம். தள்ளா மேயுமென இயையும். தள்ளா என்பதை ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சமெனக்கொண்டு, தள்ளா அழுங்கல் - நீங்காத ஓசையையுடைய எனினுமாம். அழுங்கல் - உரிச்சொல் ; [நன் - உரி - கஅ.] முது பதி,பழங்கன்று - பண்புத்தொகைகள். அங்காடி - திசைச்சொல். கன்று - இளமைப்பெயர். ஏறு - ஆண்மைப்பெயர். உம்மைஇரண்டும் - உயர்வுசிறப்பு. (ருஉ)

53.—(இ - ள்.) விண் தோயும் - ஆகாயத்தை யளாவிய [மிகவுயர்ந்த], குன்று - மலைகளை, அகம் - தன்னிடத்திலேயுடைய, நல்-நல்ல, நாட - நாட்டையுடையஅரசனே !—பார்ப்பான்கண் பாம்பு இடுக்கண் - (தன்னைத்துணையாகக்கொண்ட) ஒருபிராமணனிடத்திற் பாம்பினாலுண்டாகுந் துன்பத்தை, ஞெண்டேயும் - (அவனால் துணைக்கொள்ளப்பட்ட அற்பஜந்துவாகிய) ஒரு நண்டும், தீர்த்தலான் - போக்கியதனால், ஒருவர் துணை உடைமை நன்றே - (ஒருவன்)பிறரொருவரைத் துணையாகவுடையவனாவது நல்லதேயாம் ; கூறுங்கால் - (ஆலோசித்துச்) சொல்லுமிடத்து,—ஒன்றுக்கு உதவாத ஒன்று இல்லையே - ஒருகாரியத்துக்கும் உதவியாகாத ஒருபொருள் (உலகத்து) இல்லை.

இதிற் குறித்த கதை:—நாசிகதேசத்தவனாகிய தத்தனென்னும் அந்தணச்சிறுவனொருவன் ஒருநாள் தனது ஆசிரியர்காரியமாக அயலூர்க்குச்செல்லவேண்டி அச்செய்தியைத் தனது தாயினிடந் தெரிவித்து விடைகேட்க, அவள்'துணையோடல்லது நெடுவழிபோகேல்' என்பதை யுட்கொண்டு 'குழந்தாய் ! ஒருவனாய்ச்செல்லாதே' என, கேட்டு அவன் 'தாயே ! வழி இடையூறின்றியிருக்கிறதே' என, அவள் மீண்டும் 'எங்ஙனமிருந்தாலும் வழித்துணையின்றிச் செல்லலாகாது' என்று கிணற்றிலிருந்து ஒரு நண்டைப் பிடித்து ஒருபாத்திரத்திலிட்டு அதனை அம்மகன்கையிற் கொடுத்து 'இதனையாயினுந் துணையாகக்கொண்டு போய்வா' என்று விடைகொடுத்து அனுப்ப, அவன் அங்ஙனமேதாய்மொழி தலைமேற்கொண்டு அக்கலயத்தைக்கையிலேக்

திச்செல்லும் வழியில் வெயிலினால் வருந்தி வழிநடந்த இளைப்பினால் ஒருமரத்தின் நிழலில் அக்கலயத்தைத் தன்னருகில்வைத்துப் படுத்து அயர்ந்துதூங்குகையில், அவனைக்கடிக்கும்படிவந்த ஒருபாம்பு அக்கலயத்தைக்கண்டு இதிலிருப்பதுஎன்னென்று அறியக்கருதி அதனுள் தலையைநீட்டிப்பார்க்க, அதிலிருந்த நண்டு தன்கொடுக்கால் அதன்தலையை இடுக்கித் துண்டித்துக் கொன்றது ; பின்பு பிராமணன் கண்விழித்துத் துண்டுபட்டிறந்துகிடந்த பாம்பைக் கண்டு இது எவ்வாறுஇறந்ததென்று ஆலோசித்து நடந்தசெய்தியைத்தெரிந்துகொண்டு ' தாய்தந்த வழித்துணையாற் பிழைத்தேன் ; " தாயிற்சிறந்தொருகோயிலுமில்லை" என்றது பொய்யாது'என்றுஎண்ணி அக்கலயத்துடனே தனது வீட்டுக்குச்சென்று தாயைவணங்கி நிகழ்ந்தசெய்தியைச் சொல்லி இன்புற்றிருந்தனனெனப் பஞ்சதந்திரத்திற் காண்க.

இங்ஙனம் அற்பஜந்துவாகிய ஒருநண்டும் ஒருவனுக்குப் பாம்பினால் நேர இருந்த துன்பத்தைத் தீர்த்து அவனைக்காத்ததனால், ஒருவரைத் துணையாகக்கொள்ளுதல் எவர்க்கும் நன்மையைத் தரும் : 'சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்' என்றபடி, ஒருகாரியத்துக்கும் உதவாத பொருள் உலகத்தில் ஏதுவுமில்லை என்பது கருத்து. ' ஒருவர் துணையுடைமை நன்றே' என்ற நீதியை விளக்குதற்கு'பாப்பிடுக்கண் ஞெண்டேயும் பார்ப்பான்கண் தீர்த்தலான்' எனக் காரணங்காட்டியது, ஏதுவணி.இச்சிறப்புப்பொருளோடு 'இல்லையே ஒன்றுக்கு உதவாத ஒன்று' என்ற பொதுப்பொருளை இயையவைத்தது, வேற்றுப்பொருள் வைப்பணி.

நன்றே, இல்லையே என்ற ஏகாரங்கள் - தேற்றம். ' ஞெண்டேயும்' என்ற ஏகாரமும், உம்மையும் - இழிவுசிறப்பு. பாம்பு+இடுக்கண்=பாப்பிடுக்கண்: வேற்றுமைப்புணர்ச்சியில் மென்றொடர் வன்றொடராயிற்று ;[நன் - உயிர் - ந.சூ.] பாம்பினாலாகும் இடுக்கண் என மூன்றாம்வேற்றுமை உருபும் பயனும்உடன்தொக்கதொகை. இடுக்கண் - இடுங்குகண் என்பதன்விகாரம். மலர்ந்த நோக்கமின்றிக் கண்ணிடுங்கும்படி நேர்வது எனத் துன்பத்துக்குக் காரணக்குறி. ஞெண்டு - நண்டு என்பதன் போலி. பார்ப்பான - (வேதசாஸ்திரங்களைப்)பார்த்தறிபவன் ; இவ்வேதுப்பெயர் - பிராமணனுக்கே சிறப்புப்பெயராவது, காரணவிடுகுறி. கண் - ஏழனுருபு. நல்நாடு - நல்வளமுள்ள நாடு. ஒன்று - ஒரு பொருள் ; எண்ணலளவாகுபெயர். (ருங)

54.—(இ - ள்.) அகலம்உடைய அறிவுஉடையார்நாப்பண்புகல்அரியார் - விசாலித்தஅறிவை யுடையவர்களின் நடுவே செல்லுதற்குந் தகாத அறிவிலார், புக்கவர் - (அவ்வறிவுடையார்நடுவிற்) சென்றவராய், (அவ்வளவோடு நில்லாது), தாமே-தாமாகவே, இகலினால் - (அவர்கட்குத் தமது திறமையைக் காட்டவேண்டுமென்ற) மாறுபாட்டினால், வீண்சேர்ந்த புல்சொல் விளம்பல்- பயனில்லாத இழிவான சொற்களை வலியச் சொல்லுதலாகிய, அது அன்றே - அச்செயலே யல்லவா, பாண் சேரி பல் கிழிக்கும் ஆறு - (இசைபாட வல்லவர்களான) பாணர்கள் இருக்கிற சேரியினுள்ளே(புக்குப் பிறனொருவன் யான்பாடுவேனென்று) பல்தோன்ற வாயைத் திறந்து பாடும் விதமாம்.

சங்கீதபாடகரான பாணரென்னுஞ் சாதியார் வசிக்கிற சேரியில் இசையறிவில்லாத ஒருவன் போய்ப் பாடத்தொடங்கினால் அது அவனுக்கு அவமானமாகியே முடிதல்போல, கற்றறிந்தவர் கூட்டத்திற் கல்வியறிவில்லாதவன் சென்று ஒன்று சொல்லத் தொடங்கினால் அது அவனதுபேதைமையை விளக்கி அவமதிப்புக்கே யிடமாம் என்பது கருத்து ; 28-ஆம்பாட்டோடு இப்பாட்டை ஒப்பிடுக. 'விளம்பலதுவன்றே கிழிக்குமாறு' என உபமேயத்தை உபமானமாகவே சொன்னது, காட்சியணி.

அகலம் - அகற்சி: 'அம்' விகுதி பெற்ற தொழிற்பெயர். அரியார் - அருமையென்னும் பண்பினடியாகப்பிறந்த பலர்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். அன்றே - தேற்றம். பாண் சேரி - பாணச்சாதியாருடைய சேரி: "சாதி குழூஉப் பரண் கவண்பெயரிறுதி, இயல்பாம் வேற்றுமைக்கு" என்றபடி இயல்பாயிற்று. அடக்கமின்றி வாய்திறத்தலின் இழிவு தோன்ற, 'பற்கிழிக்குமாறு' என்றார். (ருச)

55.—(இ - ள்.) தாய் ஆனும்-தம்மைப்பெற்றதாயின் மரபினாலாயினும், தந்தையால் ஆனும் - (தமது) தந்தையின் மரபினாலாயினும், மிகல் இன்றி - யாதொருசிறப்புமில்லாமல், வாயின்மீக்கூறும் அவர்களை - தம்வாயாலே தம்மைஉயர்த்திச்சொல்லிக்கொள்பவர்களை, ஏத்துதல் - (பிறர் மயங்கிச் சிறப்புடையவரென்றுகருதிப்) புகழ்தல்,—நோய் இன்று எனினும் - (தனக்கு) ஒருநோயும் இல்லையாயினும், அடுப்பின்கடை முடங்கும் - அடுப்பினருகே முடங்கிக்கிடக்கிற, நாயை - ஒருநாயை(க்கண்டு), புலி ஆம் எனல் - (அதனைப்) புலியென்று சொல்லுதல்போலாம்; (எ - று.)

கண்டவிடங்களிலும் அலைந்துதிரியுந்தன்மையதான எளிய நாய் அங்ஙனந்திரியாமல் ஒருகௌரவத்தை வகித்து உள்ளேயேயிருந்தால் அம்மாத்திரத்தைக்கொண்டு மலைத்து அந்நாயை ஒருவன் புலியென்று மதித்துச் சொல்வனாயின், அதுபோல, யாதொரு சிறப்புமில்லாமலிருக்கையிலும் ஆடம்பரமாகத் தற்புகழ்ச்சிசெய்துகொள்பவர்களை அவர்கள்பேச்சைக்கொண்டே பிறர்மலைத்துநன்குமதித்துக்கொண்டாடுதல் தகாதுஎன்பதாம்; காட்சியணி. 'தாயானும் தந்தையாலானும் மிகலின்றி'என்பதற்கு - தமதுதாய் தந்தையராற் கல்விகற்பிக்கவும் நல்வழிச்செலுத்தவும்பட்டுச் சிறப்படைதலில்லாமலென்றும் பொருள்கொள்ளலாம்; தமது தாய்தந்தையர்களால் நன்குமதிக்கப்படுதலில்லாமலென்று பொருள்கொள்ளுதல் சிறவாமை காண்க. நோயிருந்தாலொழியப் பலவிடத்துந்திரிந்து அலையாதிருத்தல் நாய்க்கு இயல்பன்றென்பது 'நோயின்றெனினும் அடுப்பின்கடை முடங்கும்' என்றதனால் தோன்றும்.

தாய் - மூன்றும்வேற்றுமைத்தொகை. ஆனும் - ஆயினும் என்பதன் விகாரம். வாயின், இன் - ஐந்தனுருபு, ஏது. மீ-மேல். மீக்கூறுதல்-புகழ்தல். அடுப்பு - சமைத்தல்: தொழிற்பெயர்; அடு - பகுதி, பு - விகுதி; இது, சமையல்செய்யும்இடத்துக்குத் தொழிலாகுபெயராம்; இன் - சாரியை, கடை - இடம்; ஏழனுருபுமாம். (ருரு)

56.—(இ - ள்.) உயர்ந்தவர் - மேலானவர், தாம் ஒற்கம் உற்ற இடத்தும் - தாம் வறுமையடைந்தகாலத்தும், நின்ற நிலையின்மேல் நிற்ப ஏ - தாம் இயல்பாகநின்ற உயர்ந்தநிலைமையினின்று தவறாமல் அந்நிலைமையிலேயே நிற்பர்; (எதுபோலவெனின்—), வற்பத்தால் நலியும் பசி தன்மேல் பெரிது ஆயினும் - வலிமையோடு [மிகுதியாக] வருத்துகிற பசி தன்னிடத்து அதிகப்பட்டதானாலும், புலி புல் மேயாது ஆகும் - புலி புல்லை மேயாது, (அதுபோல); (எ - று.)

'புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது': அதுபோல வறுமையுறினும் நிலைதவறி இழிதொழில்செய்யாதிருத்தல் மேன்மக்கட்கு இயல்பென்பதாம். எடுத்துக்காட்டுவமையணி." உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும், குடிப்பிறப்பாளர் தம்கொள்கையிற் குன்றார், இடுக்கண் தலைவந்தக்கண்ணு மரிமா, கொடிப்புற் கறிக்குமோ மற்று"என்ற நாலடியாரோடும், "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும், அல்லன செய்தற் கொருப்படார் - பல்பொ

றிய, செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம், பைங்கட் புனத்த பைங் கூழ்'' என்ற நீதிநெறிவிளக்கத்தோடும் இதனை ஒப்பிடுக.

சிறப்ப - பலர்பால்முற்று. ஏ- தேற்றம். வற்பம் - வன்மை,பண்புப்பெயர் : வல் - பகுதி, பம் -விகுதி. இனி, 'வற்பத்தால்' என்பதற்கு - பஞ்சத்தால் என்று பொருளுரைத்து, அதனை 'ஒற்கமுற்றவிடத்தும்'என்பதனோடு கூட்டி னும் அமையும். உம்மையிரண்டும் - இழிவுசிறப்பு. உயர்ந்தவர் - குடிப் பிறப்பிலும் குணஞ்செயல்களினுஞ் சிறந்தவர். (ருசு)

57.—(இ - ள்.) இலங்கு- விளங்குகிற, அருவி-நீரருவிகள்,தாய் இழியும்- பாய்ந்து இறங்கப்பெற்ற, மலை - மலையையுடைய, நாட - நாட்டையுடைய அரசனே ! விலங்கேயும் - (விவேகமில்லாத) மிருகங்களும், தம்மோடு உடன் உறைதல் மேவும் - தாம் ஒன்றோடொன்று சினேகஞ்செய்தபின்பு பிரி யாமல் எப்பொழுதும் கூடியிருத்தலையே பொருந்தும் :(ஆகவே), கலந்தாரை கைவிடுதல் ஒல்லா - சினேகித்தவரை விடுதல் (விவேகிகளான மனிதர்களு க்கு) இயலாது : பேயொடு ஆனும் பிரிவு இன்னாது ஏ - (கொடிய) பேயோ டாயினும் (தாம் கலந்தபின்பு) பிரிதல் இனியதன்றன்றோ ? (எ - று.)

பகுத்தறிவில்லாத மிருகங்களும் தம்மிற் சினேகம் செய்த பின்பு அச் சினேகத்தைவிடுவதில்லை; ஆகவே,பகுத்தறிவையுடைய மனிதர் தம்மிற்சினே கஞ் செய்தபின்பு அச்சினேகத்தை விடுதல் தகுதியன்றன்றோ? துர்க்குண முடைய பேயோடு சினேகஞ்செய்து பிரிந்தாலும் மனவருத்தமுண்டாகிறது என்பதாம். முன்னிரண்டடியிற்கூறிய விஷயத்துக்குப் பிந்தினவாக்கியத் திற் கூறிய விஷயம் காரணமாகுதலால், ஏதுவணி. "இன்னாசெயினுமினிய வொழிகென்று, தன்னையே தானோவி னல்லது - துன்னிக், கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட, விலங்கிற்கும் விள்ளலரிது," "பரீஇயுயிர்செகுக்கும் பாம்பொடு மின்னா, மரீஇப் பின்னைப் பிரிவு" என்ற நாலடியார்ப் பாடல்க ளோடு இதனை ஒப்பிடுக. 'கூடிப்பிரியேல்' என ஔவையார் கூறியதும் இக் கருத்தேபற்றியாம்.

விலங்கு - குறுக்காக வடிவம் அமையப்பெற்றது; வடமொழியில் 'திர்யக்' என்ற பெயர் இப்பொருள்கொண்டதே. ஏகாரமும், உம்மையும் - இழிவு சிறப்பு. ஒல்லா - ஒல்லாது என்பதன் விகாரம். தாய் - இறந்தகால வினை யெச்சம்; தா - பகுதி, இதுவே உகரம் பெற்றுத் தாவுஎன நிற்பது ; ய் - கா லங்காட்டும் விகுதி. இன்னாதே, ஏ - தேற்றம். அளபெடை யிரண்டும் - செய்யுளோசைநிறைக்கவந்தன ; இங்ஙனம் அளபெடைகள் அடுத்துவந்தது, அளபுத்தொடை. கைவிடுதல் என்பதில், 'கை' என்பது - தமிழுபச ருக்கம்; [உபசர்க்கமாவது - வினைச்சொல்லோடு கூடி அதன் பொருட்கு உப காரப்பட்டு வருவது.] (ருஎ)

58.—(இ - ள்.) (ஒருவர்),தம்குற்றம்நீக்கலர்ஆகி-தமதுகுற்றத்தைநீக்கிக் கொள்ளமாட்டாதவராய், பிறர் குற்றம் தீர்த்தற்கு - அயலாருடைய குற்றத் தை(த்தமது போதனையால்) நீக்குதற்கு, எங்கு எங்கும் இடை புகுதல்- (தாம்) பல இடங்களிலும் நடுவிற் பிரவேசித்தல்,—வியன் உலகில் எங்கும் - பெரிய உலகத்தில் எவ்விடத்தும், வெள்ளாடு—, தன் வளி தீராது - தனது வாத நோயைத் தீர்த்துக்கொள்ளமாட்டாமல், அயல் வளி தீர்த்துவிடல் - (தனது பாலினால்) அயலாருடைய வாதநோயைத் தீர்த்தல்போ லாகும் ; (எ - று.)

**காட்சியணி.** தம்மிடத்துள்ள குற்றத்தைப் போக்கிக்கொள்ளாது சிலர் பிறர்குற்றத்தைப் போக்கமுயல்வது பேதைமையென்பதுகருத்து. அவர்பிறர் குற்றம்போக்க முயல்வது, பிறரிடமிருப்பது குற்றமென்றும், அதனைவிலக்கு

தல் இன்றியமையாதென்றும் உணர்ந்தன்று, தற்செயலாய்அமைவதுஎன்பது தோன்ற, அறிவில்லாத ஆட்டை உவமையெடுத்துக் கூறினர். பிறர்நோயைப் போக்கவேண்டு மென்னும் அறிவு வெள்ளாட்டுக்குச் சிறிது மில்லை யென்பதும், அதன்பாலுக்கு அக்குணம் அமைந்திருப்பதுஇயற்கையென்பதும்அறிக. தம்குற்றம் நீக்கமாட்டாது பிறர் குற்றம் நீக்குத லொன்றையே கருதி உவமை கூறப்பட்டது. ஆடு தனது பாலினற் பிறருடைய வாத நோயைப் போக்கினும் தனது வாதநோயைப் போக்கிக்கொள்ளமாட்டுகிறதில்லை; அது போலவே, பேதையர் தமது முயற்சியாற் பிறர் குற்றத்தைப் போக்கினும் தமது குற்றத்தைப் போக்கிக்கொள்ள மாட்டுகின்றனரில்லை யென்க. இனி, "தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம், வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர் - திங்கள், கறையிருளை நீக்கக் கருதா துலகில், நிறையிருளை நீக்கு மேல்நின்று" என்றபடி தம்மிடத்துள்ள குறைகளைப் பொறுத்துப் பிறர் குறைகளைப் போக்க முயல்வது, வெள்ளாடு தன்வளிதீராது அயல்வளிதீர்த்துவிடுதல்போலச் சிறப்புடையதாகுமெனவும்பொருள்கொள்ளலாம்.

நீக்கலர் - எதிர்மறைப் பலர்பால் வினையாலணையும்பெயர்; அல் - எதிர்மறையிடைநிலை. வியன் - அகலமுணர்த்தும் உரிச்சொல்: வியலென்றும் வழங்கும். 'இடைப்புகுதல்' என்றும் பாடம். வெள்ளாடு - ஒருவகையாடு. காராட்டை வெள்ளாடென்பது, மங்கலவழக்கு எனப்படும். அயல் - அயலவர்க்கு ஆகுபெயர். (நிஅ)

*59.—(இ - ள்.) வரை தாழ் - சிகரத்தினின்று இறங்குகிற, இலங்கு அருவி - விளங்குகிற நீரருவிகளையுடைய, வெற்ப - மலைகளையுடைய அரசனே!—உரை சான்ற சான்றோர் - புகழ்மிகுந்த பெரியோர், ஒடுங்கி உறைய - ஒடுங்கியிருக்க, நிரை உளர் அல்லார் - (குணஞ்செயல்களில்) ஒழுங்குடையவரல்லாத கீழோர், நிமிர்ந்து பெருகல் - (செல்வத்தால்) ஓங்கிப் பெருகுத லாகிய, அதுவே - அத்தன்மையன்றே, சுரை ஆழ அம்மி மிதப்பு - (நீரிற்) சுரைக்காய் அமிழ்ந்துவிட அம்மிக்கல் மிதத்தலோடு ஒப்பது; (எ - று.)

**காட்சியணி.** நீரில் மிதத்தற்குரிய சுரைக்காய் அமிழ அமிழ்தற்குரிய அம்மி மிதந்தால் அது விபரீதமாதல்போல, செல்வஞ்செழித்தற்குத் தக்க மேலோர் அச்செல்வம் பெறாது ஒடுங்கிக்கிடக்க அதற்குத்தக்கவரல்லாத கீழ்மக்கள் செல்வம்பெற்றுச் செழித்துவாழ்வராயின் அது தகுதியன்றென்பதாம். ("இம்மியன நுண்பொருள்க ளீட்டி நிதியாக்கிக், கம்மியரு மூர்வர் களிறேடைநுதல் சூட்டி, அம்மி மிதந் தாழ்ந்து சுரை வீழ்ந்தது" என்ற சிந்தாமணிச்செய்யுளையுங் காண்க.) நிரை - பரம்பரையாகவருகிற குடிமரபுமாம். வரை தாழ் அருவி என்பதற்கு - கரை தாழும்படி மிக்குவருகிற அருவி யென்றும் பொருள்கொள்ளலாம். (நிகூ)

60.—(இ - ள்.) ஆற்ற பெரியார் - மிகவும் (வலிமையாற்) பெரியவரோடு, பகை வேண்டி கொள்ளற்க - பகைமையை விரும்பிக் கொள்ளாதிருக்க வேண்டும்: (முற்காலத்திலே), அரக்கன் - ஒரு ராக்ஷசன் [இராவணன்], போற்றாது கொண்டு - அறிவினால் ஆராயாது (தன்னினும் ஆற்றல்மிக்கவனை இராமபிரானோடு பகைமை) கொண்டு, போரின் அகப்பட்டான் - போரில் அகப்பட்டு இறந்துபோனன்; நோற்ற பெருமை உடையாரும் - தவஞ்செய்துவரங்கள்பெற்ற மகிமையுடையவர்களும், கூற்றம் புறம் கொம்மை கொட்டினர் இல் - யமனை முதுகிற் கொம்மைகொட்டிப் பிழைத்தாரில்லை; (எ - று.)

**வேற்றுப்பொருள்வைப்பணியும், ஏதுவணியுஞ் சேர்ந்துவந்த சேர்வையணி.** கொள்ளற்க - எதிர்மறைவியங்கோள். நோற்ற, நோல் - பகுதி. உம் -

உயர்வுசிறப்பு. கொம்மைகொட்டல் - அகங்கைவிரித்துத்தட்டுதல். முதுகிற் கொம்மைகொட்டுதல், இகழ்ச்சிக்குறிப்பு ; "கூற்றத்தைக் கையால் விளித் தற்றோ லாற்றுவார்க்கு, ஆற்றாதா ரின்னா செயல்" என்ற திருக்குறளில் 'கை யால்விளித்தல்' போல. போர் - பொரு என்ற முதனிலை திரிந்த தொழிற் பெயர். இன் - ஏழனுருபு. (௬0)

61.— (இ - ள்.) இன் ஒலி நீர் - இனிமையான ஓசையையுடைய அருவிநீர், கல் மேல் இலங்கு - கற்பாறைகளின்மேல் விளங்கப்பெற்ற, மலை - மலைகளையுடைய, நாட - நாட்டையுடைய அரசனே!—தொன்மையின் மாண்ட துணிவு ஒன்றும் இல்லாதார் - பழையநூல்களின் மாட்சிமைப்பட்ட துணிபு சிறிதும் இல்லாதவர், நன்மையின் மாண்ட பொருள் பெறுதல் - நன்மையான் மாட்சிமைப்பட்டசெல்வத்தைப் பெறுதல்,—மா காய்த்து தன்மேல் குணில் கொள்ளும் ஆறு - மாமரம் காய்த்துத் தன்மேற் (பிறரெறியுங்) கல்லை யேற்றுக்கொள்ளுந் தன்மை போலும் ; (எ - று.)

மாமரம் மிகுதியாகக் காய்த்திருந்தாலும் வேண்டினவர்க்கு வேண்டின படியெல்லாம் அக்காய்களைத் தானே கீழேயுதிர்த்துக்கொடாமையால் அதன் காய்களைப்பெறவேண்டி அதனைப் பலரும் கற்கொண்டெறிகின்றனரன்றோ? இங்ஙனம்காய்த்த மாமரம் தன்காய்களைப் பிறர்க்குத் தானே எளிதிற்கொடா மையாற் பிறராற்கல்லடிபடுதல்போல, பழமையானநூல்களிற்பயின்று அதிற் கூறியகொள்கைகளையறியாதவர் நல்லசெல்வத்தைப்பெற்றால் அதனைப் பிறர்க்கு எளிதிற்கொடாமையாற் பலராலுஞ் சொல்லம்புதொடுத்துத் தூஷிக்கப் படுவர்: அதுவுமன்றி, அப்பொருளை வலியக்கவரக்கருதிய கள்வர் முதலியோரால் அடித்து உபத்திரவிக்கப்பட்டுப் பொருளையிழந்து வருந்துவரென்பதாம். காட்சியணி. நல்லசெல்வத்தைப்பெற்றால் அதற்குப் பயன் தாம்அனுபவித்தலும் பிறர்க்கு ஈந்து இம்மைப்பயனாகிய புகழையும் மறுமைப்பயனாகிய புண்ணியத்தையும் பெறுதலுமேயென்ற கொள்கை முன்னோரால‌ருளிச்செய்யப்பட்ட தருமசாஸ்திரங்களில்தேர்ச்சியின்றி எளிதில்மனத்திற்பதியாதாதலால், 'தொன்மையின் மாண்ட துணிவொன்றுமில்லாதார்' என்றார். பொருள் இன்பத்துக்கும் அறத்துக்கும் சாதனமாய் இம்மைமறுமைப்பயன்களை யளிக்குஞ் சிறப்பை யுடைமையால், அதற்கு 'நன்மையின் மாண்ட' என்ற அடைமொழிகொடுக்கப்பட்டது. இன்னவை நல்லவை இன்னவை தீயவை யென்று பகுத்தறியுந்திறம் தொன்னூல்துணிபுணராதார்க்கு இன்மைவிளங்க, அவர்க்கு அசேதனமான மரத்தை உவமைகூறினார். மாமரத்தை எடுத்துக்கூறினது, அதன்காய்போல அவர்பெற்ற செல்வம் பிறர்விரும்பக்கூடியதாதல் பற்றி யென்க. மரத்தின் உவமையால், மரம் தன்காயைத் தானும்நுகரமாட்டாமைபோல, இவர் தமது செல்வத்தைத் தாமும் அனுபவிக்கமாட்டாரென்பதும் தோன்றும். அதற்குக் காய்த்ததனாலாகிய பயன் குணிலடிபடுதலே, இவர்க்குச் செல்வம்பெற்றதனாற் பயன் பிறர்செய்யும் நிந்தனைக்கும் உபத்திரவத்துக்கும் விஷயமாகுதலே யென்க.

தொன்மை - பழமை : பழமையான நூல்களுக்குப் பண்பாகுபெயர். மாண்ட, மாண் என்ற பண்படி - பகுதி ; [இறந்த என்னும் பொருளில், மாள் என்றது - வினைப்பகுதியாம்.] இன்னொலி - இனிமையென்னும் பண்பு ஈறுபோய் இடையிகரமுங் கெட்டது. 'கன்மே லிறங்கும்' என்றும் பாடம். குணில் - எறிகல். (குணில், கவண் என்பன - ஒருபொருளன.) இனி, குணில் - எறியுங் குறுந்தடியுமாம் ; "கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்" என்றவிடத்துப்போல. 'மாகாய்த்து' என்ற பாடம் இலக்கணத்துக்கு ஒத்தது.

62.—(இ - ள்.) தெரியாதவர்தம் - அறிவில்லாதவர்களுடைய [அறிவில்லாதவர் தம்மைக்குறித்துச் சொல்லுகிற], திறன் இல் சொல்- தகுதியில்லாத சொற்களை, கேட்டால் - (அறிவுடையோர்)கேட்டால், பரியாதார்போல இருக்க - (அதற்குத் தாம்) வருத்தப்படாதவர்போல உதாசீனமாயிருக்கக்கடவர் ; (அங்ஙனம் பொறுமைபாராட்டிப் பெருமைகொள்ளாமல்), பரிவு இலா வம்பலர் வாயை அவிப்பான் புகுவாரே - (பிறர்மேல்)அன்பில்லாத அந்த அயலாருடைய வாயை அடக்கப்புகுபவர்களோ வெனின்,—அம்பலம் தாழ் கூட்டுவார் - வெளியிடத்துக்குத் தாளிட முயல்பவரோ டொப்பர்; (எ - று.)

காட்சியணியும்,ஏதுவணியும் சேர்ந்துவந்தசேர்வையணி. அம்பலமாவது - சுற்றுச்சுவரும் வாயிற்கதவும்இன்றி ஒருவற்கேயுரியதாகாமற் பலர்க்கும் பொதுவான இடம். பலரும்வந்துகூடுவதான பொதுவிடத்தில் எவரையும் வரவொட்டாமல் தாளிடுவது ஒருவர்க்கு இயலாதகாரியமும் பரிகாசத்துக்கு இடமுமாதல்போல, அன்பும் அநுதாபமும் அறிவும் ஒருவரையறையுமில்லாமற் கண்டபடிபேசுகிறவர்களுடைய வாயை அப்படிப்பேசவொட்டாமல் அடக்குவது ஒருவர்க்கு இயலாதகாரியமும் பரிகாசத்துக்கு இடமுமாகும் ; ஆதலால், அவர்களுடையபழிச்சொற்களைக் கேட்டாலும் வருத்தப்படாமற் கேளாதவர்போலச் சும்மாஇருப்பதே நல்லது என்பதாம். 'திறனில் சொல்' என்றதனால், அவர்கள் அங்ஙனம் கண்டபடி பேசுவதனால் அவர்களுடைய வாய்க்குக் கேடேயன்றி மற்றவர்க்கு ஒருதீங்கும் உண்டாவதில்லை யென்பதும், அங்ஙனம் பேசுவதில் அவர்க்கும் யாதொருபயனும் இல்லை யென்பதும் தோன்றும்; திறன் - பெருமை, பயன், வலிமை. பரிவு - கேட்போர் மனம்வருந்துவரே யென்னும் இரக்கம். மனத்தில்வருத்தங்கொண்டாலும் அதனைவெளிக்காட்டினால் இவர்வருந்துதலையே ஒருபெரும்பயனாகக் கருதி அவர் மகிழ்ந்து மேன்மேற்கூறுவ ராதலாலும், அங்ஙனம்வருத்தங்காட்டாது உபேக்ஷையாயிருந்தால் அவர் தாமே இதிற்பயனில்லையென்றெண்ணியும் வாய்நொந்தும் ஓய்ந்துவிடுவ ராதலாலும், 'பரியாதார்போல இருக்க' என்றார்.

தெரியாதவர் - நன்மைதீமை பகுத்து உணராதார். திறன் - திறமென்பதன் இறுதிப்போலி. இல்சொல் - பண்புத்தொகை. இருக்க - வியங்கோள். அவிப்பான்-எதிர்காலவினையெச்சம் ; பான்-காலங்காட்டும் விகுதி. ஏ - தெரிநிலை. அம்பலம் - அம்பர மென்னும் வடசொல்லின் விகாரம். வம்பலர் - அயலார் ; வம்பு அலர் வாயை எனக் கொண்டு, வீணான நிந்தைச் சொற்களையுடைய வாயை யென்று உரைப்பாரு முளர் ; அலர் - பலரும்அறியத் தூற்றும் மொழி. (சுஉ)

# ஸிம்பலீன் மகாராஜன் கதை.

அங்கிலேயபாஷையில் மிகச்சிறந்த மகாகவியான உவில்யம் ஷேக்ஸ்பியர் என்பவரால் அந்தப்பாஷையில் எழுதப்பட்ட பல நாடகங்களுள் ஸிம்பலின் என்பது ஒன்று. ஷேக்ஸ்பியர்நாடகங்கள் பல, பிறகு லாம் என்பவரால் அங்கிலேயபாஷையில் கதைரூபமாக வசனநடையில் எழுதப்பட்டன. அவற்றிற் சில, தமிழ்மொழிபெயர்ப்பிலும் வந்துள்ளன. அவைகளுள் ஒன்றான இந்த ஸிம்பலீன்மகாராஜன்கதை,(காலஞ்சென்ற)பி. வி. ராமஸ்வாமி ராஜு (பி - ஏ.) என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டது. இவர், வடமொழி தென்மொழி, இங்க்லிஷ், தெலுங்கு முதலிய பலபாஷைகளில் நல்ல தேர்ச்சியையும் இனியகவிதாசக்தியையும் உடையவர். இங்க்லிஷ்தேசசரித்திரத்தை வடமொழியில் ராஜாங்கலமகோத்தியானமென்னும் பெரியதொரு பெருநூலாக இயற்றியிருக்கிறார். இவராற் செய்யப்பட்ட பிரதாபசந்திரவிலாசமென்னும் தமிழ்நாடகமும் உண்டு. இவர், காஞ்சிபுரம் பச்சையப்பமுதலியார் ஹைஸ்கூல் தலைமையுபாத்தியாயராயிருந்தபின்பு, லண்டனுக்குச் சென்று பரீக்ஷைதேறிச் சென்னைஹைகோர்ட்டில் பாரிஸ்டராயிருந்தனர்.

இங்க்லிஷ்நாடகங்கள்-ட்ராஜெடி [Tragedy], காமெடி [Comedy] என இரண்டு பகுப்புடையன. கதாநாயகனது தீமையோடு முடிவது, ட்ராஜெடி. கதாநாயகனது நன்மையோடு முடிவது, காமெடி: இவற்றில், ஸிம்பலீன் - காமெடியாகும்.

அகஸ்தஸ் ஸீஸர் என்பது, ஓர்அரசன் பெயர். ராஜ்யபரிபாலநம் - அரசாளுதல்.

மனைவி - வீட்டிலேயிருந்துஸம்ஸாரகாரியங்களைப் பார்த்துக்கொள்ளுகிறவளாதல் பற்றி வந்த பெயர். மனை - பகுதி, இ - பெண்பால் விகுதி, வ் - பெயரிடைநிலை.

அரமனை - அரண்மனை அல்லது அரசமனை என்பதன் மரூஉ. முறையே பாதுகாவலையுடையவீடென்றும், இராஜகிருகமென்றும் பொருள்படும்.

வயது - வயஸ் என்ற வடசொல் திரிந்தது.

'இளையவன்'எனப் படிக்க.

பச்சைப்பாலகன்-இளங்குழந்தை; பசுமை, இளமையின்மேலது: பச்சை - பண்புப்பெயர்; பசுஎன்றபண்படி, தன்ஒற்று இரட்டிற்று: ஐ - விகுதி.

தாதிகள்-குழந்தையை வளர்க்கும் பெண்கள்; செவிலித்தாயர்.

கதி - நிலைமை.

குடிகெடுக்கும் - ஸம்ஸாரத்தைச் சீர்குலையச்செய்யும்.

சீறுமாறு ஆய் - கோபத்தோடு பகைமைபாராட்டி.

மணந்து - மணஞ்செய்து.

புதல்வன் - பிள்ளை. பெண்பால், புதல்வி.

குமாரத்தி - குமாரனென்பதன் பெண்பால். குமாரியென்பது, நேர்.

பட்டம் - அரசாட்சி.

கட்டிக் கொள்ளுதல் - விவாகஞ்செய்துகொள்ளுதல்; உலகவழக்கு.

மகுடம் - கிரீடம், முடி.

பக்கம்—33.

அதிக த்வேஷம் - மிக்கபகைமை.

தகப்பன் - தமப்பனென்றும் வழங்கும்.

இணைஅற்ற - ஒப்பில்லாத.

போஸ்துமு [Posthumus] என்ற பெயர், மனைவி கருப்பமாயிருக்கும்போது கணவன் இறக்க அதன்பின்பு பிறந்தவனைக் குறிக்கும்.

மடிந்த விசனம் - இறந்ததனாலாகிய சோகம். பெயரெச்சம், காரணப்பொருளது. வ்யஸநம் - வடசொல்.

அநாதை - கதியற்றது. நாதன் - தலைவன்.

வாத்தியார் - உபாத்தியாயரென்பதன் மரூஉ.

அன்புஉற்று: உற்று - பொருந்தி.

பருவம் - விவாகத்துக்கு உரிய காலம்,

ரகஸ்யம் : இதன் எதிர்மொழி, ஸ தஸ்யம்.

வேவுகாரர் - ஒற்றர்.

வெகு - பஹு-என்றவடசொல்லின் விகாரம்.

க்ரோதம் - வடசொல் : கோபம்.

பிரஜைகள் - ஜனங்கள்.

என்றைக்கும் - எந்நாளிலும்.

பக்கம்—34.

போதித்து - புத்திசொல்லி.

பரிதாபம் - இரக்கம், விசனம்.

செலவு - விடை.

வைரம் - வஜ்ரமென்னும் இரத்தினம்.

விநோத அர்த்தம் - வேடிக்கையாகப் பொழுதுபோக்கும்பொருட்டு.

வாலிபர் - இளமைப்பருவ முடையோர். பால்யரென்றதன விகார மெனலாம்.

தாராளமாய் - கூச்சமில்லாமல், ஒளிப்பின்றி.

நாயகி - மனைவி.

ஸமூஹம் - வடசொல் : கூட்டம்.

வெகுரூபவதி - மிக அழகிய வடிவமுடையவள்.

சீலம் - ஒழுக்கம். விவேகம் - பகுத்தறிவு.

பதிவிரதாதருமம் - கற்பு : கணவனைத்தெய்வம்போலக்கருதி யொழுகும் ஒழுக்கம்.

பக்கம்—35.

வாக்குவாதம் - தர்க்கம்.

தயவு - தயா என்பதன விகாரம். தயையென்றல, சேர்.

கங்கணம் - வடசொல் : கைவளை.

உற்ற - அன்புள்ள, நெருங்கிய.

அசட்டை-அலக்ஷயம் : அஸ்ரத்தா என்ற வடசொல்லின் சிதைவு.

அந்தரங்கம் - ரகசியம் : இதன் எதிர்மொழி, பகிரங்கம்.

கெலிக்க=ஜயிக்க : உலகவழக்கு.

அவா - ஆசை.

பக்கம்—36.

மச்சம் - உடம்பின் மறு

மெது - ம்ருது என்ற வடசொல்லின் விகாரம்.

பள்ளியறைப் பித்திகை - படுக்கையறைச் சுவர்.

சித்திரத்தொங்கல் - அலங்காரமாகத் தொங்கவிடுவது. தொங்கல் - தொழிலாகுபெயர். வெள்ளிச்சரிகை கொண்டு சித்திரவேலைசெய்யப்பெற்ற பட்டுக்களை மேலே தொங்கவிட்டு அவற்றால் அப்பள்ளியறைச் சுவர்கள் மறைக்கப்பட்டிருந்தன வென்க.

சரி - ஸத்ருசः என்ற வடசொல் பிராகிருதபாஷையில் ஸரிஸோ என்று திரிந்து, தமிழிற் சரி யென வழங்கலாயது.

தென்அண்டை - தெற்குப்பக்கம்.

தியானு=டயானு: Diana; பெண்கள்வணங்கும் பெண்தெய்வம். டயானுவின் பிரதிமையை அமைத்தல் தூய்மையுடைமைக்கு என்க.

பொம்மை - ப்ரதிமா என்ற வடசொல்லின் சிதைவு.

சிங்காரம் - அழகு. சருங்காரம் - வடசொல்.

தளம் - இடம்.

காமதேவனை 'கண்பொட்டையன்' என்று சொல்லும் மேனாட்டு வழக்கத்துக்கு மாறாக விசித்திரமாய்க் கண்ணிமைக்குமாறு சித்திரித்திருந்தமை தோன்ற 'கண்கொட்டும் மன்மதனைப்போல்' என்றாரென்க.

பக்கம்—37.

ஒற்றைக் காலின் - ஒருகாலினால்.
ஒன்று+கால்=ஒற்றைக்கால்: [நன்-உயிர் - ஈச,ரு.]

அல்ல=அன்று: வேறு, இல்லை, உண்டு என்பன போல. அன்று அல்ல என்பனவும், ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவாகவழங்குகின்றன ; புதியனபுகுதல்.

கபடம் - வஞ்சனை, தந்திரம்.

கோபவசத்தன் - கோபத்துக்கு வசப்பட்டவன்.

ஏவலாள் - வேலைக்காரன்.

நொடி - இயல்பாக ஒருமுறை கையைநொடித்தற்கு வேண்டும் பொழுது ; ஒரு மாத்திரைப்பொழுது.

பிழைக்கேன்=பிழையேன்· கு சாரியை.

சொன்னுன் - தெரிவித்தான் என்றபடி.
எல்லாவற்றினும் - எல்லாப் பொருள்களிடத்திற்காட்டிலும்அதிகமாக.
ஏன்அளவும் - மிகச்சிறிதும்.
ஐயம் - சங்கை.

பக்கம்—38.

மாறு - எதிர், பிரதி.
நடக்கட்டும் - ஒருவகைவியங்கோள்; உலகவழக்கு.
நஞ்சு - விஷம்.

பக்கம்—39.

ஆசீர்வாதம் - வாழ்த்துக்கூறல்.
அடாத - தகாத, பொருந்தாத.
பாலகர் - மிகச்சிறுவர்.
அவன்பேரில் - அவன்மேல்.
ராஜத்ரோகம் - அரசனுக்குச் செய்யும் வஞ்சனை.
கொஞ்சம் - கிஞ்சித் என்ற வடசொல்லின் சிதைவு.
குழந்தைகளைப் போல - குழந்தைகளிடத்திற்போல.

பக்கம்—40.

கல்விமுதலிய பயிற்சி - படிப்புமுதலியவற்றின் பழக்கம்.
யௌவநம் - வடசொல்: காளைப்பருவம்;அதனையுடையபுருஷர்என்க.
பராக்கிரமம் - பிறரைவெல்லுந்திறம்.
அத்ருஷ்டம் - வடசொல்: கட்புலனுகாதது; இங்கே, நல்வினைப்பயன், பாக்கியம்.
தருணம்-சமயம். மனிதனைப்போல் - புருஷன்போல் என்றபடி.
நிர்மாநுஷ்யம் = நிர்மாநுஷம் - மனிதரில்லாதது.
சில்லென்று - குளிர்ச்சிக்குறிப்பு.
அகோரம் - மிகஉக்கிரம்: தனக்குமேல் உக்கிரமான தொன்று மில்லாதது. கோரமென்றிருப்பது, நேர்: உக்கிரம்.
பட - அனுபவிக்க.
'இதோபார்' என்றது, தன்மனத்தைக்குறித்துத் தான் சொன்னது. இதோ - இங்கே 'இத:' என்ற வடசொல், பிராகிருதபாஷையில் இதோ என நிற்கும். இதன்எதிர்மொழியாகத் தமிழில் அதோ எனவும் வழங்கலாயினர்.
அலந்து - வருந்தி; அல - பகுதி.
தரை = தரா - வடசொல்: (பொருள்களைத்) தரிப்பது.

பக்கம்—41.

பிராணநாயகன்- உயிரோடொத்த [மிக்கஅன்புக்கு இடமான] கணவன்; உயிர்க்குத்தலைவனெனினுமாம்.
சுத்தமோசம் - பெரியமோசம், முழுமோசம். சுத்தம் - (உண்மை) கலப்பில்லாதது என்றபடி.
சகோதரர்-உடன்பிறந்தவர்: ஒருதாய்வயிற்றிற்பிறந்தவர். ஸஹ-கூட, உதரம் - வயிறு. குணசந்தி; 'அ ஆ முன் உ ஊ வரின் இரண்டுங்கெட ஓர் ஓகாரம் தோன்றும்.'
குமாரர் - மன்மதனையுங் குருபமுடையவனென்று சொல்லுதற்கேற்ற மிக்கஅழகுடையவர். கு - குற்சிதம், மாரன் - மன்மதன்.
'கந்தர்வதேவதை' என்றது, மிக்க அழகுபற்றி.
பெண்அரசு - சிறந்தபெண்.
செய்யாதே என்பது - ஏவலொருமை; அதன்மேல், உம்என்பது - ஏவற்பன்மைவிகுதி; கள் - விகுதிமேல் விகுதி. செய்யாதே என்பதில், ஆ- எதிர்மறையிடைநிலை, த் - எழுத்துப்பேறு, ஏ - விகுதி.

பக்கம்—42.

பந்து - வடசொல்: உறவினன்.
வயதுசென்றவன் - கிழவன்.
சுத்தலோபி - ஒன்றுங் கொடாதவன்: முழுலோபி.
கரடுமுரடு - மேடுபள்ளமாய்ச்செவ்வையற்றிருப்பது.
'வெகுநல்லவர்களிடம்' என்றது, தம்மைப்பிறர்போலக்கூறியது; தன்மைப்படர்க்கை.
வருந்தி - வற்புறுத்தி யென்றபடி.

பக்கம்—43.

சகோதரனைப்போல = சகோதரனிடத்திற்போல.
இறைச்சி - மாம்சம்.
பாகம் - சமையலின்பக்குவம்.
ரத்தக்கலப்பு - உதிரசம்பந்தம்.

பிராணனைப்போல் = பிராணனிடத்திற்போல்.
பிரியநாயகன் - அன்புக் கிடமான கணவன்.
அதிதீரர் - மிக்கதைரியசாலிகள்.
திராணி - பலம் : உலகவழக்கு.

பக்கம்—44.

உண்டுபட்டது - உண்டாயிற்று.
உதாரகுணம் - உயர்ந்தகுணம்.
அயர்ந்து - சோர்ந்து.
மெய் - உடம்பு.
திரும்பிவந்து = திரும்பிவர : எச்சத்திரிபு.
பாதரக்ஷை - காலைப் பாதுகாப்பதென்று பொருள்படும்.
அமைதி - அமரிக்கை.
கீர்த்தனை - ஒருவகை இசைப்பாட்டு.
உருக்கமான-கேட்பவர் மனத்தை உருக்கவல்ல.
பிரேதகாரியங்கள் - உயிர்நீத்த உடலுக்குச் செய்யுஞ் சடங்குகள்.

பக்கம்—45.

தோப்பு = (மரங்களின்) தொகுப்பு : மரூஉ.
வசந்தகாலம்-இளவேனிற்பருவம்.
பிரதிதினம் - நாள்தோறும்.
சமாதி - பிணத்தை அடக்கஞ்செய்த இடம்.
இடைந்து-பின்னிட்டு : தோற்று.
மாரிக்காலம் - மழைக்காலம்.
பசுமைநிறத்தை யுடையது, பாசி எனக் காரணக்குறி. பசு என்ற பண்படி, முதல்நீண்டது, இ - பெயர்விகுதி.
கனவு - கனு : சொப்பனம்.

பக்கம்—46.

சம்பவம் - நிகழ்ச்சி.
சக்கரவர்த்தி - அரசர்க்கரசன் : ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்துகிறவன்.
ஆரணியமார்க்கம் - காட்டுவழி.
ஆற்றொணுத் துயரம் - பொறுக்க முடியாத துன்பம் : ஆற்றொணு-ஆற்றவொன்றாத என்பதன் மரூஉ. துயரம், அம் - சாரியை.
சாயல் - வடிவத்தின் அமைதி.
வியக்க - அதிசயிக்க.

பக்கம்—47.

வ்ருத்தன் - வடசொல்: கிழவன்.
பச்சாத் தாபம் - (ஒருகாரியத்தைச்செய்த) பின்பு(தானே)இரங்குதல்: கழிவிரக்கம்.
தீவினர் - தீவிலுள்ளவர். தீவு - த்வீபம் என்ற வடசொல்லின் விகாரம்: நாற்புறமும் நீர்சூழ்ந்த இடம்.
வெற்றி - தொழிற்பெயர். வெல் - பகுதி, றி - விகுதி.
கைதி-குற்றவாளி : உலகவழக்கு.

பக்கம்—48.

இட்டு - அழைத்து : உலகவழக்கு.
எஜமான் - தலைவன். யஜமான் - வடசொல் : யாகத்தலைவனைக் குறிக்கும்.
அநேகர் - பலர். ந + ஏகம் = அநேகம் : வடமொழிச்சந்தி ; ஒன்றல்லாதது.
பதைபதைத்தல் - இரட்டைக்கிளவி.

பக்கம்—49.

உயிர்த்தவன் - பிழைத்தவன்.
மெள்ள = மெல்ல; மெதுவான குரலாய்.
சும்மா + இரு = சும்மாயிரு என்று புணர வேண்டியது, இடைச்சொற்புணர்ச்சியாதலால், யகரம்பெற்றது ; "இடை யுரி வட சொலி னியம்பிய கொளாதவும்."
தீரம் - தைரியம்.

பக்கம்—50.

பாசம் - கயிறு ; அதுபோலப் பந்தப்படுத்தும் அன்பின்மேல் நின்றது : உவமையாகுபெயர்.
வாக்குத் தத்தம் - வாக்குக் கொடுத்தல்.
சுவாமீ - யஜமானனே ! ஸ்வாமீ - வடசொல் : தலைவன்.

பக்கம்—51.

நன்றி யற்றவன் - நன்றி கெட்டவன், செய்த உதவியை மறந்தவன்.
ஸேநா + அதிபதி : சேனைத்தலைவன்; தீர்க்கசந்தி.
சித்திரவதை - பலவகையாக வருத்திக் கொல்லுதல்.
உரக்க - உரத்தகுரலாக.

பக்கம்—52.

மருமகன் - மகளின் கணவன்.

அவகாசம் - சந்தர்ப்பம்.

கொண்டாடிக் கொண்டதின் பேரில்—கேட்டுக்கொண்டதனால்.

மத்தியஸ்தம் - நடுநின்று நியாயந் தீர்த்தல்.

பக்கம்—53.

சச்சரவு - கலகம், சண்டை.

---

## எலிஜபெத் ப்ரை.

இந்த ஸ்த்ரீயின் பெயர், இங்கு இலக்கணையாய், அவளது சரித்திரத்தின் மேல் நின்று, அச்சரித்திரத்தைக் கூறுகிற நூலுக்குப் பெயராயிற்று. இது பன்னிரண்டு உத்தமிகள் கதையில் ஒன்று; இங்கிலீஷில் ஆர். யஸ். பென்ஸன் துரைசானியாரால் எழுதப்பட்டது. 'பன்னிரண்டு உத்தமிகள் கதையைக் கல்விமுதலியவற்றிற்சிறந்த பல துரைசானிகளைக் கொண்டு இங்கிலீஷில் எழுதுவித்து அதனைத் தமிழில் மொழிபெயர்த்துத் தமது 'மகாராணி' என்னும் மாதாந்தப்பத்திரிகை மூலமாகவும் புத்தகரூபமாகவும் லோகோபகாரமாக வெளியிட்டுத் தந்த மகான், திவான் பகதூர் வி. கிருஷ்ணமாசாரியர். இவர் சென்னைச் சருவகலாசங்கத்தின் அங்கத்தினருள் ஒருவர் என்பதும், அச்சங்கத்துத் திராவிட பாடநியமனசபைக்குத் தலைவரென்பதும், அச்சங்கத்துத் தமிழ்ப்பரீக்ஷகர் கூட்டத்துக்குச் சிலகாலம் தலைவராயிருந்தவரென்பதும், சென்னைச்சுதேசபாஷைப் புத்தகசங்கத்தின் சம்பந்தமாகவும் தனியாகவும் இக்காலத்து மகளிர்க்கும் ஆடவர்க்கும் சிறுவர்க்கும் உபயோகமாகத் தக்க அநேக புஸ்தகங்களை எழுதியும் தக்கவர்களைக்கொண்டு எழுதுவித்தும் பதிப்பித்தும் வெளியிட்டும் தமது காலமுழுவதையும் கல்விப்பொழுது போக்காகவே கழித்துவருகிறவரென்பதும், அறிவிலும் ஆண்டிலும் முதியராயிருந்து ஊக்கந்தளராது உழைப்பவரென்பதும், மற்றும் இவருடைய வைதிகலௌகிக யோக்கியதைகளும் ஸாமர்த்தியங்களும் குணாதிசயங்களும் லோகப்பிரசித்தமானவை. இவர்பக்கல் தமிழுலகம் கடமைப்பட்டமைக்கு, புலவர்புராணம் என்னும் நூலை இவர் வெளியிட்டதொன்றே சான்றாம். (பன்னிரண்டு உத்தமிகளாவார்:—1. எலிஜபெத் ப்ரை, 2. எலிஜபெத் பாரெட்ப்ரௌனிங், 3. ப்ளாரென்ஸ் நைத்திங்கேல், 4. ஹாரியெட்மார்த்திநோ, 5. ஹாரியெட் பீச்சர்பீச்சர்ஸ்டோ, 6. ஷார்லெட் ப்ரோந்தி, 7. ப்ரின்ஸெஸ் ஆலிஸ், 8. ரொமேனியா நாட்டு ராணியாகிய எலிஜபெத், 9. சேட்மார்ஸ்டென், 10. பிரான்ஸிஸ்பவர்காப், 11. பர்டெட்கௌட்ஸ் பெருமாட்டி, 12. மேரிகார்பெண்டர் என்பவர்கள். இவர்கள், விக்டோரியா சக்கரவர்த்தினியாரின் காலத்தவர்.) எலிஜபெத் என்பது, இயற்பெயர். ப்ரை என்பது, கணவனால் வந்த பெயர்; 61-ஆம் பக்கம் பார்க்க. தந்தையால்வந்தபெயர், கர்னி; 55-ஆம் பக்கம் பார்க்க.

மாநுஷஜந்மம் - வடமொழித்தொடர்: மனிதப்பிறப்பு.

லோக+உபகாரம: குணசந்தி.

'நமது தேசத்து ஸ்திரீகள்' என்றது - சீதை, த்ரௌபதி, சாவித்திரி ஆண்டாள், காரைக்காலம்மை, ஔவை முதலியோரை.

வாஸ்தவம்-உண்மை.

சுயநயம்=ஸ்வயநயம்; சொந்தநன்மை: 'ஸ்வநயம்'என்றிருப்பது நலம்.

வாழ்நாள்-ஆயுள்; வினைத்தொகை.

பெருமாட்டிகள் - சிறந்தமகளிர்.

பெருமாட்டி - பெருமான் என்பதன் பெண்பால்.

ஸன்மார்க்கபோதனை - நல்வழியைப் போதித்தல்.

பக்கம்—55.

கர்னி என்பது, தந்தை சம்பந்த மான பெயர்; மிஸ் கர்னி யென்க.

ஈடுபடுதல் - ஆழ்தல்.

மிதம் - கொஞ்சம் : அளவுபட்டது.

உண்டி - உணவு : உண்ணப்படுவது ; இ - செயப்படுபொருள் விகுதி ; ட் - எழுத்துப்பேறு.

உடை - உடுப்பு : உடுக்கப்படுவது. ஐ - செயப்படுபொருள் விகுதி.

பாவனை - தோற்றம். போற்றி - பா துகாத்து. பிறழாது - தவறாமல்.

தினசரி - தினந்தோறும் நடத்தும் நடவடிக்கையை எழுதிவைக்கும் புத் தகம் ; diary.

இடுக்கண் வந்து உற்றவிடத்தும் - துன்பம் வந்து நேர்ந்த சமயத்திலும்.

இறைவன் - கடவுள் ; தலைமையுணர் த்தும் இறைமையென்னும் பண்பின டியாகப் பிறந்த பெயர் ; வ் - பெயரி டைநிலை.

சரண கமலம் - திருவடித் தாமரை மலர் ; கமலம்போன்ற சரணமென முன்பின்னாகத் தொக்க உவமைத் தொகை யாகக்கொள்க.

போற்ற - வணங்க, துதிக்க.

இறுதி - அழிவு ; 'தி' விகுதிபெற்ற தொழிற்பெயர் ; இறு - பகுதி. இதன் எதிர்மொழி - உறுதி.

வாது ஆடி - வாதம்செய்து.

விழல் - ஒருவகைப்புல்.

பக்கம்—56.

மாசு - குற்றம்: தீயசிந்தனை. திரியாது - மாறுபடாமல்.

கொடி இல்லா மனை - பூங்கொடி போன்ற மனைவி யில்லாத வீடு; கொ டி-உவமையாகுபெயர்; "நீறில்லாநெ ற்றிபாழ் நெய்யில்லா உண்டி பாழ், ஆறில்லாவூருக்குஅழகுபாழ் - மாறில், உடன்பிறப் பில்லா உடம்பு பாழ் பா ழே, மடக்கொடி யில்லா மனை" என் றது நல்வழி.

கடன் - கடமை. சீர் - செவ்வை.

பாங்கு - அனுகூலம்.

வழிபடல் - உபசரித்தல்.

அறிஞர் - அறிவுடையார்; ஞ்-பெய ரிடைநிலை.

கல்லார் - படியாதவர்,

(ஒருவனை), அடக்கம் - அடக்கமா கிய தருமம், அமரார் உள் உய்க்கும் - (மறுமையில்) தேவலோகத்திற்செலு த்தும்: அடங்காமை - அடங்காமையா கிய பாவம், ஆர்இருள் உய்த்துவிடும்- (தங்குதற்கு) அரிய இருளிற் செலுத் தும்;(எ - று.)-[திருக்குறள், அடக்க முடைமை,க'] அடக்கமாவது - மன மொழிமெய்கள் தீயவழியிற் செல்லா மல் அடங்குதல்;' அம்' விகுதிபெற்ற தொழிற்பெயர்;பகுதி வலித்தல்,விகா ரம். அமரர் :-(அமிர்தம்உண்டதனா ல்) மரணமில்லாதவர்; வடசொல். உ ள - இடம்;ஏழனுருபாகவுங் கொள்ள லாம். அமர் அருள் எனப்பிரித்து, நிறைந்த (கடவுளின்) கருணையிற்சே ர்க்கும் என்றலும் ஒன்று ; அடங்கா மை - எதிர்மறைத் தொழிற் பெயர். ஆர் இருள் - பண்புத்தொகை; வினை த்தொகையாகக் கொண்டு, நிறைந்த இரு ளெனினும்ஆம். இருள் என்பது- இருள்மயமான 'தாமிஸ்ரம்' என்னும் நரகத்தைக் குறிக்கும். உய்த்துவிடு மென்பது, ஒருசொல்லின் தன்மைய தாய் நின்றது; இதில் 'விடு' என்ற து ணைவினை, துணிவுப்பொருளை யுணர் த்தும். அடக்கமாகிய நற்செயலுடை யார், அந்நல்வினையின்பயனால் மறு மையிற் சுவர்க்க இன்பம் பெறுவர் : அடங்காமையாகிய தீச்செயலுடை யார், அத்தீவினையின்பயனால் மறுமை யில் நரகத்துன்பம் நுகர்வர் என்பது, கருத்து.

மடம் - கபடமின்மை. நாணம் - வெட்கம், லஜ்ஜை. அச்சம் - பயம்; அஞ்சவேண்டியவற்றிற்கு அஞ்சுதல். 'அம்'விகுதிபெற்ற தொழிற்பெயர் ; பயிர்ப்பு - தகாதவற்றில் அருவருப்பு. இந்நான்கும், மகடூஉக்குண மெனப் படும்.

சப்தம் - வடசொல்: ஒலி.

பற்று - அன்பு.

பக்கம்—57.

மடந்தை - பெண்,

யோசித்து = ஆலோசித்து.

வித்து - விதை.

உள்ளுறை - மறைபொருள்: உள்ளே பொருந்தியது.
தேகவியோகம் - உடம்பை விட்டு (உயிர்) நீங்குதல்.

பக்கம்—58.

கட்டழகி - மிக்க அழகுடையவள்.
வியந்தார்கள் - அதிசயித்துக்கொண்டாடினார்கள்.
மனது ஆர - மனப்பூர்வமாக.
கடிந்து - நீக்கி.
கடைப்பிடி - உறுதியாகக் கைக்கொள்.
"நன்மை கடைப்பிடி"— ஆத்திசூடி.
நாளடைவில் - காலக்கிரமத்தில்.
வெடுவெடுப்பு - கடுமையாயிருத்தல், கோபித்துப்பேசுதல்.
டம்பம் -வடசொல்:வீண்பெருமை பாராட்டல். இறுமாப்பு-கர்வம்; தொழிற்பெயர்; இறுமா - பகுதி,பு - விகுதி, ப் - சந்தி.
உல்லாச விநோதம் - உள்ளக்களிப்புடனே பொழுதுபோக்குந் தன்மை. பற்றின - சேர்ந்தன.

பக்கம்—59.

அவதூறுபேசுதல்-பிறர்பழி கூறல்.
ஆண்டவன் - கடவுள்: (எல்லாவற்றையும்) அடிமைகொண்டவன்; இறந்தகாலவினையாலணையும் பெயர்: ஆள்-பகுதி. அநுதாபம் - கழிவிரக்கம்.
வைராக்கியம் -பொருட்பற்றில்லாமை. வைதிகர் - வேதத்திற் கூறிய படிநடப்பவர்.

பக்கம்—60.

விருந்துமண்டபம் - விருந்துநடக்குமிடம். இளமை - இளம்பிராயம், நீரில் குமிழி - ஜலத்திலே(தோன்றி உடனே அழியும்) குமிழி (போலும்); நிறைசெல்வம்-நிறைந்தபொருள்கள், நீரில் சுருட்டும் நெடுந் திரைகள் - ஜலத்திலே (காற்றினால்) மடக்கப்படுகிற நீண்ட அலைகள் (போலும்); யாக்கை-உடம்பு, நீரில் எழுத்து ஆகும்-'ஜலத்திலேஎழுதின எழுத்துப் போலும்; (இங்ஙனம் இருக்க), நமரங்காள் - நம்முடையவர்களே! (நீங்கள்), எம்பிரான் மன்று வழுத்தாதது என்-நமக்கெல்லாந்தலைவனான சிவபிரானது சிதம்பர தலத்தைத் துதியாதது என்னகாரணத்தால்? (எ - று.)

எ. - இரக்கம். [நீதிநெறிவிளக்கம் - காப்பு.] இப்பாட்டில் வந்த மூன்றுஉவமைகளும், நிலையில்லாமையைக் காட்டுவன. நீர்க்குமிழி தோன்றி உடனே அழிதலும், அலை மாறி மாறிவந்து அழிந்துகொண்டேயிருத்தலும், நீரில்எழுதியஎழுத்துச் சிறிதுபொழுதும்நில்லாமல் இருந்தஇடமும்தெரியாதபடி உடனே அழிதலும் காண்க. தேர்ந்த அறிவில்லாதவர்கள் பெரும்பாலும் ஆசைவைப்பது, இவ்வுலகஇன்பத்தை அனுபவித்தற்குரிய இளமையினிடத்தும், அவ்வனுபவத்துக்குக்காரணமாகிற செல்வத்தினிடத்தும்,அச்செல்வத்தைச்சம்பாதித்துச்செலவுசெய்தற்குக் கருவியும் இளமைப்பருவத்துக்குஇடமு மாகிய உடம்பினிடத்துமே யாதலால், இம்மூன்றன் நிலையில்லாமையை நன்றாக எடுத்துக்காட்டி, இவற்றினிடத்தில் ஆசையைவிட்டுநிலையானஉயிர்நற்கதிபெறுதற்குக்காரணமாகக்கடவுளைத்துதிக்கவேண்டும்என்று தெரிவித்தபடி.

குமிழ்ப்பது குமிழி எனக் காரணப்பெயர்: குமிழ் - வினைப்பகுதி, இ - கருத்தாப்பொருள்விகுதி. சுருட்டு - சுருள் என்பதன் பிறவினை; டு-விகுதி. நமரங்காள் என்பதில், அம்-சாரியை; 'அசை' என்பர் நச்சினார்க்கினியர்: சீவகசிந்தாமணியில் "செல்வம் நமரங்காள் நினையன்மின் செய்தவமே நினைமின் கண்டீர்" என்றவிடத்திற் காண்க. 'நமர்காள்' என விளித்தது, தம்மைப்போன்ற உலகத்தாரை.

மதுர வாக்கு - இனிமையான வார்த்தை. ஆநந்த பரவசர் - தம்வசந்தப்பி ஆனந்தத்துக்கு வசப்படுபவர்.

பக்கம்—61.

வாழ்க்கைப்பட்டார் - மனைவியானார். நாமதேயம்=நாமம், பெயர்.

திக்கு - கதி, சகிக்க - பொறுக்க தொழிற்சாலைப் பாடசாலைகள்= school of arts.

**பக்கம்—62.**

**விந்தை - விநோதம்.**

பாவாடை -பரவிய ஆடையெனக் காரணப்பொருள்படும்: வினைத்தொகை; பாவுதல்-பரவுதல். உடுப்பு-தொழிலாகுபெயர். மட்டுப்பட்டது - குறைந்தது: மட்டு - அளவு. அறிந்து=அறிய: எச்சத் திரிபு.

**பக்கம்—63.**

வடு - தழும்பு, அடையாளம்.

கையாண்டு - அனுட்டித்து.

'அவன்' என்றது, கடவுளை.

**பக்கம்—64.**

கூச்சம் - தொழிற்பெயர்; கூசு - பகுதி.

குடும்பஸஹிதமாய் - குடும்பத்துடனே.

சீமாட்டி - செல்வமகள்; ஸ்ரீமாந் என்பதன் பெண்பால்.

வேற்றுமை - வேறுபாடு, வித்தியாசம்.

வேண்டியளவு - வேண்டியவளவு: தொகுத்தல்.

**பக்கம்—65.**

உசிதம் - தக்கது. இதன் எதிர்மொழி - அநுசிதம்.

கடிகா அரம் - நாழிகைதெரிவிக்கும் யந்திரம்.

**பக்கம்—66.**

பாவிகள் - குற்றவாளிகள்.

சித்தசுத்தி - மனத்தூய்மை.

ஓலமிட்டு - கதறி முறையிட்டு.

பேய்க்கூச்சல் - பெருங்கூச்சல்.

தோற்ற=தோன்ற. இங்கே 'வேதபுத்தகம்' என்றது, Bible.

திராக்ஷைத் தோட்டத் தலைவன் என்னும் உபாக்கியானம்:—"ஒரு மனுஷன் ஒரு திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைச்சுற்றிலும் வேலியடைத்து, இரசத்தொட்டியை உண்டுபண்ணி, கோபுரத்தையும் கட்டி, தோட்டக்காரருக்கு அதைக் குத்தகையாக விட்டு, புறத்தேசத்துக்குப் போயிருந்தான். தோட்டக்காரரிடத்தில் திராட்சத்தோட்டத்துக் கனிகளில் தன் பாகத்தை வாங்கிக்கொண்டு வரும்படி, பருவகாலத்திலே அவர்களிடத்தில் ஒரு ஊழியக்காரனை அனுப்பினான். அவர்கள் அவனைப் பிடித்து, அடித்து, வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள். பின்பு வேறொரு ஊழியக்காரனை அவர்களிடத்தில் அனுப்பினான்; அவர்கள் அவன்மேல் கல்லெறிந்து, தலையிலே காயப்படுத்தி, அவமானப்படுத்தி அனுப்பிவிட்டார்கள். மறுபடியும் வேறொருவனை அனுப்பினான்; அவனை அவர்கள் கொலைசெய்தார்கள். வேறு அநேகரையும் அனுப்பினான்; அவர்களிற் சிலரை அடித்து, சிலரைக் கொன்றுபோட்டார்கள். அவனுக்குப் பிரியமான ஒரே குமாரன் இருந்தான்: என் குமாரனுக்கு அஞ்சுவார்களென்று சொல்லி, அவனையும் கடைசியிலே அவர்களிடத்தில் அனுப்பினான். தோட்டக்காரரோ, இவன் சுதந்தரவாளி; இவனைக் கொலைசெய்வோம் வாருங்கள்; அப்பொழுது சுதந்தரம் நம்முடையதாகும் என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு, அவனைப் பிடித்துக் கொலைசெய்து, திராட்சத்தோட்டத்துக்குப் புறம்பே போட்டுவிட்டார்கள். அப்படியிருக்க, திராட்சத்தோட்டத்துக்கு எஜமான் என்னசெய்வான்? அவன் வந்து அந்தத்தோட்டக்காரரைச் சங்கரித்து, திராட்சத்தோட்டத்தை மற்றவர்களுக்கு ஒப்புக்கொடுப்பான் அல்லவா?" என்பதாம். இக்கதையிற் கூறப்பட்ட திராட்சைத்தோட்டம், உரியவன், தோட்டக்காரர், பலகாலம், ஊழியக்காரர் என்னும்பெயர்களுக்கு முறையே, உலகம், ஸ்வாமி, யூதஜனங்கள், ஏசு பூலோகத்தில் அவதரித்த காலம், (அப்பொழுதப்பொழுதுசுவாமியால்இடப்பட்ட கட்டளையைச் செவ்வையாய் நடத்தும்படி நினைப்பூட்டப்பட்ட) தீர்க்கதரிசிகள் என்று வேதாந்தபரமான பொருள்களாகக் கொள்க.

உபாக்கியானம் - கிளைக்கதை: உப ஆக்கியாநம். ஆக்யாநம் - கதை.

வேதாந்த பரமாய் - தத்துவ விஷயமாக.

அலைகடல் - அலைகிற கடல்: வினைத்தொகை.

உகுத்தால் - சொரிந்தால்; கடல் கொந்தளிக்கும்போது அதில் எண்ணெயைக்கொட்டினால் அக்கொந்தளிப்பு அடங்குமென்பது, ஒரு கொள்கை. பாவை - சித்திரப்பதுமை.

பக்கம்—67.

அலங்கோலமாய்-ஒழுங்கு கெட்டு.

நிபந்தனை - உறுதியான நியமம்.

பிச்சைபுகல் - இரக்கச்செல்லுதல். பிச்சை-பிக்ஷா என்ற வடசொல்லின் சிதைவு.

கட்குடி - கள்ளைக்குடித்தல். அனைத்தும் - எல்லாம்.

பக்கம்—68.

அத்தியாயம் - பகுப்பு.

அமர்ந்து - அமைவுபெற்று.

நகர பாலகர்-பட்டணத்தைக் காப்பவர்.

வர்த்தமாந பத்திரிகை - சமாசார பத்திரிகை.

பக்கம்—69.

பேர் அமளி - பெரிய ஆரவாரம்.

'தர்மங்களை' எனப் படிக்க.

மாலுமி-கப்பலோட்டுகிறவன்: மீகாமன்.

கொழுநன் - கணவன்.

ஜலசந்தி - இரண்டு பெரிய ஜலபாகங்களை ஒன்றுபடுத்தும் ஒடுக்கமான நீர்ப்பிரிவு.

மடம்-[illegible]சொல்; துறவிகள் வசிக்குமிடம்.

பக்கம்—70.

தலைப்பட-தொடங்க.

'சிறியபெண்கள்' என வந்ததனால், 'ஸ்திரீகள்' என்றது, பெரியவர்களையாம்.

சேகரித்தல்-சேர்த்தல் : உலகவழக்கு.

தோத்திரபத்திரம் - Address.

உடை - உடைய என்பதன் விகாரம்.

அத்தை-தந்தையினுடன் பிறந்தவள்.

கூர்ஜரம் - குஜராத்.

பக்கம்—71.

எழுத்துப்பீடம்-Riting table.

எழுதுகோல் - Pen. மசி - மை (Ink).

பக்கம்—72.

சக்ரவர்த்திநீ - சக்ரவர்த்தீஎன்பதன் பெண்பால்.

ரதம் - வண்டி.

பந்தி-வரிசை; பங்க்தி - வடசொல்.

பாங்கு - நிலைமை. நன்றி-நன்மை.

பயக்க - தர, உண்டாக்க.

படுதல் - கருத்திலூன்றுதல்.

அடிமைவியாபாரம் - அடிமைகளை விற்றலும் வாங்கலும்.

பக்கம்—73.

நிர்விக்கினமாய்-தடையில்லாமல்.

வந்தநபத்ரம் - நன்றியறிவுபாராட்டித் தாம் செய்யும் வந்தநத்தைத் தெரிவிக்குமாறு எழுதுகிற கடிதம்.

மருத்துவிச்சி - பிரசவத்துக்கு உதவும் வைத்தியஸ்த்ரீ.

பக்கம்—74.

பயிற்றுவிப்பது - பழக்குவிப்பது. பயில் - தன்வினைப் பகுதி; று, வி - இணைந்து வந்த பிறவினைவிகுதி.

ப்ளாரென்ஸ் பெருமாட்டியார் - ப்ளாரென்ஸ் நைத்திங்கேல் என்பவர்; (77-ஆம் பக்கம் பார்க்க.) 1820-ஆம் வருஷத்திற் பிறந்த இவர் இளமைதொடங்கி வைத்தியசாலைகளில் நோயாளிகளுக்கு உபசாரம் செய்தும் வைத்தியசாலை விசாரணை நடத்தியும்லோகோபகாரஞ்செய்துவெகுபிரசித்திபெற்றுஅனைவராலுங்கொண்டாடப்பட்டவர். இவர்சரித்திரத்தை,பன்னிரண்டு உத்தமிகள்கதையிற் பரக்கக் காணலாம். ஞானஸ்நானம்-கிறிஸ்து மதகுரு ஒருவரை அம்மதத்துக்குஉரிமைபூண்டவராக்கும்போது தமது ஆசாரத்தின்படி மந்திரபூர்வமாக அவரை ஸ்நானஞ் செய்வித்தல்.

சிற்றுண்டி-சிறியஉணவு; சிறுஎன்ற பண்படி, தன் ஒற்று இரட்டிற்று.

பக்கம்—75.

பர்த்தா - கணவன்.

தத்காலம் - அக் காலம்: வடமொழித்தொடர்.

கால க்ஷேபம்-பொழுதுகழித்தல்; இங்கே ஜீவித்தல்.

### பக்கம்—76.

முயற்சி—, திருவினை-செல்வத்தை, ஆக்கும் - உண்டாக்கும் [வளர்க்கும்]; முயற்று இன்மை-முயற்சியில்லாமை, இன்மை புகுத்திவிடும் - வறுமையை அடைவித்துவிடும்; (எ-று.) [திருக்குறள், ஆள்வினையுடைமை, கூ.]

முயற்சி, முயற்று - தொழிற்பெயர்கள்; முயல் - பகுதி: சி, று-விகுதிகள். திருவினை, இன்-சாரியை, ஐ - இரண்டனுருபு. திரு வினை எனப் பிரித்து-சிறந்த செயலை எனப் பொருள்கொள்ளினுமாம்.

புகழுடம் பாவது, கீர்த்தியினாற் பெயர் என்றும்அழியாது நிலைநிற்றல்.

தேம்பி - பின்வாங்கி.

ஓரேசீராய் - ஓரேநிலைமையாய்.

உவப்பு - மகிழ்ச்சி : தொழிற்பெயர்; உவ - பகுதி, பு - விகுதி.

### பக்கம்—77.

பரலோகம் - வேறு உலகம்.

அபிவிருத்தி - மிக வளர்தல்.

புண்ணியவதி என்பதன் ஆண்பால்,புண்யவான்; 'இவ்விரண்டு புண்ணியவதிகளால் ஆரம்பிக்கப்பட்ட இந் நன்முயற்சி' என்றது, ஸ்த்ரீவைத்தியசாலை நியமனத்தை.

குஞ்சி அழகும் - மயிர்முடியின் அழகும், கொடு தானை கோடு அழகும்-மடிப்புள்ள ஆடையினது கரையின் அழகும், மஞ்சள் அழகும்-பூச்சினது அழகும், அழகு அல்ல - அழகாகமாட்டா; நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவுநிலைமையால் - மனத்தில் யாம் நற்குணமுடையோமென்றுகாண்கிற கோணுதலில்லாத தன்மையால், கல்வி அழகே அழகு - படிப்பினாலுண்டாகும் அழகே அழகாம்; (எ - று.)—[நாலடியார், கல்வி, க.]

குஞ்சி - ஆண்மயிர் ; பங்கி, குடுமி, சிகை என்பனவும் இவ்வாறே: அளகம், ஓதி, கூந்தல், ஐம்பால், கோதை என்பன - பெண்மயிரின் பெயராம். இங்கே, குஞ்சி யென்பது-மயிரென்னுமாத்திரமாய் நின்றது; சிறப்புப்பெயர்; பொதுப்பொருளுணர்த்திற்று. கொடுமை - வளைவு; கொடுங்கோல், கொடுவாள், கொடுமரம் என்ற இடங்களிலுங் காண்க; இங்கே, மடிப்புக்குக் கொள்ளப்பட்டது. மஞ்சள் - மற்றும்பலவகைப்பட்ட மேற்பூச்சுக்களுக்கும், கொடுந்தானைக்கோடு - ஆபரணங்களுக்கும், குஞ்சி - பிற உறுப்புக்களுக்கும் உபல ர்களாய். நல்லம் - தன்மைப்பன்மைக் குறிப்பு; அம் - விகுதி. நடுவு, உ - சாரியை. கல்வியழகே, ஏ - பிரிநிலை. ஆடவர்க்கு உரிய குஞ்சியை முதலிலும், மகளிர்க்கு உரிய மஞ்சளை இறுதியிலும், இருவர்க்கும் பொதுவாகிய தானையை இடையிலும் வைத்துக் கூறியதனால், இப்பாட்டை ஆண்கல்விக்கும் பெண் கல்விக்கும் பொது வென்பர். குஞ்சியழகு முதலியன தம்மைப் பார்க்கும் பிறர்க்கேயன்றித் நமக்கு இன்பந்தருவன அல்ல, கல்வியொன்றே தம்மனத்துக்கு இன்பந்தருவது என்பார், 'நெஞ்சத்து நல்லம்யாமென்னும் நடுவுநிலைமையால்' என்றார். இனி, மனத்தில் நல்லவர்களாயிருக்கக்கடவோம்யாமென்று எண்ணுகிற பக்ஷபாதமில்லாத தன்மையோடு கூடிய கல்வியினது அழகே அழகு என்று உரைப்பாருமுளர்.

# யாப்பிலக்கணச் சுருக்கம்.

**யாப்பாவது**—பலவகைச்சொற்களாற் பொருட்கு இடமாகக் கற்று வல்ல புலவர்களால் அணிபெறப் பாடப்படுவது.

இதற்கு-எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என உறுப்பு ஆறும்.

**எழுத்தாவன**—நன்னூல்முதலியவற்றிற் கூறப்பட்ட அக்ஷரங்கள்.

**அசையாவது**—எழுத்தினாலாக்கப்பட்டுச் சீருக்குஉறுப்பாய் வருவது.

அது - நேரசை, நிரையசை என இருவகையாம்.

**நேரசையாவது**—ஒருகுறிலாவது ஒருநெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உதாரணம்.) முறையே **'ஆழி'** என்பதில் நெடிலும் குறிலும் தனித்தும், **'சொல்வான்'** என்பதில் குறிலும் நெடிலும் ஒற்றடுத்தும் நேரசையாயின.

**நிரையசையாவது**—குறிலிணையாவது குறில்நெடிலாவது தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருவது.

(உ-ம்.) **'அணி'** - குறிலிணை தனித்தும், **'கலம்'** - குறிலிணை ஒற்றடுத்தும், **'நிலா'** - குறில்நெடில் தனித்தும், **'படாம்'** - குறில்நெடில் ஒற்றடுத்தும் நிரையசையாயின.

**'அ ஆ'** என்பதுபோல விட்டிசைத்தா லல்லது தனிக்குறில் சீரின் முதலில் நேரசையாகாது.

**சீராவது**—அந்த அசைகள் சிறுபான்மை தனித்தும், பெரும்பான்மை இரண்டுமுதல் நான்குவரையில் தொடர்ந்தும் வருவது.

அது-ஓரசைச்சீர், ஈரசைச்சீர், மூவசைச்சீர், நாலசைச்சீர் என நான்காம்.

**ஓரசைச்சீராவது**—நேரசையாயினும் நிரையசையாயினும் தனித்து நின்று சீராய்வருவது. உதாரணவாய்பாடு: நேர்—நாள்; நிரை—மலர். இவை பெரும்பாலும்வெண்பாவினீற்றில்வரும். இவற்றை, அசைச்சீரென்பர்.

**ஈரசைச்சீராவது**—நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை என இரண்டு அசை கூடிவரும் இந்நான்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்.) நேர்நேர்—தேமா | இவை | நிரைநிரை—கருவிள | இவை |
| நிரைநேர்—புளிமா | மாச்சீர். | நேர்நிரை —கூவிள | விளச்சீர். |

இவை - இயற்சீர் எனவும், அகவற்சீர் எனவும், ஆசிரியவுரிச்சீர் எனவும்படும்.

**மூவசைச்சீராவது**—மேற்சொல்லப்பட்ட ஈரசைச்சீர் நான்கின் இறுதியிலும் நேரசையும் நிரையசையும் தனித்தனி கூடிவருதலாலாகிய எட்டாம்.

| | | | |
|---|---|---|---|
| நேர்நேர்நேர் - தேமாங்காய் | [illegible] | நேர்நேர்நிரை - தேமாங்கனி | [illegible] |
| நிரைநேர்நேர் - புளிமாங்காய் | | நிரைநேர்நிரை-புளிமாங்கனி | |
| நிரைநிரைநேர்-கருவிளங்காய் | | நிரைநிரைநிரை-கருவிளங்கனி | |
| நேர்நிரைநேர்-கூவிளங்காய் | | நேர்நிரைநிரை - கூவிளங்கனி | |

இவை - உரிச்சீர் எனவும், இவற்றுள் காய்ச்சீர்கள் - வெண்சீர் எனவும், கனிச்சீர்கள் - வஞ்சிச்சீர் எனவும் படும்.

**நாலசைச்சீராவது**—அம்மூவசைச்சீர் எட்டின் இறுதியிலும் நேரும் நிரையும் தனித்தனி அடுத்துவருதலா லாகிய பதினாறுமாம். (உ-ம்.)

| | |
|---|---|
| நேர்நேர்நேர்நேர் - தேமாந்தண்பூ | நேர்நேர்நேர்நிரை - தேமாந்தண்ணிழல் |
| நிரைநேர்நேர்நேர் - புளிமாந்தண்பூ | நிரைநேர்நேர்நிரை-புளிமாந்தண்ணிழல் |
| நிரைநிரைநேர்நேர்-கருவிளந்தண்பூ | நிரைநிரைநேர்நிரை-கருவிளந்தண்ணிழ |
| நேர்நிரைநேர்நேர் - கூவிளந்தண்பூ | நேர்நிரைநேர்நிரை-கூவிளந்தண்ணிழல் |
| நேர்நேர்நிரைநேர் - தேமாநறும்பூ | நேர்நேர்நிரைநிரை - தேமாநறுநிழல் |
| நிரைநேர்நிரைநேர்-புளிமாநறும்பூ | நிரைநேர்நிரைநிரை-புளிமாநறுநிழல் |
| நிரைநிரைநிரைநேர்-கருவிளநறும்பூ | நிரைநிரைநிரைநிரை கருவிளநறுநிழல் |
| நேர்நிரைநிரைநேர் - கூவிளநறும்பூ | நேர்நிரைநிரைநிரை-கூவிளநறுநிழல். |

இவை, வெண்பாவில் வாரா. கலிப்பாவிலும், ஆசிரியப்பாவிலும் சிறுபான்மை குற்றியலிகரவுகரங்கள் வந்தவிடத்து வரும்; வஞ்சிப்பாவில வருதல் பெரும்பான்மை.

பொருளியைபுக்கு ஒவ்வாமற் சீர்பிரிவது, **வகையுளி** யெனப்படும்.

**தளை**யாவது—நின்றசீரின் ஈற்றசையோடு வருஞ்சீரின்முதலசை ஒன்றியாயினும், ஒன்றாமலாயினும் கூடிநிற்பது. ஒன்றுதலாவது - நேர்முன் நேரும், நிரைமுன் நிரையும் வருவது. ஒன்றாமையாவது - நேர்முன் நிரையும், நிரைமுன் நேரும் வருவது.

அத்தளை - நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை, வெண்சீர்வெண்டளை, இயற்சீர்வெண்டளை, ஒன்றியவஞ்சித்தளை, ஒன்றாவஞ்சித்தளை, கலித்தளை என ஏழுவகைப்படும்.

நேரொன்றாசிரியத்தளை-மாமுன்நேர்வருவது; (நாள்முன்நேர்வருவதும்அது.)

நிரையொன்றாசிரியத்தளை - விளமுன் நிரை வருவது; (மலர்முன் நிரைவருவதும் அது.)

**வெண்சீர்வெண்டளை** - காய்முன் நேர்வருவது; (பூமுன்நேர்வருவதும்அது.)

**இயற்சீர்வெண்டளை** - மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவன; (நாள்முன் நிரை வருவதும், மலர்முன் நேர்வருவதும் அது.)

ஒன்றியவஞ்சித்தளை - கனிமுன் நிரைவருவது; (நிழல்முன் நிரைவருவதும் அது.)

ஒன்றாவஞ்சித்தளை - கனிமுன்நேர்வருவது; (நிழல்முன்நேர்வருவதும் அது.)

கலித்தளை - காய்முன் நிரைவருவது; (பூமுன் நிரைவருவதும் அது.)

**அடி**யாவது—மேற்சொல்லிய தளைகள் ஒன்றும்பலவும் அடுத்துவருவது.

அவ்வடி - குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என ஐந்துவகைப்படும். குறளடி - இருசீராலும், சிந்தடி - முச்சீராலும், அளவடி - நாற்சீராலும், நெடிலடி - ஐஞ்சீராலும், கழிநெடிலடி - ஆறு முதலிய சீர்களாலும் வருவன. அளவடி, நேரடி யெனவும் படும்.

**தொடை**யாவது—பல அடிகளிலாயினும், பலசீர்களிலாயினும் எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது.

அது - எதுகை, மோனை, முரண், அளபெடை, இயைபு என்பவற்றால் ஐந்துவகைப்படும். அந்தாதித்தொடை யென்றும் ஒன்று உண்டு.

**எதுகைத்தொடை**யாவது—அடிதோறும் முதலெழுத்து அளவொத்து நிற்க இரண்டு முதலிய எழுத்துக்கள் ஒன்றிவரத் தொடுப்பது. சிறுபான்மை இனவெழுத்துக்களும் எதுகையாம்.

**மோனைத்தொடை**யாவது—பல அடிகளிலாவது, ஓரடியின் பலசீர்களிலாவது முதலெழுத்து ஒற்றுமைப்பட்டுவரத் தொடுப்பது. அ ஆ ஐ ஔ, இ ஈ எ ஏ யா, உ ஊ ஒ ஓ, ஞ ந, ச த, ம வ இவை ஒன்றற்கு ஒன்று மோனையாய் வருதலும் உண்டு. சிறுபான்மை இனவெழுத்துக்களும் மோனையாம். ஓரடியின் சீர்களிலெல்லாம் மோனை வந்தால், முற்றுமோனை யெனப்படும்.

**முரண்தொடை**யாவது—சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படத் தொடுப்பது.

**அளபுத்தொடை**யாவது—உயிரளபெடையாயினும் ஒற்றளபெடையாயினும் ஒன்றிவரத் தொடுப்பது.

**இயைபுத்தொடை**யாவது—ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது.

இத்தொடைகள் அமையாதிருப்பது, **செந்தொடை** யெனப்படும்.

**அந்தாதித்தொடை**யாவது - முன்னின்ற பாட்டின் இறுதி எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் பின்வரும்பாட்டின்முதலா

கப் பாவேது. இங்ஙனம் பாடும் நூலின் இறுதிச்செய்யுளின் அந்தமே முதற் செய்யுளின் ஆதியாக அமைவது, மண்டலித்தல் எனப்படும்.

இவ்வுறுப்புக்களைப் பெற்றுவருகிற பா-வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகைப்படும். 'மருட்பா' என்றும் ஒன்று உண்டு. இப்பா நான்கிற்கும் - துறை, தாழிசை, விருத்தம் என இனம் மூன்று. இவற்றுள்,

**வெண்பாவாவது**—ஈற்றடி முச்சீரடியாகவும் மற்றையடி நாற்சீரடியாகவும் பெற்று, காய்ச்சீரும் மாச்சீர் விளச்சீர்களும் இருவகை * வெண்டளைகளுங் கொண்டு, மற்றைச் சீருந் தளையும் பெறாமல், நாள் மலர் என்ற வாய்பாடுகளுள் ஒன்றினாலாவது, காசு பிறப்பு என்ற உகரவீற்றுவாய்பாடுகளுள் ஒன்றினாலாவது முடிந்து, ஒருவிகற்பத்தாலாயினும் இருவிகற்பத்தாலாயினும் வருவது. [ஒருவிகற்பமாவது - பல அடிகள் ஓர் எதுகையாய் வருவது; இருவிகற்பமாவது - அவ்வடிகள் இருவகை எதுகையாய் அமைவது.]

அவ்வெண்பா - குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா என ஐந்துவகைப்படும்.

**குறள்வெண்பா** - இரண்டடியாய் வருவது.

**சிந்தியல்வெண்பா** - மூன்றடியாய் வருவது.

**நேரிசைவெண்பா** - நான்கு அடிகளாய் இரண்டாம் அடியின் இறுதிச்சீர் முதலிரண்டடிகளின் எதுகைக்கு ஏற்ற தனிச்சொல்லாய் வர நிற்பது.

**இன்னிசைவெண்பா** - நான்கு அடிகளாய்த் தனிச்சொல்இன்றி வருவது. (தனிச்சொற்பெற்றாலும், பலவிகற்பத்தால் வரின், இன்னிசை வெண்பாவேயாம். இரண்டாம்அடியொழிந்த அடிகளில் தனிச்சொற் பெற்று வருவதும் இதுவே.)

**பஃறொடைவெண்பா** - ஐந்துஅடிமுதல் பன்னிரண்டு அடியளவும் வருவது. (பன்னிரண்டடிக்கு மேற்படின், கலிவெண்பாவாம்.)

**ஆசிரியப்பா**வெனினும், அகவற்பாவெனினும் ஒக்கும். இதில் பெரும்பாலும ஈரசைச்சீர்கள் பயிலும்.

**நேரிசையாசிரியப்பா** - ஈற்றயலடி முச்சீரடியும், மற்றையடிகளெல்லாம் நாற்சீரடிகளு மாக வருவது.

**நிலைமண்டிலவாசிரியப்பா** - எல்லாவடிகளும் நாற்சீரடிகளாய் வருவது.

**ஆசிரியவிருத்தம்** - அளவொத்த கழிநெடிலடிநான்கினால் வருவது. அளவொத்தலாவது - ஓரடியில் ஒருசீர் எந்தச்சீராக அமைந்துள்ளதோ, அச்சீர அந்தச்சீராகவே எல்லாஅடிகளிலும் அமைவது.

**கலிப்பா** - காய்ச்சீர்கள் மிகப்பெற்று நாற்சீரடிகளால் வரும்.

**தரவுகொச்சகக்கலிப்பா** - நாற்சீரடிகளால் தனித்துவருவது.

**கலிவிருத்தம்** - அளவொத்த அளவடி நான்கினால் வருவது.

**கலித்துறை** - அளவொத்த நெடிலடி நான்கினால் வருவது; இவை கலிநிலைத்துறை யென்றும், காப்பியக்கலித்துறை யென்றும், விருத்தக்கலித் துறை யென்றும் வழங்கப்படும்.

**கட்டளைக்கலித்துறை** - பெரும்பாலும் முதல் நான்கு சீர்கள் ஈரசைச் சீர்களும ஐந்தாஞ்சீர் விளங்காய்ச்சீரு மான நெடிலடி நான்கு கொண்டு, அடிதோறும் வெண்டளைபிறழாமல், நேரசைமுதலாயின் ஒரடிக்கு ஒற்றொழித்து எழுத்துப் பதினாறும், நிரையசைமுதலாயின் அவ்வெழுத்துப் பதினேழுமாய் ஏகாரவீற்றதாய் வருவது.

**வஞ்சிப்பா** - இருசீரடிகளாலும், முச்சீரடிகளாலும் வரும்.

---

* "காய்முன் நேரும் மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது வெண்டளை."

**வஞ்சிவிருத்தம்** - முச்சீரடி நான்கு கொண்டு வரும்.

**வஞ்சித்துறை** - இருசீரடி நான்கு கொண்டு தனித்துவரும்.

இதுவே ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவந்தால், **வஞ்சித்தாழிசை**யாம்.

**மருட்பா** - வெண்பாவாகத் தொடங்கி ஆசிரியப்பாவாக முடிவது.

குற்றியலிகரம் குற்றியலுகரம் அளபெடை என்பவை, இடத்துக்கு ஏற்ப அலகுபெறுமலும் நிற்கும். ஆய்தவெழுத்து - சிலவிடத்து உயிராகவும் சிலவிடத்து மெய்யாகவும் இடத்துக்கேற்பக் கருதப்படும். ஐகார ஔகாரக் குறுக்கங்கள் - இடத்துக்கேற்பக் குற்றெழுத்தேபோலக் கொண்டு அலகிடப்படும். சிறுபான்மை மெய்யெழுத்துக்களை ஒழித்து அலகிடுதலும் உண்டு. அளபெடைகள், மாத்திரைக்கு ஏற்ப அலகிடப்படும்.

மற்றவை சிறுபான்மையன. அவற்றின் இலக்கணங்களையெல்லாம் தொல்காப்பியம், இலக்கணவிளக்கம், யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலம் முதலிய பரந்தநூல்களிற் கண்டுகொள்க.

---

## அணியிலக்கணச் சுருக்கம்.

**அணியாவது** - செய்யுட்கு அழகுசெய்துநிற்பது; [அலங்காரம்.] அது - சொல்லணியும், பொருளணியும் என இருவகைப்படும்.

யமகம், திரிபு, பிராசம் முதலாகச் சொற்பற்றி நிகழ்வன **சொல்லணிக**ளாம்; [சப்தாலங்காரம்.] (யமகம் எனினும், மடக்கு எனினும் ஒக்கும்.)

**யமகமாவது** - பல அடிகளிலாயினும் ஓரடியிற் பல இடங்களிலாயினும் வந்த எழுத்துத்தொடர்களே மீண்டும்வந்து பொருள் வேறுபடுவது.

**திரிபாவது** - ஒவ்வோரடியிலும் முதலெழுத்து வேறுபட்டிருக்க, இரண்டு முதலிய பலவெழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள் வேறுபடுவது.

**பிராசமாவது** - வந்த எழுத்துக்களே மீண்டும் வருவது.

**பொருளணி** - உவமையணிமுதலாகப் பலவாறு பொருள்பற்றி நிகழ்வனவாம்; [அர்த்தாலங்காரம்.]

**உவமையணி** - இரண்டுபொருள்களுக்கு ஒப்புமைவிளங்கச் சொல்வது; [உபமாலங்காரம்.] உபமானம் உபமேயம் பொதுத்தன்மை உவமவுருபு என்னும் நான்கும் விரிந்துநிற்பது - **விரியுவமை**: (உ-ம்.) 'அமுதம்போலு மின்சொல்'. பொதுத்தன்மையும் உவமவுருபும் தொக்குவரின், **தொகையுவமை**யாம்: அமுதம்போலுஞ்சொல், அமுத வின்சொல், அமுதச் சொல் என்றாற்போலக் காண்க.

உலகத்தில் இல்லாத பொருளை உவமைகூறின் **இல்பொருளுவமையணி** யெனப்படும்; [அபூதோபமாலங்காரம்.] (உ-ம்.) சிங்கத்தை யானைகள் வளைந்தாற்போல, இராமனை அரக்கர் சூழ்ந்தனர்.

**எடுத்துக்காட்டுவமையணி** - உபமானத்தையும் உபமேயத்தையும் தனி வாக்கியங்களாக நிறுத்தி இடையில் உவமவுருபுகொடாமற் கூறுவது; [திருஷ்டாந்தாலங்காரம்.] (உ-ம்.) "அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே யுலகு".

**இயைபின்மையணி** - ஒருபொருளையே உபமானமும் உபமேயமுமாகச் சொல்வது; [அநந்வயாலங்காரம்.] (உ-ம்.) "தானே யுவமை தனக்கு".

**எதிர்நிலையணி** - பிரசித்தமான உபமான உபமேயங்களை மாற்றிச்சொல்வது; [ப்ரதீபாலங்காரம்.] (உ-ம்.) முகம்போல மதி தோன்றிற்று.

**உருவகவணி** - உபமேயத்தினிடத்து உபமானத்தின் தன்மையை ஏற்றிக் கூறுவது; [ரூபகம்.] (உ-ம்.) சேனையாகிய கடலை வீமனாகிய மந்தரம் கலக்கியது. ஒருபகுதியை உருவகப்படுத்தி, மற்றொருபகுதியை உருவகப்படுத்தாது விடின், **ஏகதேசவுருவக**மாம்; (உ-ம்.) இவன் பகைவர்க்குச் சிங்கம்: இங்கு,